பள்ளியிறுதித் தேர்வு 1961

# 'முடியரசன்' தமிழ் உரைநூல்

## (பொதுவும் சிறப்பும்)

ஆசிரியர் :

**கவிஞர் முடியரசன்**

தமிழாசிரியர், மீ. சு. உயர்நிலைப் பள்ளி,

காரைக்குடி.




**வசந்தம் பதிப்பகம்**

ஆயிரம்விளக்கு :: சென்னை - 6.

 [விலை ரூ. 2-25

# பதிப்புரை

மாணவ மணிகளே,

உங்களிடம் தமிழார்வம் தலைதூக்கி நிற்கின்றது கண்டு பெருங்களி கொள்கின்றோம். அவ்வார்வம் நிலைத்து நிற்க வேண்டுமானால் இலக்கியப் பயிற்சி வேண்டும். அவ்வாறாயின் இலக்கியத்தை எவ்வாறு பயில்வது? இலக்கியத்தை எவ்வாறு சுவைப்பது? என்பனவற்றை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். இலக்கியத்தில் சுவை ஏற்படின் இலக்கியப் பற்றும் அதன் வாயிலாக மொழிப் பற்றும் ஏற்படும். ஆதலினால் இவ்வடிப்படைகளை மனத்திற் கொண்டே இவ்வுரை நூல் எழுதப்பட்டுள்ளது.

இவ்வுரை நூல் சொற்பொருள், கருத்து, விளக்கம், இலக்கணக் குறிப்பு, வினாவிடை முதலிய கூறுகளைக் கொண்டுள்ளது. இந்நூல் உங்கள் வெற்றிக்குப் பெரிதும் துணைபுரிவதுடன் அறிவு வளர்ச்சிக்கும் உதவி செய்து சிந்திக்கத் தூண்டும் என்பது ஒருதலை.

இவ்வாண்டு துணைப்பாடங்கட்கு உரைநூல் தனியாக எழுதி வெளியிட்டுள்ளோம். ஒவ்வொரு பிரிவுக்கும் உள்ள இரு துணைப்பாடங்களுக்கும் சேர்ந்து ஒரே புத்தகமாக வெளிவருகிறது என்பதை மகிழ்வுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

இவ்வுரைநூல் எழுதியுதவிய கவிஞர் முடியரசன் அவர்கட்கு எங்கள் நன்றி உரியதாகும். உங்கள் கருத்துக்களை எங்கட்கு எழுதுங்கள், உங்கள் தமிழாசிரியரிடம் கேட்டு அவர்தம் கருத்துக்களையும் எழுதுங்கள். உங்கள் ஆசிரியர்கட்கு இப்பொழுதே நன்றி கூறிக் கொள்கிறோம். உங்கட்கு எங்கள் நல்வாழ்த்து.

மாணவர் நலம் விரும்பும்

**பதிப்பகத்தார்.**

# பொருளடக்கம்

## பொதுப்பகுதி

### செய்யுட்பகுதி



### செய்யுட்பகுதி

# சிறப்புப் பகுதி

## செய்யுள்

# 1961—பள்ளியிறுதித் தேர்வு
# 'முடியரசன்' தமிழ் உரைநூல்
## பொதுப் பகுதி
(வினு விடையுடன்)

---

## செய்யுள்
## 1. வாழ்த்து
### அ. கடவுள் வாழ்த்து
### 1. திருவருட்பா

எடுத்துக் கொண்ட செயல் இடையூறின்றி நன்கு முடிதற் பொருட்டுக் கடவுளை வாழ்த்தி வணங்குவது மரபு. அம் மரபு பற்றிக் கடவுள் வாழ்த்தாக, "எத்துணையும் பேதமுரு" என்று தொடங்கும் இராமலிங்க அடிகளார் பாடல் இங்கு எடுத்தாளப் பெற்றுள்ளது. இராமலிங்க அடிகளுடைய பாடல்கள் எளிமையும் இனிமையும் பொது நோக்கும் அமைந்தவை; பயில்வார்தம் உள்ளத்தை உருக்குந் தன்மை வாய்ந்தவை. திருவருட்பா—திரு+அருள்+பா. இறைவன் திருவருளால் பாடப்பட்ட பாடல் என்றும் இறைவன் திருவருளைப்பெறப் பாடிய பாடல் என்றும் பொருள் படும்.

**ஆசிரியரைப் பற்றி:**

பெயர்: இராமலிங்க அடிகளார்.
ஊர்: மருதூர் (சிதம்பரத்துக்கு அருகில் உள்ளது)
தந்தை: இராமையாப் பிள்ளை.
தாய்: சின்னம்மை.
சமயம்: சமரச சன்மார்க்கம்.
காலம்: தோற்றம்: கி. பி. 1823; மறைவு 1873.
பிற நூல்கள்: மனுமுறை கண்ட வாசகம், சன்மார்க்க விண்ணப்பங்கள் முதலியன.

இளம் வயதிலேயே பெற்றோரை இழந்த இவர் சென்னையில் தம் தமையனாருடன் தங்கியிருந்தார். பின்னர், துறவறத்தை மேற்கொண்டு; சிதம்பரத்தில் பலகாலந் தங்கி, இறுதியில் வடலூரில் சத்திய தருமச்சாலை, ஞானசபை இவற்றை நிறுவினார்.

## எம்பெருமான் நடம்புரியும் இடம்

**எத்துணையும்........................விழைந்ததாலோ''**

இப்பாடல் திருவருட்பா ஆறுந் திருமுறை தனிப்பாடல்க என்ற பகுதியில், பராபரன் உண்மை நிலையம் என்னும் தலைப்பின் இரண்டாவது பாடலாகும்.

### சொற்பொருள்

எத்துணையும் பேதம் உறாது — சிறிதளவும் வேறுபாடு கருதாமல்,
எவ்வுயிரும் — எல்லாவுயிர்களும்,
தம் உயிர்போல் எண்ணி — தமது உயிர்போலக் கருதி
உள்ளே - மனத்தினுள்ளே,
ஒத்துரிமை உடையவராய்-ஒரே தன்மைத்தான உரிமையுணர்வுடையவராய்,
உவக்கின்றார் யாவர் - மன மகிழ்வு கொள்கின்றவர் எவரோ,
அவர் உளம்தான் - அவருடைய திருவுளக் கோவில்தான்,
சுத்தசித்து உருவாய் - தூய அறிவுருவமாகி,
எம்பெருமான் நடம்புரியும்-எம தலைவனை இறைவன் திருநடனம் புரிகின்ற,
இடம்என நான் தெரிந்தேன்- இடமாகும் என்று நான் அறிந்துகொண்டேன்,
அந்த வித்தகர்தம் அடிக்கு- மேம்பாடுடைய அப் பெரு மக்கள் திருவடிகட்கு,
ஏவல் புரிந்திட - தொண்டு செய்ய,
என் சிந்தை மிக விழைந்தது - என்னுடைய மனம் மிகுதியும் விரும்புகிறது.

### கருத்து

ஒரு சிறிதும் வேறுபாடு கருதாது, எல்லா வுயிர்களையும் தம் முயிர்போல் ஒரு படித்தாகக் கருதிக் களிப்பவருடைய நெஞ்சந் தான் இறைவன் மகிழ்ந்தாடும் இடமாகும். அத்தகு அடியவர்தம் திருவடிகட்குத் தொண்டு பூண்டொழுக என் மனம் விரும்புகிறது.

### விளக்கம்

எக்காரணத்தாலும் ஒரு சிறிய அளவுகூடப் பேதவுணர்வு கூடாது என்பதற்காக **''எத்துணையும் பேதமுறாது''**என்றார்.

உயர்திணை உயிராயினும் அஃறிணை உயிராயினும் மன்னுயிரெல்லாம் தன்னுயிர் போல் எண்ணுதல் வேண்டும் என்பார் **''எவ்வுயிரும்''** என்றார்.

வாய், பேதமுறாமையைச் சொல்லும்; ஆனால் நெஞ்சம் வேறொன்று உள்ளும். அது கூடாது; உள்ளும் புறமும் ஒன்றாக இருக்கவேண்டுமென்பார் **''உள்ளே ஒத்துரிமை உடையவர்''** என்றார்.

அவ்வொருமைப் பாட்டை எண்ணியெண்ணி மகிழ்தல் வேண்டும் என்பதை **''உவக்கின்றார்''** என்ற சொல்லால் குறிக்கின்றார்.

இத்தன்மைத்தாகிய உள்ளம் ஒன்றிலேதான் இறைவன் மகிழ்வுகொண்டு எழுந்தருளமுடியும் என்பது தோன்ற "உளந் தான் நடம்புரியும் இடம்" என்று கூறுகின்ருர். இங்கே "நினைப் பவர் மனம் கோயிலாக் கொண்டவன்" என்ற தேவாரப் பாடலின் அடி நினைவு கூரத்தக்கது.

மேற்கூறிய நல்லுள்ளம் எளியர்க்கு வாராமையாலும் அரியர்க்கே வாய்க்கப் பெறுமாதலாலும் அவ்வுள்ளம் பெற்ருரை "வித்தகர்" எனக் குறித்தார்.

இறைவனடிக்கு ஏவல் புரிவதைவிட அவனடியார்க்கு ஏவல் புரிய மெய்யன்பர் விழைவர். ஆதலின் இவரும் "வித்தகர்தம் அடிக்கேவல் புரிய" விழைந்தார்.

ஆல், ஓ - அசைநிலைகள். சுத்தசித்துரு - வாலறிவன் என்னும் கருத்தையுடையது.

### இலக்கணம்

எவ்வுயிரும்—முற்றும்மை.
ஒத்துரிமை—ஒத்த+உரிமை. அகரம் தொகுத்தல் விகாரம்.
விழைந்தது—விழைகின்றது என நிகழ்காலத்தாற் கூருது இறந்த காலத்தாற் கூறிய காலவழுவமைதி.
எத்துணை—எ+துணை.
உருது—உறு+ஆ+த்+உ.
உறு—பகுதி, ஆ—எதிர்மறை இடைநிலை, த்—எழுத்துப்பேறு, உ—வினையெச்ச விகுதி.
உவக்கின்றார்—உவ+க்+கின்று+ஆர்.
விழைந்தது—விழை+த்+த்+அ+து.
விழை—பகுதி, த்-சந்தி சந்தி நகரமாக விகாரப்பட்டது, த்—இறந்தகால இடைநிலை, அ—சாரியை, து—ஒன்றன் பால் படர்க்கை வினைமுற்று விகுதி.

# 2. அருள் வேட்டல்

இறைவனுடைய திருவருளை விரும்பி வேண்டுதல். இங்கே வந்துள்ள பாடல் சிவன் அருள் வேட்டல் என்னும் நூலில் கலந்த நிலை என்ற பகுதியில் இரண்டாம் பாடலாகும். இதன் ஆசிரியர் திரு. வி. கலியாணசுந்தரனர். இந்நூல் கடந்த நிலை முதலாக சிவநாமம் இறுதியாக இருபத்தொரு பிரிவுகளை உடையது.

### ஆசிரியரைப் பற்றி

**பெயர் :** திரு. வி. கலியாணசுந்தரனர்.
**தந்தையார் :** விருத்தாசல முதலியார்.
**தாயார் :** சின்னம்மையார்.
**சமயம் :** சைவம். ஆயினும் சமரச மனப்பான்மையுடையவர்.

ஊர் : செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள துள்ளம் என்ற ஊரில் பிறந்தார் ; திருவாரூரில் வாழ்ந்தார். திருவாரூரினர் என்பதைக் குறிக்கவே திரு என்னும் எழுத்துக்கள் பெயருக்கு முதலில் சேர்க்கப்பட்டுள்ளன.

காலம் : 1883—1954.

வேறு நூல்கள் : முருகன் அல்லது அழகு, பெண்ணின் பெருமை, இளமை விருந்து, தமிழ்த் தென்றல், தமிழ்ச் சோலை முதலிய உரைநடை நூற்களும், பொதுமை வேட்டல், புதுமை வேட்டல் முதலிய செய்யுள் நூற்களும் திருக்குறள் விரிவுரை போன்ற உரை நூல்களும் எழுதியுள்ளனர்.

இவர் தமிழ்நாட்டுப் பெரியார்களுள் ஒருவர் ; நாட்டு விடுதலை முயற்சியில் ஈடுபட்டவர் ; ஆழ்ந்தகன்ற தமிழ்ப் புலமை மிக்கவர்; அருவியென முழங்கும் பேச்சாளர் ; கருத்து வேறுபாடு கொண்டவர்களாலும் நன்கு மதிக்கப்படும் தகுதி பெற்றவர் ; பிறருக்காகத் தம் கருத்தை மறைத்துப் பேசாதவர் ; எளியர், இனியர், அதே சமயத்தில் அரியரும் ஆவர். அரசியல், சமயம், மொழி, தொழிலாளர் இயக்கம், பத்திரிகைத் துறை முதலிய பல்வகைத் துறையிலும் பயிற்சியும் அறிவும் நிரம்பப் பெற்றவர்.

## எவ்வாறு மறந்துய்வேன் ?

**எவ்வுலகும்...............................ஏழையயேனே**

### சொற்பொருள்

எவ்வுலகும் - எல்லா உலகங்களும்,
தளராமல் - தளர்ச்சியடையாமல்,
இனிதுவாழ - இன்பமாக வாழும்படி,
எங்கெங்கும் - எல்லாவிடங்களிலும்,
நீங்காமல் - நீக்கம்அற,
இருக்கும் ஒன்றே - நிறைந்திருக்கும் ஒப்பற்ற பரம்பொருளே,
எவ்விதைக்கும் - விதைகட்கெல்லாம்,
வித்தாகி - விதையாகி,
எழும்பி நோக்கும் - மேலெழுந்து நோக்கிவரும்,
எம்முளைக்கும் முளையாகி - முளைகட்கெல்லாம் முளையாகி,
இயைந்த தேவே - பொருந்தியிருக்கின்ற தெய்வமே,
எவ்விடத்தும் - எந்த இடத்திலும்,
உனை அன்றி - உன்னையல்லாமல்,
என்ன உண்டு - எந்தப் பொருள் உளது ?,
எவ்வணுவும் - எந்த அணுவாயினும்,
உனை இழந்தால் - உன்னையின்றி,
இயங்கும் கொல்லோ - சிறிதேனும் அசைகுமோ ?,
எவ்வுயிர்க்கும் - எல்லா வுயிர்கட்கும்,
தாயான இறையே - தாயாக விளங்கிவரும் கடவுளே,
ஏழையேன் - அடியேனாகிய யான்,
உன்னை - எல்லாமாகிய நின்னை,
மறந்து எவ்வாறு உய்வேன் - மறந்துவிடின் எப்படி வாழ்வேன் ?.

### கருத்து

எங்கும் நிறைந்து, விந்துக்கு வித்தாகி, மேலெழும்பும் முளைக்கு முளையாகி, விளங்கிவரும் இறைவனே உன்னைத்தவிர வேறு பொருள் உலகில் இல்லை. உனையன்றி ஓரணுவும் அசையாது; அனைத்துயிர்க்கும் அன்னையாகிய கடவுளே யான் உன்னை மறந்து உயிர் வாழமுடியாது.

### விளக்கம்

இறைவன் எங்கெங்கும் நீங்காமல் நிறைந்திருக்கின்ற காரணத்தால் எவ்வுலகும் இனிது வாழ்கிறது. அவ்வாறு இனிது வாழவே எங்கெங்கும் நிறைந்துளான் என்று அவனுடைய பெருமையைக் காட்டுகின்றார்.

எவ்விதைக்கும் வித்தாகி, எம்முளைக்கும் முளையாகி இயைந்தவன் என்பது மூலத்துக்கும் மூலமாக இருக்கின்ற ஆதிமூலம் என்பதைக் குறிக்கும்.

அவனன்றி ஓரணுவும் அசையாது என்னும் கருத்தைக்கொண்டுள்ளது ‘எவ்வணுவும் உனையிழந்தால் இயங்குங் கொல்லோ’ என்னும் பகுதி.

உலகம், உயிர், அனைத்தும் தோன்றக் காரணனாக இருத்தலினால் ‘தாயான இறையே’ என்றார்.

தாயை மறந்து தனயன் வாழ்வது எப்படி இயலும்? இறைவனும் தாயானவன் அல்லவா? அதனால் ‘உன்னை எவ்வாறு மறந்து உய்வேன்’ என்றார்.

இறைவன்பால் ஈடுபாடுகொண்ட மெய்யன்பர்கள் தம்மைச் சிறுமையாகவே குறிப்பதியல்பு. அம்மரபின்படி இவ்வாசிரியரும் தம்மை ‘ஏழையேன்’ என அறிவின் சிறுமை தோன்றக் கூறினார்.

இப்பாடல், இறைவன் எங்கும் எல்லாப் பொருளிலும் ஒன்றிக் கலந்து நிறகும் நிலையைக் கூறுகிறது.

### இலக்கணம்

எவ்வுலகும்—உம்மை முற்றும்மை.
உனை—உன்னை என்பதன் இடைக்குறை.
இயங்குங்கொல்—கொல் அசைநிலை.
உய்வேன்—எதிர்காலத் தன்மை வினைமுற்று.
எவ்வுலகு—எ + உலகு.
எவ்வணுவும்—எ + அணுவும்.
எம்முளை—எ + முளை.

எகரவினா, முச்சுட்டு இவற்றின்முன் உயிரும் யகரமும் வரின் இடையே வகரம் தோன்றும். உதாரணம் எ + அணு = எவ்வணு. எ + யானை—எவ்யானை.

அவற்றின்முன் உயிரும் யகரமும் அல்லாத பிற எழுத்துக்கள் வரின் வந்த எழுத்துக்களே இடையில் தோன்றும்.

உதாரணம் : எ + முளை = எம்முளை.

" எகர வினு முச்சுட்டின் முன்னர்
உயிரும் யகரமும் எய்தின் வவ்வும்
பிறவரின் அவையும் தூக்கில் சுட்டு
நீளின் யகரமும் தோன்றுதல் நெறியே "

உய்வேன்—உய்+வ்+ஏன். உய்—பகுதி, வ்—எதிர்கால இடைநிலை, ஏன்—தன்மை ஒருமை வினைமுற்று விகுதி.

# ஆ. தமிழ்மொழி வாழ்த்து

## பற்றுவைத்து.........................வாழ்த்துவமே

இப் பாடல் " மொழியரசி " என்னும் தொகுப்பு நூலிலிருந்து எடுக்கப்பட்டது. நம் தாய்மொழியாகிய தமிழ் மொழியையும் தெய்வ நிலையில் வைத்துக் கடவுள் வாழ்த்துப் போலப் பாடியிருக்கிறூர் ஆசிரியர். இப்பாடல் **தமிழரசி குறவஞ்சி** என்னும் நூலிலிருந்து எடுத்துச் சேர்க்கப்பட்டிருக்கிறது. இந் நூலாசிரியர் அ. வரத நஞ்சைய பிள்ளை அவர்கள் ஆவர். தமிழர், தம் தாய்மொழியைப் புறக்கணித்துப் பிறமொழியடிமைகளாகித் திரிகின்ற நிலைகண்டு வருந்தி, இனித் தமிழர் செய்ய வேண்டிய கடமைகளை அறிவுறுத்தும் முறையில் அமைந்துள்ள இனிய பாடல் இது.

### ஆசிரியரைப் பற்றி

பெயர் : புலவரேறு அ. வரத நஞ்சைய பிள்ளை.
ஊர் : தோரமங்கலம்.
தந்தை : அப்பாசாமிப் பிள்ளை.
காலம் : தோற்றம் கி.பி. 1877.

இவர் இளமையிலேயே நிறைந்த தமிழறிவு வாய்க்கப்பெற்றூர். சிறந்த பேச்சாற்றலும் புலமைத்திறனும் வாய்க்கப்பெற்ருருள் சிறந்தவராக விளங்கினூர். இவர் காருணீக புராணம் என்னும் நூலை இயற்றியுள்ளார். **தமிழ்த்தாய்த் திருப்பணி** என்னும் நூலொன்றும் இயற்றியுள்ளார்.

### முரசு முழக்குவோம்

### சொற்பொருள்

பிறநாட்டு மொழியை - வேற்று நாடுகளுக்குரிய மொழிகளை,
பற்று வைத்து - அவற்றின்பால் பேராசைகொண்டு,
பயின்று மகிழ்ந்தோம் - கற்று (தமிழராகிய நாங்கள்) களித்திருந்தோம்,

பெற்றதாயின் முகம் - பெற்றெடுத்த தாயின் முகத்தை (தமிழ்மொழியை)
பாராத குற்றத்தால் - திரும்பிப் பார்த்து அவளுக்குதவி செய்யாத தீமையினால்,
நொந்து மனம் நொந்து,
பீழித்து - வருந்தி,
நைந்தோம் - துன்புற்று மெலிந்தோம் (இனியேனும்)
கற்ற பிற கலையை - நாங்கள் கற்றுக்கொண்ட பிறமொழிக் கலைகளை,
தாய்மொழிக்கண் காட்டி - தாய்மொழியாகிய தமிழ்மொழியில் பெயர்த்துக்காட்டி,
திருத்துவம் - திருந்தச் செய்வோம்,
எம் மொழியின் வளம் - எமது தமிழ் மொழியின் வளம் அனைத்தும்,
திசை முற்றவும் சாற்றி-எல்லாத் திசைகளிலும் சென்று விளக்கி
முரசு முழக்குவம் - முரசொலி எழுப்புவோம்,
அதனால்——,
எங்கள் தமிழ் அன்னை - எங்களுடைய தமிழ்த்தாய்,
வாழிய வாழிய என்று - வாழ்க வாழ்கவென,
அடி வாழ்த்துவம் - அவளுடைய திருவடிகளை வாழ்த்துவோம்.

## கருத்து

நாங்கள் தாய் மொழியைப் புறக்கணித்துப் பிறமொழியில் பற்றுக்கொண்ட காரணத்தால் அடிமையுற்று நொந்தோம். இனிமேல் பிறகலைகளைத் தமிழில் மொழிபெயர்த்தும், தமிழ்க் கலைகளைப் பிறமொழியில் பெயர்த்தும் திக்கெட்டும் தமிழருமை சாற்றி முரசு கொட்டுவோம்.

## விளக்கம்

தமிழர் பிறமொழியின்பாற் கொண்டிருந்த பேரார்வத்தை எடுத்துக்காட்டப் **"பற்றுவைத்து"** என்றார்.

**"பெற்றதாயின் முகம் பாராத"** என்று கூறுவதனால் தமிழ் மொழியின் தாழ் நிலையையும், **"நொந்து, பீழித்து, நைந்தோம்"** எனப் பலமுறை கூறுவதனால் தமிழரின் அவல நிலையையும் விளக்குகிறார்.

தமிழ்மொழியின் நிலையை நோக்காமல் இருப்பது பெரும் பாவம் என்பார் **"பாராத குற்றத்தால்"** எனக் கூறினார்.

தமிழ் உயர வேண்டுமானால்—தன் பழைய நிலையை அடைய வேண்டுமானால் நாமும் நல் வாழ்வு பெற வேண்டுமானால் பிறகலைகளை மொழிபெயர்த்தலும், தமிழின் வளங்களைப் பிறதேயங்களில் பரப்புதலும் செய்யவேண்டும் என்று ஆசிரியர் கூறுகிறார்.

## இலக்கணம்

திருத்துவம், முழக்குவம், வாழ்த்துவம் என்பன **தன்மைப் பன்மை வினைமுற்றுக்கள்.**

வாழிய—**வியங்கோள் வினைமுற்று.**

பயின்று—பயில்+ற்+உ. பயில்—பகுதி, ற்—இறந்தகால இடை

நிலை, உ—வினையெச்ச விகுதி.

மூழக்குவம்—முழக்கு+வ்+அம். முழக்கு—பகுதி, வ்—எதிர் கால இடை நிலை, அம்—தன்மைப் பன்மை விகுதி.

## இ. நாட்டு வாழ்த்து

இது நாட்டை வாழ்த்துதல் எனப் பொருள்படும். நாடு என்பது இங்கே தமிழ்நாட்டைக் குறிக்கும். தாம் பிறந்த நாட்டைத் தாய்நாடு என்றே ஆன்றோர் அழைப்பர். தாய்நிலையில் வைத்துப் போற்றத்தக்கதாகும் என்பது கருத்து. அதனாலன்றோ 'பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும், நற்றவ வானிலும் நனி சிறந்தன' என்றோதினர். அத்தகைய தாய் நாட்டின் மீது நாம் பற்றுக் கொள்ளவேண்டுவது இன்றியமையாததாகும்.

இங்கு நாட்டு வாழ்த்தாக வந்துள்ள பாடல் 'சாரணர் பாடல்களும் ஊக்க வொலிகளும்' என்ற நூலில் 'தமிழ்நாடு' என்னுந் தலைப்பில் வந்துள்ளதாகும். இதன் ஆசிரியர் வித்துவான் திரு. முத்து-கண்ணப்பர் B. A. ஆவார்கள்.

### ஆசிரியரைப்பற்றி

பெயர்: வித்துவான் முத்து.-கண்ணப்பர் B. A.

ஊர்: திருவான்மியூர் (செங்கற்பட்டு மாவட்டம்)

தந்தை: முத்துச்சாமி

தாய்: பாக்கியம் அம்மாள்

பிறப்பு: 4—6—1915

பிற நூல்கள்; 'வயது வந்தோர் கல்விமுறை' முதலியன.

இவர் மொழிப் பற்றும் நாட்டுப் பற்றும் மிக்குடையவர். காந்திய நெறியில் நின்று ஒழுகுபவர். இனிய பண்புடையவர். தொண்டுளம், நேர்மை முதலிய நல்லியல்பினர். தன் முயற்சியால் முன்னேற்றம் பெற்றுவருபவர். அச்சுக்கோப்பவராக இருந்து படிப்படியாக உயர்ந்து ஆட்சிமன்றில் M. L. C. யாக அமர்ந்திருப்பவர். தமிழ் வித்துவான் பட்டமும் B. A. பட்டமும் தனியாகவே பயின்று பெற்றவர். தொடக்கப்பள்ளி, உயர்நிலைப்பள்ளி, அரசினர் பயிற்சிக் கல்லூரி, கலைக்கல்லூரி முதலிய இடங்களில் தமிழாசிரியராகவும், தலைமை ஆசிரியராகவும் விரிவுரையாளராகவும் இருந்து இருபத்திரண்டு ஆண்டுகள் பணிபுரிந்தவர்.

### வாழ்க தமிழ்நாடு

**பாரோங்கு..................................நன்றே.**

### சொற்பொருள்

பார் ஓங்கு புகழ்படைத்த - இவ்வுலகில் மிக்க புகழ் பெற்றுள்ள

பைந்தமிழ் நல்நாடு - பசுந்தமிழ் வழங்கும் நல்ல நாடு,

பாக்கு பலா மா வாழை - பாக்கு மரம் முதலாகவுள்ள,

பல செழித்த நாடு - பலவகையான பயன்மிக்க மரங்கள் செழித்து வளரும் நாடு,

ஏர் ஓங்கு பூங்காவோடு - அழகு மிகுந்த பூஞ்சோலைகளுடன்,
எழில் வனங்கள் - அழகுமிக்க வனங்களும்,
மலைகள் - ஓங்கி உயர்ந்த மலைகளும்,
என்றும் வெள்ளம் பாய் நதிகள் - எப்பொழுதும் வற்ருமல் நீர் இடையருது ஓடிக்கொண்டிருக்கிற ஆறுகளும்,
எங்கும் நிறை நாடு - எங்கும் நிறைந்திருக்கிற நாடு,
சீர் ஓங்கு-சிறப்புமிகுந்த,
கம்பன், ஔவை, திருவள்ளுவர், இளங்கோ - கம்பன் முதலாக உள்ள புலவர்களும்,
தேசியக் கவி பாரதி - நாட்டு உணர்ச்சியூட்டும் பாடல்களைப் பாடிய பாரதியாரும்.
திகழ்ந்தது எங்கள் நாடு- (தோன்றி) விளக்க முறுவது எங்கள் நாடு,

பார் ஓங்கு-பாரில் விளக்கமுற்று விளங்கிய,

வள்ளல் மன்னர் - வாரிவழங்கும் வள்ளல்களும் செங்கோலோச்சும் மன்னர்களும்,

பலர் வாழ்ந்த நாடு - பலப்பலர் பிறந்து வாழ்ந்தது எங்கள் நாடு,

எங்கள் பைந்தமிழ் நல்நாடே- அத்தகைய எங்கள் பசுந்தமிழ் நாடு,

பல்லாண்டு வாழ்க-பல்லாண்டு பல்லாண்டு வாழ்வதாக.

## கருத்து

பல்வகை வளங்களும் சிறப்புக்களும் படைத்த எங்கள் தமிழ் நாடு பல்லாண்டு வாழ்வதாக.

## விளக்கம்

தமிழ்நாட்டின் புகழ்வளம், மொழிவளம், பயன்மரவளம், சோலைவளம், காட்டுவளம், ஆற்றுவளம், புலமைவளம், கொடைவளம், அரசுவளம் என்னும் இவ்வளங்கள் இப்பாடலாற் கூறப்படுகின்றன.

வற்ருது ஓடும் சீவநதிகள் என்பதைக் குறிக்க 'என்றும் வெள்ளம் பாய் நதிகள்' என்ருர்.

கம்பன் முதலிய புலவர்களின் காவியப் பாங்கு வேறு, பாரதியின் பாடற்பாங்கு வேறு என்பதையுணர்த்தக் கம்பன் முதலியவர்களையொன்ருகக் கூறி, 'தேசியக்கவி பாரதி' என இவரைமட்டும் வேறுபடுத்திக்கூறினுர்-

## இலக்கணம்

பைந்தமிழ், நன்ஞடு—பண்புத்தொகைகள்
பாக்கு............வாழை—உம்மைத்தொகைகள்.
பாய்நதி—வினைத்தொகை.
கம்பன்..... ......இளங்கோ—உம்மைத்தொகை.
கவிபாரதி—இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
பல்லாண்டு—பண்புத்தொகை.

வள்ளல் மன்னர்—உம்மைத்தொகை.
பைந்தமிழ்—பசுமை+தமிழ்.
நன்னாடு—நன்மை+நாடு, நல்+நாடு.

# II. அறவுரை

மக்கள் வாழ்க்கைக்குப் பயன்படத் தக்க நல்ல அறவழிகளை எடுத்துக் கூறுவது. இத்தகு உயர்ந்த அறநெறிகளை விளக்கிக் கூறும் நூல்களுள் புறநானூறு, திருமந்திரம், திருக்குறள், பழமொழி ஆகிய நான்கு நூற்பகுதிகள் இங்குப் பாடமாக வந்துள்ளன.

## அ. புறநானூறு

புறம்+நானூறு. புறப் பொருளைப் பற்றிக் கூறும் நானூறு பாடல்களைக் கொண்ட நூலாதலின் புறநானூறு என்னும் பெயர் பெற்றது. இது எட்டுத் தொகை நூல்களுள் ஒன்று; பல காலத்தி லிருந்த பல புலவர்களால் பாடப்பட்ட பாடல்களால் தொகுக்கப் பட்டது. புறப்பொருள் என்பது வீரம், கல்வி, கொடை முதலிய வற்றைக் குறிக்கும்.

எட்டுத் தொகை நூல்களாவன:

"நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறு நூறு
ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்
கற்றறிந்தார் ஏத்தும் கலியே அகம்புறம் என்று
இத்திறத்த எட்டுத் தொகை"

இந்நூல் புறம் எனவும் புறப்பாட்டு எனவும் வழங்கப்பெறும். பண்டைய பேரரசர்கள், சிற்றரசர்கள், வள்ளல்கள், புலவர்கள் வரலாறு இந்நூலிலிருந்து நமக்குக் கிடைக்கிறது. அக்கால மக்களின் நாகரிகம், பழக்க வழக்கம், அரசியல் முறை முதலியனவும் இந்நூலால் அறியப்படுகின்றன.

திணை என்பது மக்கள் ஒழுக்கம், துறை என்பது மக்கள், விலங்கு முதலியன சென்று நீருண்ணும் நீர்த்துறைபோலப் பல வகைப்பட்ட பொருள்களும் ஒருவகைப்பட்டுச் செல்லுதற்குரிய வழி எனப் பொருள்படும். அஃதாவது மக்களின் வாழ்க்கைக்குரிய வழி. இத்துறைகள் அத்திணைக்குச் செல்வதற்குரிய வழிகள்.

திணை அகத்திணை எனவும் புறத்திணை எனவும் இருவகைப் படும். இங்கு வரும் திணை புறத்திணையேயாகும்.

"உற்றுழி உதவியும்" என்று தொடங்கும் இப்பாடல் பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாட்டு. இவன், கற்றோரிடத்துப் பெருமதிப்புடையவன் என்பதும், கற்றலையே பெரும் பயனாகக் கருதியவன் என்பதும் இவனுடைய பாடலால் விளங்கும். பாடல் இயற்றும் பெரும் புலமையும் பெற்றிருந்தான் என்பதும் புலனாகும். இவன்தான் கோவலனைக் கொல்வித்தவன் எனக் கூறுவர்.

இப்பாட்டு, பொதுவியல் திணையாகும். **பொதுவியலாவது** எல்லாத் திணைகட்கும் பொதுவான இலக்கணங் கூறுவது.

துறை: பொருண்மொழிக் காஞ்சி. பெரியோர், உயிர்க்கு இம்மை மறுமைகளில் நன்மை தருவதாகத் தெளிந்த பொருளைக் கூறுவது **பொருள்மொழிக் காஞ்சி** எனப்படும்.

**உற்றுழி உதவியும்....................அவன்கட்படுமே**

## சொற்பொருள்

பிறப்பு ஓரன்ன—பிறப்பு ஒரே தன்மையாகிய,
ஒரு வயிற்றுள்ளும்—ஒரு வயிற்றில் பிறந்தவருள்ளும்,
சிறப்பின் பாலால் — (கல்விச்) சிறப்பினால்,
தாயும் மனம் திரியும்—பெற்ற தாயும் மனம் வேறுபடுவாள்,
ஒருகுடிப் பிறந்த — ஒரே குடும்பத்திற் பிறந்த,
பல்லோருள்ளும்—பலருள்ளும்,
மூத்தோன் வருக என்னாது—மூத்தவன் வருக என்று அவனை அழைக்காமல்,
அவருள்—அக்குடியிற்பிறந்த பலருள்ளும்,
அறிவுடையோன் ஆறு— அறிவுடையவன் காட்டும் நெறியிலே,
அரசும் செல்லும் — அரசனும் செல்லுவான்,
வேற்றுமை தெரிந்த—வேறுபாடுகளைக் கொண்ட,
நாற்பாலுள்ளும்- நான்குவகைப் பிரிவினுள்ளும்,
கீழ்ப்பால் ஒருவன் கற்பின் — கீழ்க் குலத்தில் பிறந்த ஒருவன் கல்வி கற்ருல்,
மேல்பால் ஒருவனும் — மேற்குலத்தில் பிறந்தவனுக இருப்பினும் (அவன்),
அவன்கண் படும்—(இவன் கீழ்க்குலத்தான் என்று கருதாது கல்வியின் காரணமாக) அவனிடத்துச் சென்று வழிபட்டு நிற்பான், (ஆதலால்)
உற்ற உழி உதவியும் — ஆசிரியர்க்கு ஒரு துன்பம் நேரின் அதனை நீக்குதற்கு உதவிசெய்தும்,
உறு பொருள் கொடுத்தும் — மிகுந்த பொருளைக் கொடுத்தும்,
பிற்றை நிலை முனியாது—ஆசிரியர்க்கு வழிபாடு செய்தலில் வெறுப்புக்கொள்ளாது,
கற்றல் நன்று - கல்வியைக் கற்றுக் கொள்வது ஒருவனுக்கு அழகாகும்.

## கருத்து

பெற்ற தாயும் தான் பெற்ற பல மக்களுள் கல்வியுடையானிடத்தே தனியன்பு செலுத்துவாள். அரசனும் ஒரு குடியில் பிறந்த பலருள்ளும் வயதுப் பெருமை பாராட்டி மூத்தவனை விரும்பாது, அறிவுப் பெருமை பாராட்டி அறிவுடையவனையே விரும்பி அவன் வழிச் செல்லுவான்; பிறப்பு வேறுபாடும் கல்வியினுல் ஒழியும்; ஆதலால் ஒருவன் ஆசிரியர் துயர் நீங்க உதவியும், மிகுந்த பொருள் கொடுத்தும், வழிபாடு செய்தும் கற்க வேண்டும்.

### விளக்கம்

உற்றுழி உதவுதலாவது ஆசிரியர் வாழ்க்கையில் ஏதேனும் ஓரிடுக்கண் வருமாயின் ஓடிச்சென்று தான் முன்னின்று அவ்விடுக்கண் வாராமல் தடுத்துக் காப்பது.

உறுபொருள் கொடுத்தலாவது, ஆசிரியர் வறுமையால் வாடாமல் இருத்தற்பொருட்டு நிரம்பச் செல்வம் தந்து உதவுவது. வறுமையில் வாடும் ஆசிரியரிடத்தினின்றும் மாணவன் நல்ல கல்வியைப் பெற முடியாதல்லவா? நல்ல கல்வியைப் பெற விரும்பும் சமுதாயம் ஆசிரியர்களை வறுமைக்கு ஆட்படுத்திவிடக் கூடாது என்பது கருத்து

பிற்றை நிலையாவது, ஆசிரியர்க்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்தல். இப்பணியில் மனங்கோணாது மாணவன் ஈடுபட வேண்டும். இங்கே "நிறைந்த நெஞ்சமோடு, எத்திறத்து ஆசான் உவக்கும் அத்திறத்து, அறத்தின் திரியாப் படர்ச்சி வழிபாடே" என்பது நோக்கத்தக்கது.

கற்கப் புகும் நன் மாணாக்கர் கையாள வேண்டிய வழிமுறைகள் கூறப்பட்டன.

தாய், தான் பெற்ற எல்லாக் குழந்தைகளிடமும் ஒரே தன்மைத்தாகிய அன்பு செலுத்தும் இயல்புடையவள். அவ்வியல்புடையவள்கூட, கற்ற பிள்ளையிடம் தனியன்பு காட்டுவாள் என்பதை விளக்கத் "**தாயும் மனந்திரியும்**" என்றார். மனம் திரிதலாவது மிகுந்த அன்பைக் காட்டுவது.

அரசன் செல்லும் வழியிற்றான் மக்கள் செல்வர். ஆயினும் அறிவுடைய ஒருவன் சொல்லை மதித்து அவன் வழியே அரசனும் செல்வான் என்பதைக்காட்ட "**அரசும் செல்லும்**" என்றார். அறிவுடைய ஒருவன் ஆண்டில் இளைஞனாயினும், அவனினும் மூத்தார் இருப்பினும் அறிஞனையே அரசன் மதித்து நடப்பான் என்பது "மூத்தோன் வருக என்னாது" என்பதனால் பெறப்படுகின்றது. உடன் வயிறு என்பது ஒரு தாய் வயிற்றில் பிறந்தவரைக் குறிக்கும்.

பிறவியினால் கருதப்படும் உயர்வு தாழ்வு கல்வியினால் ஒழிக்கப்படும் என்பது தோன்ற "மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே" என்றார்.

கல்வியினால் வீட்டில் மதிப்பு, நாட்டு அரசியலில் மதிப்பு, சமுதாயத்தில் மதிப்பு அடைய முடிகிறது; அதனால் ஒருவன் முயன்று கல்வி பெறவேண்டும் என்பதை இப்பாடல் நன்கு வலியுறுத்துகின்றது.

### இலக்கணம்

உற்றுழி—உற்ற+உழி. அகரம் **தொகுத்தல் விகாரம்.**

உறுபொருள்—**உரிச்சொற்றொடர்.**

பிற்றை நிலை—**காரணப் பெயர்.**

தாயும், அரசும்,—**உயர்வு சிறப்பும்மைகள்.**

திரியும், செல்லும், படும்—செய்யுமென்னும் வாய்பாட்டு வினை முற்றுக்கள்

முனியாத—முனி + ஆ + த் + உ.

முனி—பகுதி; ஆ—எதிர்மறை இடைநிலை; த்—எழுத்துப் பேறு; உ—வினையெச்ச விகுதி.

தெரிந்த—தெரி + த் + த் + அ.

தெரி—பகுதி; த்—சந்தி; த்—இறந்தகால இடைநிலை; அ—பெயரெச்ச விகுதி; சந்தியால் வந்த 'த்' 'ந்' ஆனது விகாரம்.

## ஆ. திருமந்திரம்

திரு + மந்திரம். திரு—அழகிய, மந்திரம்—மந்திர மொழிகளைக் கொண்ட நூல். மந்திரம் என்பது, "நிறை மொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி"யாகும். நிறைமொழி மாந்தராகிய திருமூலர் என்பார் மூவாயிரம் ஆண்டுகள் யோக நிலையிலிருந்து அருளிச் செய்த காரணத்தால் இந்நூல் திருமந்திரம் என்னும் பெயர் பெற்றது. இது சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் பத்தாந் திருமுறையாகும். இதற்குத் திருமந்திரமாலை என்ற வேறொரு பெயரும் உண்டு. "தமிழ் மூவாயிரம்" என்பதே இந் நூலுக்கு ஆசிரியர் இட்ட பெயராகும்.

### ஆசிரியரைப்பற்றி

நந்திதேவர் மாணாக்கராகிய சிவயோகியார் என்பவர் அகத்தியரைக் காண்பதற்காகத் தெற்கு நோக்கி வந்துகொண்டிருந்தார். வழியில் திருவாவடுதுறையில் மூலன் என்னும் பெயருடைய ஆயன் இறந்து கிடப்பதையும் அவரைச் சுற்றிப் பசுக் கூட்டம் கதறி அழுவதையும் கண்டார். இது கண்டு மனமிரங்கிய சிவயோகியார் தம் உடலை விட்டு, அம்மூலனுடைய உடலில் புக்குப் பசுக்களின் துயர் போக்கினர். பின்பு தமது உடம்பைக் காணமல், அம்மூலனுடைய உடம்போடு மூவாயிரம் ஆண்டுகள் அங்கே தங்கி, யோக நிலையில் அமர்ந்து, ஆண்டுக்கொரு பாடலாகப் பாடினர் என்று சொல்வார்கள். அவையே திருமந்திரம் என்னும் பெயரைப் பெற்று வழங்கி வருகிறது. இவர் காலம் இன்னதென வரையறை செய்யப் பெறவில்லை. ஆயினும் கி. பி. பத்தாம் நூற்றுண்டுக்கு முற்பட்டவராயிருக்கலாம் எனக் கருதுகின்றனர்.

## எல்லோர்க்கும் இடுங்கள்

**ஆர்க்கும்..................................................அறிமினே**

இது திருமந்திரம் முதல் தந்திரத்தில் பதினைந்தாம் பகுதியாகிய தானச்சிறப்பு என்ற தலைப்பில் வருகின்றது.

### சொற்பொருள்

வேட்கை உடையீர் - நல்வாழ்வு வாழவேண்டும் என்று விரும்பும் உலகீரே,

ஆர்க்கும் இடுமின் - எல்லோருக்கும் உண்டி கொடுத்து உதவுங்கள்,

அவர் இவர் என்னன்மின் - (அவ்வாறு உதவும்பொழுது) அப்படிப்பட்டவர் இப்படிப்பட்டவர் என்று ஆராய்ந்து பாராமல் எல்லோருக்கும் உதவுங்கள்,
பார்த்து இருந்து - வருகின்ற விருந்தினரை எதிர்பார்த்திருந்து,
உண்மின் -- பிறகு உண்ணுங்கள்,
பழம்பொருள் - முன்னோர் தேடி வைத்த பழைய பொருள்களை,
போற்றன்மின் - (பிறருக்கு வழங்காமல்) காத்து வைக்காதீர்,
விரைந்து ஒல்லை - (விருந்தினர் வருமுன்) மிக விரைவாக,
உண்ணன்மின் - தனித்து உண்ணாதீர்கள்,
காக்கை கரைந்து - காக்கையானது தன்னினத்தைக் கூவியழைத்து,
உண்ணும் காலம் - உடனிருந்து கூடி உண்ணுங் காலத்தை,
அறிமின் - அறிந்து அதைப் போல ஒழுகுங்கள்.

**கருத்து**

உலகத்தீரே இன்னார் இனியார் என்று பாராமல் எல்லோர்க்கும் உதவுங்கள்; விருந்தை எதிர்பார்த்து உண்ணுங்கள்; முன்னைப் பொருளைக் கட்டிக் காத்துக்கொண்டிராதீர்; தனித்திருந்து உண்ண விரையாதீர்; காக்கையைப் பார்த்து அதன் பண்பைக் கடைப் பிடித்து ஒழுகுங்கள்.

**விளக்கம்**

இவருக்குத்தான் கொடுக்க வேண்டும்; அவருக்குக் கொடுக்கக் கூடாது என்று வரையறை செய்து கொள்ளாது எல்லோர்க்கும் கொடுப்பதுதான் சிறந்த அறமாகும் என்பதை விளக்க 'அவர் இவர் என்னாது' என்றார்.

'பார்த்திருந்த'லாவது, விருந்து எப்போது வரும் என்று எதிர் நோக்கி இருப்பது. 'வருவிருந்து பார்த்திருப்பான்' எனத் திருக் குறள் கூறும் பகுதி இங்கே ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கது.

கொடுத்துக் கொண்டே யிருந்தால் முன்னோர் தேடி வைத்த சொத்தெல்லாம் கரைந்து விடுமே எனப் பூட்டி வைக்காது வழங்குக என்பார் 'பழம்பொருள் போற்றன்மின்' என்றார்.

காக்கை உண்ணுங்காலத்துத் தனித்து உண்ணாது தன் இனத்தையும் அழைத்து உடன் உண்ணும் குணமுடையது. அஃறிணைப் பொருளாகிய காக்கையினிடம் இருக்கும் பண்பு உயர்திணையாகிய மக்களிடம் இருக்க வேண்டாவோ என்னுங் குறிப்பைக் 'காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமின்' என்பதால் காட்டுகின்றார்.

ஆறறிவு படைத்த உங்களிடம் அப்பண்பு இயல்பாகவே அமைந்திருக்க வேண்டும்; அவ்வாறு அமைந்திரா விட்டால் காக்கையைப் பார்த்தேனும் கற்றுக் கொள்ளுங்கள் என்று நம்மை நோக்கி இடித்துரைக்கின்றார்.

### இலக்கணம்

ஆர்க்கும் — உம்மை முற்றும்மை.

ஆர்க்கும் — யார்க்கும் என்பது ஆர்க்கும் என வந்தது மரூஉ.

இடுமின், அறிமின் — இவை ஏவல்பன்மை வினைமுற்றுக்கள்.

போற்றன்மின், உண்ணன்மின் — இவை எதிர்மறை ஏவல் பன்மை வினைமுற்றுக்கள்.

பழம்பொருள் — பண்புத்தொகை.

உடையீர் — விளிப்பெயர்.

விரைந்தொல்லை — மீமிசைக்கிளவி; ஒரே பொருளைத் தரும் இரு சொற்கள் வருவது மீமிசைக்கிளவி எனப்படும்.

இடுமின் — இடு + மின். இடு — பகுதி, மின் — முன்னிலைப்பன்மை விகுதி.

உண்ணன்மின் — உண் + அல் + மின். உண் — பகுதி, அல் — எதிர்மறை இடைநிலை, மின் — முன்னிலைப்பன்மை வினைமுற்று விகுதி.

உண்மின், அறிமின் என்பனவற்றிற்கும், என்னன்மின், போற்றன்மின் என்பனவற்றிற்கும் உறுப்பிலக்கணம் இவ்வாறே கொள்க.

### எளிய அறம்

**யாவர்க்குமாம்.....................................உரைதானே**

இது திருமந்திரம் முதல் தந்திரத்தில் பதினாறும் பிரிவாகிய அறஞ்செய்வான் திறம் என்னும் பகுதியில் இரண்டாம் பாடலாகும்.

### சொற்பொருள்

இறைவற்கு - ஆண்டவனுக்கு,
ஒரு பச்சிலை - கொஞ்சம் பச்சிலைகள் இடுதல்,
யாவர்க்கும் ஆம் - எல்லோர்க்கும் எளிதின் ஆவதாகும்,
பசுவுக்கு ஒருவாயுறை - பசுவுக்கு ஒருவாய் உணவு அஃதாவது புல் இடுவது,
யாவர்க்கும் ஆம் - எல்லோர்க்கும் முடிந்த செயலாகும்,
உண்ணும்போது - ஒருவர் உண்ணும்பொழுது,
ஒரு கைப்பிடி - பிறருக்குக் கைப்பிடி உணவு கொடுப்பது,
யாவர்க்கும் ஆம் - எல்லோர்க்குமே எளிதாகும்,
பிறர்க்கு இன் உரைதான் - பிறரிடம் இனிய மொழிகளைப் பேசுவதும்,
யாவர்க்கும் ஆம் - எல்லோர்க்கும் செய்ய முடிந்ததே ஆகும்.

### கருத்து

இறைவனைப் பச்சிலையிட்டு வணங்குவதும் பசுவுக்கு ஒரு வாயுணவு கொடுப்பதும், பசித்தவனுக்கு ஒரு பிடிசோறு வழங்குவதும் பிறரிடம் இன்னுரை பேசுவதும் யாவராலும் செய்யத்தக்க அறமேயாகும்.

விளக்கம்

இறைவனை வணங்கலும் பசுவைக் காத்தலும் பசித்தவனுக்கு உணவிடுதலும், அனைவரிடத்தும் இனியன பேசுதலும் அறமாகும். அவ்வறத்தை அனைவரும் செய்தல் வேண்டும் என்கின்றார். இவ்வறங்கள் செயற்கரியனவோ என்று எண்ணவேண்டா எல்லோர்க்கும் எளியனவேயாகும் என்று கூறும் முறையில் 'ஒரு பச்சிலை' என்றும், 'ஒரு வாயுறை' என்றும், 'ஒரு கைப்பிடி' என்றும் 'இன்னுரைதான்' என்றும் எளிமை தோன்றக் கூறுகின்றார்.

இவ்வளவு எளிதாகிய அறத்தைச் செய்யாது வீணே காலத்தைக் கழிக்கின்றார்களே மக்கள் என்னுங் குறிப்புங் காண்க.

உண்ணும்போது என்ற குறிப்பினால் ஒரு கைப்பிடி என்பது அந்த அளவினதாகிய உணவைக் குறித்தது.

பச்சிலை, வாயுறை, கைப்பிடி இன்னுரை இவற்றிற்கேற்ற பயனிலைகளை வருவித்துக் கொள்க.

இலக்கணம்

யாவர்க்கும்—உம்மை முற்றும்மை.
ஆம்—ஆகும் என்பதன் இடைக்குறை.
பச்சிலை—பண்புத்தொகை.
கைப்பிடி—அளவையாகு பெயர்.
இன்னுரை—பண்புத்தொகை.
பச்சிலை—பசுமை+இலை.
இன்னுரை—இனிமை+உரை.
இறைவற்கு—இறைவன்+கு.

# ௨. திருக்குறள்

பெயர்க் காரணம்: திரு+குறள். மேன்மையான குறள் வெண்பாக்களாலாகிய நூல் எனப் பொருள்படும். திரு என்பது அடைமொழி. குறள் என்பது இரண்டடியால் ஆகிய வெண்பாவைக்குறிக்கும். குறள் வெண்பா—குறுகிய அடிகளால் ஆகிய வெண்பா. குறள் என்பது குறள் வெண்பாவை உணர்த்தாமல் குறள் வெண்பாக்களால் ஆகிய நூலை உணர்த்துவதால் கருவியாகு பெயர். அது திரு என்னும் அடைமொழி பெற்று வருவதால் அடையடுத்த கருவியாகு பெயர்.

**நூலின் பிரிவு:** அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என மூன்று பெரும் பிரிவுகளையும்; 133 அதிகாரங்களையும் கொண்டது; அதிகாரத்திற்குப் பத்துப் பாடல்களைக் கொண்டது.

**நூலின் வேறு பெயர்கள்:** முப்பால், பொய்யா மொழி, வாயுறை வாழ்த்து, தமிழ்மறை, பொதுமறை, திருவள்ளுவப் பயன், உத்தரவேதம் என்று திருக்குறளுக்கு வேறு பெயர்களும் உண்டு.

இந்நூல் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்றாகச் சேர்க்கப்பட்டுள்ளது.

**பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் :**

1. நாலடியார், 2. நான்மணிக் கடிகை, 3. இனியவை நாற்பது, 4. இன்னா நாற்பது, 5. கார் நாற்பது, 6. களவழி நாற்பது, 7. ஐந்திணை ஐம்பது, 8 ஐந்திணை எழுபது, 9 திணைமொழி ஐம்பது, 10. திணைமாலை நூற்றைம்பது, 11. திருக்குறள், 12. திரிகடுகம், 13. ஆசாரக்கோவை, 14. பழமொழி, 15. சிறு பஞ்சமூலம், 16. முதுமொழிக் காஞ்சி, 17. ஏலாதி, 18. கைந்நிலை என்பன.

நூலின் பெருமை : திருக்குறள் உலக மொழி பலவற்றில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

''ஆலும் வேலும் பல்லுக்குறுதி, நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி'' இதில் இரண்டு என்பது திருக்குறளைக் குறிக்கிறது.

சாதி, சமயம், மதம் என்னும் வேறு பாடுகளைக் கடந்து நிற்கும் பொது நூல்.

இதன் பெருமைகளை விளக்கும் வகையில் திருவள்ளுவமாலை என ஒரு நூலே அமைந்துள்ளது.

வள்ளுவருக்குப் பின் வந்த புலவர் அனைவரும் இதன் பாக்களை யும் கருத்துக்களையும் எடுத்தாளுகின்றனர்.

''கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக் குறுகத் தறித்த குறள்'' என இடைக்காடனாரும், ''அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக், குறுகத் தறித்த குறள்'' என ஔவையாரும் பாராட்டி யுள்ளனர்.

பாரதியார் ''வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ் நாடு'' என்று பாடியுள்ளார்.

இந் நூலுக்குப் பத்துப் பழம் பெரும் புலவர்கள் உரை எழுதி யுள்ளனர். இன்றும் பலர் புதிய உரை எழுதியுள்ளனர். இன்னும் பலர் புதிய உரை எழுதி வருகின்றனர். அவற்றுள் நல்லனவும் அல்லனவும் உள.

தமிழ் மக்கட்கு வேதம் என்று சொல்லத் தக்க நூல் இஃது ஒன்றே.

**ஆசிரியரைப்பற்றி :**

பெயர் : திருவள்ளுவர்.

ஊர் : சென்னையைச் சார்ந்த மைலாப்பூர் என்பர்.

பெற்றோர் : ஆதி, பகவன்.

மனைவி : வாசுகி அம்மையார்.

காலம் : கடைச் சங்கத்தின் இறுதிக் காலம். அஃதாவது கி. பி. முதல் நூற்றாண்டு அல்லது இரண்டாம் நூற் றாண்டாகும்.

தொழில் : நெசவுத் தொழில் செய்தாரென்றும் அரசரிடம் கருமத்தலைவராய்ப் பணி புரிந்தார் என்றும் கூறுவர்.

வள்ளுவர் என்பது குடிப் பெயர் என்பர் சிலர். யானைமே
ஏறிப் பறையறைந்து, அரசன் ஆணையை மக்களுக்குக் கூறு
தொழில் இக் குடியினர்க்கு உரியது என்பர். இன்னுஞ் சில
அரசனுக்கு அரசியல் நெறிகளைக் கூறுவது இக் குடிக்குரிய தொழ
என்பர்.

திருவள்ளுவர் மீது கொண்ட அன்பாலோ அல்லது வேறு க
ணங்களாலோ அவரைப் பற்றிப் பல வகையாகப் புனைந்துரைத்
விட்டனர் முன்பிருந்தோர். அப்புனைவுகட்குத் தக்க சான்று
கிடையா. ஆதலின் அக்கதைகளை மாணக்கர்கள் தெரிந்து கொ
வதாற் பயனொன்றும் இல்லை.

திருவள்ளவர்க்குரிய வேறு பெயர்கள்: முதற் பாவ
பொய்யில் புலவர், நாயனர், செந்நாப் போதார், தேவர், தெய்
புலவர், பெரு நாவலர், மாதாநுபங்கி, நான்முகனர் முதலியன.

## அறன் வலியுறுத்தல்

அஃதாவது அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றனு
அறமானது இம்மை, மறுமை, வீடு என்னும் மூன்றையும் பயத்த
ஞல் ஏனைய பொருள், இன்பம் என்னும் இரண்டையும்விட
யுடையது என்பதைக் கூறுவது. "சிறப்புடை மரபின் பொரு
இன்பமும், அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல" என்பது
நானூறு. நான்காம் அதிகாரமாகிய அறன் வலியுறுத்தலிலுள்
மூன்ரும் பாடலும் நான்காம் பாடலும் இங்குப் பாடம
வந்துள்ளன.

### ஒல்லும் வகையால்.............................செயல்

#### சொற்பொருள்

அறவினை - அறமாகிய நல்ல வினையை,
ஒல்லும் வகையான் - தத்தமக்கு இயலும் திறத்தால்,
ஓவாது - இடைவிடாமல்,
செல்லும் வாய் எல்லாம் - அ பொருந்தும் இடமெல்லாம்
செயல் - செய்க.

#### கருத்து

ஒவ்வொருவரும் தத்தமக்கு முடிந்த அளவு, இடைவிடா
அறத்தைச் செய்யவேண்டும்.

#### விளக்கம்

அறம் எனப் பொதுப்படக் கூறினரேனும் இல்லறம் துறவ
என்னும் இரண்டும் அடங்கும்

இல்லறம் பொருள் அளவிற்கேற்பவும் துறவறம் உடல்நி
கேற்பவும் செய்க என்பதை அறிவுறுத்த "ஒல்லும் வகையா
என்ருர்.

செல்லும் வாயாவது மனம், வாக்கு, காயம் என்
மூன்றிடங்களுமாம். அவற்ருல் செய்யும் அறங்களாவன முறை
நற்சிந்தையும் நற்சொல்லும் நற்செயலும் ஆகும்.

இப்பாடலால் அறம் செய்யும் வழி கூறப்பட்டது.

## இலக்கணம்

அறவினை — இருபெயரொட்டுப் பண்புத் தொகை
ஓவாது — எதிர் மறை வினையெச்சம்
செயல் — வியங்கோள் வினைமுற்று.
ஓவாது — ஓவு+ஆ+த்+உ. ஓவு—பகுதி, ஆ—எதிர்மறை இடைநிலை, த்—எழுத்துப் பேறு, உ—வினையெச்ச விகுதி. (ஓவு—ஒழி)
செயல் — செய்+அல். செய்—பகுதி, அல்—உடன்பாட்டு வியங்கோள் வினைமுற்று விகுதி.

**மனத்துக்கண்** ..................................................பிற

## சொற்பொருள்

மனத்துக்கண் - (ஒல்லும் வகையான் அறவினை செய்பவன்) தன் மனத்தின்கண்,

மாசு இலன் ஆதல் - குற்றம் இல்லாதவன் ஆகுக,

அனைத்து அறன் - அவ்வளவே அறமாவது,

பிற ஆகுல நீர - (மனத்தூய்மையல்லாத) ஏனைய சொல்லும், வேடமும் ஆரவாரத் தன்மையை உடையன.

## கருத்து

மனத்தூய்மையே சிறந்த அறமாவது. அகத்தூய்மையல்லாத சொல்லும் செயலும் அறமெனப் படா. ஆரவாரத் தன்மையனவே யாகும்.

## விளக்கம்

மாசு—தீயன சிந்தித்தல். மனத்தூய்மையில்லாப் பிற சொல்லும் செயலும் பிறர் அறிதல் வேண்டிச் செய்யப்படுகின்றன. ஆதலால் அவை "ஆகுல நீர" எனப்பட்டன. ஒருவன் மனத்து மாசற்று இருப்பின் அதன் வழித் தோன்றும் மொழி, மெய்களால் செய்யப்படுபவை பயனில என்பது பெறப்பட்டது.

அறஞ்செய விரும்பும் ஒருவன், அறஞ் செய்யப் பொருள் முதலியன வேண்டுமோ? அது செயற்கரிய செயலோ? என எண்ணுவது இயல்பு. அவ்வாறு எண்ணுவானுக்கு, அறஞ் செய்யப் பொருள் தேவையில்லை; மனத்தில் குற்றமில்லாமல் இருந்தாலே போதும், அவ்வளவுதான் அறம் என்பது, அது செயற்கு எளியது என்று அறிவுறுத்த "மனத்துக்கண் மாசிலன் ஆதல்" என்றும், "அனைத்தறன்" என்றும் கூறினார். இப்பாடலால் அறத்தின் இயல்பு கூறப்பட்டது.

## இலக்கணம்

இலன்—எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று.
ஆதல்—வியங்கோள் வினைமுற்று
அறன்—(அறம்) மொழியிறுதிப் போலி.
நீர—அன் சாரியை பெறாது வந்த அஃறிணைப் பன்மை வினைமுற்று.

மனத்துக்கண் — மனம் + அத்து + கண்.
அத்து — சாரியை; கண் — ஏழன் உருபு.
மாசிலன் — மாசு + இலன்.
அனைத்தறன் — அனைத்தே அறன் என வர வேண்டும், செய்யு[ள்]
விகாரத்தால் ஏகாரம் தொக்கது.

நீர — நீர்மை + அ. நீர்மை — பகுதி, அ — பலவின்பால் விகு[தி].
நீர்மை என்பதில் மை என்னும் பண்புப்பெயர் விகுதி கெட்[டு]
புணர்ந்தது.

## பொறையுடைமை

அஃதாவது ஏதேனும் ஒரு காரணம் பற்றியாவது, அறியா[மை]
யாலாவது ஒருவன், தமக்குக் கேடு செய்த வழித் தாமும் அதற்[கு]
மாறாக அவனிடம் அதனைச் செய்யாமல் பொறுத்துக் கொள்வ[து].
இங்கு இவ்வதிகாரத்திலுள்ள ஆறாம் பாடலும் எட்டாம் பாட[லு]ம்
பாடமாக வந்துள்ளன.

ஒறுத்தார்க்கு...........................................புகழ்

### சொற்பொருள்

ஒறுத்தார்க்கு - (தமக்குத் தீங்கு செய்தவனைத்) தண்டித்தவர்க்கு உண்டாவது,
ஒரு நாளை இன்பம் - அந்த ஒரு நாளைய இன்பமேயாகும்,
பொறுத்தார்க்கு - அதனைப் பொறுத்துக் கொண்டவ[ர்]களுக்கு,
பொன்றும் துணையும் - (உலக[ம்]) அழியும் அளவும்,
புகழ் - புகழ் உண்டாம்.

### கருத்து

தமக்குத் தீமை இழைத்தவனைத் தண்டிப்பவர் அவ்வொ[ரு]
நாளைய இன்பமே பெறுவர்; அத்தீமையைப் பொறுத்துக் கொ[ண்]
டவரோ உலகுள்ளளவும் புகழ் பெறுவர்.

### விளக்கம்

ஒரு நாளை இன்பமாவது, நமக்குத் தீமை செய்தவனை ந[ாம்]
விட்டு விடவில்லை; பதிலுக்குப் பதில் செய்தோம்; அஃதா[வது]
நினைத்ததை முடித்தோம் என்று அன்று முழுதும் பெருமை[ப்]
பட்டுக்கொண்டிருக்கும் போலி இன்பம். அது மறுநாளே மறை[ந்து]
விடும்.

பொன்றும் துணையும் என்றவிடத்து, உலகம் என்னும் செ[ால்]
வருவித்துரைக்கப்பட்டது.

ஒறுத்தார்க்கு இன்பம் மட்டுமே உண்டாவது; பொ[றுத்]
தார்க்கு இன்பம் மட்டுமன்றிப் புகழும் உண்டாகிறது. ஒ[றுத்]
தார்க்கு வரும் இன்பமும் மறுநாள் மறைந்து விடுகிறது; பொ[றுத்]
தார்க்கு வரும் புகழோ உலகம் உள்ள அளவும் இருக்கிற[து];
ஆதலால் பொறையுடைமை சிறந்தது என்பதை விளக்குகின்[றது]
இப்பாடல்.

[illegible] ....................................விடல்

**சொற்பொருள்**

[illegible] நுக்கால், [illegible] தம் [illegible]றச் செய் [illegible],

தாம் தம் தகுதியான் - தாம் தம்முடைய பொறுமையினுலே,

வென்று விடல் - வெற்றி கொள்க.

**கருத்து**

[illegible] எவரேனும் தீமை செய்யின், பொறுமை [illegible] வெற்றிகொள்ள வேண்டும்.

**விளக்கம்**

[illegible] தலாவது தீமை செய்தவர்களைக் காட்டி[illegible] நிற்றல். தீமை செய்தவர்களுக்குத் தாமும் தீமை [illegible] என்பதாகி அவரினும் மேம்பட்டவராக [illegible] தோல்வி என்றுதான் சொல்லப்படும். அத்[illegible] பொறுத்துக் கொள்வோர் தீமை செய்தவர்களை விட[illegible] நிற்றலால் அது வெற்றி எனப்படும். ஆதலால் [illegible] வென்றுவிடல் என்று கூறுகின்றார்.

[illegible] மனச்செருக்கு. மிக்கவை என்றது இகழ்ச்சி [illegible] செய்தலும் சொல்லுதலும் ஆகிய இரண்[illegible] [illegible]றுவிடல் என்பது ஒரு சொல்.

[illegible] பாட்டாலும் பிறர்செய்த தீமைகளைப் பொறுத்[illegible] என்பது கூறப்பட்டது.

**இலக்கணம்**

செய்தாரை—வினையாலணையும் பெயர்.

வென்றுவிடல்—வியங்கோள் வினைமுற்று.

## அழுக்காருமை

அழுக்காறு + ஆ + மை. அழுக்காறு என்பது ஒரே சொல். [illegible]தற்குப் பொருமை என்பது பொருள். அழுக்காற்றைச் செய்[illegible]மை அழுக்காருமை எனப்படும். ஆறும் பாடலும் எட்டாம் [illegible]டலும் இங்குப் பாடமாக வந்துள்ளன.

### கொடுப்பது....................................கெடும்

**சொற்பொருள்**

கொடுப்பது-ஒருவன் பிறர்க்குக் கொடுக்கும் பொருளைக்கண்டு,

அழுக்கறுப்பான் - பொருமைப் படுபவனுடைய,

[illegible]ற்றம் - சுற்றமானது,

உடுப்பதூஉம் உண்பதூஉம் இன்றி - உடுக்கப்படுவதும் உண்ணப்படுவதும் இல்லாமல்

கெடும் - கெட்டொழியும்.

### கருத்து

பிறருக்குக் கொடுக்கும் பொருளைக் கண்டு பொறாமைகொள் வானை சுற்றம் உடையும் உணவும் இல்லாமல் கேடுறும்.

### விளக்கம்

கொடுப்பது அழுக்கறுத்தலாவது, கொடுக்கப்படும் பொருளை கண்டு, இவ்வளவு பொருள் கொடுத்திருக்கின்றானே என்று மனம் பொறுக்காமல் இருப்பது.

சுற்றம் கெடும் என்று சொல்லவே அவன் கெடுதலும் சொல் லாமலே பெறப்பட்டது.

பிறருடைய பேற்றைக் கண்டு பொறாமைப்படுதல், தன் பேற் றையே இன்றித் தன் சுற்றத்தின் பேற்றையும் கெடுக்கும் என் தாம்.

### இலக்கணம்

அழுக்கறுப்பான்—வினையாலணையும் பெயர்.
உடுப்பதூஉம் உண்பதூஉம்— இன்னிசை அளபெடை. உம்மை எண்ணும்மைகள்.
கெடும்—செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்று.

## அழுக்காறு......................................விடும்

### சொற்பொருள்

அழுக்காறு என ஒரு பாவி - அழுக்காறு என்று சொல்லப் பட்ட ஒப்பில்லாத பாவி,
திரு செற்று – (அப்பொறாமை உடையவனை) இப்பிறப்பில் செல்வத்தைக் கெடுத்து,
தீயுழி உய்த்துவிடும் - மறுமை கண் நரகத்தில் செலுத்தி விடும்.

### கருத்து

அழுக்காறுடையான் இம்மையில் செல்வமின்றி வருந்துவான் மறுமையில் நரகில் விழுந்து வருந்துவான்.

### விளக்கம்

அழுக்காறு பண்பு; பாவி பண்பி. இங்கு, பண்பு பண்பியாகக் கூறப்படுகிறது. அஃதாவது அழுக்காறு எனும் பண்பு பாவி எனப் பண்பியாகக் கூறப்பட்டுள்ளது.

அது தன்னையுடையவனை இம்மை மறுமைப் பயன்களைப் பெற விடாது கெடுக்குங் கொடுமைபற்றிப் பாவி எனப்பட்டது.

இவ் விருபாட்டாலும் அழுக்காறுகொண்டான் வினையுங் குற்றங் கூறப்பட்டது.

### இலக்கணம்

[illegible] பொருள் உணர்த்தி நிற்கும் ஏழாம் வேற்றுமை உருபு [illegible] செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்று. (ஒருமை [illegible])

## தீவினையச்சம்

[illegible] செய்தற்கு அஞ்சுதல். இவ்வதிகாரத்திலுள்ள [illegible] பாட்டும் எட்டாம் பாட்டும் பாடமாக வந்துள்ளன.

**[illegible]......................................படும்**

### சொற்பொருள்

[illegible] (தனக்கு இன்பம் [illegible] செய்யப்படும்) [illegible], [illegible] - துன்பம் [illegible],

தீயவை - அத்தன்மையனவாகிய தீவினைகள், தீயினும் - தீயைக் காட்டிலும், அஞ்சப்படும் - ஒருவனால் அஞ்சப்படும்.

### கருத்து

[illegible] தீயைக் காட்டிலும் தீமை தருதலால் அவை தீயினும் அஞ்சப்படும்.

### விளக்கம்

[illegible] தொட்ட சமயத்தில், தொட்ட இடத்தில், [illegible] மையையே சுடும். தீவினையோ எனில், இறந்த பிறகும் [illegible] காலத்தும், பிறிதொரு தேசத்தும், பிறிதோருடம்பிலும் [illegible] சுடும். அதனால் தீயினும் அஞ்சப்படும் என்றார். தீவினைக்கு அஞ்ச வேண்டும் என்பது இப்பாட்டால் கூறப்பட்டது.

### இலக்கணம்

[illegible] அன் சாரியை பெறாது வந்த அஃறிணைப் பன்மை வினைமுற்று.

**தீயவை..........................................தற்று**

### சொற்பொருள்

தீயவை செய்தார் - பிறர்க்குத் தீவினைகளைச் செய்தவர்கள், [illegible] கெடுவது (எத்தன்மைத் தெனின்), [illegible] ஒருவனுடைய நிழலானது,

தன்னை வீயாது - நெடிதாகப் போயும் அவனை விடாமல், (வந்து) அடி உறைந்தற்று - அவனுடைய அடியின் கண் தங்கிய தன்மைத்து.

### கருத்து

ஒருவனுடைய நிழல் நீங்காது நின்று அவனுடைய காலடியில் தங்குவது போல, ஒருவன் செய்த தீமைகளும் அவனை விட்டகலாது நின்று அவனையே வந்தடையும்.

### விளக்கம்

ஒருவனுடைய நிழல் அவனை விட்டகலாது, பின்தொடர்ந்து சென்று அவன் காலடியிலே தங்கியிருக்கும். அதுபோல ஒருவன் செய்த தீவினையும் மறு பிறவியிலும் அவனை விட்டகலாது தொடர்ந்து சென்று அவனையே சார்ந்து அவனுக்குத் துன்பந்தருவது உறுதி என்பது இவ் வுவமையால் பெறப்படுகிறது.

இச்செய்யுள் உவமை அணியின் பாற்படும். இப்பாடலால் தீவினை செய்தார் கெடுதல் உறுதி என்பது கூறப்பட்டது.

### இலக்கணம்

செய்தார்—வினையாலணையும் பெயர்.

உறைந்தற்று—உறைந்த+அற்று. உறைந்த என்பதிலுள்ள அகரம் செய்யுள் விகாரத்தால் தொக்கது. (தொகுத்தல் விகாரம்)

நிழறன்னை—நிழல்+தன்னை.

வீயாது—வீ+ஆ+த்+உ. வீ—பகுதி, ஆ—எதிர்மறை இடைநிலை, த்—எழுத்துப்பேறு, உ—வினையெச்ச விகுதி.

## புகழ்

அஃதாவது இல்லறத்திற்கு ஓதப்பட்ட நெறிகளினின்று வழுவாதவர்கட்கு, இம்மைப் பயனாகி, இவ்வுலகின் கண் நிகழ்ந்து அழியாமல் நிற்கும் கீர்த்தி.

இவ்வதிகாரத்திலுள்ள ஆறும் பாடலும் பத்தாம் பாடலும் இங்குப் பாடமாக வந்துள்ளன.

**தோன்றின் ........................................நன்று**

### சொற்பொருள்

தோன்றின் - மக்களாய்ப் பிறக்கின்,
புகழொடு தோன்றுக - புகழுக்கு ஏதுவாகிய குணத்தோடு பிறக்க,
அஃது இலார் - அக்குணம் இல்லாதார்,
தோன்றலின் - மக்களாய்ப்பிறப்பதைவிட,
தோன்றாமை - மக்களாய்ப் பிறவாமல் இருத்தல் (விலங்காய்ப் பிறத்தல்),
நன்று - நல்லது.

### கருத்து

மக்களாய்ப் பிறப்பார் புகழுக்குரிய குணங்களுடன் தோன்ற வேண்டும்; இல்லை எனில் விலங்காய்ப் பிறத்தலே நன்று.

### விளக்கம்

விலங்காய்ப் பிறந்தால், அது புகழ் பெறவில்லையே என யாரும் இகழமாட்டார்; ஆதலின் நன்று என்றார்.

இக்குறட்பாவிற்கு வேறு பொருள் உரைப்பாரும் உளர். அஃது, ஒருவன் பலர் அறியும்படியான நிலைக்கு வருவானேயானால்

[illegible] வேண்டுமே தவிர இகழ்வால் வந்த [illegible] ஆகாதாம்.

[illegible] இல்லாதாரது தாழ்வு கூறப்பட்டது.

### இலக்கணம்

[illegible] காரியவாகு பெயர். புகழ் - காரியம், குணம் - காரணம். [illegible] ஆகி வந்தமையால் காரியவாகு [illegible]

[illegible] வியங்கோள் வினைமுற்று.

[illegible] இடைக்குறை.

[illegible]..................................தவர்

### சொற்பொருள்

[illegible] வசை [illegible] (இசை உண் [illegible]),
[illegible] வாழ்பவர்களே,
[illegible] வாழ்வாரா வர்,
இசை ஒழிய - புகழ் உண்டாகாமல் (வசை உண்டாக),
வாழ்வாரே - வாழ்பவர்களே,
வாழாதவர் - இறந்தவராவர்.

### கருத்து

[illegible] புகழுடன் வாழ்பவர்களே உயிர் வாழ்பவராவர்; [illegible] வாழ்பவர் இறந்தவரே யாவர்.

### விளக்கம்

[illegible] இசை பெறுதல்; இசை ஒழிதலாவது வசை [illegible] வாழ்வார்க்குப் பயன் புகழுடன் வாழ் [illegible] லால் கூறப்பட்டது.

### இலக்கணம்

[illegible] ஏகாரம் தேற்றேகாரம்.

[illegible] வாழ்+வ்+ஆர்.

## செங்கோன்மை

[illegible] அரசனால் செய்யப்படும் நீதியினது தன்மை. அந் [illegible] கோடாது செவ்விய கோல்போல இருத்தலினால் செங் [illegible] ஆயிற்று. இவ்வதிகாரத்துள்ள இரண்டாம் பாடலும் [illegible] பாடமாக வந்துள்ளன.

வானோக்கி...............................................குடி

### சொற்பொருள்

[illegible] எல்லாம் உலகத்து உயிர் [illegible],
[illegible] மழையை [illegible] நோக்கி வாழும், (அது [illegible])
குடி - குடிகள்,
மன்னவன் - அரசனுடைய,
கோல்நோக்கி வாழும் - அரசனுடைய செங்கோலை எதிர் நோக்கி வாழும்.

### கருத்து

உயிர்கள் மழையை நோக்கி வாழ்தல் போலக் குடிகள் அ... னுடைய செங்கோலை நோக்கி வாழ்கின்றன.

### விளக்கம்

வானோக்கி வாழ்தலாவது மழை பெய்தால்தான் உயிர்... வாழமுடியும்; இல்லை எனில் வாழமுடியாது என்பதாம். கோ... நோக்கி வாழ்தலாவது, செங்கோன்மை இருந்தால்தான் மக்... இன்பத்துடனும் பாதுகாப்புடனும் வாழ முடியும்; இல்லையெ... இன்பத்துடனும் பாதுகாப்புடனும் வாழ முடியாதென்பது... அத்தகைய செங்கோல் இல்லாதவிடத்து, மழை பெய்து எவ்வ... உணவு உண்டாயிருப்பினும் குடிகட்குப் பயனில்லை என்பதாயி... அஃதாவது அரசன் செங்கோன்மையுடையவனாக இருக்க வே... டும் என்பதாம்.

வானினால் உண்டாகும் உணவை வான் என்றும் செங்கோ... லால் உண்டாகும் காவலையும் இன்பத்தையும் கோல் என்... கூறினார்.

இப்பாடல் எடுத்துக்காட்டுவமை அணியாகும்.

### இலக்கணம்

வான், கோல்—கருவியாகு பெயர்கள்.
உலகு—இடவாகு பெயர்.
வாழும்—செய்யுமென்னும் முற்று.
வானோக்கி—வான்+நோக்கி.
கோனோக்கி—கோல்+நோக்கி.

## இறை காக்கும்.................................செயின்

### சொற்பொருள்

வையகம் எல்லாம் - இந்த உலகம் முழுவதையும்,
இறை காக்கும் - அரசன் காப்பான்,
அவனை - அந்த அரசனை,
முறை காக்கும் - அவனுடை... செங்கோலே காப்பாற்று...
முட்டாச் செயின் - அச் செ... கோலைக் குறைபாடின்... செலுத்துவானாயின்.

### கருத்து

உலகை அரசன் காப்பான்; அவனைச் செங்கோல் காக்கும்.

### விளக்கம்

செங்கோன்மைக்குக் குறைவு நேரக்கூடிய காலத்தி... குறைவு நேராமல் செலுத்தக்கூடிய அரசனைத்தான் செங்கோ... காக்கும் என்பதை வலியுறுத்தவே 'முட்டாச் செயின்' என்... குறைவு நேர்ந்து விடுமாயின் அவனைச் செங்கோல் காவாது அது... அவனுக்குக் கூற்றமாகி விடும் என்னுங் குறிப்புந் தோன்று... காண்க.

[illegible] சோழனிடத்தும் பொற்கைப் பாண்டியனிடத் [illegible] செய்து செங்கோலைக் காணலாம்.

[illegible] செங்கோல் செலுத்தினுன் எய்தும் பயன் கூறப் [illegible]

### இலக்கணம்

[illegible] — செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்று.

[illegible] — [illegible] என்பதில் து என்னும் விகுதி விகாரத் [illegible] தொக்கது. ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம்

[illegible] — செய்யின் என்பதன் இடைக்குறை.

## நட்பு

[illegible] இரண்டாம் பாடலும் எட்டாம் பாடலும் [illegible] வந்துள்ளன.

[illegible] ........................................நட்பு

### சொற்பொருள்

[illegible] அறிவுடைய [illegible] நட்புக்கள், [illegible] நீர - பிறை [illegible] வருவது போல [illegible] நிறையும் தன் [illegible] யனவாம், [illegible] நட்பு - அறிவிலார் நட்புக்கள், மதி பின் நீர - நிறைந்த மதி பின் குறைந்து கொண்டே வரும் தன்மையைப் போல நாடோறும் குறையுந் தன் மையை உடையனவாம்.

### கருத்து

அறிவுடை யார் நட்பு, பிறை நிலா வளர்வதுபோல் வளர்ந்து [illegible] வரும். அறிவிலார் நட்பு முழு நிலாக் குறைவதுபோல் [illegible] கொண்டே வரும்.

### விளக்கம்

நீரவர் — நீர்மையை உடையவர்; நீர்மை—பண்பு; நற்பண்பு [illegible] உடையவர். கேண்மை, நட்பு என்பன ஒரு பொருட் [illegible]

அறிவுடையார் நட்பு, முன் சுருங்கி நின்று பின் பெருகிக் கொண்டே வரும். ஏனெனில் ஒருவரை ஒருவர் சரியாக அறிந்து [illegible] முதலில் சுருங்கியும் பின்னர் நற்பண்புகளை அறிந்து கொண்டமையால் பெருகியும் நிற்கும்.

அறிவிலாரும் தம்முள் ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொள் [illegible] முதலில் பெரிதாக நட்பைத் தொடங்கிப் பின்னர் [illegible] இயல்பை மற்றவர் புரிந்து கொண்டமையால் நட்பைச் [illegible] செய்வர்.

பெரியவர்கள் நட்பு நாளுக்கு நாள் வளர்ந்து பிறகு பெரிதா கத் தோன்றும்; சிறியவர் நட்பு எடுத்த எடுப்பிலே பெரிதாகத் தோன்றிப் பின்பு குறையும் என்பதாம்.

நீர்—நீர்மையை உடையன. பயனிலைக்கேற்பக் கேண்மை என் பதற்கு நட்புக்கள் எனப் பன்மையாகப் பொருள் உரைக்கப் பட்டது.

மதி—முழு நிலா. நாம் பௌர்ணமி என்று சொல்லி வரு கின்றோமல்லவா? அதற்குரிய தமிழ்ச்சொல் மதி என்பதாகும். பேச்சு வழக்கில் அருகிக் கொண்டு வருவதால் அதன் முழுமையை நாம் அறிவதில்லை. இருப்பினும் கொங்கு நாட்டுப் பெருமக்களின் வாய்ப் பேச்சில் இன்னும் இருந்து வருகிறது. 'சித்திராப் பௌர் ணமி' என்று நாம் சொல்லுவதை அவர்கள் **சித்திரை மதி** என்று சொல்லி வருகிறார்கள்.

### இலக்கணம்

நீர—**அன் சாரியை பெறாது வந்த அஃறிணைப் பன்மை வினை முற்று.**

நீர—நீர்மை+அ. நீர்மை—பகுதி, மை விகுதி கெட்டு **அஃறி** ணைப் பன்மை விகுதியாகிய அகரத்தொடு சேர்ந்து நீர என்றாயிற்று.

**உடுக்கை........................................நட்பு**

### சொற்பொருள்

உடுக்கை இழந்தவன் - அவையின் கண் ஆடை குலைந்தவனுக்கு, கை போல - (அப்பொழுதே சென்று உதவி அவ்விளிவரலைக் களையும்) கையைப் போல, ஆங்கே - (நண்பனுக்கு இடுக்கண் வந்தவிடத்து) அப்பொழுதே இடுக்கண் களைவது - விரைந்து சென்றுதவி அவ்விடுக்கணை நீக்குவதே, நட்பாம்—நட்பாவது.

### கருத்து

ஆடை குலைந்தவனுக்கு அவனுடைய கை விரைந்து சென்று உதவுவது போல நண்பனுக்கு விரைந்து சென்று உதவுவது நட்பு.

### விளக்கம்

பலர் முன்னிலையில் ஒருவனுக்கு ஆடை குலையும் பொழுது அற்றங்காத்தற்பொருட்டு, அவனுடைய கை அவன் மனம் எண்ணு முன்னே விரைந்து சென்று உதவுகின்றது. அஃதாவது அது தன்னியல்பால் செய்கின்றது. அதைப்போல நண்பனும் தன் நண்பனுக்கு இடுக்கண் வந்தால், இவனுக்கு உதவலாமா கூடாதா என்று எண்ணிப் பார்க்காமல் இயல்புணர்ச்சியால் விரைந்துவந்து உதவ வேண்டும் என்பதாம்.

[illegible] களைதலே நட்பின்மேல் ஏற்றிக் [illegible]

[illegible] ஆடை குலைந்தவன், நெகிழ்ந் [illegible] கொள்ளுதலே நன்று.

[illegible] இப்பாடல் நட்பினது இலக்கணம் கூறு [illegible]

### இலக்கணம்

[illegible] உடுக்கப்படுவது என்னும் காரணப்பெயர். [illegible]

[illegible] லணையும் பெயர்

[illegible] —ஆறும் வேற்றுமைத் தொகை.

[illegible] காரணப்பெயர்.

## மருந்து

[illegible], செயல்கள் முதலியவற்றின் ஒவ்வாமை [illegible] முதலிய பிணிகள் வரும். உணவு, செயல் [illegible] காரணங்களால் வரும் பிணிகளைத் தீர்க்கும் [illegible].

[illegible] இரண்டாம் பாடலும் எட்டாம் பாடலும் [illegible].

[illegible] ......................................உணின்

### சொற்பொருள்

| | |
|---|---|
| [illegible] முன் [illegible], | உணின்-பின் உண்ணுவானுனல், |
| [illegible] செரித்த தன் | யாக்கைக்கு-அவன் உடம்பிற்கு, |
| [illegible] நன்கு [illegible]. | மருந்து என-மருந்தென்று, |
| | வேண்டாவாம்-வேறு வேண்டுவ தில்லையாம். |

### கருத்து

[illegible] உணவு நன்கு செரித்தபின் உணவு உண்டுவந் [illegible] மருந்தே தேவையில்லை.

### விளக்கம்

[illegible] இருப்பது நோய்க்குக் காரணமாகும். ஆகவே [illegible] நோய் வராது. நோய் வராத உடம்புக்கு [illegible] ஆதலால் மருந்தென வேண்டாவாம் என்று கூறுகிறார்.

[illegible] முன்னே தடுத்துக் கொள்வதற்குரிய வழி கூறுகிறது [illegible]

[illegible] காட்டும் குறிகளாவன: உடல் கலகலப்பாக் [illegible], ஏப்பம் தூய்மையாக இருத்தல், கரணங்கள் தொழிலுக்

குரியானவாக இருத்தல், பசி மிகுதல் முதலாயின. உணின் என்பது அதனருமை தோன்ற நின்றது. அஃதாவது அற்றது போற்றி உண்பது எல்லோராலும் எளிதாகக் கைக் கொள்ளமுடியாத அரிய செயல் என்பதாம்.

### இலக்கணம்

அருந்தியது—வினையாலணையும் பெயர்.
யாக்கை—காரணப்பெயர். நரம்பு, தோல் முதலியவற்றால் யாக்கப்படுவது அஃதாவது கட்டப்படுவது.
உணின்—உண்ணின் என்பதன் இடைக்குறை

**நோய்நாடி........................................செயல்**

### சொற்பொருள்

நோய் - (மருத்துவன் நோயாளியிடம் நிகழ்கின்ற) நோயை,
நாடி-அதன் குறிகளால் இன்னதென்று துணிந்து,
நோய்முதல்-பின் அது வருதற்குரிய காரணத்தை,
நாடி-ஆராய்ந்தறிந்து.
அது தணிக்கும் வாய் நாடி—பின் அது தீர்க்கும் வழிகளையறிந்து,
வாய்ப்பச் செயல்-அதனைச் செய்யும் பொழுது பிழையாமல் செய்க.

### கருத்து

மருத்துவன் நோயாளியின் நோய் இன்னதென்று தெரிந்து, பின் அதன் காரணத்தை ஆராய்ந்தறிந்து, பின் அதைத்தணிக்கும் வழியைத் தெரிந்து, அவ்வழியும் பிழையாமல் செய்க.

### விளக்கம்

இப்பாடல் மருத்துவர் கைக்கொள்ளவேண்டிய முறைகளை எடுத்துக் கூறுகிறது.

நோய் வருவதற்குரிய காரணங்கள் உணவு, செயல் முதலியன மாறுபடுதல். நோய் வருவதற்குரிய காரணங்களைத் தெரிந்து கொண்டால், நோய் இன்னதென்றும் அது தணிப்பதற்குரிய வழி இதுவென்றும் ஐயமறத் துணியலாம். நோய் தணிக்கும் வாய்களாவன: மருந்து செய்தல், இரத்தங்களைதல், அறுத்தல், சுடுதல் முதலியனவாம்.

வாய்ப்பச் செய்தலாவது மருத்துவத் துறையில் கைவந்த முன்னையோர் செய்து வருகின்ற முறைகளிலிருந்து தப்பாமல் செய்தல்.

### இலக்கணம்

நாடி—வினையெச்சம்.
நோய் முதல்—ஆறும் வேற்றுமைத்தொகை.
அது தணிக்கும்—இரண்டாம வேற்றுமைத்தொகை.
தணிக்கும் வாய்—செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்
செயல்—வியங்கோள் வினை முற்று.

நாடி — நாடு | இ: நாடு—பகுதி, இ—வினையெச்சவிகுதி.
முதலை — முதல் | நாடி.
செயல் — செய் | அல்; செய்—பகுதி, அல்—வியங்கோள் வினை முற்று விகுதி.

## மானம்

இது நற்குடிப் பிறந்தவர்களுக்கு உரியவான குணங்களுள் ஒன்று. அஃதாவது எக்காலத்தும் தம் நிலையிலிருந்து தாழாமல் இருத்தலும் எவ்வகையிலாவது தாழ்வு வந்து விடுமானால் உயிர் வாழாமையும் ஆம்.

இவ்வதிகாரத்தில் முதற் பாடலும் ஒன்பதாம் பாடலும் ஈண்டுப் பாடமாக வைத்துள்ளன.

**இன்றியமையா..................................விடல்**

### சொற்பொருள்

இன்றி அமையா - இன்றியமையாத,
சிறப்பின ஆயினும் - சிறப்பினை உடையனவேயாயினும்,
குன்ற வருப - தம்முடைய குடிப் பிறப்புத்தாழும்படி வருஞ் செயல்களை,
விடல் - செய்யாது விட்டு விடுக.

### கருத்து

மானம் குன்றும்படியான செயல்கள் எவ்வளவு இன்றியமையாதனவாயினும் அவற்றைச் செய்யாது விடுக.

### விளக்கம்

இன்றி அமையாமையாவது, அச்செயலைச் செய்யாவிட்டால் உயிர் வாழ முடியாத தன்மையையுடைமை. அத்தகைய செயலாயினும் மானங் கெடுவதாக இருந்தால் அதனைச் செய்யாதே என்பது கருத்து.

இறக்கும்படியான ஒரு நிலை வருமானால் மானங் குன்றும்படியான செயல்களைச் செய்தாயினும் உயிர் வாழ்க என்பது வடநூலார் கருத்து. அம்முறையை மறுத்து உடம்பு நிலையில்லாதது; மானம் நிலைத்தது; ஆதலால் இறந்தேனும் மானத்தைக் காக்க வேண்டும் என்னுங் கருத்துத் தோன்ற வள்ளுவர் இன்றியமையாச் சிறப்பினவாயினும் அவற்றைச் செய்யற்க எனக் கூறுகின்றார்.

### இலக்கணம்

அமையா—ஈறு கெட்ட எதிர் மறைப் பெயரெச்சம்.
ஆயினும்—உம்மை உயர்வு சிறப்பும்மை
வருப—அஃறிணைப்பன்மை வினைமுற்று. இங்கு வினையாலணையும் பெயராக நிற்கிறது.
விடல்—வியங்கோள் வினைமுற்று
சிறப்பின—அஃறிணைப் பன்மை வினைமுற்று.

குன்ற—குன்று+அ. குன்று—பகுதி அ—பெயரெச்ச விகுதி.

வருப—வா+ப்+அ. வா—பகுதி, இது விகாரப்பட்டு வரு என நின்றது, ப்—எதிர்கால இடைநிலை. அ—அஃறிணைப் பன்மை வினை முற்று விகுதி.

விடல்—விடு+அல். விடு—பகுதி, அல்—வியங்கோள் வினை முற்று விகுதி.

சிறப்பின—சிறப்பு+இன்+அ. சிறப்பு—பகுதி, இன்—சாரியை, அ—அஃறிணைப் பன்மை வினைமுற்று விகுதி.

**மயிர் நீப்பின்.......................................வரின்**

### சொற்பொருள்

மயிர் நீப்பின் - தன் மயிர்த்திரளின் ஒரு மயிர் நீங்கினாலும்,
வாழா - உயிர் வாழாத,
கவரிமா அன்னார் - கவரிமாவைப் போன்றவர்கள்,
மானம் வரின் - உயிர் நீங்கினை தம்முடைய மானம் எய்தும் நிலைமை வருமானால்,
உயிர் நீப்பர் - உயிரைத் தாங்கி நிற்காமல் இறந்து படுவர்.

### கருத்து

ஒரு மயிர் நீங்கினும் உயிர் வாழாத கவரிமாவைப் போன்றவர் தம் மானம் நீங்கும் நிலை வரின் உயிரைக் கொடுத்து மானத்தை நிலை நிறுத்துவர்.

### விளக்கம்

மயிர் நீப்பினும் என்று இழிவு சிறப்பும்மை பெற்று வர வேண்டும். அங்ஙனம் வாராது நீப்பின் என உம்மை தொக்கு வந்தது செய்யுள் விகாரம்.

உயிருக்கும் மானத்திற்கும் போட்டி. உயிர் போனால் மானம் நிற்கும்; மானம் போனால் உயிர் நிற்கும்; இரண்டும் உடன் நில்லா. இந் நிலைமை ஏற்படுமானால், என்றேனும் ஒரு நாள் போகக் கூடியதான உயிரைவிட்டு, என்றும் நிலைத்து நிற்பதான மானத்தைக் காப்பர் என்பது கருத்து.

கவரிமா உவமையாகக் கூறப்பட்டதனால் அதற்கு அஃது இயல்பாதல் போல இவர்க்கு இஃது இயல்பு என்றாயிற்று.

### இலக்கணம்

வாழா—(வாழாத) ஈறு கெட்ட எதிர் மறைப் பெயரெச்சம்.

கவரிமா—இரு பெயரொட்டுப் பண்புத் தொகை.

நீப்பர்—எதிர் காலப் பலர் பால் படர்க்கை வினைமுற்று.

நீப்பர்—நீ+ப்+ப்+அர். நீ—பகுதி (நீக்கு என்று பொருள்) ப்—சந்தி, ப்—எதிர்கால இடை நிலை, அர்—பலர் பால் விகுதி.

## பண்புடைமை

[illegible] பெருமை, சான்றாண்மை முதலிய பண்புகளி [illegible] எல்லாரியல்புகளும் அறிந்து ஒத்து ஒழுகுதல். [illegible] பாடறிந்தொழுகல் என்று கலித்தொகை [illegible].

[illegible] அதிகாரத்தில் ஆறும் பாடலும் ஏழாம் பாடலும் [illegible] உள்ளன.

பண்புடையார்.........................................மன்

### சொற்பொருள்

[illegible] பட்டு - பண்புடையார் [illegible] படுத லால், இன்றேல்-அவ்வாறு அவர்வழிப் படுதல் இல்லையாயின்,

[illegible] (டு) - இவ்வுலகியல் [illegible] உளதாய் [illegible] யிருக் [illegible]. அது மண்புக்கு-அவ்வுலகமானது மண்ணின்கட் புகுந்து மாய்ந்து போவதாம்.

### கருத்து

பண்புடையார் வழிவருவதால் இவ்வுலகம் உளதாயிற்று; [illegible] மண்ணொடு மண்ணாய் அழிந்து விடும்.

### விளக்கம்

[illegible] பட்டு எனத்திரிந்து நின்றது. உலகு என்பது [illegible] குறிப்பதால் ஆகுபெயர்.

பண்புடையார்ப் படாது ஒரு சார்பும் இன்றி மண்ணின்கட் [illegible] வேண்டுவதில்லை என்னும் பொருள்பட மன் [illegible] ச்சொல் நிற்கிறது. இவ்வாறு, சொல்லாது ஒழிந்த [illegible] பொருளைக் குறித்து நிற்பது ஒழியிசை எனப்படும்.

[illegible] பண்புடையாரது உயர்ச்சி கூறுகின்றது.

'[illegible] முயலா நோன்றாள் பிறர்க்கென முயலுநர் உண் [illegible] உண்டாலம்ம உலகம்' என்ற புற நானூற்று வரிகள் [illegible] கூறத்தக்கனவாம்.

### இலக்கணம்

பண்புடையார்ப்பட்டு—ஏழாம் வேற்றுமைத் தொகை.
[illegible] ஒழியிசை.

அரம்போலும்.........................................தவர்

### சொற்பொருள்

[illegible] - நன்மக்களுக்கே [illegible] பண்புகள்,
[illegible] - பெருதவர்,
[illegible] ம் கூர்மையரே [illegible] அரத்தின் கூர்மையைப் போலக் கூரிய அறிவுடையாரேனும்,
மரம்போல்வர் - ஓரறிவுபடைத்த மரத்தினைப் போல்வார்.

### கருத்து

மக்கட் பண்பில்லாதவர் எத்தகைய அறிவுடையாரேனு மரம் போன்றவரேயாவர்.

### விளக்கம்

மரம் ஓரறிவுயிர்; மக்கள் ஐயறிவுயிர். மக்கட் பண்பு மையுஞ் சேர்த்து ஆறறிவுயிர். அப்பண்பில்லையானல் ஏனை அறிவுகளாலும் பயனில்லை என்பார் மரம் போல்வார் என்ருர்.

இப்பாடல் பண்பில்லாதவருடைய இழிவு கூறுகிறது. செய்யுள் உவமையணி.

### இலக்கணம்

அரம்—ஆகுபெயர்.

போல்வர்—போல்+வ்+அர். போல் - பகுதி, வ் - எதிர்கா இடைநிலை, அர் - பலர்பால் விகுதி.

## ௩. பழமொழி

இது கடைச்சங்க நூல்களாகிய பதினெண் கீழ்க்கணக்கு நூல் களுள் ஒன்று. இஃது ஒவ்வொரு பழமொழியை இறுதியிலே கொண் டுள்ள நானூறு வெண்பாக்களைக் கொண்ட நூலாதலின் பழ மொழி நானூறு என்று பெயர் பெற்றது.

### ஆசிரியரைப் பற்றி

இந்நூலின் ஆசிரியர் முன்றுறை அரையனர் என்பவராவர் இவர் சைன சமயத்தைச் சார்ந்தவர் என்பர். இவர் முன்றுறை என்னும் ஊருக்கு அரசராக இருந்திருக்கலாம் என்று கருத இட முண்டு.

## குல வித்தை

உரைமுடிவு........................................படும்

இச்செய்யுள் கல்வி என்ற பகுதியிலிருந்து எடுக்கப்பட்டது

### சொற்பொருள்

இளமையோன் - இவன் இளம் பருவத்தனாக இருத்தலால்,
உரைமுடிவு காணன் - நம் வழக்கின் சொல் முடிவை ஆராய்ந்து காண முடியாதவன்,
என்ற - என்று இகழ்ந்த
நரை முது மக்கள்-நரைத்த முதியவர்கள்,
உவப்ப - மகிழும்படியாக,
சோழன் - கரிகாற் பெருவளத்தான் என்னும் சோழன்,
நரை முடித்து - நரை மயிரை முடித்து வந்து,
சொல்லால் — வழக்குரைத்தவர் களுடைய சொற்களைக் கொண்டே ஆராய்ந்தறிந்து
முறை செய்தான் - நீதி வழங்கினன்,
குலவிச்சை - தத்தம் குலத்துக்குரிய வித்தைகள்,
கல்லாமல் - கற்பதற்கு முன்பே
பாகம் படும் - பாதி உளவாகும்

### கருத்து

[illegible] க்க வந்த முதியோரிருவர் சோழன் கரிகாற் பெரு [illegible] இளமை கண்டு, இவன் நம் வழக்கை ஆய்ந்து காணும் [illegible] பெற்றிருக்க முடியாது என்றிகழ்ந்து செல்வதை அறிந்து, [illegible] வேடம் பூண்டு வந்து அவர்கட்கு நீதி வழங்கினன். அத [illegible] கல்லாமலே பாகம்படும்.

### விளக்கம்

[illegible] கரிகாற் பெரு வளத்தான் இளம் பருவத்தே அர [illegible] பெற்று ஆண்டு வந்தான். ஒரு சமயம் இரு முதியவர் தம் [illegible] கொண்டு, தமது வழக்கை உரைக்க, அரசனிடம் [illegible] அரசன் இளைஞனாக இருத்தலையறிந்து இவன் நம் [illegible] வழக்கை ஆராய்ந்து முடிவு காணத்தக்க திறம் உடையவ [illegible] என்று இகழ்ந்து திரும்பினர். இதையறிந்த சோழன் முதி [illegible] போல நரை முடித்து வந்து, அவர்களை அழைப்பித்தான். [illegible] முதியவர்கள் அரசனுடைய முதுமைத் தோற்றங் கண்டு [illegible] வழக்கை எடுத்துரைத்தனர். அதைக்கேட்ட அரசன் அவர்கள் [illegible] கொண்டே சரியாக நீதி வழங்கினன். முதியவர்கள் [illegible] திரும்பினர் என்பது வரலாறு. இவன் வரலாறு "முதி [illegible], அவை புகு பொழுதில் தம் பகை முரண் செலவும்" என்று [illegible] படையிலும் "இளமை நாணி முதுமை எய்தி, [illegible] முடிவு காட்டிய உரவோன்" என்று மணிமேகலையிலும் [illegible].

வழக்குகளை ஆய்ந்து காணும் பயிற்சி பெறாத இளமைப் பரு [illegible] இவன் அரச குலத்தில் பிறந்தவனாதலின் நீதி வழங் [illegible] அக்குலவித்தை இயல்பாகவே அவனிடம் அமைந்து [illegible] என்பதை இப்பாடல் விளக்குகிறது.

[illegible] அமைந்த பழமொழி: "குலவித்தை கற்றுப் பாதி [illegible] பாதி" என்பதாகும்.

### இலக்கணம்

முடிவு காணான்—இரண்டாம் வேற்றுமைத் தொகை
விச்சை — வித்தை என்பதன் மரூஉ
காணான் — காண்+ஆ+ஆன்
காண—பகுதி, ஆ – எதிர்மறை இடைநிலை (புணர்ந்து கெட் டது) ஆன் -- விகுதி
உவப்ப — உவ+ப்+ப்+அ
உவ—பகுதி, ப்—சந்தி, ப்—எதிர்கால இடைநிலை, அ—வினை யெச்ச விகுதி
செய்தான் — செய்+த்+ஆன்
செய்—பகுதி; த்—இறந்த கால இடைநிலை, ஆன் - விகுதி

இச் செய்யுள் வேற்றுப் பொருள் வைப்பணியின்பாற்படும்: பொதுப் பொருளால் சிறப்புப் பொருளையும் சிறப்புப் பொருளால்

பொதுப்பொருளையும் உறுதிப்படுத்திக் கூறுவது வேற்றுப்பொருள் வைப்பணியாகும். அஃதாவது வேறொரு பொருளை வைத்து, தான் சொல்லக் கருதிய பொருளை உறுதிப்படுத்துவது.

இச் செய்யுளில் சொல்லக் கருதிய பொருள் குல வித்தை கல்லாமல் பாகம்படும் என்பது. இது பொதுப்பொருள். இப்பொதுப் பொருளை உறுதிப்படுத்தச் சிறப்புப் பொருளாகிய சோழன் வரலாறு கூறப்பட்டது.

## தன் வாயால் கெடுதல்

### பொல்லாத சொல்லி........................கெடும்

#### சொற்பொருள்

நல்லாய்-பெண்ணே,
மணலுள் முழுகி - மணலுக்குள்ளேயே பதிந்து,
மறைந்து கிடக்கும் - ஒளிந்து வாழ்கின்ற,
நுணலும்-தவளையும்,
தன் வாயால் கெடும் - தன் குரலைக் காட்டித் தன்னைத் தின்னும் பிராணிகட்கு அகப்படும், (அதுபோல)
பொல்லாத சொல்லி - பிறரைப் பற்றிப் பொல்லாங்கு சொல்லி,
மறைந்து ஒழுகும் - கரந்து வாழ்கின்ற,
பேதை-அறிவிலான்,
தன் சொல்லாலே - தான் சொல்லும் சொல்லாலே,
தன்னை துயர்ப்படுக்கும்-தன்னைத் துன்பத்தின்கண் அகப்படுக்கும்.

#### கருத்து

மணலுள் மறைந்து வாழும் தவளை தன் குரலைக் காட்டித் தன்னைத் தின்னும் பிராணிக்கு அகப்படுதல் போல் பிறரைப்பற்றிப் பொல்லாங்கு கூறித் திரியும் கீழ்மகனும் தன் சொல்லாலேயே கெட்டொழிவான்.

#### விளக்கம்

இச் செய்யுள் கீழ்மக்கள் செய்கையை விளக்குகிறது.

மணலில் தவளை மறைந்து கிடக்கும். அது சும்மா வாயை மூடிக்கொண்டிராமல் கத்தித் தான் இருக்கும் இடத்தைத் தானே காட்டிக்கொடுக்கும். அப்பொழுது இரைதேடித் திரியும் பாம்பு முதலியன தவளை இருக்கும் இடத்தை எளிதாகத் தெரிந்து வந்து அதைப் பிடித்து விழுங்கிவிடும். வாயை மூடிக்கொண்டிருந்தால் இந்தத் தொல்லை கிடையாது. மூடனும் இப்படித்தான் தன் வாயாலேயே கெடுகின்றான். புறங்கூறிப் புறங்கூறித் தன்னியல்பைத் தானே வெளிப்படுத்திக்கொள்கின்றான். அதனால் தீங்குகள் வந்தடைந்து, கேட்டுக்கு ஆளாகிறான்.

இதில் வந்துள்ள பழமொழி : தவளையும் தன் வாயால் கெடும் என்பதாகும்.

நல்லாய் என்பது மகடூஉ முன்னிலை. ஓர் அறவுரையைச் சொல்லும் பொழுது ஓர் ஆண் மகனையோ ஒரு பெண் மகளையோ விளித்துக் கூறுவதுண்டு. பெண் மகளை விளித்து முன்னிலைப் படுத்திக் கூறுவதுமகடூஉ முன்னிலையாம்.

### இலக்கணம்

பொல்லாத—(பொல்லாதன) வினையாலணையும் பெயர்.
படுக்கும்—செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று.
கிடக்கும்—செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்.

இச் செய்யுள் எடுத்துக்காட்டுவமை அணியாகும். உவமேயத்தை விளக்க ஓர் உவமானத்தை எடுத்துக் காட்டுவது எடுத்துக் காட்டுவமை அணியாம். உவமேயமும் உவமானமும் தனித் தனி வாக்கியமாக வந்து இடையே அது போல என்ற சொல் மறைந்தேனும் வெளிப்பட்டேனும் வரும்.

மணலுள்.........கெடும்—இஃது உவமானம்; பொல்லாத...... படுக்கும்—இஃது உவமேயம். இடையே அது போல என்ற சொல் வருவித்து உரைக்கப் பட்டது.

## கெட்டாரும் நட்டாரும்

**முட்டின்று.........................................இல்**

### சொற்பொருள்

கட்டு அலர்தார் மார்ப - கட்டவிழ்ந்து மலர்ந்த பூமாலை யணிந்த மார்பனே,
முட்டுஇன்றி - முட்டுப்பாடு இல்லாமல்,
ஒருவர் உடைய பொழுதின் கண் - ஒருவர் செல்வம் உடையராய காலத்து,
அட்டிற்று - அவருடைய சமையலறையிலுள்ள உணவை,
தின்பவர் - உண்போர்,
ஆயிரவர் ஆப - பலராவர்,
கலிஊழி காலத்து - கலியுகமாகிய காலத்தில்,
கெட்டார்க்கு - பொருள் கெட்டவர்க்கு,
நட்டார் இல் - நண்பினர் ஒருவரும் இல்லை.

### கருத்து

செல்வமுள்ள காலத்தில் நண்பர் பலராவர். வறுமையுற்ற காலத்து எவரும் நெருங்கார்.

### விளக்கம்

நண்பர்களின் நிலையை விளக்கிக் கூறுகிறது இச் செய்யுள்.

கட்டு அலர்தார் மார்ப—இஃது ஆண்மகனை விளித்து முன்னிலைப் படுத்திக் கூறுவதால் ஆடூஉ முன்னிலை.

அட்டிற்று என்பது சமையல் அறையில் உள்ள உணவு. அட்டில்—சமையல் அறை; அடு+இல். அடு—சமை. அடு+இல் அட்டில் எனவரும். அட்டில் + து = அட்டிற்று எனவரும்; அஃதாவது சமையல் அறையில் உள்ளது (உணவு) எனப் பொருள்படும்.

"கெட்டார்க்கு நட்டார் இல்" எனத் திருக்குறளில் வந்துள்ளது.

முட்டின்று என்பதில், இன்றி என்னும் வினையெச்சம் இன்று என வந்தது. செய்யுளில் இவ்வாறு வரும். "அன்றி இன்றி என் வினையெஞ்சு இகரம், தொடர்பினுள் உகரம் ஆய்வரின்" என்பது விதி.

### இலக்கணம்

அட்டிற்று—ஒன்றன்பால் குறிப்பு வினைமுற்று. அட்டில்+து. து—குறிப்பு வினைமுற்று விகுதி.

ஆப—பலர்பால் வினைமுற்று. ஆ+ப. ஆ—பகுதி, ப—பலர்பால் விகுதி.

## புலித்தலையும் நாயும்

**நாடறிய..............................மோத்தல் இல்.**

### சொற்பொருள்

வாடி - வாட்டமுற்று,
வலித்து - நரம்பு வலித்து,
திரங்கி – சுருங்கி,
கிடந்தே விடினும்-படுத்துவிட்டதாயினும்,
புலித் தலையை - புலியினுடைய தலையை,
நாய் மோத்தல் - நாயானது (அஞ்சாது சென்று) மோந்து பார்த்தல்,
இல் - இல்லையாம், (அதுபோல)
நாடு அறியப்பட்ட செல்வர் - உலகத்தாரால் நன்கு அறியப்பட்ட பெருஞ்செல்வர்,
நல் கூர்ந்து – வறுமையடைந்து,
வாடிய காலத்தும் - தளர்ந்த காலத்திலும்,
வட்குபவோ - பிறர் ஒருவருக்குத் தாழ்வாரோ? (மாட்டார்).

### கருத்து

புலி தளர்ந்து படுத்தபடுக்கையாய்க் கிடந்தாலும் நாய் அதனை நெருங்காது. அதுபோலப்பெருஞ் செல்வரும் வறுமையால் தளர்ந்தாலும் பிறருக்குத் தாழ மாட்டார்கள்.

### விளக்கம்

நாடறியப்பட்ட பெருஞ் செல்வர் என்பது அவ்வளவு பெரிய செல்வர் என்பது கருத்து. அவர்கள் எவ்வளவு வறுமையால் வாடினும், எப்படியும் வாழவேண்டுமே என்பதற்காக எவரிடமும் தாழ்ந்து செல்ல மாட்டார்கள். அவர்கட்கு வாழ்வு பெரிதன்று; மானந்தான் பெரிது.

வாடி, வலித்து, திரங்கி, கிடந்து என்று கூறுவதால் புலி எழுந்து எதுவும் செய்ய இயலாத அளவுக்கு வலிகெட்டுத் தளர்ந்து கிடக்கிறது என்பது பெறப்படுகின்றது. அப்படிக் கிடந்தாலும்

நாய் நெருங்க அஞ்சும். இதனால் புலியின் பெருமிதம் விளங்குகிறது. வறுமையால் வாடிய பெருஞ் செல்வரையும் எவரும் தாழ்த்த அஞ்சுவர். ஆகவே அவர் பெருமிதமும் புலனாகின்றது.

இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமை அணியாகும்.

**இலக்கணம்**

வட்குபவோ—ஓ-எதிர்மறை ஓகாரம்.

வட்குப—வட்கு+ப. வட்கு—பகுதி, ப—பலர்பால் வினைமுற்று விகுதி.

---

# III. தொடர்நிலைச் செய்யுள்

## அ. சிலப்பதிகாரம்

இஃது ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று. புகார்க் காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக் காண்டம் என மூன்று காண்டங்களை உடையது. இயல், இசை, நாடகம் என முத்தமிழும் விரவி வருவதால் இது முத்தமிழ்க் காப்பியம் என்று சொல்லப்படும்.

சிலம்பு+அதிகாரம். சிலம்பினது அதிகாரம் என்று பொருள்படும். அதிகரித்தல்—முக்கியமாகக் கொள்ளுதல். கண்ணகியின் சிலம்பை முக்கியமாகக் கொண்டு பாடப்பட்டதாகலின் சிலப்பதிகாரம் என்னும் பெயரினைப் பெற்றது. சிலம்பு, சிலப்பு என ஆனது வலித்தல் விகாரம்.

"நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம்" என்று பாரதியாரும், "தேனிலே ஊறிய செந்தமிழின் சுவை தேரும் சிலப்பதிகாரம்" என்று கவிமணியும் இதனைப் பாராட்டியுள்ளனர்.

இந்நூல் மூன்று நீதிகளை அடிப்படையாகக் கொண்டது.

(1) அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும் (2) பத்தினிப் பெண்டிரைப் பாருலகேத்தும். (3) ஊழ்வினை நாடி வந்துறுத்தும் என்பனவாம்.

இக்கதை, ஆசிரியர் காலத்தே தமிழகத்திலேயே நிகழ்ந்த கதையாதலின் இது முதல் நூலாகும்.

இந்நூலுக்கு அரும்பதவுரை ஒன்றுண்டு. அடியார்க்கு நல்லார் உரையொன்றுண்டு. இவ்வுரை நூல் முழுமைக்கும் இல்லை. ந.மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் நூல் முழுமைக்கும் உரை எழுதியிருக்கிறார்கள்.

இந்நூலின் ஆசிரியர் சேரன் செங்குட்டுவன் தம்பியாகிய இளங்கோவடிகள்.

### ஆசிரியரைப் பற்றி :

பெயர் : இளங்கோவடிகள்.

தந்தை : நெடுஞ்சேரலாதன்.

தாய் : நற்சோணை.

ஊர் : திருவஞ்சைக்களம்.

காலம் : கி.பி. இரண்டாம் நூற்றாண்டு. இவர், தம் அண்ணன் செங்குட்டுவன் பொருட்டுத் துறவு பூண்டவர், இவர் உடன் காலத்தவராகிய சீத்தலைச் சாத்தனார் வேண்டிக்கொள்ள இந்நூலை இயற்றினார்.

## கனாத்திறம் உரைத்த காதை

தேவந்தி என்னும் பார்ப்பனத் தோழிக்குக் கண்ணகி தான் கண்ட கனவை எடுத்துரைத்ததைச் சொல்லும் பகுதி. இது சிலப் பதிகாரத்தில் முதற் காண்டமாகிய புகார்க் காண்டத்தில் உள்ளது.

### கதைச் சுருக்கம்

ஞாயிறு மறைந்த மாலைப் பொழுதிலே புகார் நகரில், மகளிர் கள், முறைப்படி விளக்கேற்றி, இல்லுறை தெய்வத்தை வழிபட்டு, இரவிற்கேற்ற கோலம் புனைய, சாத்தன் கோவிலில் வழிபாடு செய்யும் தேவந்தி என்பாள் கண்ணகிக்காகக் கோவிலையடைந்து வழிபட்டு வந்து, கண்ணகியை நோக்கிக் 'கணவனைப் பெறுக' என வாழ்த்தினள். அது கேட்ட கண்ணகி 'உன் வாழ்த்தால் நான் பெறுவேனாயினும் யான் கண்ட கனவினால் என் நெஞ்சம் ஐயுறு கிறது' என்று கூறிக் கனவினை எடுத்தியம்பினாள். அதற்குத் தேவந்தி, நீ முற்பிறப்பில் கணவன் பொருட்டுக் காக்க வேண்டிய நோன்பு தப்பினாய்; அதனால் சோமகுண்டம், சூரிய குண்டம் என் னும் பொய்கைகளில் நீராடிக் காமவேள் கோட்டத்தைத் தொழு வோம்; தொழுதால் நற்பயன் பெறலாம் என்றாள். அதற்குக் கண்ணகி, 'துறை மூழ்கித் தெய்வந் தொழுதல் எங்கட்கு இயல் பன்று' என்று கூறியிருந்தாள். அப்பொழுது கோவலன் அங்கு வந்து வருந்தி, 'பரத்தையொடு மருவிப் பொருளையெல்லாம் இழந் தேன்; எனக்கு இது நாணத்தைத் தருகின்றது என்றான். மாதவிக் குக் கொடுக்கப் பொருள் இல்லாமல் இங்ஙனங் கூறுகின்றான் எனக் கருதிய கண்ணகி 'என்னிடம் இரண்டு சிலம்புகள் உள; அவற்றைப் பெற்றுக் கொள்ளுங்கள்' என்றாள். உடனே கோவலன் அவற்றைப் பெற்று, 'இச்சிலம்பை முதலாகக் கொண்டு வாணிகஞ் செய்து, இழந்த பொருளை மீட்பேன் நீயும் என்னுடன் வருக' என்றுரைத் துப் பொழுது புலருமுன்னே புறப்படத் தொடங்கினான்.

## மாலை வேளையில் மங்கையர் செயல்

### 1—4. அகனகர்..............................கொள்ள

#### சொற்பொருள்

**அகல் நகர் எல்லாம்** - அகன்ற மனைகளில் எல்லாம்,
**அரும்பு அவிழ்** - அரும்பு முறுக் கவிழ்ந்த,
**முல்லை நிகர் மலர்** - முல்லையின் ஒளி பொருந்திய மலரை,
**நெல்லொடு தூஉய்** - நெல்லு டன் கலந்து தூவி,
**பகல் மாய்ந்த மாலை** - பகலவன் மறைந்த மாலைப் பொழுதில்,
**மணி விளக்கம் காட்டி** - அழகிய விளக்கை ஏற்றி,
**இரவிற்கு ஓர் கோலம்** - இராப் பொழுதிற்கேற்ற கோலத்தை,
**கொடி இடையார் தாம் கொள்ள** - கொடி போலும் இடையையுடைய மகளிர் மேற்கொள்ள,

#### கருத்து

புகார் நக்ரத்து மகளிர் தம் இல்லங்கள்தோறும் விளக்கேற்றி வைத்து, இரவிற்கேற்றவாறு ஆடையணிகளால் தம்மை அழகு செய்து கொண்டார்கள்.

#### விளக்கம்

நிகர் இங்கே ஒளி என்னும் பொருளில் வந்தது. பகல் மாய்தல் —பகற்பொழுதைச் செய்யும் கதிரவன் மறைதல். நெல்லும் மல ருந் தூவி வழி படுவது இயல்பு.

இரவுக் கோலம்: இல்லறத்து மகளிர் தமக்கேற்ற மென்மை யானவற்றை உடுத்தும் புனைந்தும் ஒப்பனை செய்து கொள்ளும் கோலம்.

நகர் என்பது இங்கே மனை என்னும் பொருளில் வந்தது.

#### இலக்கணம்

அகனகர்—வினைத்தொகை
அகழ் முல்லை—வினைத்தொகை.
தூஉய்—இசை நிறை அளபெடை.
பகல்—காலவாகு பெயர்.
கொடியிடை—உவமைத் தொகை.

## மாலதியின் மாற்றாள் மகன் உயிர் துறந்தமை

### மேலோர் நாள்..........................கிடந்தாளுக்கு

#### சொற்பொருள்

**மேல் ஓர் நாள்** - முன்னொரு நாளிலே,
**மாலதி** - மாலதி என்னும் பெய ருடைய ஒரு பார்ப்பனி,
**மாற்றாள் மகவுக்கு** - தன் மாற் றாளின் குழவிக்கு,
**பால் அளிக்க** - தனது பாலைச்சங் கால் ஊட்ட,

பால் விக்கி பாலகன் சோர - அந்தப் பால் விக்குதலால் அக்குழந்தை இறக்க,
மாலதியும் - அந்த மாலதியும்,
பார்ப்பானொடு மனையாள் - பார்ப்பனனாகிய கணவனும் மனைவியும்,
என்மேல் படாதன விட்டு - என் மேல் அடாப்பழி கூறுதலை விடுத்து,
ஏற்பன கூறார் - ஏற்புடையன வற்றைச் சொல்லார்,
என்று ஏங்கி - என்று நினைந்து (இதற்கென் செய்வேன்) என ஏக்கமுற்று,
மக கொண்டு - அக் குழந்தையை எடுத்துக் கொண்டு,
அமரர் தருக்கோட்டம் - தேவர் தருவாகிய கற்பகம் நிற்கும் கோவிலும்,
வெள் யானைக் கோட்டம் - வெள்ளை யானையாகிய ஐராவதம் நிற்குங் கோவிலும்,
புகர் வெள்ளை நாகர் தம் கோட்டம் - அழகிய பல தேவர் கோவிலும்,
பகல் வாயில் உச்சிக் கிழான் கோட்டம் - கீழ்த் திசையில் தோன்றுகின்ற சூரியன் கோவிலும்,
ஊர்க் கோட்டம் - இறைவன் ஊராகிய கைலாயம் நிற்கும் கோவிலும்,
வேல் கோட்டம் - முருகனுடைய கோவிலும்,
வச்சிரக் கோட்டம் - வச்சிரப் படை நிற்கும் கோவிலும்,
புறம்பணையான் வாழ் கோட்டம் - சாதவாகனன் மேவிய கோவிலும்,
நிக்கந்தன் கோட்டம் - அருகன் கோவிலும்,
நிலாக் கோட்டம் - சந்திரன் கோவிலும், (ஆகிய)
எங்கும் புக்கு - எல்லாக்கோவில் களிலும் நுழைந்து,
தேவிர்காள் - தேவர்களே,
எம் உறு நோய் - எம்மையடைந் துள்ள இத்துன்பத்தை,
தீர்ம் என்று - தீர்ப்பீராக என்று கூறிக் கொண்டு சென்று,
ஓர் பாசண்டச்சாத்தற்கு மேவி- ஒரு பாசண்டச் சாத்தன் கோவிலை அடைந்து (அவன் பால்)
பாடுகிடந்தாளுக்கு - வரங்கிடந் தவளை (நோக்கி)

## கருத்து

மாலதி தன் மாற்றாள் குழந்தைக்குப் பால் கொடுக்கும்பொழுது பால் விக்கி இறந்தது. அவள் அஞ்சி 'நம்மை மாற்றாளும் கணவனும் பழி கூறுவரே' என்று ஏங்கிப் பல கோவில்களுக்கும் சென்று முறையிட்டு, இறுதியில் பாசண்டச் சாத்தன் கோவிலை அடைந்து வரங்கிடந்தாள்.

## விளக்கம்

மாற்றாள் என்பது கணவனுடைய மற்றொரு மனைவி; சக்களத்தி என்று பேச்சு வழக்கில் வழங்குவர். மாற்றாள் இல்லாத போது குழந்தை அழுதமையால் பால் கொடுத்தாள். பால்-பசுவின் பால் என்று பொருள் கொண்டாலும் அமையும். சோர்தல் - இறத்தல் என்ற பொருளில் இங்கு வந்துளது.

பார்ப்பான் என்றது மாலதியின் கணவனை. படாதன-இல்லாதன. அஃதாவது அடாதன. படாதனவிட்டு என்பதைப் படாதன இட்டு எனப் பிரித்து அடாதவற்றைச் சுமத்தி என்றும் பொருள் கொள்ளலாம்.

புகர் வெள்ளை நாகர்—புகர் என்பது அழகு; நாகர் என்பது தேவர் எனப் பொருள்படும். வெண்மை நிறமுடைய தேவர், அவர் பல தேவர். பகல் வாயில்—பகல் தோன்றுகிற வாயில்; அஃதாவது கீழ்த்திசை. உச்சிக்கிழான்—பகலுக்கு உரியவன். சாதவாகனன்—ஐயனார்.

எல்லாக் கோவில்களிலும் சென்று துன்பந்தீர்க்க வேண்டினாள். அங்குள்ள தேவர்கள் தீர்க்காமையினால், அவ்விடங்களை விட்டு நீங்கிச் சாத்தன் கோவிலை அடைந்தாள். பாசண்டம் என்பது தொண்ணூற்றாறு வகைச் சமய சாத்திரங்களின் தருக்கக் கோவை என்று திவாகரம் கூறுகிறது.

### இலக்கணம்

பார்ப்பானொடு மனையாள்— ஒடு எண்ணுப் பொருளில் வந்தது.
படாதன—வினையாலணையும் பெயர்.
ஏற்பன—வினையாலணையும் பெயர்.
கூறுநர்—எதிர் மறைப் பலர்பால் வினைமுற்று
வெள்யானை—பண்புத் தொகை.
வேற்கோட்டம்—வேல் ஆகுபெயர்
வாழ் கோட்டம்—வினைத் தொகை
தீர்ம்—ஏவல் பன்மை வினைமுற்று
கிடந்தாளுக்கு—கிடந்தாளை என வரவேண்டும். இது கிடந்தாளுக்கு என வருதலால் உருபு மயக்கம்
கூறுநர்—கூறு+ஆ+ஆர். கூறு—பகுதி, ஆ—எதிர் மறை இடை நிலை, ஆர்—பலர்பால் விகுதி.
தேவிர்—தேவு+இர். இர்—முன்னிலைப் பன்மை விகுதி.
தீர்ம்—தீரும் என்பதில் உள்ள உகரம் கெட்டது.

## பாலகன் பிணத்தைப் பேய் தின்றது

## 16—22. ஏசும்படி..............................இட்டாள்

### சொற்பொருள்

சுடுகாட்டுக் கோட்டத்து - சக்கரவாளக் கோட்டத்தில்,
தூங்கு இருளில் சென்று - செறிந்த இருளிலே சென்று,
ஆங்கு இடுபிணம் தின்னும் - அங்கே குழியில் இடுகின்ற பிணங்களைத் தின்கின்ற,
இடாகினிப்பேய் - இடாகினிப் பேயானவள்,
ஏசும்படி ஓர் இளங்கொடியாய் - பிறரைப் பழிக்கும் வடிவையுடைய பெண்வடிவாகத் தோன்றி (பாடுகிடந்தாளை நோக்கி),

ஆசு இலாய்-குற்றமற்றவளே,
செய்தவம் இல்லோர்க்கு - செய்யப்பட்ட தவம் இல்லாதவர்கட்கு,
தேவர் வரம் கொடார் - தேவர்கள் வரந்தர மாட்டார்கள்,
பொய் உரை அன்று - இது பொய்ம் மொழி அன்று,
பொருள் உரையே - மெய்ம் மொழியே எனச்சொல்லி,
கையில் படு பிணம்-கையிலுள்ள அந்தப் பிணத்தை,
தா என்று - பார்ப்பதற்குத் தருவாயாக என்று,
பறித்து அவள் கைக் கொண்டு- அவள் கையினின்றும் பறித்துக் கொண்டு,
வாங்கி மடியகத்து மகவை இட்டாள் - அக்குழந்தையை வாங்கித் தன் வயிற்றிலே இட்டாள்.

**கருத்து**

இடாகினி என்னும் பேய் அழகிய பெண்ணுருக்கொண்டு தோன்றி, மாலதியை நோக்கித் 'தவமில்லார்க்குத் தேவர் வரங் கொடார்' என்று கூறி அக்குழந்தையைப் பறித்துத் தின்று விட்டாள்.

**விளக்கம்**

ஏசும்படி—ஏசும்+படி; படி—வடிவம். சுடுகாட்டுக் கோட்டத்திற்குச் சக்கரவாளக் கோட்டம் என்னும் பெயரும் உண்டு. மடி என்பது இங்கு வயிறு என்னும் பொருளில் வந்தது. மடியகத் திடுதலாவது விழுங்குதல்.

பேய் தன்னுருவில் சென்றால் அவள் குழந்தையைக் கொடாளாதலின் பெண்ணுருவிற் சென்றது.

**இலக்கணம்**

இளங்கொடி—இளமையாகிய கொடிபோன்றவள் எனப் பொருள்படுதலால் உவமையாகுபெயர். இதனையே அன்மொழித்தொகை என்பாரும் உளர்.

செய்தவம்—வினைத்தொகை.

கொடார்—எதிர்மறைப் பலர்பால் வினைமுற்று.

இடு பிணம்—வினைத் தொகை.

இடாகினிப்பேய்—இருபெயரொட்டுப் பண்புத் தொகை.

தின்னும்—செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்.

கொடார்—கொடு+ஆ+ஆர். கொடு—பகுதி, ஆ—எதிர்மறை இடைநிலைபுணர்ந்து கெட்டது, ஆர்—பலர்பால் விகுதி.

தின்னும்—தின்+உம். தின்—பகுதி, உம்—பெயரெச்ச விகுதி

இட்டாள்—இடு+ஆள். இடு—பகுதி, ஆள்—பெண்பால் விகுதி. பகுதி இரட்டித்து இறந்த காலங் காட்டிற்று.

# மாலதிக்குச் சாத்தன் அருளுதல்

## 22—28. இடியுண்ட........................தையலாள்

### சொற்பொருள்

இடியுண்ட மஞ்ஞைபோல் - அப்பொழுது இடிக் குரல் கேட்ட மயில் அகவுமாறு போல,
ஏங்கி அழுதாளுக்கு - ஏங்கி அழுகின்றவளை நோக்கி,
அச் சாத்தன் - அந்தச் சாத்தன் என்னும் தெய்வம்,
அஞ்ஞை - அன்னாய்,
நீ ஏங்கி அழல் என்று-நீ வருந்தி அழாதே என்று கூறி,
முன்னை ஓர்குயில் பொதும்பர் நீழல் - நீ செல்லும் வழி முன்னர் குயில்களையுடைய ஒரு மரச் செறிவின் நிழலிலே,
உயிர்க் குழவி காணாய் - உயிருடன் கிடக்கும் குழந்தையைக் காண்பாய் என்று,
அக் குழவியாய் குறுக - அக் குழந்தை வடிவு கொண்டு அவ்விடத்துச் சென்றுகிடப்ப,
அயிர்ப்பு இன்றி - ஐயம் இல்லாமல்,
மாயக் குழவி எடுத்து - மாயமாக வந்த அந்தக் குழந்தையைத் தன் குழந்தை என்று எடுத்து,
மடி திரைத்து - வயிற்றில் அணைத்துக்கொண்டு சென்று,
அத் தையலாள் - அந்த மாலதி என்ற பெண்,
தாய் கைக்கொடுத்தாள்-பெற்ற தாயின் கையிற் கொடுத்தாள்,

### கருத்து

குழந்தையை இழந்து வருந்தும் மாலதியை நோக்கிச் சாத்தன் 'நீ வருந்தற்க, நீ செல்லும் வழியில் உயிர்க் குழந்தையைக் காண்பாய்' எனக் கூறி, அக்குழந்தை வடிவுடன் சென்று கிடந்தான். மாலதி தன் மகவென்று கருதி எடுத்து வந்து தாய் கையிற் கொடுத்தாள்.

### இலக்கணம்

அஞ்ஞை—அண்மை விளி
அழல்—எதிர்மறை வியங்கோள் வினைமுற்று.
உயிர்க்குழவி—இரண்டாம் வேற்றுமைத் தொகை.
காணாய்—உடன்பாட்டு எதிர்கால முன்னிலை வினைமுற்று.
நீழல்—நீட்டல் விகாரம்
நீழல் குறுக—ஏழாம் வேற்றுமைத் தொகை.
தாய்கை—ஆறாம் வேற்றுமைத் தொகை.
அழல்—அழு+அல் அழு—பகுதி அல்—எதிர்மறைப் பொருளில் வந்த வியங்கோள் வினைமுற்று விகுதி.
காணாய்—காண்+ஆய். காண்—பகுதி, ஆய்—முன்னிலை ஒருமை விகுதி.
குறுக—குறுகு+அ. குறுகு—பகுதி, அ—பெயரெச்ச விகுதி.
கொடுத்தாள்—கொடு+த்+த்+ஆள்.

# சாத்தன் உருக்காட்டி மறைதல்

## 23—36. தூய மறையோன்..............நீங்குதலும்

### சொற்பொருள்

இறை யோனும் - குழந்தையாக வந்த சாத்தனும்,
தூய மறையோன் பின் - தூய்மை வாய்ந்த மறையோனுக்குப் பின் செல்லும்,
மாணியாய் - பிரமசாரியாய்,
வான் பொருள் கேள்வி துறை போய் - சிறந்த கல்வியிலும் கேள்வியிலும் தேர்ச்சிபெற்று,
அவர் முடிந்த பின்னர் - தாய் தந்தையர் இறந்த பிறகு,
தாயத்தாரோடும் வழக்குரைத்து – தன் தாயத்தாருடன் வழக்குரைத்து வென்று,
தந்தைக்கும் தாயர்க்கும் - தந்தை தாயர்க்கு,
வேண்டும் கடன் கழித்து - செய்ய வேண்டிய நீர்க்கடன் முதலியவற்றைச் செய்து முடித்து,
மேய நாள் - வாழும்நாளில் ஒரு நாள்,
தேவந்தி என்பாள் மனைவி அவளுக்கு - தேவந்தி என்னும் தன் மனைவிக்கு,
பூ வந்த உண்கண் - பூப்போன்றமையுண்ட கண்கள்,
பொறுக்க என்று - இதனைப் பொறுப்பதாக என்று நிருமித்து,
மேவி - பின்பு அவளைப் பொருந்தி,
தன் மூவா இளநலம் காட்டி - என்றும் மூத்தலில்லாத தனது இளைய அழகினை வெளிப்படுத்தி,
எம் கோட்டத்து - எமது கோட்டத்திற்கு,
நீ வா என உரைத்து - நீ வருவாயாக எனச் சொல்லி,
நீங்குதலும்-நீங்கினுகை,

### கருத்து

குழந்தையாக வந்த சாத்தன் கல்வி கேள்விகளிற் சிறந்து, பெற்றோர் இறந்த பின்பு, தாயத்தாருடன் வழக்காடி வென்று, தந்தை தாயர்க்கு வேண்டிய இறுதிக் கடன் முடித்து, தேவந்தியை மணமுடித்து வாழும் நாளில் ஒருநாள் அவளுக்குத் தன் தெய்வத் திருவுருவைக் காட்டித் தன் கோவிலுக்கு வரச் சொல்லி மறைந்தான்.

### விளக்கம்

வான்பொருள் என்பது சிறந்த பொருள் அஃதாவது கல்வி. அவர் என்ற சுட்டுப் பெயர் தாய் தந்தையரைக் குறிக்கும். வழக்குரைத்தலாவது, பெற்றோர் இறந்தவுடன் சொத்துக்களைத் தாயத்தார் கவர்ந்து கொள்ளாமல் வழக்குரைத்துத் தன் மனைவிக்குப் பொருட் குறைபாடில்லாமற் செய்தலாம். தாயத்தார் இயல்பும் இங்கு விளங்குகிறது.

மாந்தர்தம் கண்கள் தெய்வ உடம்பைக் காணப் பெறுதாகலின் 'இவள் கண் பொறுக்க' என விதித்தனன். மூவா இள நலம்—

தெய்வத் திருவுருவின் அழகு. திருமுருகாற்றுப் படையிலும் 'மணங்கமழ் தெய்வத்து இளநலங் காட்டி' என வருதல் காண்க.

சாத்தன் தேவந்தியுடன் எட்டாண்டுகள் வாழ்ந்து பின்பு இங்ஙனம் நீங்கினன் என இந்நூல் வரந்தரு காதையில் கூறப்படுகிறது.

### இலக்கணம்

பொருட் கேள்வி—உம்மைத்தொகை. (பொருளும் கேள்வியும்)

மேய—மேவிய என்பதன் இடைக்குறை.

உண்கண்—வினைத்தொகை.

பொறுக்கென்று—பொறுக்க+என்று. அகரம் தொகுத்தல் விகாரம்

மூவா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் (மூவாத)

இளநலம்—பண்புத்தொகை.

## தேவந்தி சாத்தன் கோட்டத்து வழி படுதல்

### 36—40. தூமொழி............கொண்டிருப்பாள்

### சொற்பொருள்

தூமொழி - தூயமொழியை உடையளாய தேவந்தி,

ஆர்த்த கணவன் - என் நெஞ்சினைப் பிணித்த கணவன்,

எங்கும் போய் - எல்லா விடங்களிலும் சென்று,

தீர்த்த துறை படிவேன் - தீர்த்தம் ஆடுவேன்,

என்று அகன்றனன் - என்று கூறி என்னை விட்டு நீங்கினன்,

அவனை பேர்த்து - அவனை மீண்டும்,

இங்ஙன் மீட்டுத் தருவாய் என - இவ்விடத்தில் அழைத்துத் தருவாயென்று,

ஒன்றன் மேல் இட்டு - ஒரு பெயரிட்டுக் கொண்டு,

கோட்டம் வழிபாடு கொண்டிருப்பாள் - அவன் கோவிலை நாடோறும் வழிபாடு செய்து கொண்டிருப்பவள்,

### கருத்து

தேவந்தி, தன்னைப் பிரிந்த கணவனை மீண்டும் தரல் வேண்டுமென்னும் பெயரால் அக் கோவிலில் வழிபட்டுக் கொண்டிருந்தாள்.

### இலக்கணம்

தூமொழி—பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை

ஆர்த்த — இறந்த காலப்பெயரெச்சம் ஆர்+த்+த்+அ. ஆர்—பகுதி, த்—சந்தி, த்—இறந்த கால இடைநிலை, அ—பெயரெச்ச விகுதி.

## தேவந்தி கண்ணகியை வாழ்த்துதல்

### 40—44. வாட்டரும்........................என்றாள்

**சொற்பொருள்**

வாட்டரும் சீர் - குறைதல் இல்லாத புகழையுடைய,
கண்ணகி நல்லாளுக்கு-கண்ணகியாகிய நங்கைக்கு,
உற்ற குறை உண்டு என்று-(கணவன் பிரிதலால்) நேர்ந்ததோர் துன்பம் உண்டென்று,
எண்ணிய நெஞ்சத்து இனையளாய்-நினைந்த நெஞ்சின் வருத்தத்தை உடையவளாய்,
நண்ணி-கோவிலை அடைந்து,
அறுகு சிறு பூளை - அறுகு சிறிய பூளைப்பூ முதலியவற்றை,
நெல்லொடு தூஉய்-நெல்லுடன் கலந்து (இவள் கணவனைப் பெறல்வேண்டுமெனத்) தூவி வழிபட்டு,
சென்று-கண்ணகியிடம் சென்று,
கணவனோடு பெறுக - கணவனைப் பெறுவாயாக,
என்றாள் - என்று வாழ்த்தினாள்,

**கருத்து**

தேவந்தி கண்ணகியின் துயரத்தை நினைந்து வருந்தி, அவளுக்காகக் கோவிலில் வழிபாடு செய்து, பின் கண்ணகியை அடைந்து, நீ நின் கணவனைப் பெறுக என வாழ்த்தினாள்.

**விளக்கம்**

வாடரும் என்பது வாட்டரும் என வந்தது; வாடுதல்—குறைதல். வாட்ட அரும் என்று கொண்டால் பிறரால் கெடுத்தற்கரிய என்று பொருள் கொள்க. இனைதல்—வருந்துதல். அஃது இனை என்றாகி அள் விகுதியொடு கூடி இனையள் என்றாயிற்று.

கண்ணகிபாற்கொண்ட பேரன்பால் தேவந்தி, தானே சென்று மலர் முதலியன தூவிக் கோவிலில் வழிபாடு செய்கின்றாள்.

**இலக்கணம்**

வாட்டரும்—விகாரம்.
அறுகு பூளை—உம்மைத் தொகை.
நெல்லொடு தூஉய்—இன்னிசையளபெடை.
கணவனோடு — உருபுமயக்கம் இரண்டனுருபு வரவேண்டிய இடத்தில் மூன்றனுருபு வந்தது.

## கண்ணகி தான் கண்ட கனவைக் கூறல்

### 44—54. பெறுகேன்..................நகையாகும்

**சொற்பொருள்**

பெறுகேன் - நீ இங்ஙனம் வாழ்த்துதலால் பெறுவேன் ஆயினும்,
கனவினால் - நான் கண்ட கனவினாலே,

என் நெஞ்சம் கடுக்கும் - என் மனம் ஐயுறுகின்றது, (அக் கனவு யாதெனில்)
என் கைபிடித்தனன் போய்-என் கணவன் என்னுடைய கையைப் பற்றி அழைத்துச் செல்ல,
ஓர் பெரும் பதியுள் பட்டேம் - ஒரு பெருநகருள் புக்கோம்,
பட்ட பதியில் - அங்ஙனம் புக்க நகரிலே,
படாதது ஒருவார்த்தை-ஏலாததோர் பழிச் சொல்லை,
ஊரார்-அவ்வூர் மக்கள்,
இடு தேள் இட்டு - இடுதேள் இடுமாறு போல,
என்றன் மேல் இட்டனர் - என் மேற் போட்டனர்,
கோவலற்கு-கோவலனுக்கு (அப் பழிமொழியால்),
ஓர் தீங்கு உற்றது என்று - ஓர் தீங்கு உண்டாயிற்றென்று,
அது கேட்டு-பிறர் சொல்ல அதனைக் கேட்டு,
காவலன் முன்னர் - அவ்வூர் அரசன் முன்னிலையில்,
யான் கட்டுரைத்தேன் - நான் சென்று வழக்குரைத்தேன்,
காவலனோடு ஊர்க்கு உற்ற - (அதனால்) அவ்வரசனோடு அவ்வூர்க்கும் நேர்ந்த,
தீங்கு ஒன்றும் உண்டு-தீங்கொன்றும் உண்டாம்,
உரையாடேன்-அது தீக்கனவாதலினால் நினக்கு அதனை உரையேன்,
செறி தொடீஇ - செறிந்த வளையல்களை அணிந்த தோழி,
தீக்குற்றம் போலும் - அப்பொழுது கடியதொரு குற்றமுண்டாயிற்று,
தீக்குற்றம் உற்றேனொடு உற்ற- அத்தீய குற்றத்தை அடைந்த என்னுடன் பொருந்திய,
உறுவனோடு-கணவனுடன்,
யான் உற்ற-யான் பெற்ற,
நற்றிறம் கேட்கின் - நற்பேற்றினைக் கேட்டால்,
நகையாகும் - அது நினக்கு சிரிப்பைத் தரும், (என்று சொல்ல)

## கருத்து

தோழியே நின் வாழ்த்தால் நான் கணவனைப் பெறுவேன். ஆயினும் நான் கண்ட கனவினால் ஐயுறுகின்றேன். அக்கனவு யாதெனில் நானும் என் கணவரும் ஒரு பெரு நகருள் நுழைந்தோம். அவ்வூர் மக்களால் அடாப்பழி பெற்று, அதனால் கோவலனுக்கு ஒரு துன்பம் உண்டாயிற்றெனக் கேள்விப்பட்டு அரசனிடம் சென்று வழக்குரைத்தேன். அதனால் அவ்வூருக்கும் அரசனுக்கும் தீங்குண்டாயிற்று. இறுதியில் நாங்கள் பெற்ற ஒரு பேற்றைச் சொன்னால் உனக்கு நகையாகத் தோன்றும் என்று கண்ணகி தேவந்தியிடம் கூறினாள்.

## விளக்கம்

கடுக்கும்—ஐயுறும்; இது கடி என்னும் உரிச் சொல்லடியாகப் பிறந்த சொல். இடு தேளிடுதல் — தேள் அல்லாத ஒன்றைத் தேளென்று சொல்லி மேலே போட்டு அஞ்சப் பண்ணுதல். கோவலனுக்கு நேர்ந்த பழிச்சொல்லைத் தானே சுமப்பதாகக் கொண்டு 'என்றன்மேல் இட்டனர்' என்றாள்.

அரசன் முன் செல்லாத நான், சென்று வழக்குரையாத நான் வழக்குரைத்தேன் என்றாள். தீங்கு — அரசன் இறத்தலும் ஊர் எரியுண்ணுதலுமாம். இது கெட்ட நிகழ்ச்சியாதலினால் 'உரையாடேன்' என்றாள். 'உரையார், இழிதக்க காணின்கண்' என்பது பழமொழி.

உறுவன்—மிக்கோன் — கோவலன். நற்றிறம் — இருவரும் துறக்கம் புகுதல். இதைக் கூறினால் இது கிட்டாத ஒன்றாயிற்றே என்று எள்ளி நகையாடுவாள் என்பதால் 'நகையாகும்' என்றாள்.

ஊருட் புக்கேம் என்பதை 'பதியுள் பட்டேம்' என்றும், பின்னர் அப்பதியைப் 'பட்டபதி' என்றும், பிறகு 'தீக்குற்றம்' என்றும் கூறும் சொற்களில் பின் விளைவுகள் மறைந்து கிடக்கும் குறிப்பு நினைந்து நினைந்து மகிழத்தக்கது.

### இலக்கணம்

பெறுகேன் — தன்மை ஒருமை எதிர்கால வினைமுற்று.
கடுக்கும் — செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்று.
பிடித்தனன் போய் — பிடித்தனன் என்பது முற்றெச்சம்.
பட்டேம் — தன்மைப் பன்மை வினைமுற்று.
உண்டால் — ஆல் அசை நிலை.
செறிதொடீஇ—வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. அளபெடை இன்னிசையளபெடை.
உறவனோடியான்—குற்றியலிகரம்.
நற்றிறம்—பண்புத் தொகை.
பெறுகேன்—பெறு+கு+ஏன். பெறு—பகுதி, கு—தன்மை ஒருமை விகுதி, ஏன்—விகுதி மேல் விகுதி.
பட்டேம்—படு+ஏம். படு—பகுதி, ஏம்—தன்மைப்பன்மை வினைமுற்றுவிகுதி. பகுதி இரட்டித்து இறந்த காலங் காட்டிற்று.
உறுவனோடியான்—உறுவனோடு+யான். 'உக்குறள் யவ்வரின் இய்யாம்' என்ற விதிப்படி உகரம் இகரமாயிற்று.
நற்றிறம்—நன்மை+திறம். மைவிகுதிகெட்டு நல்+திறம் என நின்று நற்றிறம் என்றாயிற்று.

## கண்ணகி கணவனைப் பெறத் தேவந்தி வழி கூறல்

## 54—64. பொற்றொடீஇ.........................பின்னரே

### சொற்பொருள்

பொற்றொடீஇ - பொன்னாலாய வளையல்களை அணிந்தவளே, கைத்தாய்! அல்லை - நீ அவனால் வெறுக்கப்பட்டாயும் அல்லை, பழம் பிறப்பில் - முற்பிறப்பில்,
கணவற்கு - கணவன் பொருட்டுக் காக்க வேண்டிய, ஒரு நோன்பு பொய்த்தாய்—ஒரு நோன்பு கைக் கொள்ளாது தப்பினாய்,

போய் கெடுக - அதனால் உண்டாய தீங்கு கெடுக,
காவிரி உய்த்துச் சென்று-காவிரி யானது தன் நீரைக்கொண்டு சென்று,
கடலொடு அலைக்கும் முன்றில் - கடலோடு எதிர்த்து அலைக்கும் சங்கமுகத்துக்கு அயலதாகிய,
மடல் அவிழ் நெய்தல் - பூவின் இதழ் விரியும் நெய்தல் நிலத்து,
அம் கானல் - அழகிய கானலிடத்தே,
சோம குண்டம் சூரிய குண்டம்- சோம குண்டம் சூரிய தண்டம் என்னும் பெயரையுடைய,
தடம் உள - இரண்டு பொய்கைகள் உள்ளன,
துறை மூழ்கி - அவற்றின் துறைகளிலே மூழ்கி,
காம வேள் கோட்டம் - மன்மதன் கோவிலை அடைந்து,
தொழுதார் -அவனை வணங்கினாராயின்,
உலகத்து - இவ்வுலகத்தில்,
தையலார் கணவரொடு-மகளிர் தம் கணவரோடு,
தாம் இன்புறுவர் - தாம் பிரியாதிருந்து இன்பம் எய்துவர்,
போகம் செய் பூமியினும் - (மறுமையில்) போக பூமியிலும்,
போய் பிறப்பர் - சென்று பிறந்து கணவரோடும் பிரிவின்றி இன்பம் நுகர்வர், (ஆதலால்)
யாம் ஒரு நாள் - அவற்றில் நாமும் சென்று ஒருநாள்,
ஆடுதும் - நீராடுவோம்,
என்ற அணி இழைக்கு - என்று கூறிய தேவந்திக்கு,
அ ஆயிழையாள் - அக்கண்ணகி,
பீடு அன்று - (அங்ஙனந் துறை மூழ்கித் தெய்வந் தொழுதல்) எங்கட்கு இயல்பன்று,
என இருந்த பின்னர் - என்று சொல்லி இருந்த அளவில்,

கருத்து

தேவந்தி கண்ணகியை நோக்கி 'நீ கணவனால் வெறுக்கப்படவில்லை; முற்பிறப்பில் கணவன் பொருட்டு ஆற்ற வேண்டிய நோன்பைச் செய்யாது விடுத்தனை. காவிரி கடலுடன் கலக்கும் இடத்தருகில் சோம குண்டம் சூரிய குண்டம் என்ற பொய்கைகளில் மூழ்கிக் காமவேளை வணங்கினால் கணவனைப் பிரியாதிருக்கலாம்; மறுமையிலும் அப்படியே ஆதலின் அவற்றில் நாம் மூழ்குவோம்' என்றாள். அதற்குக் கண்ணகி அவ்வாறு செய்தல் எங்கட்கு இயல்பன்று என்று கூறியிருந்தாள்.

விளக்கம்

கணவன் வெறுத்து விட்டானே என்று கலங்காதே, அவன் வெறுக்கவில்லை. நீ முற்பிறப்பில் நோன்பு தப்பினமையால் இத்தீங்கு விளைந்தது. அதுவும் துறை மூழ்கித் தொழுதால் தொலைந்து விடும் என்றாள் தேவந்தி.

சோமகுண்டத்தில் மூழ்கினால் இவ்வுலகத்து இன்புறலையும் சூரிய குண்டத்தில் மூழ்கினால் போகபூமியில் பிறத்தலையும் பெறலாம். இவையிரண்டு பொய்கையும் 'இரு காமத்து இணை ஏரி' எனப் பட்டினப் பாலையில் கூறப்பட்டுள்ளது.

'தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை' என்பது தமிழ் மறையாதலின் கற்புடை மகளிர் கணவனையன்றிப் பிற தெய்வத்தை வணங்கார். அவ் வழி வந்த கண்ணகியும் துறைமூழ்கித் தெய்வந் தொழுதல் 'பீடன்று' என மொழிந்தாள்.

### இலக்கணம்

பொற்றொடீஇ—வேற்றுமைத் தொகைப்பிறந்த அன்மொழித் தொகை அளபெடை இசை நிறை.
அல்லை—எதிர் மறை முன்னிலை ஒருமை வினைமுற்று.
பழம் பிறப்பு—பண்புத் தொகை.
கெடுக—வைதற் பொருளில் வந்த வியங்கோள் வினைமுற்று.
அலைக்கும்—செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்.
முன்றில்—இல் முன் என்பது முன் பின்னாக மாறி நின்றது; இஃது இலக்கணப் போலி.
அவிழ் நெல்தல்—வினைத்தொகை.
சோம குண்டம் சூரிய குண்டம்—உம்மைத் தொகை.
தொழுதார்—வினையாலணையும் பெயர்.
பூமியினும்—இறந்தது தழுவிய எச்ச உம்மை.
ஆடுதும்—எதிர்கால உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினை முற்று.
அணியிழை—பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.
அல்லை — அல்+ஐ.
ஆடுதும்—ஆடு+தும். தும்—தன்மைப் பன்மை விகுதி.

## கோவலன் வருகை

### 64—66. நீடிய..............................குற்றிளையாள்

#### சொற்பொருள்

ஓர் குற்றிளையாள் - ஏவல் செய்யும் இளையாளொருத்தி, (கண்ணகியிடம் வந்து)
நீடிய காவலன் போலும் - பெருமையை உடைய அரசனைப் போன்ற,
நம கோவலன் - நம்முடைய கோவலன்,
வந்து கடைத்தலையான் - வந்து நம் வாயில் இடத்தான் ஆயினன்,
என்றாள் - என்று சொன்னாள்.

#### கருத்து

அரசன் போன்ற நம் கோவலன் வருகின்றான் என்பதைப் பணிப் பெண்ணொருத்தி கண்ணகியிடம் கூறினாள்.

#### விளக்கம்

குற்றிளையாள்—குற்றேவல் செய்யும் இளையவள் வாயிலில் வந்து கொண்டிருந்த கோவலனைக் கண்டுவிட்ட அவ்விளையாள், முன்னே ஓடிவந்து தலைவிக்குத் தெரிவிக்கின்றாள்.

# கோவலன் வருந்தல்

## 66–71. கோவலனும்............................எனக்கென்ன

### சொற்பொருள்

கோவலனும் - வாயிலிடத்து வந்த கோவலனும்,
பாடு அமை சேக்கையுள் புக்கு- பெருமை பொருந்திய படுக்கை யிடத்தே புகுந்து,
தன் பைந்தொடி - தன் மனைவியினுடைய,
வாடிய மேனி வருத்தம் கண்டு- வாட்டமுற்ற மேனியும் வருத்தமும் கண்டு, (வருந்தி)
சலம்புணர் கொள்கை - வஞ்சம் பொருந்திய கொள்கையை உடைய,
சலதியொடு ஆடி - பொய்மையளாகிய மாதவியுடன் கூடியொழுகினமையால்,
குலம் தரு வான்பொருள் குன்றம் யாவும் - நம் குலத்தோர் தேடித் தந்த மலைபோன்ற பெரிய பொருட் குவிய லெல்லாம்,
தொலைந்த - கெட்டதனால் ஆகிய,
இலம்பாடு - வறுமையானது,
எனக்கு நாணுத் தரும் - எனக்கு நாணத்தைத் தருகின்றது,
என்ன - என்று சொல்ல,

### கருத்து

கோவலன் கண்ணகிடம் தனிமையிற் சென்று, அவள் உடல் மெலிவையும் வருத்தத்தையும் கண்டு வருந்திப் பரத்தையுடன் கூடி ஒழுகினமையால் ஏற்பட்ட வறுமை எனக்கு நாணைத் தருகின்றது என்றான்.

### விளக்கம்

உன் உடல் மெலிவுக்கும் வருத்தத்திற்கும் காரணம் என் தீயொழுக்கமே; மேலும் பொருளை யிழந்து வறியன் ஆகினேன். இது வெட்கத்தைத் தருஞ் செயலாகும் மற்றவர்களுடைய முகத்தில் எவ்வாறு விழிப்பேன்? என்று வருந்திக் கூறினான் கோவலன்.

'கொடியிடையார் மாலை மணி விளக்கங்காட்டி, இரவிற் கோர் கோலம் கொள்ள' அக்காலத்தே வந்து சேக்கையுட் புக்கு என இயைத்துக் கொள்க. சலம்—வஞ்சம், பொய். சலத்தை உடையவள் சலதி. இலம்பாடு—வறுமை; அஃதாவது இல்லாமை உண்டாதல். பாடு—படுதல்: உண்டாதல். கோவலன் மாதவியின் கடற்கரைப் பாட்டைத் தவறாகக் கருதிக்கொண்டு அவள்மேற் கோபமாக வந்தனாதலின் மாதவியைச், 'சலம் புணர் கொள்கைச் சலதி' எனக் கழறுகிறான். உண்மையில் அவள் அத்தகையள் அல்லள்.

**இலக்கணம்**

சேயிழை—பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

கலனோடு—ஒடு எண்ணுப் பொருளில் வந்தது.

எழுகென்று—எழுக+என்று. அகரம் தொக்கது தொகுத்தல் விகாரம்.

சீயா முன்—சீயாத முன். ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

உலந்த—உல+த்+த்+அ. உல—பகுதி, த்—சந்தி, சந்தியால் வந்த தகரம் நகரமானது விகாரம், த்—இறந்த கால இடை நிலை, அ—பெயரெச்ச விகுதி.

உற்றேன்—உறு+ஏன். உறு—பகுதி, ஏன்—விகுதி. பகுதி இரட்டித்து இறந்த காலங் காட்டிற்று.

# ஆ. பெரிய புராணம்

## மெய்ப்பொருள் நாயனார் புராணம்

பெரியர்+புராணம் செயற்கரிய செய்த பெரியார்களுடைய பழைய வரலாறு எனப் பொருள்படும். புராணம்—பழங்கதை. பெரியவர்களுடைய பழைய வரலாறுகளைக் கூறும் நூல். இந்நூலுள் கூறப்பெறும் பெரியார்கள் சிவனடியார்கள் ஆவர். நாயன்மார் என இவர்களை அழைப்பர். இவர்கள் அறுபத்து மூவர். இவர்களைத் தவிர, தொகையடியார் ஒன்பது பேர் ஆவர். இத்தொண்டர்களின் வரலாற்றைக் கூறுவதால் திருத்தொண்டர் புராணம் என்ற பெயரும் இந்நூலுக்குண்டு.

சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையில் அறுபத்து மூவருடைய வரலாறு தொகுத்துக் கூறப்பட்டிருக்கிறது. நம்பியாண்டார் நம்பிகள் இயற்றிய திருத்தொண்டர் திருவந்தாதியில், சிறிது விரித்துக் கூறப்பட்டுள்ளது. பெரிய புராணத்தில் நன்கு விரித்துக் கூறப்பட்டுள்ளது. ஆகவே இந்நூலுக்கு முன்னைய இரு நூலும் முதல் நூல்களாகின்றன. இஃது அவற்றின் வழிவந்த நூலாதலின் வழி நூல் ஆகும்.

இந்நூல் இரண்டு பெரிய காண்டங்களைக் கொண்டது. ஏனைய புராணங்களைப் போலப் பிறமொழியிலிருந்து மொழி பெயர்க்கப்படாத தனித் தமிழ்க் காப்பியம். தில்லைப் பெருமானால் "உலகெலாம்" என இந்நூலுக்கு அடியெடுத்துக் கொடுக்கப்பட்டது என்பர்.

பன்னிரண்டு திருமுறைகளுள் இது பன்னிரண்டாந் திருமுறையைச் சார்ந்ததாகும். இந்நூலின் ஆசிரியர் சேக்கிழார் பெருமானவர்.

## ஆசிரியரைப் பற்றி :

பெயர் : சேக்கிழார். இவர் சேக்கிழார் குடியில் பிறந்தமையால் இப்பெயர் பெற்றார். இவருடைய இயற் பெயர் அருண்மொழித் தேவர்.

ஊர் : குன்றத்தூர். இது தொண்டை நாட்டில் உள்ளது.

பட்டப் பெயர்கள் : உத்தம சோழப்பல்வர், தொண்டர்சீர் பரவுவார்.

காலம் : கி.பி. 12-ஆம் நூற்றாண்டின் முதற்பகுதி என்பர்.

தொழில் : அநபாய சோழனிடம் அமைச்சர்.

இங்குப் பாடமாக வந்துள்ள பகுதி மெய்ப்பொருள் நாயனார் புராணமாகும். இது தில்லைவாழ் அந்தணர் சருக்கத்தில் உள்ளது. இவர் சிவநெறிச் சின்னங்களாகிய திருநீறு முதலியவற்றை மெய்ப் பொருளாகக்கொண்டு ஒழுகி வந்த காரணத்தால் மெய்ப்பொருள் நாயனார் என்று பெயர் பெற்றார்.

## மெய்ப் பொருளார் கதைச் சுருக்கம்

சேதி நாட்டுத் திருக்கோவலூரில் மெய்ப் பொருளார் நீதி வழுவா நெறி முறையில் அரசாண்டு வந்தார். சிவனடியார்கட்குத் தொண்டு செய்வதே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்து வந்தார். முத்தநாதன் என்னும் அரசன் பலமுறை படையெடுத்துத் தோல்வியுற்றான். இறுதியில், இவரை வேறு வழியில்தான் வெல்ல வேண்டும் என்று கருதிச் சிவவேடம் பூண்டு வந்து அரண்மனையுள் நுழைந்து, மெய்ப்பொருளாரிடம், 'உமக்கு ஞானோபதேசம் செய்ய வந்துள்ளேன்' என்று கூறினான். அவர் பெரும்பேறென்று மகிழ்ந்து, தனித்தமர்ந்தனர். அப்பொழுது அவன் ஏட்டுச் சுவடி போல் மறைத்துக் கொண்டு வந்திருந்த உடைவாளை எடுத்து அவரைக் கொன்று விட்டான். அது தெரிந்த அவருடைய ஏவலாளன் தத்தன் என்பான் ஓடிவந்து, தவவேடம் பூண்டு வந்த முத்திநாதனைக் கொல்ல முயன்றான். அப்பொழுது மெய்ப்பொருளார் 'தத்தா! இவர் நமர்; இவரை ஒன்றுஞ் செய்யாதே' என்று தடுத்தனர். அப்பொழுது தத்தன் 'யான் யாது செய்தல் வேண்டும்' எனக் கேட்டான். 'இவர்க்கு, யாதொரு தீங்கும் வாராவண்ணம் நகர்க்கு வெளியே கொண்டு விட்டு வருக' என்றனர். அவர் ஆணையின்படி முத்தநாதனை நகர்க்குவெளியே கொண்டு போய் விட்டுவிட்டுத் திரும்பி வந்து 'தங்கள் ஆணைப்படியே செய்து விட்டேன்' என்று கூறலும், மெய்ப்பொருளார் இயற்கை எய்தினர்.

# சேதிநாட்டுக் காவலர்

## 1 சேதி நன்னாட்டு........................செய்வார்

### சொற்பொருள்

மாது ஒரு பாகர் அன்பின் வழி வரும் - உமையம்மையை இடப் பாகத்திலே கொண்ட சிவபெருமானிடம் அன்பு பூண்டொழுகி வருகின்ற,

மலாடர் கோமான் - மலாடர் மன்னவனாகிய மெய்ப் பொருளார்,

சேதி நன்னாட்டு - சேதிநாட்டிலே உள்ள,

நீடு திருக்கோவலூரில் மன்னி - புகழ் பொருந்திய திருக்கோவலூர் என்னும் ஊரில் பொருந்தி,

வேத நன்னெறியின் வாய்மை - வேதநெறியின் உண்மைகள்,

விளங்கிட - விளங்குமாறு,

மேன்மை பூண்டு - உயர்வு கொண்டு,

ஈசர்க்கு அன்பர் கருத்து அறிந்து - சிவனடியாருடைய உளக்குறிப்பை உணர்ந்து,

காதலால் ஏவல் செய்வார் - அன்பினால் அவர்கட்குத் தொண்டு செய்து வந்தார்.

### கருத்து

மெய்ப் பொருளார் சேதி நாட்டுத் திருக்கோவலூரிலிருந்து, சிவனடியார்க்கு வேண்டிய தொண்டுகளைச் செய்து ஒழுகி வந்தார்.

### விளக்கம்

சேதி நாடு என்பது மலைய மானாட்டுக்குரிய மறு பெயர். மலாடர்—மலாடு+அர்—மலைய மானாட்டு மக்கள். திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு சேதி நாடாகிய மலைய மானாட்டை ஆண்டு வந்தார்.

சிவனடியார்க்குத் தொண்டு செய்வதைச் சிறந்த பேறாகக் கருதுபவர் மெய்யன்பர். அடியார் சொல்லுமுன்பே குறிப்பறிந்து பணி செய்ய வேண்டும் என்பதை அறிவிக்கக் 'கருத்தறிந்து' என்றார். அப்பணியும் மனத்தொடு பட்டுச் செய்ய வேண்டுமென்னுங் குறிப்பைக் 'காதலால்' என்று கூறினார்.

### இலக்கணம்

நன்னாடு—நன்மை+நாடு.

மாதொரு—மாது+ஒரு.

மலாடர் கோமான்—நான்காம் வேற்றுமைத் தொகை.

நன்னெறி—நன்மை+நெறி.

# நீதி மிக்கார்

## 2. அரசியல்........................சிந்தை செய்வார்

### சொற்பொருள்

வரை நெடும் தோளால் - மலை போன்ற பெரிய தோள்வலியினாலே,
மாற்றலர் முனைகள் மாற்றி- பகைவர்களுடைய புலங்களைத் தோற்கச் செய்து,
வென்று - அவர்களை வெற்றி கொண்டு,
அரசியல் நெறியின் வந்த - அரசியல் நூல்களிலே சொல்லப்பட்ட,
அறநெறி வழாமல் - அறமுறைகள் வழுவா வண்ணம்,
காத்து - நாட்டைக் காப்பாற்றி,
உரை திறம்பாத - சொல் மாறுபடாத,
நீதி ஓங்கும் நீர்மையினில் - நீதி நெறி விளங்கும் தன்மையில்,
மிக்கார் - மேம்பாடுடையவர்,
திரைசெய் நீர்ச்சடையான் அன்பர் - அலைவீசும் கங்கை தங்கிய சடையையுடைய சிவபெருமானுக்கு அன்பு பூண்டொழுகும் அடியார்களுடைய,
வேடமே சிந்தை செய்வார் - தவ வேடத்தையே மெய்ப் பொருளாக மனத்திலே கொண்டு ஒழுகி வருவார்.

### கருத்து

மலாடர் கோமான் பகைப்புலங்களை மாற்றி, அரசியல் நெறி வழாமல் காத்து, நீதியில் மேம்பட்டுச் சிவனடியார் தம் தவக் கோலத்தை மெய்ப் பொருளாகக் கொண்டு வாழ்ந்து வந்தார்.

### விளக்கம்

இப்பாடல் அவருடைய அரசியல் நெறி, வீரம், நீதி, மெய்யன்பு என்னும் இவற்றைக் கூறுகின்றது. பகைவரால் குடிமக்கட்கு ஏதம் விளையாமல் காப்பது அரசன் கடமையாகும். ஆதலால் மாற்றலர் முனைகள் மாற்றி' என்றார். வேண்டியவர் வேண்டாதவர் என்று பாராது நடு நின்று வழங்கும் நீதியாதலின் 'உரை திறம்பாத நீதி' என்றார். அவர்தம் மனத்தில் அடியவருடைய தவவேடந்தான் மெய்ப்பொருளாக நிலைத்து நிற்கின்றது என்பதை உணர்த்த 'அன்பர் வேடமே' எனத் தேற்றேகாரங் கொடுத்துப் பிரித்துள்ளார். அவருடைய பெயர்க் காரணமும் இதனால் அறியக் கிடக்கின்றது.

### இலக்கணம்

நெடுந்தோள்—பண்புத்தொகை.
நீர்ச்சடையான்—இரண்டாம் வேற்றுமைத் தொகை.
அன்பர் வேடம்—ஆறும் வேற்றுமைத் தொகை.

# 3. மெய்பொருளார் சிவத்தொண்டு

**மங்கையை..................................இல்லார்**

## சொற்பொருள்

தங்கள் நாயகருக்கு - தம்முடைய தலைவனாகிய சிவனுக்கு,

அன்பர் தாள் அல்லால் - அடியவருடைய திருவடிகளைத் தவிர,

சார்பு ஒன்று இல்லார் - வேறு பற்றுக்கோடு இல்லாதவராகிய மலாடர் கோமான்,

மங்கையை - உமையம்மையை,

பாகமாக உடையவர் - இடப்பாகத்திலே கொண்ட சிவபெருமான்,

மன்னும் கோயில் எங்கணும் - வாழும் கோயில் முழுதும்,

பூசை நீடி - பூசனைகள் இடையறுமல்,

ஏழிசைப் பாடல் ஆடல் - ஏழிசையாகிய பாடலும் ஆடலும்,

பொங்கிய சிறப்பின் - மிக்க சிறப்புடன்,

மல்க போற்றுதல் - நிறைந்து விளங்குமாறு பேணுதலை,

புரிந்து வாழ்வார் - விரும்பி வாழ்பவராயினர்.

## கருத்து

மலாடர் கோமான் மங்கை பங்கன் தங்கும் கோவில் எங்கும் பூசை இடையறுது நடைபெறவும் பாடலும் ஆடலும் மிக்கு விளங்கவும் ஆவன செய்து வாழ்ந்தார்.

## விளக்கம்

கோவில்களில் பூசை நடைபெறச் செய்வதுடன் பாடற் கலையும் ஆடற்கலையும் வளரச் செய்வது முன்னையோர் இயல்பு. அம்முறைப்படி இவரும் அவற்றை 'மல்க'ச் செய்தார் அக்கலைகள் முறையின் வழாமல் நடை பெற வேண்டும் என்பதைக் குறிக்க 'பொங்கிய சிறப்பின் மல்க' என்ருர்.

## இலக்கணம்

கோயில்—இலக்கணப் போலி. கோவில் என்பது கோயில் என வந்தது.

எங்கணும்—உம்மை முற்றும்மை.

பாடல் ஆடல்—உம்மைத் தொகை.

போற்றுதல் புரிந்து—இரண்டாம் வேற்றுமைத் தொகை.

அன்பர் தாள்—ஆறும் வேற்றுமைத் தொகை.

அலால்—இடைக்குறை.

## 4. மெய்ப் பொருளார் தம் அடியவர் தொண்டு

### தேடியமாடு..............................வந்தார்

#### சொற்பொருள்

தேடிய - முயன்று தேடிய,
மாடு நீடு செல்வமும் - பெருமை பொருந்திய மிகுந்த செல்வமெல்லாம்,
தில்லை மன்றுள் ஆடிய - தில்லை அம்பலத்திலே நடனமாடுகின்ற,
பெருமான் அன்பர்க்கு ஆவன - சிவபெருமானுடைய அடியவர்கட்குப் பயன் படுபவை,
ஆகும் என்று - பயனுள்ளதாகும் என்று,
நாடிய மனத்தினோடு - விரும்பும் மனத்துடன்,
நாயன்மார் அணைந்தபோது - அடியவர் தம்மிடம் வரும் பொழுது,
கூடிய மகிழ்ச்சி பொங்க - மிக்க மகிழ்ச்சி இருவருக்கும் மிகும் படி,
குறைவு அற கொடுத்து வந்தார் - குறைவின்றி ஈந்து வருவராயினர்.

#### கருத்து

சிவனடியார் தம்மை அடைந்த பொழுது வேண்டிய செல்வமெல்லாம் குறைவின்றிக் கொடுத்து வந்தார்.

#### விளக்கம்

வேண்டியவற்றைப் பெறுதலால் நாயன்மார்க்கு மகிழ்ச்சியும், ஈத்துவக்கும் இன்பத்தைப் பெற்றமையால் அரசர்க்கு மகிழ்ச்சியும் உண்டாகின்றன. ஆதலால் இருவர்க்கும் மகிழ்ச்சி பொங்க என உரைக்கப் பட்டது.

#### இலக்கணம்

பெருமான் அன்பர்—பெருமானுக்கு அன்பர் என விரித்தால் நான்காம் வேற்றுமைத் தொகை. பெருமானுடைய அன்பர் என்றால் ஆறும் வேற்றுமைத் தொகை.

ஆகும்—செய்யுமென்னும் முற்று.

## 5. பகையரசன் வீழ்ச்சி

### இன்னவாறொழுகும்..........................போனன்

#### சொற்பொருள்

இன்னவாறு ஒழுகும் நாளில் - ( மலாடர் கோமான் ) இவ்வாறு ஒழுகி வரும் நாளில்,
இகல் திறம் புரிந்த ஓர் மன்னன்-பகைமை பூண்ட (முத்தநாதன் ) என்ற ஓரரசன்,

அன்னவர் தம்மை - அம் மலராடர் கோமானை,
வெல்லும் ஆசையால் - வெல்ல வேண்டும் என்ற ஆர்வத்தினுல்,
அமர் மேல் கொண்டு - போரெடுத்து வந்து,
பொன் அணி ஓடை யானை - பொன்னுலாகிய அழகிய முகபடாம் அணிந்த யானைப் படை,
பொரு பரி - போர் செய்கின்ற குதிரைப் படை,
காலாள் - காலாட் படை,
மற்றும் - ஏனைய தேர்ப்படை முதலிய எல்லாவற்றையும்,
பன்முறை இழந்து - பல தடவையும் இழந்து,
தோற்று - தோல்வியடைந்து,
பரிவப்பட்டு போனான் - மனத் துயரடைந்து சென்றான்.

கருத்து

முத்தநாதன் என்னும் அரசனொருவன் பகை கொண்டு படையெடுத்து வந்து, பலமுறையும் தோற்று, படைகளை யெல்லாம் இழந்து கவலையுடன் திரும்பினான்.

விளக்கம்

'பன்முறை இழந்து' என்றதனால் அவன் பலமுறை படையெடுத்து வந்துள்ளான் என் ப து புலனாகின்றது. பன்முறையும் தோற்ற காரணத்தாலும் எல்லாப் படைகளையும் இழந்தமையாலும் பரிபவப்பட்டுப் போனான்.

இலக்கணம்

புரிந்தோர்—புரிந்த+ஓர். அகரம் தொகுத்தல் விகாரம்.
யானை பரி காலாள்—உம்மைத்தொகை.
போனான்—போ+இன்+ஆன். போ—பகுதி, இன்—இறந்த கால இடைநிலை. இகரம் கெட்டு னகர மட்டும் நின்றது. ஆன்—ஆண்பால் வினைமுற்று விகுதி.

## 6. தோற்றவன் செய்த சூழ்ச்சி

**இப்படி..................................சேர்வான்**

சொற்பொருள்

இப்படி இழந்த் மாற்றான் - இவ்வாறு படைகளையிழந்த பகைவனாகிய முத்தநாதன்,
இகலினால் - போரினால் வெல்ல முடியாதவனாகி,
மெய்ப்பொருள் வேந்தன் - மெய்ப்பொருளாருடைய,
சீலம் அறிந்து - பண்பை உணர்ந்துகொண்டு,
வெண் நீறு சாத்தும் - திரு நீறு பூசுகின்ற,
அப் பெரு வேடம் கொண்டு- அந்தப் பெருமை பொருந்திய தவ வேடத்தைத் தாங்கி
அற்றத்தில் வெல்வானாக - தக்க பொழுதில் வெல்லவேண்டி,
செப்ப அரும் நிலைமை எண்ணி - புகலுதற்கரிய அப்பொழுதை நினைத்துக்கொண்டு
திருக்கோவலூரில் சேர்வான் - திருக்கோவலூரைச் சென்றடைந்தான்.

### கருத்து

கவலையொடு சென்ற முத்தநாதன் போர் புரிந்து வெல்ல முடியாதவனுகி மலாடர் கோமான் இயல்பறிந்து அவர் விரும்பும் தவ வேடம் புனைந்து சமயம் பார்த்து வெல்லக் கருதித் திருக்கோவலூரை அடைந்தான்.

### விளக்கம்

மலாடர் கோமான் வெண்ணீறு சாத்தும் தவ வேடத்தைச் சிந்தை செய்யும் இயல்பினராதலின், அவ்வேடங்கொண்டு அவரை அணுகி, அயர்ந்த சமயம் பார்த்து வெல்ல நினைந்து அப் பெரு வேடங்கொண்டு சென்றான் முத்தநாதன்.

அற்றம்—சோர்ந்திருக்கும் சமயம். மெய்ப்பொருள் வேந்தன் என்பதனுலும் அவர் தம் பெயர்க்காரணம் விளங்கும்.

### இலக்கணம்

மாட்டான்—முற்றெச்சம்.
வெண்ணீறு—பண்புத்தொகை வெண்மை+நீறு.
செப்பரும்—செப்ப+அரும். அகரம் தொகுத்தல் விகாரம்.

## 7. முத்தநாதன் பொய் வேடம் புனைதல்

**மெய்யெலாம்..............................முத்தநாதன்**

### சொற்பொருள்

முத்தநாதன் - பகைவனுகிய முத்தநாதன்,
மெய்யெலாம் நீறுபூசி - உடல் முழுதும் வெண்ணீறு அணிந்து,
வேணிகள் முடித்து கட்டி-சடைகளை ஒன்ருகச் சேர்த்து முடித்து,
படைகரந்த - உடைவாளை மறைத்துவைத்த,
புத்தகக் கவளி - புத்தகக் கட்டினை,
கையினில் ஏந்தி - கையில் தாங்கி,
மைபொதி விளக்கு என்ன - புகையைத் தன்னிடத்தே கொண்டுள்ள, விளக்கைப் போல்,
மனத்தினுள் கறுப்பு வைத்து - மனத்துள்ளே சினக்குறிப்பை வஞ்சனையாக மறைத்து வைத்து,
பொய் தவ வேடம் கொண்டு - பொய்ம்மையாகிய தவ வேடம் புனைந்து,
புகுந்தனன் - நகருக்குள் நுழைந்தான்.

### கருத்து

முத்தநாதன் திருநீறுபூசித் தவவேடங் கொண்டு உடைவாளை மறைத்துவைத்த புத்தகக் கட்டை கையிற்கொண்டு நகருக்குள் புகுந்தான்.

### விளக்கம்

மெய்யில் நீறு பூசலும் சடைமுடித்தலும் சிவவேடத்தார்க்கு உரியன. சமயம் பார்த்துக் கொல்ல எண்ணிச் செல்கின்றானாதலின் பிறரறியாவண்ணம் புத்தகக் கட்டினுள் படை கரந்து செல்கின்றான்.

மை பொதி விளக்கு என்ன மனத்திலுள் கறுப்புவைத்து : விளக்கு ஒளியுடையது, அதுபோல இவனும் வெளிப்பார்வைக்குச் சிவவேடம் உடையவனாக இருக்கிறான். விளக்கு ஒளி தருவதேனும் தன்னகத்தே புகையையுடையதாக இருக்கிறது. அதைப்போலவே இவனும் தன்னகத்தே வஞ்சனையுடையவனாக இருக்கின்றான்.

இவன் தாங்கிய வேடம் பொய்ம்மையாக இருத்தலினால் அது 'பொய் தவ வேடம்' எனப்பட்டது.

### இலக்கணம்

எலாம்— இடைக்குறை.
புத்தகக்கவளி— இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
பொதி விளக்கு— வினைத்தொகை.
புகுந்தனன்—படர்க்கை ஒருமை வினைமுற்று.
புகு+த்+த்+அன்+அன். புகு—பகுதி, த்—சந்தி, இது நகரமானது விகாரம், த்—இறந்தகால இடைநிலை, அன்—சாரியை, அன்—ஆண்பால் விகுதி.

## 8. பொய்த்தவவேடன் அரண்மனையை அடைதல்

**மாதவவேடம்...............................சேர்ந்தான்**

### சொற்பொருள்

மாதவ வேடம்கொண்ட — பெருமையுடைய தவவேடம் புனைந்த,
வன்கணன் - கொடிய முத்தநாதன்,
மாடம்தோறும் - மாளிகைகளில் எல்லாம்,
கோதைசூழ் — பூமாலைகள் சுற்றியுள்ள,
அளகபாரம் — கூந்தலையுடைய,
குழைகொடி — காதணிகளை அணிந்துள்ள பூங்கொடி போன்ற மகளிர்,
ஆட — நடனமாடிக் கொண்டிருக்க,
மீது - அம்மாடங்களின் மேல்,
சோதி வெண்கொடிகள் - ஒளி பொருந்திய வெண்மையான துகிற் கொடிகள்,
ஆடும் - அசைந்தாடுகின்ற,
சுடர்நெடுமறுகில் - ஒளி பொருந்திய பெரிய வீதியில்,
போகி - சென்று,
சேதியர் பெருமான் - சேதி நாட்டரசராகிய மெய்ப்பொருளாருடைய,
திருமணி கோயில் — அழகிய இரத்தினங்கள் பதித்த அரண்மனையின்,
வாயில் சேர்ந்தான் — வாயிலை அடைந்தான்.

### கருத்து

கொடியனுனை முத்தநாதன், மகளிர் மாடங்களில் நடனமாடிக் கொண்டிருக்க, உச்சியில் துகிற்கொடிகள் அசைந்தாடிக்கொண்டிருக்கும் பெரிய தெருவழியே சென்று, அரண்மனை வாயிலை அடைந்தான்.

### விளக்கம்

மாதவவேடங் கொண்டிருந்தும் வஞ்ச நெஞ்சனுக வந்தமையால் 'வன்கணுன்' என்ருர். மாடங்களின் உட்புறத்திலும் கொடிகள் (கொடிபோன்ற பெண்கள்) ஆடுகின்றன ; அளகபாரக் குழைக்கொடி—இல்பொருள்.

### இலக்கணம்

மா—**உரிச்சொல்.**
சூழ்அளகம்—**வினைத்தொகை.**
கொடி—**உவமையாகுபெயர்.**
வாயில்—இல்வாய் என்பது முன்பின்னுக மாறிநின்ற **இலக்கணப் போலி.**
கோயில்—கோவில் என்பதன் **இலக்கணப்போலி.**

## 9. தத்தன் தடுத்தல்

**கடையுடைக்..................................என்ருன்**

### சொற்பொருள்

கடையுடைக் காவலாளர் - அரண்மனை வாயிலைக் காவல் செய்வோர்,
கைதொழுது - (போலிவேடங் கொண்டுவந்த முத்தநாதனை) கைதொழுது வணங்கி,
ஏறநின்று - விலகி நின்று,
உடையவர் தாமே வந்தார் - நம்மை ஆளாகவுடைய சிவனடியார் அருள்மிகுத் தாமாகவே எழுந்தருளியிருக்கிருர் (என்று கூறி)
உள் எழுந்தருளும் என்ன - உள்ளே எழுந்தருளுக என்று வேண்ட,
தடைபல புக்கபின்பு - (அவன்) பல வாயில்களையும் கடந்து சென்ற பிறகு,
தனி தடை நின்ற - (மெய்ப் பொருளார் இருக்கும் இடத்தில்) ஒப்பற்ற காவலனுக நின்ற,
தத்தன் - தத்தன் என்னும் பெயருடையான் (வந்தவனை நோக்கி),
இறைவன் துயில்கொள்ளும் - அரசன் உறங்கிக்கொண்டிருக்கின்ருர்,
இடை தெரிந்து அருள வேண்டும் - சமயத்தைத் தெரிந்து கொண்டு தாம் உள்ளே செல்லவேண்டும்,
என்ருன் - என்று கூறினுன்.

### கருத்து

வாயிற் காவலர் அவ்வேடத்தானைக் கைதொழுது உள்ளே அழைத்துச் செல்ல, அந்தப்புரத்து வாயில் காவலனாகிய தத்தன் அவனை நோக்கி 'அரசர் துயில்கின்றார்; ஆதலால் தாம் சமயம் அறிந்து செல்லவேண்டும்' என்றான்.

### விளக்கம்

வெளிவேடத்தை நம்பினர் வெளிவாயிலில் இருந்தோர். உள்ளேயிருந்த தத்தன் அரசன் துயில்வதை யுணர்ந்தானாகலின் துயிலுங்கால் செல்லல் நன்றன்று என்று தடை செய்கின்றான். 'தடைநின்ற' என்பது முத்தநாதனுக்குத் தடையாக நின்றவன் என்னும் குறிப்பையும் உணர்த்துகின்றது.

### இலக்கணம்

கொளும்—இடைக்குறை.

## 10. தவவேடன் படுக்கையறையுள் நுழைதல்

**என்றவன்.................................கண்டான்.**

### சொற்பொருள்

என்று அவன் கூற — இவ்வாறு தத்தன் சொல்ல,
கேட்டு — (முத்தநாதன்) கேட்டு,
யான் அவனுக்கு — நான் அவ்வரசனுக்கு,
உறுதி கூற - உறுதிப் பொருளைக் கூறும் பொருட்டு,
நீயும் நின்றிடு - நீயும் தடை செய்யாமல் நிற்க,
என்று - என்று சொல்லி,
அவனையும் நீக்கி புக்கு - அத் தத்தனையும் விலக்கி உள்ளே சென்று,
பொன் திகழ் - பொன்மயமான,
பள்ளி கட்டில் - படுக்கையறைக் கட்டிலில்,
புரவலன் துயில - அரசன் உறங்கவும்,
மாடு - அவரருகில்,
மன்றல் அம் குழல் - மணம் வீசுகின்ற அழகிய கூந்தலையும்,
மென் சாயல் - மென்மையான சாயலையும் உடைய,
மாதேவி இருப்ப - அரசி இருக்கவும்,
கண்டான் - பார்த்தான்.

### கருத்து

தடை செய்த தத்தனை நோக்கி, நான் அரசனுக்கு உறுதி கூற வந்துள்ளேன். ஆதலின் நீ தடை செய்யாதே என்று கூறி உள்ளே சென்ற முத்தநாதன் கட்டிலில் அரசன் துயிலவும் அவனருகில் அரசி இருத்தலையும் கண்டான்.

### விளக்கம்

சமயமல்லாச் சமயத்தும் உள் நுழைந்தான் தீ நோக்குடன் வந்த காரணத்தால். பண்பாளர் இச்சமயத்தில் உள் நுழையார். உள்ளிருப்போர் வருக எனக் கூறிய பின்புதான் உட்புகுவர். வந்த

வன் பண்பாடு துறந்தவன்; கறுப்பு வைத்த மனத்தான். ஆதலின் எதையும் கருதாது உள் நுழைந்தான்.

நல்லது சொல்ல வந்தேன். அதற்கு நீ தடை செய்யலாமா? என்பான் 'யான் அவற்கு உறுதிகூற நின்றிடுநீயும்' என்றான்.

இலக்கணம்

நீயும்—இறந்தது தழுவிய எச்சவும்மை.

பள்ளிக்கட்டில்—படுக்கையறையில் உள்ள கட்டில் எனப் பொருள் கொண்டால் ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை.

படுக்கையாகிய கட்டில் எனக் கொண்டால் இரு பெயரொட்டுப் பண்புத்தொகை.

மென்சாயல்—பண்புத்தொகை.

## 11. தவவேடன் வருகையை அரசனுக்கு அரசி தெரிவித்தல்

கண்டுசென்.....................................நின்று

சொற்பொருள்

கண்டு - அரசி அரசன் அருகில் இருப்பதை முத்தநாதன் கண்டு,

சென்று அணையும் போது - பக்கத்தில் சென்றடையும் பொழுது,

தேவி கதுமென இழிந்து - அரசி விரைந்து கட்டிலிலிருந்து இறங்கி,

வண்டு அலர் மாலையானை-வண்டுகள் மொய்க்கும் பலர் மாலையை அணிந்த அரசனை,

எழுப்பிட - எழுப்ப,

மன்னன் உணர்ந்து - அரசன் துயில் எழுந்து, (வந்தவனைக் கண்டு)

அண்டர் நாயகனார் - தேவர் தலைவனாகிய சிவபெருமானுடைய,

தொண்டர் ஆம் என - அடியார் என எண்ணிக் கொண்டு,

குவித்த செம்கை கொண்டு-தலையின் மேற்குவித்த சிவந்த கைகளை உடையவராய்,

எழுந்து எதிரே சென்று - எழுந்திருந்து அவனுக்கு எதிரில் சென்று,

கொள்கையின் வணங்கி நின்று - முறைப்படி பணிந்து நின்று,

கருத்து

முத்தநாதன் வருகையை அறிந்த அரசி அரசனை எழுப்ப, அரசன் துயிலுணர்ந்து, சிவனடியார் என்று கருதிச் சென்று கை குவித்து வணங்கி நின்று;

விளக்கம்

இச்செய்யுட் கருத்து இங்கே முடிவுறாமல் அடுத்துவரும் செய்யுளில் முடிந்து வருகிறது. இவ்வாறு வரின் குளகம் என்ப

## 12. முத்தநாதன் கூற்று

**மங்கலம்...............................................என்றான்**

### சொற்பொருள்

மங்கலம் பெருக - நன்மை மிகும்படி,
என் வாழ்வு - என் வாழ்க்கையானது,
வந்து அணைந்தது என்ன — வந்துற்றது என்னும்படி,
இங்கு எழுந்தருளப் பெற்றது - இவ்விடத்தில் தாம் எழுந்தருளியது,
என் கொலோ - யாது கருதியோ?
என்று கூற — என்று வினவ,
உங்கள் நாயகனார் - உங்கள் தலைவராகிய சிவபெருமான்,
முன்னம் உரைத்த — முன்பு அருளிச் செய்த,
ஆகமம் நூல் - சைவாகம நூல்களில்,
மண்மேல் - நிலவுலகில்,
எங்கும் இல்லாத ஒன்று - எவ்விடத்தும் கிடைக்கப் பெறாததான அரிய நூலை,
இயம்ப என்றான்-உமக்கு உபதேசிக்கக் கொண்டு வந்துளேன் என்று சொன்னான்.

### கருத்து

என் வாழ்வு நலம் பெறும்படி வந்ததைப் போலத் தாம் ஈண்டெழுந்தருளியது யாது கருதியோ? என்று அரசன் வினவ, யான் சிவபெருமான் உரைத்த ஆகமங்களில் எங்கும் கிடைத்தற்கரிய நூலொன்றை உமக்குக் கூற இங்குக் கொண்டு வந்திருக்கிறேன் என்று முத்தநாதன் கூறினான்.

### விளக்கம்

முத்தநாதன் பொய் வேடம் புனைந்து வந்துள்ளானாகலின் நம் நாயகனார் என்னாது 'உங்கள் நாயகனார்' என்று கூறினான்.

### இலக்கணம்

என் கொலோ—கொல், ஓ இரண்டும் அசை நிலைகள்.
ஆகம நூல்—இரு பெயரொட்டுப் பண்புத்தொகை.
கொடு—கொண்டு என்பதன் இடைக்குறை.

## 13. நாயனார் தேவியைச் செல்க எனல்

**பேறெனக்...............................................வேந்தன்**

### சொற்பொருள்

எனக்கு இதன் மேல் - அடியேனுக்கு இதைவிட,
பேறு உண்டோ - சிறந்த பேறு வேறுளதோ? (இல்லை)
பிரான் அருள் செய்த - சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளிய,
மாறு இல் — குற்றமற்ற,

ஆகமத்தை - சிவாகம நூலை,
வாசித்து அருள்செய வேண்டும்-
படித்து அதன் பொருளை
விளங்கச் செய்ய வேண்டும்,
என்ன - என்று பணிந்து கூற,
அவன் - அந்த முத்தநாதன்,
நாறு பூ கோதை - மணம் வீசும்
மலர் முடித்த கூந்தலையுடைய,
மாது தவிர - உன் மனைவி நீங்க,
நானும் நீயும் - நாம் இருவரும்,
வேறு இடக்து இருக்க வேண்
டும் - தனியிடத்தில் இருக்க
வேண்டும்,
என்று விளம்ப - என்றுசொல்ல,
வேந்தன் - மெய்ப்பொருளார்,

**கருத்து**

'அடியேன் பெறத்தக்க பேறு இதனினும் வேறுளதோ? இதனை எனக்குக் கூறியருள வேண்டும்' என்று கேட்க, முத்தநாதன் 'உன் மனைவியில்லாமல் தனித்திருக்க வேண்டும்' என்று சொல்ல

**விளக்கம்**

முத்தநாதன் கறுப்பு வைத்த மனத்தனாகி வந்துள்ளமையால் தன் செயலுக்கு இடையூறாக இருக்குமென்று கருதி அரசியை விலகச் செய்கின்றான்.

**இலக்கணம்**

உண்டோ—ஓகாரம் எதிர்மறை.

## 14. திருமகள்................................என்றார்.

**சொற்பொருள்**

திருமகள் என்ன - இலக்குமி
போல,
நின்ற தேவியார் தம்மை — அவ்
விடத்துநின்ற தம் மனைவியை,
நோக்கி - பார்த்து,
பரிவுடன் - அன்புடன்,
அந்தப்புரத்து இடை — அந்தப்
புரத்தினுள்,
விரைய போக ஏவி - விரைந்து
செல்லப் பணித்து,
தரு தவ வேடத் தானை-புகுந்த
தவ வேடத்தனாகிய முத்த
நாதனை,
தவிசின் மேல் இருத்தி - ஆசனத்
திருத்தி,
தாமும் இரு நிலத்து இருந்து —
தாமும் பெரிய நிலத்திலே
அமர்ந்து,
போற்றி - முத்தநாதனைப்
போற்றி,
இனி அருள் செய்யும் — இனி
மேல் கூறியருள்க,
என்றார் — என்று கேட்டார்.

**கருத்து**

அரசன் தன் மனைவியைத் தனியிடத்திற்குப் போகச் சொல்லி, வேடத்தானை ஆசனத்தின் மேல் இருத்தி தான் கீழிருந்து வணங்கி 'இனி ஆகமத்தைக் கூறியருள்க' என்றான்.

**விளக்கம்**

முத்தநாதன் தவவேடங் கொண்டானே ஒழிய உள்ளம் வேறாக நின்றான் என்பதைச் சுட்டவே 'தவவேடத்தானை' என்றார்.

பாடங் கேட்கும்பொழுது சொல்வோன் ஆசனத்திலும் கேட்போன் தரையிலும் இருத்தல் மரபு. அம்முறைப்படி இவருங் கீழிருந்தார். 'உடையார் முன் இல்லார் போல் ஏக்கற்றும் கற்றார்' என்னுங் குறள் நோக்கத்தக்கது.

### இலக்கணம்

திருமகள்—இரு பெயரொட்டுப் பண்புத்தொகை.
இருநிலம்—பண்புத்தொகை.

## 15. முத்தநாதன் நினைத்ததை முடித்தல்

**கைத்தலத்.....................................வென்றார்**

### சொற்பொருள்

கை தலத்து இருந்த - (முத்தநாதன்) தன் கையின்கண் மறைத்து வைத்திருந்த,
வஞ்சம் கவளிகை - வஞ்சகமான புத்தகக் கட்டை,
மடிமேல் வைத்து - தன் மடியின் மேல் வைத்துக்கொண்டு,
புத்தகம் அவிழ்ப்பான் போன்று- புத்தகம் எடுக்க அவிழ்ப்பவனைப் போல,
பத்திரம் வாங்கி - உள்ளிருந்த உடைவாளை எடுத்து,
அவர் புரிந்து வணங்கும்போதில்- மெய்ப்பொருளார் விரும்பி வணங்கும் சமயத்தில்,
தான் முன் நினைந்த - தான் முன்பே கருதி வந்த,
அப் பரிசே செய்ய - அவ்வெண்ணப்படியே செய்ய (வாளினால் வெட்ட),
மெய் தவ வேடமே - உண்மையான தவ வேடமே,
மெய் பொருள் என - உண்மைப் பொருள் என்று கூறி,
தொழுது வென்றார் — வணங்கித் தங் கொள்கையில் வெற்றி பெற்றார்.

### கருத்து

மெய்ப்பொருளார் வணங்கும் சமயத்தில் கையிலிருந்த புத்தகக் கட்டினை அவிழ்ப்பவனைப் போல உடைவாளை எடுத்து அவரை வெட்டினான். அவர் தவவேடமே மெய்ப்பொருள் என்று சொல்லி வணங்கி வென்றார்.

### விளக்கம்

பெரியபுராண ஆசிரியராகிய சேக்கிழார் தமது நூலில், சிவனடியார்களுக்கு வரும் கேடுகளைக் குறிக்கும் பொழுது நேரடியாக அவற்றைக் கூறாது வேறு வகையால் கூறுவது இயல்பு. அஃதாவது அமங்கலமாகக் கூறார். அதனால் உடைவாளால் வெட்டினான் எனக் கூறாது ' நினைந்த அப்பரிசே செய்ய ' என்று கூறினார்.

தொழுது வென்றார் : வெல்லுதலாவது : அவர், தவவேடத்தையே மெய்ப்பொருளாகக் கருதும் கொள்கையுடையவர். அக்கொள்கையில் குறிக்கோளில் இறுதி வரை தவறாது நின்று உயிரை

யும் விட்டுக் காத்தார். அஃது ஒரு வெற்றியே யாகும். அதனால் 'வென்றார்' என்றார். இப்பாடலாலும் அவர் பெயர்க் காரணம் புலனாகும்.

### இலக்கணம்

கைத்தலம்—இரு பெயரொட்டுப் பண்புத்தொகை.
மெய்ப் பொருள்—பண்புதொகை.

## 16. நாயனார் முத்தநாதனைக் காத்தல்

**மறைத்தவன்..............................வீழ்ந்தார்**

### சொற்பொருள்

**மறை தவன்** -மறைந்தொழுகும் தவ வேடத்தனாகிய முத்த நாதன்,
**புகுந்தபோதே** - உள்ளே சென்ற பொழுதே,
**மனம் அங்கு வைத்த** - தனது மனத்தை அவ்விடத்தில் செலுத்தி நின்ற,
**தத்தன்** - தத்தன் என்ற காவலன்,
**இறை பொழுதின்கண் கூடி** - நொடிப் பொழுதில் உள்ளே சென்று,
**வாளினால் எறியல் உற்றான்** - வாளாயுதத்தினால் அவனை வெட்டத் தொடங்கினான், (அப்பொழுது)
**நிறைந்த செம் குருதி** - நிரம்பிய சிவந்த இரத்தம்,
**சோர** - (தம் உடலிலிருந்து) வடிய,
**வீழ்கின்றார்** - நிலத்தில் விழுபவராய அவர்,
**தரை படும் அளவில்** - தரையில் விழுமுன்,
**தத்தா நமர்** - தத்தனே இவர் நம் பெரியவர்,
**என** - எனச் சொல்லி,
**நீண்ட கையால்** - நீண்டுள்ள தமது கைகளினால்,
**தடுத்து வீழ்ந்தார்** - தத்தனைத் தடுத்துக் கீழே விழுந்தார்.

### கருத்து

பொய் வேடத்தான் புகுந்த பொழுதே தன் மனத்தை அங்கு வைத்திருந்த தத்தன் விரைந்து ஓடி அவனை வாளால் வெட்டப் போகும் பொழுது, இரத்தஞ் சோரக் கீழே விழுகின்ற நாயனார் 'தத்தனே இவர் நம்மவர்' என்று தடுத்து மண்ணில் விழுந்தார்.

### விளக்கம்

மறைத்தவன் புகுந்த என்பதை மறைத்து அவன் புகுந்த எனப் பிரித்து உடைவாளை மறைத்துக் கொண்டு உள்ளே நுழைந்த என்று பொருள் கொண்டாலும் அமையும்.

தத்தன் வாயிலில் நின்றாலும் மனம் முழுதும் உள்ளே யிருந்தமையால் நாயனார் வெட்டுண்டதும் உடனே ஓடினான்.

நீண்ட கை—முழங்காலளவும் கை நீண்டிருக்க வேண்டும் என்பது அரசர்க்குரிய இலக்கணங்களில் ஒன்று.

இலக்கணம்

வீழ்கின்றூர்—வினையாலணையும் பெயர்

## 17. தத்தனுக்குக் கட்டளை

**வேதனை எய்தி..............................என்றூர்**

சொற்பொருள்

வேதனை எய்தி வீழ்ந்த - துன்புற்று நிலத்தில் விழுந்த,
வேந்தரால் விலக்கப்பட்ட - மெய்ப்பொருளாரால் தடுத்து நிறுத்தப்பட்ட,
தாதன் ஆம் தத்தன் தானும் - பணியாளனுகிய தத்தனும்,
தலையினுல் வணங்கி - அவரைத் தலையாலே பணிந்து,
தாங்கி - அவரைத் தாங்கிக் கொண்டு,
யான் யாது செய்கேன் ! - அடியேன் என்னசெய்ய வேண்டும்,
என்ன - என்று கேட்க, (அவர்)
எம்பிரான் அடியார் போக - எம் பெருமானுடைய தொண்டர் போகும் பொழுதில்,
மீது இடை விலக்கா வண்ணம் - இனிமேல் நடுவில் தடுக்காமல் இருக்கும்படி,
நீ கொண்டு போய் விடு-அழைத்துக் கொண்டு போய் விடுவாயாக,
என்றூர் - என்று கட்டளையிட்டார்.

கருத்து

அரசரால் தடுக்கப்பட்ட தத்தன் வணங்கி, நான் யாது செய்ய வேண்டுமென்று கேட்க, ‘இவ்வடியார் செல்கையில் யாரும் தடைசெய்யாமல் கொண்டுபோய் விட்டு வா’ எனப் பணித்தார்.

இலக்கணம்

செய்கேன்—தன்மை ஒருமை வினைமுற்று.
விலக்கா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

## 18. முத்தநாதனைக் கொல்ல வந்த ஊராரைத் தத்தன் தடுத்து நிறுத்தல்

**அத்திறம்..............................என்றுன்**

சொற்பொருள்

அ திறம் அறிந்தார் எல்லாம் - முத்தநாதன் செயலை அறிந்த ஊர்மக்கள் அனைவரும்,
அரசனை தீங்கு செய்த - அரசனுக்குத் தீமையிழைத்த,
பொய் தவன் தன்னை - பொய்யாகிய தவ வேடத்தை உடைய முத்தநாதனை,
கொல்வோம் என - கொல்வோம் என்று சொல்லிக் கொண்டு,

புடை சூழ்ந்த போது - அவனருகில் சுற்றிக் கொண்ட பொழுது,

தத்தனும் - தத்தனும்,

அவரை எல்லாம் - அவர்கள் எல்லோரையும்,

தடுத்து - தடைசெய்து,

உடன் கொண்டு போவான் - அவனைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு போவதற்கு,

இத்தவன் போகப் பெற்றது - இந்தத் தவமுடையான் தீங்கின்றிச் செலவது,

இறைவனது ஆணை - நம் அரசனுடைய கட்டளையாகும்,

என்றான் - என்று சொன்னான்.

கருத்து

அரசனைக் கொலை செய்தான் முத்தநாதன் என்பதை அறிந்த ஊரார் அவனைக் கொல்ல முயன்றனர். அப்போது தத்தன் அவர்களைத் தடுத்து, 'இவன் உயிருடன் செல்வது நம் அரசனுடைய ஆணையால்' என்று கூறினான்.

இலக்கணம்

அரசனை—உருபு மயக்கம்.
போவான்—முற்றெச்சம்.

## 19. தத்தன் முத்தநாதனை அனுப்பிய பின் திரும்புதல்

அவ்வழி..................................போந்தான்

சொற்பொருள்

அவ்வழி - அப்பொழுது,

அவர்கள் எல்லாம் அஞ்சி - அவ்வூரார் அனைவரும் அஞ்சி,

அகல - விலகிச் செல்ல,

தத்தன் செவ்விய நெறியில் — தத்தன் நல்ல வழியில்,

திருநகர் கடந்து போய் - அழகிய நகரத்தைக் கடந்து சென்று,

கைவடி நெடுவாள் ஏந்தி - கையில் பெரிய கூரிய வாளை ஏந்திக் கொண்டு,

ஆள் உறு - மக்கள் நடமாட்டம் இல்லாத,

கானம் சேர-காட்டை அடைய,

வெம் வினை கொடியோன் தன்னை - மிகக் கொடிய செயலையுடைய அவனை,

விட்டு - அனுப்பி விட்டு,

அவன் மீண்டு போந்தான் - அத் தத்தன் திரும்பினான்.

கருத்து

அரசன் ஆணைக்கு அஞ்சி ஊரார் ஒதுங்க, தத்தன் நகரைக் கடந்து சென்று ஆள் நடமாட்டமில்லாத காட்டருகில் அனுப்பி விட்டுத் திரும்பி வந்தான்.

### விளக்கம்

ஆள் நடமாட்டம் இருக்குங் காடாக இருப்பின் எவரேனும் ஆத்திரத்தில் முத்தநாதனுக்குத் தீங்கு செய்து விடலாம். அதனால் மக்கள் போக்கு வரவு இல்லாக் காட்டுப்பக்கம் கொண்டு சென்று விட்டு வந்தான் என்பது தோன்ற 'ஆள் உறுக் கானம்' என்றார்.

### இலக்கணம்

நெடுவாள்—பண்புத் தொகை
உறு—ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்
வெவ்வினை—பண்புத்தொகை. வெம்மை+வினை

## 20. தத்தன் நாயனார் முன்பு நிற்றல்

**மற்றவன்..........................................நின்றான்**

### சொற்பொருள்

அவன் கொண்டு போன - அத்தத்தன் கொண்டு சென்ற,
வஞ்சனை வேடத்தான் மேல் - பொய்த் தவ வேடமுடைய முத்தநாதன் மேல்,
செற்றவர் தம்மை நீக்கி - கோபங் கொண்டு வந்தவர்களைத் தடுத்து,
தீது இலா நெறியில் - குற்றமில்லாத வழியில்,
விட்ட சொல் திறம் - விட்டு வந்த சொல்லை,
கேட்க வேண்டி - கேட்பதற்காக
சோர்கின்ற ஆவி - நீங்கிக் கொண்டிருக்கின்ற உயிரை,
தாங்கும் கொற்றவன் முன்பு - தாங்கிக் கொண்டிருக்கும் நாயனார்க்கு முன்பு,
கோமகன் குறிப்பின் நின்றான் - அரசனுடைய மனக் குறிப்பறிந்து நடப்பவனாகிய தத்தன் என்பான்,
சென்றான் - சென்று நின்றான்.

### கருத்து

முத்தநாதனைத் தீங்கின்றி விட்டு வந்த செய்தியைக் கேட்க வேண்டி, உயிரைத் தாங்கிக் கொண்டிருந்த நாயனார் திருமுன் தத்தன் வந்து நின்றான்.

### விளக்கம்

சிறிது சிறிதாக நீங்கிக் கொண்டிருக்கும் உயிரைத் தாங்கிக் கொண்டிருக்கிறார். ஏனெனில் முத்தநாதன் தீங்கின்றிச் சென்ற செய்தி கேட்க வேண்டும் என்பதற்காக. இதிலிருந்து, பகைவனயினும் அவனுடைய சிவ வேடத்தில் எவ்வளவு பக்தி வைத்துள்ளார் என்பது புலனாகிறது.

குறிப்பில் நின்றான் : மனக்கருத்தை யறிந்து பணியாற்றும் உத்தமப் பணியாளன் தத்தன் என்பதைக் காட்டுகிறது. 'யான் கண்ட அனையர் என் இளையர்' என்னும் புறநானூற்றுப் பாடல் ஈண்டு நோக்கத் தக்கது.

### இலக்கணம்

மற்று—அசைநிலை
இலா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்
நின்றான்—வினையாலணையும் பெயர்

## 21. நாயனார் நன்றி கூறல்

**சென்றடி........................................கூர்ந்தார்**

### சொற்பொருள்

சென்று அடி வணங்கி நின்று - திரும்பி வந்து தத்தன் அரசனுடைய அடி வணங்கி நின்று,
செய் தவ வேடம் கொண்டு - போலித் தவ வடிவங்கொண்டு வந்து,
வென்றவற்கு-தங்களை வென்றவனுக்கு,
இடையூறு இன்றி - யாதொரு இடையூறும் இல்லாமல்,
விட்டனன் - நான் கொண்டு போய் விட்டுவந்தேன்,
என்று கூற-என்று சொல்ல,
(நாயனார் அவனை நோக்கி)
இன்று ஐயன்-இப்பொழுது ஐயனாகிய நீ,
எனக்கு செய்தது - எனக்குச் செய்த உதவியை,
யார் செய்ய வல்லார் - யாவர் செய்ய வல்லவர்?,
என்று-என்று கூறி,
நின்றவன் தன்னை நோக்கி-நின்று கொண்டிருந்த தத்தனைப் பார்த்து,
நிறை பெரும் கருணை கூர்ந்தார்-மிக்க கருணை காட்டினார்.

### கருத்து

திரும்பி வந்த தத்தன் அரசனை அணுகி, 'முத்தநாதனைத் தீதின்றிக் கொண்டு போய் விட்டு விட்டேன்' என்று கூறலும், 'ஐயனே! இன்று நீ செய்த உதவிபோல் எவர் செய்ய முடியும்?' என்று கருணை காட்டினார்.

### விளக்கம்

தம் கருத்திற்கேற்ப முத்தநாதனுக்கு எவ்வித ஊறுமின்றி அனுப்பிவிட்டு வந்தமையால், தத்தன் தாதனாக இருந்தும் அவனை 'ஐயன்' என்றார். அவன்பால் பெருங்கருணை கொண்டு நோக்குதல் 'நிறைபெருங் கருணை கூர்ந்தார்' எனப்பட்டது.

### இலக்கணம்

விட்டனன்—தன்மை ஒருமை வினைமுற்று.
பெருங்கருணை—பண்புத் தொகை.
விட்டனன்—விடு+அன்+அன். விடு—பகுதி; அன்—சாரியை, அன்—தன்மை ஒருமை விகுதி. பகுதி இரட்டித்து இறந்த காலங் காட்டிற்று.

## 22. நாயனார் இறுதிமொழி

**அரசியல்..................................செய்தார்**

சொற்பொருள்

புரவலர்-அரசர்,
அரசியல் ஆயத்தார்க்கும்-அரசியல் சுற்றத்தார்க்கும்,
அழிவு உறும் காதலார்க்கும் - மனம் வருந்தும் அன்பு பூண்டவர்க்கும்,
விரவிய - தம் உள்ளத்தில் பொருந்திய,
செய்கை தன்னை-கொள்கையை,
விளம்புவார்-சொல்பவராய்,
விதியினாலே - வேத முறைப் படியே,
பரவிய – எங்கும் பரவியிருக்கிற,
திருநீறு அன்பு- வெண்ணீறிடத்தில் அன்பை,
பாதுகாத்து உய்ப்பீர் - போற்றி வருவீராக,
என்று-என்று கூறி,
மன்றுள் ஆடும் பூங்கழல் - பொன்னம்பலத்தில் நடமாடும் மலரடிகளை,
சிந்தை செய்தார் - மனத்திற் சேர்த்தார்.

கருத்து

நாயனார் தம்மைச் சூழ்ந்திருப்பார்களை நோக்கித் 'திருநீற்றன்பு கொண்டு அதைப் போற்றி வாழ்வீர்களாக' எனக் கூறி இறைவனடி நினைந்தார்.

இலக்கணம்.

பூங்கழல்—உவமைத் தொகை.

## 23. நாயனார்க்கு இறைவன் காட்சியளித்தல்

**தொண்டனார்..................................ஈந்தார்**

சொற்பொருள்

தொண்டனார்க்கு - மெய்ப்பொருள் நாயனார்க்கு,
இமயப்பாவை துணைவனார்-பார்வதியின் கணவனாகிய சிவபெருமான்,
அவர்முன் தம்மை கண்ட ஆறு - அந்நாயனார் தம்மைச் சிந்தை செய்த வண்ணமாகவே,
எதிரே நின்று-அவருக்கு முன்னே நின்று,
காட்சி தந்து அருளி - காட்சி கொடுத்தருளி,
மிக்க அண்டம் வானவர்கட்கு - சிறந்த இன்பவுலகில் வாழும் தேவர்கட்கும்,
எட்டா அருள் கழல் நீழல் - எட்டாத திருவருள் பொருந்திய திருவடி நீழலை,
சேர-அடையும்படி,
கொண்டவர் - ஆட்கொண்டவராய்,
இடையறாமல்-இடைவிடாமல்,
கும்பிடும் கொள்கை ஈந்தார் - கும்பிட்டுக் கொண்டேயிருக்கும் பேற்றைக் கொடுத்தருளினார்.

**கருத்து**

சிவபெருமான் நாயனர் நினைத்த திருவுருவத்தோடு காட்சி தந்து, அவரைத் தமது திருவடி நீழலிலே சேர்த்துக்கொண்டார்.

**விளக்கம்**

இமயப் பாவை: இமயமலையரசனுடைய மகள்; அஃதாவது பார்வதி; பர்வத ராசன் புதல்வி என்று பொருள்.

இறக்கும் நிலையில் ஒருவர் என்ன எண்ணுகின்றாரோ அது பலிக்கும் என்று சொல்வார்கள். அதன்படி நாயனர் இறுதியில் எந்த உருவத்தை மனத்திற் சிந்தித்தாரோ அதே உருவில் இறைவன் காட்சியளித்தார்.

**இலக்கணம்**

பாவை—உவமையாகுபெயர்.
எட்டா—ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
நீழல்—நீட்டல் விகாரம்.
ஈந்தார்—ஈ+த்+த்+ஆர். ஈ—பகுதி, த்—சந்தி. இது நகரமாகத் திரிந்தது விகாரம். த்—இறந்த கால இடை நிலை, ஆர்—விகுதி.

## இ. கம்பராமாயணம்

கம்பர்+ராமாயணம். கம்பரால் இயற்றப்பட்ட இராமாயணம், கம்பரது இராமாயணம் என விரியும். ராம+அயநம்-இராமனைப் பற்றி அறிவிக்கும் நூல். அயநம்-அறிவிப்பது எனப் பொருள் படும். இராமன் என்னும் சொல் யாவரையும் மகிழ்விப்பவன் எனப் பொருள்படும். ராம+அயநம்—ராமாயணம். இது தீர்க்க சந்தி.

இந்நூலுக்கு இராமகாதை என்றும், இராமாவதாரம் என்றும் வேறு பெயர்கள் உண்டு.

இது, வடமொழியிலுள்ள வான்மீகி ராமாயணத்தை மொழி பெயர்த்துச் செய்யப்பட்டது என்று கூறுவார்கள். இன்னுஞ் சிலர் இக்கதை தமிழ்நாட்டில் நெடுங்காலமாக வழங்கி வந்ததாகும். அதனையே ஒரு காவியமாகக் கம்பர் பாடினர் என்றும் சொல்லுவர்.

கம்பராமாயணத்தில் பாலகாண்டம், அயோத்தியாகாண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தாகாண்டம், சுந்தர காண்டம், உயுத்த காண்டம், என்னும் ஆறு காண்டங்கள் உள்ளன. உத்திர காண்டம் என்ற ஒன்றையும் சேர்த்து ஏழு காண்டம் என்று சிலர் கூறுவர்.

கம்பர் தமிழ் மொழியில் உள்ள இலக்கண, இலக்கிய நூல்களை நன்கு கற்றுத் தேர்ந்தவர். ஆகவே இவர் தம் நூலில் முன்னையோர் கருத்துக்களும், உவமைகளும் பரக்கக் காணலாம். அரசியல் நுட்பங்கள், பழந்தமிழ்ப் பண்பு முதலிய உயரிய செய்திகளையும் ஆங்காங்கே அமைத்துப் பாடியுள்ளார். கற்பனை வளம் நிறைந்தது இந்நூல். அந்தந்த இடங்களுக் கேற்பச் சந்தங்கள் அமைந்திருக்கின்றன. இஃது இதிகாசவகையைச் சார்ந்தது.

**ஆசிரியரைப் பற்றி:**

பெயர்: கம்பர்
ஊர்: திருவழுந்தூர், (தஞ்சை மாவட்டம்)
மரபு: உவச்சர் என்றும், வேளாளர் என்றும் கூறுவர்.
ஆதரித்தவர்: திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பவள்ளல்.
காலம்: கி. பி. 9-ஆம் நூற்றாண்டு என்று சிலரும், 12-ஆம் நூற்றாண்டு என்று சிலரும் கூறுவர்.
பெயர்க்காரணம்: இவருடைய இயற் பெயர் ஏகம்பர் என்றும், அது கம்பர் என மருவி வழங்குகிறது என்றும் கூறுவர். இவர் கம்பநாடார் எனச்சில இடங்களில் குறிக்கப் பெறுவதால் நாட்டின் பெயர் இவருக்கு அமைந்தது என்றும் கூறுவர்.
சிறப்புரைகள்: "கல்வியிற் பெரியன் கம்பன்" "கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவி சொல்லும்", "கம்பனைப் போல்—யாங்கணுமே பிறந்ததில்லை", "கம்பன் பிறந்த தமிழ்நாடு", "விருத்தமெனும் ஒண்பாவிற்கு உயர் கம்பன்", "கவிச் சக்கரவர்த்தி".
வேறு நூல்கள்: சடகோபர் அந்தாதி, சரசுவதி அந்தாதி, ஏர் எழுபது, திருக்கை வழக்கம் முதலியன.

இவர், தம்மை ஆதரித்த சடையப்ப வள்ளலுடைய பெயரைத் தாம் இயற்றிய இராமாயண நூலுள் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளமையால் கம்பருடைய செய்ந்நன்றி யறியும் பண்பு வெளிப்படுகின்றது.

# கைகேசி சூழ்வினைப் படலம்

கைகேயி இராமனுடைய முடிசூட்டு விழாவிற்கு இடையூறு செய்ய ஆலோசித்த தீய செயலைச் சொல்லும் பகுதி என்பது பொருள். கேகய நாட்டரசன் மகள் கைகேயி. அது கைகேசி என மருவி வழங்கும். படலம் என்பது சிறு பிரிவு. காண்டம் என்பது பெரும் பிரிவு. இப்படலம் அயோத்திக் காண்டத்துள் உள்ளது. இக்காண்டத்திலுள்ள கைகேசி சூழ் வினைப்படலம், நகர் நீங்கு படலம் ஆகிய இரண்டு படலத்திலிருந்தும் சில பாடல்கள் பாடமாக வந்துள்ளன.

### கதைச் சுருக்கம்

கைகேயி தயரதன் வலிந்து இரு வரங்களைப் பெற்று விட்டாள். மன்னன் பெருந்துயரத்தோடு படுக்கையில் கிடந்தான். அப்பொழுது வசிட்டன் ஏவலால் சுமந்திரன் மன்னனை அழைத்து வரக் கைகேயியின் மாளிகைக்கு வந்தான். தயரதன் இராமனை அழைத்து வா என ஏவ, சுமந்திரன் இராமனை அழைத்து வருகின்றான்.

வரும் இராமனிடம், கைகேயி தான் பெற்ற வரத்தைத் தானே இராமனிடம் கூற எதிர் சென்றாள். இராமன் கைகேயியை வணங்கி

நிற்க, அவள் “ தந்தையின் ஏவல் ஒன்று உளது” என்றாள். தந்தையின் கட்டளையை நீங்கள் உரை செய்ய முடியுமானால் யான் உய்ந்தேன். ஆணையிடுக என்ன, அவள், ‘பரதன் நாடாள, நீ பதினான்கு ஆண்டுகள் காட்டில் தவநெறியில் ஒழுக வேண்டும்’ என்றாள். அது கேட்ட இராமன் அன்றலர்ந்த செந்தாமரையினும் முகமலர்ந்து, ‘மன்னவன் பணியன்றாகில் நும் பணி மறுப்பனோ? தம்பி பெற்ற செல்வம் நான் பெற்ற செல்வம், நான் காடு செல்கின்றேன், விடை கொண்டேன்’ என்று சென்றான்.

பின்னர் இராமன் கோசலையிடம் சென்றான். அவன் முடி சூடுதற்குரிய அடையாளம் ஒன்றுமின்றி வருதல் கண்டு கோசலை ‘முடிசூட ஏதாகிலும் இடையூறு உண்டோ’ என்றாள். ‘நின்மகன் பரதன் முடி சூடுகின்றான் என்றான் அவன். கோசலை ‘முறைமையன்று என்பது தவிர, நின்னினும் உயர்ந்தவனே; அவனுக்கு நாட்டைக் கொடுத்து மாறுபாடின்றி வாழ்க’ என்றாள். அது கேட்டு மகிழ்ந்த இராமன் ‘தந்தை என்னைப் பதினான்கு ஆண்டுகள் காட்டில் வாழப் பணித்துள்ளார்.’ எனவும் கோசலை துடிதுடித்துப் பலவாறு புலம்பினாள். இராமன் பலவும் கூறித்தேற்றினான். கோசலை ‘நீ காடு செல்வதென்றால் என்னையும் உடன் அழைத்துச் செல்’ என்றாள். ‘அம்மா’, என்னைப் பிரிந்து வருந்தும் தந்தையைத் தேற்றுவது நும் கடன்; நான் பதினான்கு ஆண்டுகளையும் பதினான்கு நாட்களாகக் கழித்து மேன்மையுடன் வருவேன்; விடை தருக’ என இராமன் மொழிந்தான்.

## 1. கைகேயி இராமனுக்கு எதிர்வருதல்

### ஆயன நிகழும்.................................வந்தால்

#### சொற்பொருள்

ஆயன நிகழும் வேலை - (இராமன் கைகேயி அரண்மனைக்கு வருவதைப் புரவலர் முதலியவர்கள் பாராட்டுதல்) முதலிய நிகழ்ச்சிகள் நடக்குங் காலத்தில்,

அயர்ந்து தேரு ஆயனன் - மூர்ச்சையடைந்து தெளியாத தூயவனான தயரதன்,

இருந்த சூழல் - இருந்த இடத்தை,

அண்ணலும் - இராமனும்,

துருவினன் வருதல் நோக்கி- தேடி வருதலைப் பார்த்து,

இது நாயகன் வாயால் உரையான் - இதனைக் கணவனாகிய தயரதன் இராமனிடம் வாயால் உரைக்க மாட்டான், (ஆதலால்)

நான் பகர்வென் என்னா - நான் சொல்வேன் என்று எண்ணிக் கொண்டு,

தாய் என நினைவான் முன்னே- தாயென்று நினைக்கும் இராமனுக்கு எதிரில்,

கூற்று என - யமனைப்போல,

தமியள் வந்தாள் - ஒப்பற்ற கொடியளாகிய கைகேயி வந்தாள்.

### கருத்து

இராமன் தயரதனை நோக்கி வருவதை யறிந்த கைகேயி 'தான் பெற்ற வரங்களைத் தயரதன் இராமனிடம் கூறுன், நானே சொல்வேன்' என எண்ணி, யமனைப்போல அவனுக்கு எதிரே வந்தாள்.

### விளக்கம்

வரங்கள் கொடியன. ஆதலால் தயரதன் மயங்கிக் கிடக்கின்முன். ஆகவே அவன் தன் வாயால் அவற்றை இராமனிடம் கூறுன் என்பது உறுதி. இதை நன்குணர்ந்த கைகேயி தானே சொல்ல முந்துகின்ருள்.

தயரதன் இராமனை உயிராகக் கருதிவருகிருன். ஆகவே தயரதன் உடலாகின்ருன். அவ்வுடலாகிய தயரதனையும் உயிராகிய இராமனையும் ஒன்றுபட்டு வாழவிடாமல் பிரிக்கின்ருளாதலின் 'கூற்றென வந்தாள்' எனப்பட்டது.

### இலக்கணம்

தேரு—ஈறுகெட்ட எதிர் மறைப்பெயரெச்சம்
குறுகினன்—முற்றெச்சம்.
வருதல்—தொழிற் பெயர்.
பகர்வென்—தன்மை ஒருமை வினைமுற்று.
நினைவான்—வினையாலணையும் பெயர்.
குறுகினன்—குறுகு + இன் + அன். குறுகு—பகுதி, இன்—இறந்தகால இடைநிலை, அன்—ஆண்பால் படர்க்கை விகுதி.
பகர்வென்—பகர் + வ் + என். பகர்—பகுதி, வ்—எதிர்கால இடை நிலை, என்—தன்மை ஒருமை விகுதி.
தமியள்—தமி + அள். தமி—பகுதி, அள்—பெண்பால் விகுதி.
உரையான்—உரை + ஆ + ஆன். உரை—பகுதி, ஆ—எதிர்மறை இடை நிலை (புணர்ந்து கெட்டது) ஆன்—ஆண்பால் படர்க்கை விகுதி.

## 2. இராமன் கைகேயியை வணங்குதல்

**வந்தவள் தன்னை............................அன்னுன்**

### சொற்பொருள்

அந்தி-அந்திப் பொழுதிலே,
வந்து அடைந்த தாயை-வந்து சேர்ந்த தாய்ப்பசுவை,
கண்ட-பார்த்த,
ஆன் கன்றின் அன்னுன்-அப்பசுவின் கன்றைப்போல மகிழ்ந்த இராமன்,
வந்தவள் தன்னை-எதிரே வந்த கைகேயியை,
சென்னி மண் உற வணங்கி- தலை நிலத்திற்படும்படி வீழ்ந்து வணங்கி,
வாசம் சிந்துரம் பவளம்-மணம் பொருந்தியதும் சிந்துரத்தை

யும் பவழத்தையும் போன்ற தும் ஆகிய,

செவ்வாய்-சிவந்த வாயை,

செம்கையில் புதைத்து-சிவந்த ஒரு கையினுலே மூடி,

மற்றை சுந்தரம் தடக்கை-மற்றொரு அழகிய பெரிய கையினுல்,

தானை மடக்குற-ஆடையின் முன் பகுதியை மடக்கிப் பிடித்துக் கொண்டு,

துவண்டு நின்ருன் — வணங்கி நின்ருன்.

கருத்து

கைகேயியைக் கண்ட இராமன் பசுவைக்கண்ட கன்றைப் போல மகிழ்ந்து, வணங்கி, ஒருகையால் வாய் பொத்தி, மறுகையால் ஆடை யொடுக்கிப் பணிந்து நின்ருன்.

விளக்கம்

கைகேயிக்குப் பசுவையும் இராமனுக்குக் கன்றையும் உவமையாகக் கொள்க. பணிந்த மொழி, தானை மடக்கல், வாய்புதைத்தல் முதலியன அடக்கத்தின் அறிகுறிகளாம். பெரியவர்களோடு பேசுங்கால் இவ்வாறு நிற்றல் இயல்பு.

இலக்கணம்

வந்தவள்——வினையாலணையும் பெயர்.
பவள வாய்——உவமைத் தொகை.
செவ்வாய்——பண்புத் தொகை
செங்கையில்——உருபுமயக்கம் (செங்கையால்).
தடக்கை——உரிச்சொற்றொடர்.
ஆன் கன்று——ஆரும் வேற்றுமைத்தொகை.
துவண்டு——துவள் + ட் + உ. துவள்——பகுதி, ட்——இறந்தகால இடைநிலை, உ——வினை யெச்ச விகுதி.

## 3. கைகேயி வரத்தைக் கூறல்

நின்றவன்.........................................என்ருன்

சொற்பொருள்

இரும்பினுல் இயைந்த நெஞ்சின்-இரும்பால் செய்யப்பட்ட நெஞ்சத்தையுடைய,

கொன்று உழல் - கொன்று திரிகின்ற,

கூற்றம் என்னும் பெயரின்றி-கூற்றம் என்று சொல்லப் படுகின்ற பெயரில்லாமல்,

கொடுமைபூண்டாள்-கொடுமை பூண்டவளாகிய கைகேயி,

நின்றவன் தன்னை நோக்கி - பணிந்து நின்ற இராமனை நோக்கி,

மைந்த - மகனே,

உந்தை உனக்கு உரைப்பது - உன்னுடைய தந்தை உனக்கு உரைப்பதாதாகிய,

ஓர் உரை உண்டு - ஓர் உரை உளது, (அவர் சொல்ல வேண்டிய அவ்வுரையை)
இன்று உணர்த்தல் ஆவது - இப்பொழுது கூறுவது,
எனக்கு ஏயது என்னில் - எனக்குப் பொருந்தும் என்றால்,
ஆகும் என்றாள் — சொல்லக் கூடும் எனவுரைத்தாள்.

**கருத்து**

கூற்றினுங்கொடியளாகிய கைகேயி, வணங்கி நின்ற இராமனை நோக்கி, உன் தந்தை உனக்குச் சொல்ல வேண்டியதொன்றுண்டு; அதை நான் உரைக்கலாமென்றால் உரைக்கின்றேன் என்று சொன்னாள்.

**விளக்கம்**

அரசனே சொல்லட்டும் என்று கூறினாலுங் கூறி விடுவான் என்று கருதியே, 'உணர்த்தலாவதே என்னில் ஆகும்' என்றாள்.

'மைந்த' என்று அவனை அணைத்துக் கூறியது அவன் ஐயமுறாதிருக்கவே.

மூன்றாமடி தெளிவில்லாமல் அமைந்திருப்பது அவளுடைய மனத் தடுமாற்றத்தைப் புலப்படுத்துகிறது.

**இலக்கணம்**

நின்றவன்—வினையாலணையும் பெயர்
உழல் கூற்றம்—வினைத்தொகை.
பூண்டாள்—வினையாலணையும் பெயர்
உந்தை—மரூஉமொழி

## 4. இராமன் பணியிட வேண்டுதல்

**எந்தையே..................................என்றான்.**

**சொற்பொருள்**

எந்தையே ஏவ - என்னுடைய தந்தையே கட்டளையிடவும்,
நீரே உரை செய—அதை நீங்களே உங்கள் வாயால் எனக்குச் சொல்லவும்,
இயைவது உண்டேல் — பொருந்தியது என்றால்,
அடியேன் உய்ந்தனன் - அடியேனாகிய நான் கடைத்தேறினேன்,
என்னில் பிறந்தவர் உளரோ - என்னைப் போலப் பயனுள்ள பிறப்பைப் பெற்றவர் உலகில் உண்டோ?
என் தவத்தின் ஆய வருபயன் - என் முற்பிறப்பில் செய்த தவத்தினால் வருவதானபயன்,
வந்தது - வந்து விட்டது,
மற்று ஒன்று உண்டோ - இதை விடச் சிறந்தது வேறொன்று உளதோ?
தந்தையும் தாயும் நீரே - அப்பனும் அம்மையும் நீர்தான்,
தலை நின்றேன் - அப்பணியைத் தலைமேற் கொண்டேன்,
பணிமின் என்றான் - கட்டளையிடுங்கள் என்று கூறினான்.

### கருத்து

என் தந்தை ஆணையிட அதை நீங்கள் சொல்ல ஒரு வாய்ப்பு ஏற்படுமானால் நான் கடைத்தேறினேன். என்னைப் போலப் பிறந்தவர் உலகில் வேறெவரும் இலர். இதை விடச் சிறந்த பயன் வேறுண்டோ? தந்தையாகவும் தாயாகவும் உள்ள நீங்கள் ஆணையிடுங்கள். நான் தலைமேற் கொண்டு அதைச் செய்வேன் என்றான்.

### விளக்கம்

மகனுக்குத் தாய் கட்டளையிடுவாள், அல்லது தந்தை கட்டளையிடுவான்; இருவரும் சேர்ந்து கட்டளையிடினும் ஒன்றற்கொன்று மாறுபட அமைவதும் உண்டு. இருவரும் சேர்ந்து ஒரு கருத்தாகக் கூறுவது அருமை என்பது தோன்ற 'இயைவது உண்டேல்' என்றான்.

### இலக்கணம்

எந்தை—மரூஉ மொழி
செய—செய்ய என்பதன் இடைக்குறை
உயர்ந்தனன்—தன்மை ஒருமை வினைமுற்று
என்னில்—இல் ஒப்புப் பொருளில் வந்தது.
உளரோ, உண்டோ—ஓகாரங்கள் எதிர்மறைப் பொருளில் வந்தன.
வாழி—அசைநிலை
பணிமின்—முன்னிலைப் பன்மை வினைமுற்று. பணி+மின்.

## 5. கைகேயி அரசன் ஆணைகளாக மொழிதல்

ஆழிசூழ்.......................................என்றாள்

### சொற்பொருள்

ஆழிசூழ் உலகம் எல்லாம் - கடல்சூழ்ந்த இந்த உலகத்தையெல்லாம்,
பரதனே ஆள - பரதன் ஆட்சி செய்யவும்,
நீ போய் - நீ சென்று,
தாழ் இரும் சடைகள் தாங்கி - நீண்ட பெரிய சடைகளைத் தாங்கி,
தாங்க அரும்—செய்தற்கரிய,
தவம் மேற்கொண்டு - தவத்தை மேற் கொண்டு,
பூழி வெம் கானம் நண்ணி புழுதி படிந்த கொடிய காட்டை அடைந்து,
புண்ணிய நதிகள் ஆடி - புண்ணிய நீர்த் துறைகளில் மூழ்கி,
ஏழ் இரண்டு ஆண்டில் — பதினான்கு ஆண்டுகள் கழித்து,
வா என்று - திரும்பி வா என்று,
அரசன் ஏவினன் - அரசர் சொன்னார்,
என்றாள் – என்று கூறினாள்.

### கருத்து

பரதன் நாடாள நீ பதினான்கு ஆண்டுகள் காடுகளில் தவம் புரிந்து, புண்ணியத் துறை மூழ்கிப் பின் திரும்பிவா என்று தயரதன் கூறினான் என்று கைகேயி சொன்னாள்.

### விளக்கம்

இராமனுக்கு ஒரு சிறிய இடங்கூட நாட்டில் இல்லை என்பதை உணர்த்த 'உலகம் எல்லாம் பரதன் ஆள' என்றாள்.

காட்டிற்குச் செல்க என்றவுடன் இராமன் மறுத்தாலும் மறுக்கலாம் என்றெண்ணியே, உன் தந்தை என்று முதலிற் கூறியவள் இங்கு 'அரசன் இயம்பினன்' என்றாள். தந்தை கட்டளையை மறுத்தாலும் மறுக்கலாம், அரசன் கட்டளையை மறுக்கக் கூடாதல்லவா? அதனால் அவ்வாறு கூறினாள்.

### இலக்கணம்

சூழ் உலகம்—**வினைத்தொகை.**
தாங்கரும்—தாங்க+அரும். அகரம் விகாரத்தால் **தொக்கது.**
வெங்கானம்—**பண்புத்தொகை.**
துறைகள் ஆடி—**ஏழாம் வேற்றுமைத் தொகை.**

## 6. இராமன் அதைக் கேட்டு மகிழ்ந்திருத்தல்

**இப்பொழுது..................................அம்மா**

### சொற்பொருள்

யாரும் செப்ப அரும் - எப்படிப் பட்டவர்க்கும் சொல்ல முடியாத,
குணத்து இராமன் - குணத்தையுடைய இராமனுடைய,
திருமுகம் செவ்வி - திருமுகத்தின் அழகை,
இப்பொழுது நோக்கில் - இப்பொழுது பார்த்தால்,
எம்மனோரால் -என் போன்றவர்களால்,
இயம்புதற்கு எளிதோ - சொல்லுதற்கு எளிதாகுமோ?,
முன்பு ஒப்பதே - முன்பெல்லாம் (அன்றலர்ந்த செந்தாமரையை) ஒத்ததாக இருக்கும்,
அவ்வாசகம் உணரக் கேட்ட பின்பு - கைகேயின் அவ்வுரையைக் கேட்ட பிறகு,
அப்பொழுது அலர்ந்த - அன்றலர்ந்த,
செந்தாமரையினை-செந்தாமரை மலரை,
வென்றது - வெற்றி கொண்டு விட்டது.

### கருத்து

இராமனுடைய முகம் முன்பு அன்றலர்ந்த செந்தாமரையைப் போல இருந்தது ;கைகேயி சொற்களைக் கேட்ட பிறகு இப்போது அம்மலரை வென்று விட்டது.

### விளக்கம்

செந்தாமரை மலர் போல முன்பிருந்தது அவன் முகம் என்றால் எப்பொழுதும் மலர்ச்சியாகவும் மகிழ்ச்சியாகவும் இருந்தது என்று பொருள். கானகஞ் செல்க என்றவுடன் வாடியிருக்க வேண்டும்.

ஆனால் முன்பு ஒத்திருந்த முகம் இன்று அம்மலரை வென்று விட்டது; அஃதாவது முன்னையினும் மலர்ச்சியாகவும் மகிழ்ச்சியாகவும் இருந்தது என்று பொருள். அப்பணியை மிக்க மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டான் என்பது கருத்து.

இன்பத்தையும் துன்பத்தையும் சமமாகக் கருதும் பேருள்ளம் படைத்தவன் இராமன் என்பது இதனால் விளங்கும். அம்மா—வியப்பிடைச் சொல்.

## 7. இராமன் கைகேயியிடம் விடை பெறுதல்

**மன்னவன் பணி.......................கொண்டேன்**

### சொற்பொருள்

மன்னவன் பணி அன்று ஆகில் - அரசனுடைய கட்டளை அன்று எனினும்,
நும் பணி மறுப்பனோ - உம்முடைய கட்டளையை மறுத்துரைப்பேனா ?,
என் பின்னவன் பெற்ற செல்வம் - என் தம்பி பெற்ற பேறு,
அடியனேன் பெற்றது அன்றோ - நான் பெற்ற செல்வம் அல்லவா ?,
இப்பணி தலைமேல் கொண்டேன் - இக்கட்டளையைத் தலைமேல் ஏற்றுக் கொண்டேன்,
மின் ஒளிர் கானம் - ஒளி பரந்த காட்டிற்கு,
இன்றே போகின்றேன் - இப்பொழுதே செல்கின்றேன்,
இதில் அப்பால் உறுதி என் - இனிமேல் இதைவிட நல்லது என்ன இருக்கிறது ?,
விடையும் கொண்டேன் - தங்களிடம் விடையும் பெற்றுக் கொள்கிறேன்.

### கருத்து

அரசன் கூறுவிடினும் நீங்கள் கூறினால் நான் மறுத்தா சொல்வேன். என் தம்பி பெற்றபேறு நான் பெற்ற பேறேயாகும். இப்பொழுதே இப்பணியைத் தலைமேற் கொண்டு காடு செல்கின்றேன். தங்கள் பால் விடையும் பெற்றுக் கொள்கின்றேன்.

### விளக்கம்

கைகேயி, முன்பு 'இயம்பினன் அரசன்' என்று கூறியதற்கேற்ப 'மன்னவன் பணி' என இவனும் கூறுகின்றான்.

முதலில் தன்னை அழைத்து அரசைப் பெற்றுக் கொள்ளுமாறு பரிந்துரைத்த தயரதன் இப்பொழுது இவ்வாறு கூறுவனோ என்று ஐயந்தோன்றுவதியல்பு. அதனால் 'மன்னவன் பணி அன்றாகில்' என்று கூறுகின்றான்.

### இலக்கணம்

மறுப்பனோ—ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது.

# நகர் நீங்கு படலம்

இராமன் காடு செல்வதற்காக அயோத்தியை விட்டு நீங்குவதைக் கூறும் படலம்.

## 8. இராமன் கோசலையிடம் செல்லுதல்

குழைக்கின்ற..................................சென்றான்

### சொற்பொருள்

மழைக்குன்றம் அனையான் - மேகந்தவழும் மலைபோன்றவனாகிய இராமன்,

மௌலி கவித்தனன் வரும் என்று என்று - முடிசூடி வருவான் என்று என்று,

தழைக்கின்ற உள்ளத்து அன்னாள் முன் - மகிழ்ச்சி பொங்கும் உள்ளத்தாளாகிய கோசலையின் முன்பு,

குழைக்கின்ற கவரி இன்றி - வீசுகின்ற வெண்சாமரம் இல்லாமல்,

கொற்றம் வெண்குடையும் இன்றி - வெற்றி பொருந்திய வெண் கொற்றக் குடையும் இல்லாமல்,

இழைக்கின்ற விதி முன் செல்ல - நடத்தி வைக்கும் விதியானது முன்னே செல்ல,

தருமம் பின் இரங்கி ஏக — தருமமானது பின்னாலே இரங்கிக் கொண்டு செல்ல,

ஒரு தமியன் சென்றான் - தன்னந் தனியனாகச் சென்றான்.

### கருத்து

இராமன் முடிசூடி வருவான் என்று என்று மகிழ்ந்து கொண்டிருந்த கோசலையின் முன்பு சாமரம் இருபுறமும் வீசுதலின்றி, வெண்கொற்றக் குடையும் இல்லாமல் தனியனாக வந்தான்.

### விளக்கம்

கவரியும், வெண்குடையும் முடி சூடிய மன்னர்க்குரிய அடையாளங்கள். அவையில்லாமல் பரிவாரங்களும் இல்லாமல் தனியே வருகிறான் இராமன்.

ஒரு குறையும் இல்லாத அரசனுக்கு இந்நிலை எதனால் வந்தது? ஊழ்வினையால் வந்தது என்பதைக் காட்ட 'விதிமுன் செல்ல' என்றார். அறநெறி தவறாதவன் இராமன் என்பதைக் காட்ட 'தருமம் இரங்கி ஏக' என்றார்.

### இலக்கணம்

வெண்குடை—பண்புத்தொகை.
கவித்தனன்—முற்றெச்சம்.

## 9. கோசலை இராமனை வினவுதல்

**புனைந்திலன்..................................என்றான்**

**சொற்பொருள்**

[illegible]ந்த, பொன்கழல் கால்வீரன்- வீரக் கழல் அணிந்த கால்களை யுடைய இராமன்,
நளின பாதம் வணங்கலும் - கோசலையின் தாமரைபோன்ற திருவடிகளில் வீழ்ந்து வணங்கியவுடன்,
குழைந்து வாழ்த்தி - மனமுருகி வாழ்த்தி,
மௌலி புனைந்திலன் - இவன் முடி சூடவில்லை,
மஞ்சனப் புனித நீரால் குஞ்சி நனைந்திலன்-புனிதமான திரு மஞ்சன நீரினால் தலைமயிர் நனையவில்லை,
என்கொல்-யாதுகாரணம்,
என்னும் ஐயத்தாள்-என்ற ஐயங் கொண்டவளாகி,
நினைந்தது என்-(தயரதன்) யாது நினைத்தான்?,
நெடுமுடி புனைதற்கு - திருமுடி சூடுதற்கு,
இடையூறு உண்டோ-இடையூறு உளதோ?,
என்றாள்-என்று வினவினாள்.

**கருத்து**

வணங்கிய இராமனை வாழ்த்தி, முடிசூடாத் தோற்றங்கண்டு யாது நிகழ்ந்தது என்று கோசலை வினவினாள்.

**இலக்கணம்**

புனைந்திலன்—எதிர்மறைப் படர்க்கை ஆண்பால் ஒருமை வினை முற்று.
என் கொல்—கொல் ஐயப்பொருளில் வந்தது.
நளின பாதம்—உவமைத் தொகை
பொற்கழல் — மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

## 10. இராமன் கோசலைக்கு அறிவித்தல்

**மங்கை.............................................என்றான்**

**சொற்பொருள்**

மங்கை அம் மொழி கூறலும் - கோசலை அவ்வுரை கூறின வுடன்,
மானவன்-வீரனாகிய இராமன்,
செம் கை கூப்பி - சிவந்த கைகளைக் குவித்து,
நின் காதல் திருமகன் - உன்னு டைய அன்புக்குரிய மகனும்,
பங்கம் இல் குணத்து எம்பி-குற் றமில்லாத குணத்தையுடைய என் தம்பியும் (ஆகிய),
பரதனே-பரதன்தான்,
துங்கம் மாமுடி - மிகச் சிறந்த தாகிய முடியை,
சூடுகின்றான் என்றான் - சூடப் போகின்றான் என்று சொன் னான்.

### கருத்து

இராமன் கோசலையை நோக்கி நின் மகனும் என் தம்பியும் ஆகிய பரதன் நாடாளப் போகின்றான் என்றான்.

### விளக்கம்

தான் காட்டுக்குச் செல்வதைக் கூறின் தாய் வருந்துவாள் என்பதையறிந்து, அதனைக் கூறாது, பரதன் நாடாளுதலை மட்டும் கூறுகிறான்.

பரதனுக்குப் பட்டங் கட்டுவதை நீயும் விரும்புவாய் என்பது தோன்ற 'நின் காதல் திருமகன்' என்றும் நானும் விரும்புகிறேன் என்பது தோன்ற 'எம்பி' என்றுங் கூறுகிறான்.

முடி சூடலைத் தான் பெறுதல் வேண்டும் என்பதற்காகப் பரதன் ஏதும் சூழ்ச்சி செய்திருப்பானோ? என்று ஐயம் எழலாம். ஆனால் இதில் அவன் தொடர்பு எதுவுமே இல்லை என்பது தோன்றப் 'பங்கம் இல் குணத்து' என்றான்.

இராமன் பாதியையும் பரதன் பாதியையும் ஆளப்போகின்றார்களோ என்றுந் தோன்றலாம். அப்படியொன்றுமில்லை; முழுவதையும் பரதன் மட்டுந்தான் ஆளப் போகிறான் என்பதைப் 'பரதனே சூடுகின்றான்' என்று குறிக்கின்றான்.

### இலக்கணம்

செங்கை—பண்புத் தொகை.
எம்பி—மரூஉ மொழி.
மாமுடி—உரிச் சொற்றொடர்.
சூடுகின்றான்—சூடு+கின்று+ஆன். சூடு—பகுதி, கின்று—நிகழ் கால இடைநிலை, ஆன்—ஆண்பால் விகுதி.

## 11. கோசலை மறுமொழி

**முறைமை..............................மாற்றினாள்**

### சொற்பொருள்

நால்வர்க்கும் — இராமன் முதலாகவுள்ள நான்கு பேரிடத்தும்,
மறு இல் அன்பினில்-குற்றமற்ற அன்பில்,
வேற்றுமை மாற்றினாள் - வேறுபாடில்லாதவளாகிய கோசலை,
முறைமை அன்று என்பது ஒன்று உண்டு அல்லது — (மூத்தவன் இருக்க இளையவன் முடி சூடுவது) முறையன்று என்று சொல்கின்ற ஒரு குறையுண்டே தவிர,
நிறை குணத்தவன் - (பரதன்) நற்குணங்கள் நிரம்பப் பெற்றவன்,
நின்னினும் நல்லன் - உன்னைவிட நல்லவன்,
குறைவிலன் - எவ்விதக் குறைபாடும் இல்லாதவன்,
எனக் கூறினள் - என்று கூறினாள்.

### கருத்து

இளையனாகிய பரதன் முடிசூடுவது முறையில்லை என்பது தவிர, அவன் உன்னைவிடப் பன்மடங்கு நல்லவன் என்று சொன்னாள்.

### விளக்கம்

இராமனுக்குப் பட்டம் இல்லை என்றால் பெற்றவள் வருந்தத் தானே செய்வாள்? ஆனால் இவள் வருந்தவில்லை; பரதனைப் பாராட்டியே பேசுகின்றாள். ஏன்? அவள் நால்வரிடத்தும் ஒரே மாதிரி அன்புடையவள். தன் மகன் மாற்றாள் மகன் என்று வேறு பாடு தெரியாதவள். அதனால் அவள் 'நால்வர்க்கும் அன்பினில் வேற்றுமை மாற்றினாள்' எனப்பட்டாள். அந்த அன்பும் 'மறுவில் அன்பு.'

இந்த நிகழ்ச்சியில் குறையுண்டா என்று ஆராய்ந்து தேடிக் கண்டு பிடித்தால் ஒன்றே ஒன்றுதான் கிடைக்கும். மூத்தவனிருக்க இளையவன் முடி சூடுகிறான் என்பதுதான் அக்குறை. அதைத் தவிர வேறு எவரிடத்தும் குறை சொல்ல முடியாது என்கிறாள்.

நான்கு பிள்ளைகளும் ஒரே மாதிரி. இவர்களில் யார் ஆண்டாலென்ன? நாட்டாட்சி நன்முறையில் நிகழ்தல் வேண்டும். அவ்வளவுதான். நாட்டின் நன்மை ஒன்றுதான் அவளுக்குக் குறி. ஆள்வோர் யார் என்பதன்று அவள் எண்ணம்.

### இலக்கணம்

நிறைகுணம்—வினைத்தொகை.
நல்லனால்—ஆல் அசைநிலை.
மாற்றினாள்—வினையாலணையும் பெயர்.

## 12. கோசலையின் அறிவுரையும் வாழ்த்தும்

**என்று பின்னரும்..............................என்றாள்**

### சொற்பொருள்

என்று பின்னரும் - என்று கூறி மீண்டும், (கோசலை)
மகனே - அருமை மகனே,
மன்னவன் ஏவியது - அரசன் இட்ட கட்டளையை,
அன்று எனாமை - கூடாது என்று சொல்லாமல் இருப்பதுதான்,
உனக்கு அறன் - உனக்குக் கடமையாகும்,
நன்று - நல்லதும் ஆகும்,
நும்பிக்கு நானிலம் நீ கொடுத்து - உன் தம்பிக்கு நீ நாட்டைக் கொடுத்து,
ஒன்றி - அவனுடன் பொருந்தி,
பல ஊழி வாழுதி - பல்லூழி காலம் வாழ்வாயாக,
என்றாள் - என்று வாழ்த்தினாள்.

### கருத்து

மகனே அரசன் ஆணையை மறுக்காமல் இருப்பதுதான் உனக்கு அறமாகும். நீ உன் தம்பிக்கு ஆட்சியைக் கொடுத்து, அவனோடு பொருந்தி வாழ்வாயாக என்று சொன்னாள்.

### விளக்கம்

இராமன் ஒருவேளை மறுப்பனோ என்றுகருதி அரசன் ஆணையை மறுக்காமல் இருப்பதுதான் உனக்கு அறமாகும் என்றான். நாட்டைக் கொடுப்பதுடன் அமையாது அவனுடன் ஒன்றுபட்டு வாழ வேண்டும் என்பாள் 'ஒன்றி வாழுதி' என்றாள்.

### இலக்கணம்

அறன்—மொழியிறுதிப் போலி.
நும்பி—மரூஉ மொழி.
நானிலம்—பண்புத்தொகை. காரணப் பெயர்.
வாழுதி—முன்னிலை ஒருமை வினைமுற்று.
வாழ்+உ+தி. வாழ்—பகுதி, உ—சாரியை, தி—முன்னிலை ஒருமை விகுதி.

## 13. இராமன் மற்றொரு கட்டளையையும் கூறல்

**தாயுரைத்த..............................இயம்பினான்**

### சொற்பொருள்

தாய் உரைத்த சொல் கேட்டு - கோசலை கூறிய சொற்களைக் கேட்டதும்,
தழைக்கின்ற - மகிழ்ச்சிபொங்குகின்ற,
தூய சிந்தை - தூய்மையான மனத்தையுடைய,
அத் தோம் இல் — குற்றமில்லாத அந்த,
குணத்தினான் - குணத்தையுடைய இராமன்,
எனை நன்னெறி உய்ப்பதற்கு - என்னை நல்வழிப் படுத்துதற்கு,
நாயகன் ஏயது - தலைவனாகிய தயரதன் கட்டளையிட்டதாகிய,
ஓர் பணி உண்டு - மற்றொரு பணியும் உளது,
என்று இயம்பினான் - என்று கூறினான்.

### கருத்து

கோசலை கூறியது கேட்டு மகிழ்ந்த இராமன் 'அரசன் என்னை நல்வழிப்படுத்த ஏவிய பணியொன்றும் உளது' என்று கூறினான்.

### விளக்கம்

இராமன் தூய சிந்தையும் தோமில் குணமும் உடையவனாதலின் தாயுரைத்த சொல் கேட்டு நெஞ்சம் தழைக்கின்றான். மேலும் தான் முடி சூடாமல் பரதன் முடி சூடுவதறிந்து வருந்துவாளோ என்று எண்ணியிருந்த இராமனுக்கு அவளுடைய அந்த நல்லுரையைக் கேட்டதும் உள்ளம் தழைப்பதாயிற்று.

மற்றொரு கட்டளை உறுதியாக அவள் நெஞ்சை உறுத்துமாகலின், இன்னதென வெளிப்படையாகக் கூறாமல் அவள் மனத்தை

ஒருப்படச் செய்வதற்காக 'என்னே நன்னெறி உய்ப்பதற்கு நாயகன் ஏவிய தொன்றுண்டு' என நளினமாகக் கூறுகின்றான்.

### இலக்கணம்

நன்னெறி—பண்புத்தொகை நன்மை+நெறி.
ஏயது—ஏவியது என்பதன் இடைக்குறை.
ஓர் - ஓர் என்பதன் குறுக்கல் விகாரம்.
எனே - என்னே என்பதன் இடைக்குறை.

## 14. கட்டளை இன்னதெனக் கூறல்

ஈண்டுரைத்த..................................என்றான்

### சொற்பொருள்

ஈண்டு உரைத்த பணி - இப்பொழுது சொன்ன அந்தப் பணியானது,
என்னே என்றலும் - யாது என்று கேட்டவுடன்
ஆண்டு ஓர் ஏழிரண்டு ஏழ் - பதினான்கு ஆண்டுகள்,
அகல் கான் இடை — அகன்ற பெரிய காட்டகத்தே,
மாண்ட மாதவத்தோருடன்- மாட்சிமைப்பட்ட பெரிய முனிவர்களுடன்,
வைகி - சேர்ந்திருந்து,
பின் மீண்டு நீ வரல் வேண்டும் - பிறகு நீ திரும்பி வர வேண்டும்,
என்றான்-எனத் தயரதன் ஆணையிட்டான்,
என்றான் - என்று இராமன் கூறினான்.

### கருத்து

அப்பணி யாதென வினவிய கோசலைக்குப் 'பதினான்கு ஆண்டுகள் காட்டில் முனிவர்களுடன் வாழ்ந்து பின் வருக என்று பணித்தான்' என இராமன் கூறினான்.

### விளக்கம்

பதினான்கு ஆண்டுகள் என்றால் பதறுவாள் தாய். ஆதலின் குறைவென்று கூறுவான் போல 'ஏழிரண்டு ஏழ்' என்று கூறுகின்றான். அவ்வாண்டுகளும் 'மாதவ முனிவருடன் வைகும்' நன்மைக்கே ஆகும் என்று கூறி. அவள் தடை சொல்லாமல் இருக்க அணை போட்டுக் கொள்கிறான்.

### இலக்கணம்

அகன்கான்—வினைத்தொகை.
மாண்ட—மாண்+ட்+அ. மாண்—பகுதி, ட்—இறந்த கால இடைநிலை, அ—பெயரெச்ச விகுதி;

## 15. கோசலையின் தவிப்பு

**ஆங்கவ்..............................விழுந்தாளரோ**

**சொற்பொருள்**

ஆங்கு அ வாசகம் என்னும் - அப்பொழுது அந்தச் சொல்லாகிய,
அனல் - நெருப்பு,
குழைதூங்கு தன் செவியில் - காதணி தொங்கும் தன்னுடைய செவியிலே,
தொடராமுனம் - புகுவதற்கு முன்னம், (கோசலை)
ஏங்கினாள் - ஏக்கங் கொண்டாள்,
இளைத்தாள் — உடல் மெலிந்தாள்,
திகைத்தாள் — (ஈதென்ன வேறுபாடு) என்று திகைப்புற்றாள்,
மனம் வீங்கினாள்-மனம் வெடிக்கும் நிலையடைந்தாள்,
விம்மினாள் - பெருமூச்செறிந்தாள்,
விழுந்தாள் - கீழே விழுந்தாள்.

**கருத்து**

இராமன் கூறிய அந்தக் கொடுஞ்சொற்கள் அவளுடைய செவியிற் படாமுன் கோசலை ஏங்கி, இளைத்து, திகைத்து, மனம் வீங்கி, விம்மி, விழுந்தாள்.

**விளக்கம்**

இராமன் சொன்னது நெஞ்சைச் சுட்ட காரணத்தால் அது 'அனல்' எனப்பட்டது.

மனம் வீங்குதலாவது துயரத்தால் மனம்பொருமி வெடித்து விடும்போல் தோன்றும் உணர்ச்சி.

ஏங்குதல் முதலியன துன்பத்தில் ஏற்படும் மெய்ப்பாடுகள்.

**இலக்கணம்**

வாசகம் என்னும் அனல்—உருவகம்.
தூங்குசெவி—வினைத்தொகை.
தொடரா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
முனம்—முன்னம் என்பதன் இடைக்குறை.
அரோ—அசைநிலை.

## 16. கோசலை புலம்பல்

**வஞ்சமோ..............................அஞ்சுமால்**

**சொற்பொருள்**

மகனே - என் அருமை மகனே,
உனை மாநிலம் தஞ்சமாக - உன்னை நோக்கி இப்பெரிய உலகஆட்சியைப் பொறுப்பாக,
நீ தாங்கு என்ற வாசகம் — நீ ஆளவேண்டுமென்று (தயரதன்) கூறிய சொல்,
வஞ்சமோ - வஞ்சனையா? (அல்லது)

நஞ்சமோ — விடமா ?
இனி நான் உயிர்வாழ்வெனோ — உன்னைப் பிரிந்த பிறகு நான் உயிர் வாழவா போகிறேன்?,
என் ஆருயிர் — என் அரிய உயிரானது,
அஞ்சும் அஞ்சும் அஞ்சும் — நடுங்கும் நடுங்கும் நடுங்கும்.

**கருத்து**

நீ நாடாள வேண்டுமென்று தயரதன் முதலிற் கூறியது வஞ்சனைதானோ ? அல்லது என் உயிரை வாங்கும் நஞ்சுதானோ ? உன்னைப் பிரிந்து நான் உயிர் வாழவா ? என் உயிர் நடுங்குகிறதே என்று கோசலை புலம்பினாள்.

**விளக்கம்**

இராமனுக்கு அரசில்லை என்றவுடன் அவள் அஞ்சவில்லை ; காடேக வேண்டும் என்றதைக் கேட்டதும் துடிக்கிறாள். முதலில் நாடாளச் சொல்லிப் பின் காடாளச் சொன்னது முதலில் குளிர்ச்சியாக இருந்து பின்பு உயிரைக் குடிக்கும் நஞ்சு போலிருக்கிறதே என்று அஞ்சுகிறாள்.

அஞ்சும் அஞ்சும் அஞ்சும் என மும்முறை சொல்லப்பட்டது. அதற்குமேல் சொல்லக்கூடாது என்பது விதி.

**இலக்கணம்**

உனை—உன்னை என்பதன் இடைக்குறை.
வாழ்வெனோ—ஓகாரம் எதிர்மறை.
அஞ்சும் அஞ்சும்—அடுக்குத்தொடர்.
ஆருயிர்—பண்புத்தொகை.
ஆல்—அசைநிலை.

## 17. நீ தந்தைக்கிழைத்த குற்றந்தான் யாது என வினவுதல்

**அன்பிழைத்த..................................போலவே**

**சொற்பொருள்**

அன்பு இழைத்த - அன்புபொருந்திய,
மனத்து அரசற்கு — மனத்தையுடைய தயரதனுக்கு,
நீ என் பிழைத்தனை — நீ என்ன தவறிழைத்தாய் ?,
என்று நின்று—என்று கூறி நின்று
முன்பு இழைத்த வறுமையின் - முன்பு துயர்தந்த வறுமையினின்றும்,
முற்றினோர் - நீங்கியவர்,
பொன் பிழைக்க — (கிடைத்த அந்தப்) பொன் தவறிப்போக (அதனால்),
பொதிந்தனர்போல — மனம் பொறுமி அழுவாரைப்போல,
ஏங்கும் - ஏங்குவாள்.

### கருத்து

அரசனுக்கு நீ என்ன தவறிழைத்தாய்? என்று சொல்லி, வறுமையாளர் செல்வம் பெற்றுப் பின் இழந்தால் எவ்வாறு புலம்புவார்களோ அவ்வாறு புலம்பினுள்.

### விளக்கம்

அரசன் அன்பு காட்டும் மனத்தனுயிற்றே; அவனு இவ்வாறு சொல்வான்? இல்லை; இவன்தான் ஏதோ பிழை செய்திருக்க வேண்டும் என்றெண்ணி என் பிழைத்தனை? என்று கேட்கிறுள், அல்லது இப்படித் தண்டனை விதிக்கும்படி என்ன குற்றஞ் செய்தாய்; ஒன்றும் செய்யவில்லையே! என்று ஏங்குவதாகவும் கொள்ளலாம்.

முற்றினேர்—அத்துன்பத்தைக் கடைசிவரை கண்டு அனுபவித்தவர். அஃதாவது அதிலிருந்து விடுபட்டவர் என்பது கருத்து.

நெடுங்காலம் மகப்பேறின்றிப் பின் பெற்ற பிள்ளையைக் காட்டுக்கனுப்புதல் நெடுங்காலம் செல்வமில்லாதிருந்து பெற்று அதனை இழத்தலுக்கு ஒப்பாகும் என்று கூறுகின்றுர்.

### இலக்கணம்

ஏங்கும்—செய்யுமென்னும் வாய்பாட்டு வினை முற்று.
ஆல்—அசை நிலை.
முற்றினேர்—வினையாலணையும் பெயர்.

## 18. கோசலை கலங்குதல்

**அறமெனக்.................................கலங்கினுள்**

### சொற்பொருள்

அறம் எனக்கு இலையோ எனும் - எனக்குத் தருமம் துணை நிற்காதோ? என்பாள்,
தெய்வதங்காள் - தெய்வங்களே,
ஆவி நைந்து இற - என்னுயிர் வாடி அழியும்படி,
அடுத்தது என்-நேர்ந்தது என்ன காரணம்?
எனும் - என்று சொல்லுவாள்,
பிற உரைப்பது என் - வேறு சொல்லி ஆவதென்ன?
கன்று பிரிந்துழி - கன்று பிரிந்த போது,
கறவை ஒப்ப-(கலங்கும்) தாய்ப் பசுவைப் போல,
கரைந்து கலங்கினுள் - அழுது கலங்கினுள்.

### கருத்து

அறம் எனக்குத் துணை செய்யாதோ? தெய்வங்களே என் உயிர் அழியும்படி ஏன் செய்கிறீர்கள்? என்று பலவாருகக் கூறிக் கன்றைப் பிரிந்த பசுவைப் போலக் கலங்கினுள்.

### விளக்கம்

துயருறும் மகளிர் தருமத்தையும் தெய்வத்தையும் குறித்துப் பேசுவது இயல்பு. அதனால் கோசலையும் அவ்வாறே புலம்புகிறாள்.

இராமன் கன்றாகவும் கோசலை பசுவாகவும் பல இடங்களில் கூறப்படுகின்றனர்.

## 19. இராமன் கோசலையைத் தேற்றுதல்

**இத்திறத்தின்..............................என்றான்**

### சொற்பொருள்

இத்திறத்தின் - இவ்வகையாக,
இடர் உறுவாள் தனை - துன்பப்படுகின்ற கோசலையை,
கைத்தலத்தின் எடுத்து — தன் கைகளினால் தூக்கி,
அருங் கற்பினோய் — உயர்ந்த கற்பையுடைய தாயே,
மெய்திறத்து நம் வேந்தனை — சத்தியத்தில் நம்பிக்கையுடைய நம் அரசனை;
பொய் திறத்தினன் - பொய்யனாகு,
ஆக்குதியோ - ஆக்குகிறாயா ?
புகல் நீ - நீ சொல்,
என்றான் - என்று இராமன் கூறினான்.

### கருத்து

இவ்வாறு துயர்ப்படும் கோசலையைத் தூக்கி, 'தாயே நம் வேந்தன் சொல் தவறாதவர். நீ அவரைச் சொல் தவறியவராக ஆக்க நினைக்கின்றாயா ?' என்று இராமன் கூறினான்.

### விளக்கம்

கணவனைப் பொய்யனாக்குதல் கற்புடைய மகளிர்க்கு அழகன்று என்னும் குறிப்பை மனத்திற் கொண்டு 'கற்பினோய்' என அவளை விளிக்கின்றான்.

### இலக்கணம்

உறுவாள்—வினையாலணையும் பெயர்
அருங்கற்பு—பண்புத்தொகை.

## 20. இதனினும் பேறுண்டோ ?

**சிறந்த தம்பி..............................யாவதே**

### சொற்பொருள்

சிறந்த தம்பி - எல்லாவகையிலும் சிறந்தவனாகிய என் தம்பி பரதன்,
திரு உற - அரசாட்சியை அடைய,

எந்தையை - என் தந்தையாகிய தயரதனை,
மறந்தும் பொய் இலன் ஆக்கி - மறந்துங் கூடப் பொய்க்க மாட்டான் என்ற நிலையை உண்டாக்கி,
வனத்து இடை உறைந்து தீரும் - காட்டில் தங்கித் தீர்வதாகிய,
உறுதி பெற்றேன் - மனவுறுதியைக் கொண்டுளேன்,
பிறந்து யான் பெறும் - யான் பிறந்து அடைய வேண்டிய,
பேறு என்பது - பேறெனப் படுவது,
இதின் யாவது - இதை விடச் சிறந்தது யாதுளது?

கருத்து

தம்பி அரசு பெறத் தந்தையை மெய்யனாக்கி, நான் காட்டிற்குச் செல்வதென்று உறுதி பூண்டு விட்டேன். இதை விட நான் அடையத் தக்க பேறு என்ன இருக்கிறது? என்று கூறினான்.

விளக்கம்

தயரதன் தன்னை மறந்த நிலையில் மயக்க முற்றுக் கிடக்கின்றான். அந்த நிலையிலும் அவன் சொன்ன சொல்லைத் தவறவில்லை என்ற பெயரை அவனுக்கு உண்டாக்க வேண்டுமானால் நான் கட்டாயம் காடு செல்ல வேண்டும் என்பதை உணர்த்த 'மறந்தும் பொய்யிலன் ஆக்கி' என்றான்.

நான் மனத்திற் கொண்ட முடிவை எவராலும் மாற்ற முடியாது, மாற்றக் கூடாது என்பதை வற்புறுத்த 'உறைந்து தீரும் உறுதி பெற்றேன்' என்றான்.

இலக்கணம்

என்பதியாவது—என்பது + யாவது.
'உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும், யவ்வரின் இய்யாம்' என்ற விதிப்படி வந்தது.

## 21. தந்தை சொல்லைத் தட்டலாமா?

**விண்ணும்..............................என்றான்.**

சொற்பொருள்

விண்ணும் மண்ணும் - வானும், நிலமும்,
இ வேலையும் - இந்தக் கடலும்,
மற்றும் வேறு எண்ணும் - இன்னும் தீ, காற்று என்று சொல்லப்படுகின்றனவும், (ஆகிய)
பூதம் எலாம் - ஐம்பூதங்களும்,
அழிந்து ஏகினும் - அழிந்தொழிந்தாலும்,
அண்ணல் ஏவல் மறுக்க - தந்தையின் கட்டளையை மறுத்துரைக்க,
அடியனேற்கு ஒண்ணுமோ - அடியேனாகிய எனக்குப் பொருந்துமா? (பொருந்தாது, ஆதலால்)
இதற்கு உள் அழியேல் - இதன் பொருட்டு மனங்கலங்காதே,
என்றான் - என்று கூறித் தேற்றினான்.

### கருத்து

ஐம்பூதங்களால் இயன்ற இவ்வுலகமே அழிந்தாலும் தந்தை சொல்லை நான் தட்டலாமா? அதனால் தாயே மனம் வருந்தேல் என்று ஆறுதல் கூறினான்.

### இலக்கணம்

அண்ணல் ஏவல்—ஆறும் வேற்றுமைத் தொகை.
ஒண்ணுமோ—ஓகாரம் எதிர்மறை.
அழியேல் – முன்னிலை எதிர்மறை வினைமுற்று.
அழி+ஏல். அழி—பகுதி. ஏல்—விகுதி. விகுதியே எதிர் மறைப் பொருளை உணர்த்தி நின்றது.

## 22. கோசலை தன்னையும் அழைத்துச் செல்க எனல்

ஆகில் ஐய..................................என்றான்

### சொற்பொருள்

ஆகில்-அவ்வாறானால்,
ஐய மகனே,
அரசன் தன் ஆணையால் - அரசனுடைய கட்டளைப்படி,
ஏகல் என்பது-செல்லவேண்டாம் என்பதை,
யானும் உரைக்கிலேன் - நானும் சொல்லவில்லை,
போகின்-நீ காட்டிற்குச் செல்வதானால்,
சாகலா உயிர்-செத்துப்போகாத இந்த உயிரை,
தாங்க வல்லேனையும் - தாங்கிக் கொண்டிருக்கின்ற என்னையும்,
நின்னொடும் கொண்டனைபோக- உன்னுடன் அழைத்துக் கொண்டு செல்,
என்றாள் - என்று கோசலை கூறினாள்.

### கருத்து

'மைந்தனே! அரசன் ஏவலால் நீ போவதை நான் தடுத்துரைக்கவில்லை; நீ பிரிந்த பின்பு இந்த உயிரை என்னால் தாங்கிக் கொண்டிருக்க முடியாது. அதனால் என்னையும் உடன் கொண்டு செல்' என்றாள்.

### விளக்கம்

நீ காட்டுக்குப் போகிறாய் என்பதை அறிந்தவுடன் என் உயிர் செத்துத் தொலைந்திருக்கவேண்டும். ஆனால் அது தொலையவில்லை. தொலையாது நிற்கும் உயிரைத் தாங்கிக் கொண்டிருக்கும் ஆற்றல் என்பால் இல்லை என்பதை 'சாகலா உயிர் தாங்க வல்லேன்' என்று கூறுகின்றாள். வல்லேன் — வல்லமை உடையேன் அல்லேன் என எதிர்மறைப் பொருளை உணர்த்தி நின்றதாகவும் கொள்ளலாம், செல்லேன் என்பது போல.

அழைத்துச் செல் என்னாது 'கொண்டுபோ' என்றது நடைப் பிணமாக இருக்கின்ற அவள் நிலையை உணர்த்த.

### இலக்கணம்

ஏகல்—எதிர்மறை வியங்கோள் வினைமுற்று.
ஏகு+அல்.
என்பதியானும்—என்பது+யானும்.
உரைக்கிலேன்—தன்மை ஒருமை எதிர்மறை வினைமுற்று.
உரை+க்+கில்+ஏன். உரை—பகுதி, க்—சந்தி கில்—ஆற்றலிடைநிலை, ஏன்—விகுதி. விகுதியே எதிர்மறை உணர்த்திற்று.
சாகலா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
வல்லேன்—தன்மை ஒருமை வினைமுற்று.
வன்மை+ஏன்: வல்+ஏன்.
கொண்டனை—முற்றெச்சம்.
போகென்றாள்—போக+என்றாள். அகரம் தொகுத்தல் விகாரம்.

## 23. தயரதனுக்கு ஆறுதல் கூற இரு எனல்

**என்னை ......................................என்றான்**

### சொற்பொருள்

அன்னையே-தாயே,
என்னை நீங்கி-என்னைப் பிரிந்து,
இடர்கடல் வைகுறும்-துயரக் கடலுள் மூழ்கும்,
மன்னர் மன்னனை - அரசர்க்கரசனாகிய தயரதனை,
வற்புறுத்தாது - ஆற்றியிருக்கும்படி வற்புறுத்திக் கூறாது,
துன்னு கானம் - மரங்கள் செறிந்த காட்டில்,
உடன் படர - என்னுடன் தொடர்ந்து வர,
துணிவதே - துணிவு கொள்வதா?,
அறம் பார்க்கிலை ஆம் - மனைவிக்குரிய இல்லற நெறியை நீ எண்ணிப் பார்க்கவில்லை போலும்,
என்றான்-என்று கூறினான்.

### கருத்து

தாயே, என்னைப் பிரிந்து வாடும் தந்தைக்கு ஆறுதல் சொல்ல வேண்டியது உன்னுடைய கடமையாகும். அதனைச் செய்யாது என்னுடன் வரத் துணியலாமா? அறம் இன்னதெனக் கருதவில்லையா? என்று இராமன் கூறினான்.

### விளக்கம்

அறம்—கணவனுக்குத் துன்பம் வந்தபொழுது உடனிருந்து உதவுவது.

### இலக்கணம்

இடர்க் கடல்—உருவகம்
மன்னர் மன்னன்—நான்காம் வேற்றுமைத் தொகை.
துணிவதே-ஏ-வினாப்பொருளில் வந்தது.

## 24. பதினன்கு ஆண்டையும் பதினன்கு நாளாகக் கழித்து வருவேன் எனல்

**சித்தம்..........................................என்ருன்**

### சொற்பொருள்

சித்தம் நீ திகைக்கின்றது என் — நீ ஏன் மனங் கலங்குகின்ருய்?
தேவரும் — தேவர்களும்,
ஒத்தயாதவம் செய்து - பொருந்திய பெரிய தவத்தைச் செய்து,
உயர்ந்தார் — உயர்ந்தார்கள்,
யாண்டுகள் எத்தனைக்கு உள — எவ்வளவு ஆண்டுகள் இருக்கின்றன?
ஈண்டு இவை — இங்கே அந்த ஆண்டுகளாகிய,
பத்தும் நாலும் — பதினன்கும்,
பகல் அலவோ — எனக்கு நாட்கள் அல்லவா?
என்ருன் — என்று சொன்னன்.

### கருத்து

தேவரும் தவஞ் செய்தே உயர்வு பெற்ருர்; நான் காட்டில் வாழும் ஆண்டுகள் தான் எத்தனை? பதினன்கு ஆண்டுகளும் எனக்குப் பதினன்கு நாட்களே ஆகும்; ஆதலால் நீ கவலைப்படாதே என்ருன்.

### விளக்கம்

பதினன்கு ஆண்டுகள் வாழ்வதென்பது பெரிய காரியமா என்ன? நான் பதினன்கு நாட்களாகக் கருதிக் கழித்துவிட்டு வந்துவிடுவேன். மேலும் தவம் செய்வது நல்லதுதானே? நீ ஏன் மலைக்கிருய்? என்று தேற்றுகிருன்.

### இலக்கணம்

தேவரும்—உயர்வு சிறப்பும்மை.
அன்றே—அன்று, ஏ—அசை நிலைகள்.

## 25. முனிவரால் நன்மை விளையும் எனல்

**முன்னர்..........................................செய்தலே**

### சொற்பொருள்

முன்னர் - முன்பு ஒருமுறை,
கோசிகன் என்னும் — கோசிகன் என்னும் பெயருடைய,
முனிவரன் தன் அருள் — முனிவருடைய அருளால்,
தலை தாங்கிய விஞ்சையும்—நான் பெற்ற முதன்மையான வித்தைகளும்,
பின்னர் எய்திய பேறும்—அதன் பின் அடைந்த பேறும்,
பிழைத்தவோ — தவறுடையனவோ, (இல்லை)
இன்னம் அவர் ஏயின செய்தல்—இன்னும் அத்தகைய முனிவர்கள் ஏவியபணிகளைச்செய்வது,
நன்று—நன்றே **என்று கூறினன்.**

### கருத்து

முன்பு கோசிகனுடன் சென்றமையால் உயர்ந்த வித்தைகளையும் வேறு பல பேறுகளையும் பெற்றேன். இப்பொழுதும் காட்டிற்குச் சென்று அம்முனிவர்களுடைய ஏவலைக் கேட்பது நன்றேயாகும் என்று கூறினான்.

### விளக்கம்

முன்னமேயே காட்டிற்குச் சென்று எனக்குப் பழக்கம் இருக்கிறது. இஃது எனக்குப் புதுமையானதன்று. அதனால் நீ அஞ்ச வேண்டாம் என்று கூறுகின்றான்.

முனிவன் தந்த விஞ்சை: பலை, அதிபலை என்ற இரு மந்திரங்கள். பாலைநிலஞ் சுடாதிருக்கக் கோசிகன் இராம இலக்குவர்க்கு இம் மந்திரத்தை உபதேசித்தான்.

பின்னர் எய்திய பேறு: சீதையை மணம் புரிந்தது. காட்டிற்குச் செல்வதால் நன்மைகள் விளைகின்றனவே தவிரக் கேடில்லை. ஆதலால் நான் செல்வேன் என்று கூறினான்.

### இலக்கணம்

விஞ்சை—வித்தை என்பதன் திரிபு.

ஏயின—ஏவின என வரவேண்டும். இவ்வாறு வந்தது இலக்கணப் போலி. கோவில் கோயில் என வந்தாற் போல.

---

## ௬. மனோன்மணீயம்

## நாஞ்சில் நாட்டுவளம்

இது சீவக வழுதியின் மகளாகிய மனோன்மணியைக் கதைத் தலைவியாகக் கொண்டு புதிய முறையில் எழுதப்பட்ட செய்யுள் நாடக நூலாகும். இந்நூல் இனிய, எளிய நடையில் அமைந்துள்ளது. அங்கங்கே தத்துவங்களைப் பொருத்திக் காட்டியுள்ளார் ஆசிரியர். இந்நூலின் ஆசிரியர் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை ஆவார்கள். இங்குப் பாடமாக வந்துள்ள பகுதி இரண்டாம் அங்கம் மூதற் களத்தில் இருப்பது. குடிலன் நாஞ்சில் நாட்டு வளத்தைச் சீவக வழுதியிடம் கூறுவதாக அமைந்துள்ளது. நாஞ்சில் நாடு என்பது நாகர் கோயில் பகுதியாகும்.

### ஆசிரியரைப் பற்றி :

பெயர் : ராய்பகதூர் பெ. சுந்தரம்பிள்ளை.
தந்தை : பெருமாள்பிள்ளை.
தாய் : மாடத்தி அம்மையார்.
ஊர் : ஆலப்புழை.
கல்வி : எம். ஏ. பட்டம்.
காலம் : பிறப்பு 1885 பங்குனி 28. மறைவு : 1897 ஏப்ரல் 26.

இயற்றிய பிற நூல்கள் : நூற்றொகை விளக்கம், திருஞான சம்பந்தர் கால ஆராய்ச்சி முதலியன.

இவர் இளமையில் நாகப்பட்டினம் நாராயணசாமிப் பிள்ளையிடம் தமிழ்க் கல்வி பயின்றார். திருவனந்தபுரம் கல்லூரியில் B A. பட்டம் பெற்றார். திருநெல்வேலி உயர்நிலைப் பள்ளியில் தலைமை ஆசிரியராய் இருந்தார். அஃது இப்போது இந்துக் கல்லூரியாக விளங்குகிறது. திருநெல்வேலியில் இருக்கும்போது கோடக நல்லூர்ச் சுந்தர சுவாமிகளிடம் மாணவராக இருந்து தத்துவப்பாடம் பயின்றார். தம் நன்றியைப் புலப்படுத்த வேண்டி மனோன்மணீய நூலுள் தம் ஆசிரியர் பெயரையே சுந்தர முனிவர் எனக் குறிப்பிட்டுள்ளார். பின்னர், திருவனந்தபுரம் அரசர் கல்லூரியில் தத்துவப் பேராசிரியராகப் பணிபுரிந்தார். தம் 42-ஆம் வயதில் இயற்கை எய்தினார்.

## 1—5. வஞ்சிநா..............................வளரும்

### சொற்பொருள்

வஞ்சி நாடு அதனில் — சேர நாடாகிய வஞ்சி நாட்டில்,

நன்செய் நாடு என — நன்செய் நாடு என்னும் பெயருடன்,

செந்தமிழ் வழங்கும்—செந்தமிழ் மொழி பேசப்பட்டு வருகின்ற,

தேயம் ஒன்று உளது — தேசம் ஒன்று இருக்கிறது,

அதன் — அத்தேயத்தினுடைய,

அந்தம் இல் பெருவளம் — அளவில்லாத பெரிய வளத்தை,

யாரே அறியார் - யார்தான் அறிய மாட்டார்கள், (எல்லோருமே அறிவர்)

அங்கு மருதமும் நெய்தலும் — அங்கே மருதநில வளமும் நெய்தல் நிலவளமும்,

மயங்கி — தம்முள் ஒன்றுகலந்து,

எங்கும் — எல்லாவிடங்களிலும்,

புரை அறு செல்வம்—குற்றமற்ற செல்வம்,

நிலைபெற வளரும் — நிலைபெற்று நின்று மேலும் மேலும் வளர்ந்து கொண்டேயிருக்கும்.

### கருத்து

வஞ்சியில் நன்செய் நாடு என ஒரு பகுதியுண்டு; அங்குத் தமிழ் மொழியே வழங்கும்; அதன் வளங்களை யாவரும் அறிவர். மருத வளமும் நெய்தல் வளமும் கலந்திருப்பதால் செல்வம் மேலும் மேலும் வளர்ந்து கொண்டேயிருக்கும்.

### விளக்கம்

நன்செய் நாடு இக்காலத்து நாஞ்சி நாடு நாஞ்ச நாடு என்று வழங்கப்படுகிறது. அன்று அது சேரநாட்டின் எல்லையாக இருந்தது.

வயல் வளமும் கடல் வளமும் மிகுந்திருப்பதால் செல்வம் வளர்கிறது.

## 6—10. மழலைவண்.......................விளைக்கும்

### சொற்பொருள்

மழலை வண்டானம் — இளஞ் சொல்லையுடைய நாரை,
புலர் மீன் கவர-உலர்த்தியிருந்த மீனை (கருவாட்டை)க் கவர,
நுளைச்சியர் - நெய்தல் நிலப் பெண்கள்,
ஓம்புபு—அம்மீனைக் காத்து,
எறிகுழை-(அந்நாரைகளின் மேல்) வீசி எறிந்த காதணி,
தேன் பொழி - தேனைப் பொழி கின்ற,
புன்னை நுண் தாதால் - புன்னை யின் நுண்ணிய மகரந்தப் பொடியால்,
பொன் நிறம் பெற்ற - (தன் கரு நிறம் மாறிப்) பொன்னிற மாக விளங்குகின்ற,
எருமையின் புறத்து இருந்து — எருமையின் முதுகிலேயிருந்து,
இரும் சிறை புலர்த்தும்—பெரிய சிறகுகளை உலர்த்துகின்ற,
அலைகடல் காக்கைக்கு — அலை வீசும் கடல்வாழ் காகத்திற்கு,
அலக்கண் விளைக்கும்—துன்பத் தையுண்டாக்கும்.

### கருத்து

உலர்த்தியிருக்கும் மீனைக் கவர வரும் வண்டானத்தின் மேல் நுளைச்சியர் தம் காதணியை எறிய அஃது அங்கே எருமை மீதிருந்து சிறகை உலர்த்திக் கொண்டிருக்கும் காக்கைக்குத் துயரந் தந்தது.

### விளக்கம்

இதில் திணைமயக்கம் கூறப்படுகிறது. நெய்தல்நிலத்தில் நுளைச்சியர் மீன் உலர்த்தியிருக்கின்றனர். அப்பொழுது நாரைகள் அதைக்கவர வருகின்றன. அம் மகளிர் தம் செல்வச் செருக்கால் காதணியை அவற்றின் மேல் எறிகிறார்கள். அவ்வழியே ஓர் எருமை வருகிறது. அதன் மேல் கடற்காகம் ஒன்று அமர்ந்திருக்கிறது. அந்தக் காகம் பொன்னிறத்தோடு விளங்குகிறது; காரணம் புன்னை மர நிழலிலே உறங்கிக் கொண்டிருக்கும் போது அம்மரத்தின் மகரந்தப் பொடி பட்டுப் பொன்னிறமாயிற்று. அந்தக் காக்கையின் மேல் பட்டு விடுகிறது நுளைச்சியர் எறிந்த குழை. அதனால் அடிபட்ட காக்கை துன்பப் படுகிறது.

நாரையும் எருமையும் மருத நிலத்துக்குரியன. கடற்காகமும் மீனும் நெய்தலுக்குரியன. இவ்விரு திணைக்கும் உரிய பொருள்களும் கலந்து வந்தமையால் இது திணை மயக்கம்.

### இலக்கணம்

புலர் மீன்—**வினைத்தொகை.**
ஓம்புபு—**செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.**
அலைகடல்—**வினைத்தொகை.**

## 11—13. கேதகை.................................தாது

### சொற்பொருள்

கேதகை மலர் நிழல் - தாழை மலரின் நிழலை,
தாரா - தாராக் குருகு,
இனம் எனக் கருதி - தன் பெட்டை என்று கருதிக் கொண்டு,
தழுவிட சார்தர - தழுவுவதற்காக அருகில் அணைய, (அதனைக் கண்டு)
சிரித்த ஆம்பல் வாய் - நகைத்த ஆம்பலினது வாயிலே,
கோங்கு அலர் தாது - கோங்க மரமானது தன் மலரிலுள்ள பொடியை,
கொட்டிடும் - நிறையக் கொட்டும்.

### கருத்து

தாழை மலர் நிழலின் அருகே தாரா நெருங்கியது. அருகில் ஆம்பல் மலர் மலந்திருந்தன. அதன் அண்மையில் நின்ற கோங்க மரத்தின் மலர்களிலிருந்து மகரந்தப் பொடிகள் சிதறி ஆம்பல் மேல் விழுந்தன.

### விளக்கம்

தாழை மலரின் நிழலைத் தாரா பார்த்தது. அதன் வடிவம் தாராவைப் போலவே யிருந்தது. அதைப் பெட்டைத் தாரா என்று எண்ணிக் கொண்டு அருகில் சென்றது. இதைப் பார்த்துக் கொண்டேயிருந்த ஆம்பல், தாராவின் பேதைமையைக் கருதி வாய் திறந்து சிரித்தது அப்பொழுது கோங்க மரம் தன் மலர்த் தாதுகளை நிறையக் கொட்டி ஆம்பலின் வாயை அடைத்து விட்டது.

தாழை நெய்தலுக்குரியது. தாரா மருத நிலத்துக்குரியது. இவ்விரண்டுங் கலந்து வந்த திணை மயக்கம்.

## 14—16. வால்வளை...................புதைக்கும்

### சொற்பொருள்

வால் வளை - வெண்ணிறச் சங்கானது,
சூல் உளைந்து ஈன்ற - கருவிருந்து வருந்தி ஈன்றெடுத்த,
வெண் முத்தம் - வெள்ளிய முத்துக்களை,
ஓதிமம் குடம்பை என்று - அன்னத்தின் முட்டை யென்று,
உன்னுபு - நினைத்து,
பருந்தினம் - பருந்துக் கூட்டங்கள்,
காலால் கவர்ந்து சென்று - தம் கால்களினால் பற்றிக் கவர்ந்து கொண்டு சென்று,
அடம்பு இடை புதைக்கும் - நெய்தல் நிலத்தில் படரும் அடம்புக் கொடிகளுக்கிடையே மறைத்து வைக்கும்.

### கருத்து

வெள்ளிய சங்குகள் ஈன்ற வெண்முத்துக்களை அன்னத்தின் முட்டை யென்று கருதிப் பருந்துகள் கவர்ந்து சென்று அடம்புக் கொடிகளினூடே மறைத்து வைக்கும்.

### இலக்கணம்

வால்வளை—பண்புத்தொகை.
வெண்முத்தம்—பண்புத்தொகை.
ஓதிமக் குடம்பை—ஆறும் வேற்றுமைத் தொகை.
உன்னுபு—செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

## 17—19. கரும்படு........................துளிக்கும்

### சொற்பொருள்

கரும்பு அடு சாலையின் - கருப்பஞ்சாறு காய்ச்சுகின்ற சாலையிலிருந்து எழும்,
பெரும் புகை மண்ட - மிகுந்த புகையானது செறிதலால்,
கூம்பிய நெய்தல் - வாடிய நெய்தலினுடைய,
பூ தளிர் குளிர - பூவின் தளிர்கள் குளிரும்படியாக,
மேய்ந்து அகல் காரா - மேய்ந்து திரும்பும் எருமைகள்,
தீம்பால் துளிக்கும் - இனிய பாலைச் சிந்தும்.

### கருத்து

கரும்பாலையிலிருந்து கிளம்பிய புகை நெய்தல் மலர்களை வாடச் செய்தது. வாடிய அம் மலர்கள் குளிரும்படி எருமைகள் பாலைச் சொரியும்.

### விளக்கம்

கரும்பு மருதத்துக்குரியது. நெய்தல் மலர் நெய்தலுக்குரியது. இவ்விரண்டுங் கலந்து வந்த திணைமயக்கம்.

நன்றாக மேய்ந்து வந்த எருமையானதால் தானே மடி சுரந்து பாலைச் சிந்துகிறது.

### இலக்கணம்

அடுசாலை—வினைத்தொகை.
தீம்பால்—பண்புத்தொகை.
துளிக்கும்—செய்யுமென்னுமுற்று.
மேய்ந்தகல்—மேய்ந்து+அகல்.

## 20—22. அலமுகம்........................ஒளிக்கும்

### சொற்பொருள்

அலமுகம் தாக்குழி - கலப்பையின் நுனி தாக்குதலினால்,
அலமரும் ஆமை - வருந்துகின்ற ஆமை,
நுளைச்சியர் - நெய்தல் நிலப் பெண்கள்,
கணவரோடு - தம் கணவன்மாருடன்,
இழைத்திடும் ஊடலில் - நிகழ்த்திய ஊடலினால்,
வழித்து ஏறி - தமது மார்பகங்களிலிருந்து வழித்தெறிந்த,
குங்குமம் சேற்றிடை - குங்குமக் குழம்பிடையே,
ஒளிக்கும் - ஓடி மறைந்து கொள்ளும்.

### கருத்து

கலப்பை நுனி தாக்க அதனால் வருந்திய ஆமை, ஊடல் கொண்ட நுளைச்சியர் வழித்தெறிந்த குங்குமக் குழம்பிலே மறைந்து கொள்ளும்.

### இலக்கணம்

அலமுகம்—ஆறும் வேற்றுமைத் தொகை.
அலமரும்—செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்.

## 23—26. பூஞ்சினை ............................ பிணிப்பர்

### சொற்பொருள்

பூஞ்சினை மருதிடை - அழகிய கிளைகளையுடைய மருத மரத்தில்,
வாழ்ந்திடும் அன்றில் - வாழும் அன்றிற் பறவைகள்,
நளிமீன் கோள் பறை - பெரிய மீனைக் கொள்வதற்காக அடிக்கப்படும் பறையின்,
விளி கேட்டு உறங்கா - ஒலியைக் கேட்டு உறங்கமாட்டா.
வேயென வளர்ந்த - மூங்கில் போல வளர்ந்துள்ள,
சாய்குலை சாலியில் - சாய்ந்த குலைகளையுடைய நெற்பயிரின் அடியிலே,
உப்பு ஆர் பஃறி-உப்பு நிறைந்த ஓடங்களின்,
ஒரு நிரை - வரிசையை,
பிணிப்பர் - கப்பற் கயிற்றால் கட்டி வைப்பர்.

### கருத்து

மீன் கொள்ளும் பரதவர் அடிக்கும் பறையொலிகேட்டு மருத மரங்களில் வாழும் அன்றில்கள் உறங்கா. உப்பேற்றிய ஓடங்கள் நெற் பயிரின் அடியிலே கட்டப்பட்டிருக்கும்.

### விளக்கம்

அன்றில் ஒன்றையொன்று பிரியாது இணைந்து வாழும் ஒரு வகைப் பறவை.

கரையோரத்தில் நிற்கும் ஓடங்கள் காற்றால் அடித்துக் கொண்டு செல்லாமல் இருத்தற் பொருட்டுக் கரையில் இருக்கும் மரங்களில் இழுத்துக் கட்டுவர். இங்கே உப்பேற்றிய ஓடங்களை அருகிலிருக்கும் நெற்பயிரின் அடியிலே கட்டுகிறார்கள். அந்த அளவிற்குப் பயிர்கள் மூங்கில்களைப்போலத் தூறுகட்டி வளர்ந்திருக்கின்றன.

### இலக்கணம்

நளிமீன்—உரிச்சொற்றொடர்.
உறங்கா—எதிர்மறைப் படர்க்கைப் பன்மை வினைமுற்று.
சாய்குலை—வினைத்தொகை.

## 27—31. இப்பெருந்.........................சாரல்

### சொற்பொருள்

இப்பெரும் தேயத்து எங்கும்- இந்தப் பெருமைபொருந்திய நாஞ்சில் நாடெங்கும்,
இரா பகல் - இரவும் பகலும்,
தப்பினும் - வருதல் ஒழிந்தாலும் மாறி வந்தாலும்,
மாரி தன் கடன் - மழை தன்னுடைய கடமை,
தவறு - தவறமாட்டா,
கொண்மூ என்னும் - மேகம் என்று சொல்லக்கூடிய,
கொள் கலம் - நீர் என்னும் பொருளைக் கொண்ட பாண்டம்,
கொண்ட அமிழ்தினை - தான் கொண்டுள்ள அமிழ்தம் போன்ற நீரை,
அவ்வயின் கவிழ்த்தபின் - அவ்விடத்துக் கவிழ்த்திய பிறகு,
செல்புழி - செல்லும்பொழுது,
வடியும் நீரே - சிந்தி வழியும் அந்தச் சிறிய நீரே,
நம் மிடிதீர் சாரல் - நம்முடைய பாண்டிய நாட்டின் வறுமையைப் போக்குகின்ற மழைச் சாரலாகும்.

### கருத்து

இந் நாட்டில் இரவும் பகலும் மாறிவந்தாலும் அல்லது வராது ஒழிந்தாலும் மழை பெய்தல் மட்டும் தவறாது. மேகம் அங்கு மழையைக் கொட்டி விட்டுத் திரும்பும்பொழுது சிந்தும் நீரே நம் வறுமையைப் போக்கும் மழையாகும்.

### விளக்கம்

மாரி தன் கடன் தவறு என்பது மழை அவ்வப் பருவங்களில் காலம் அறிந்து தப்பாமல் பெய்வது.

மேகத்தை ஒரு பாண்டமாக உருவகம் செய்கிறார். அதனுள் நிறைய அமிழ்தம் இருக்கிறதாம். அந்த அமிழ்தத்தை நாஞ்சில் நாட்டிலே அப்படியே கவிழ்த்துவிடுகிறதாம். அந்தப் பாண்டத்தின் வாயோரங்களில் கொஞ்சம் கொஞ்சம் வழியத்தானே செய்யும்? அவ்வாறு வழியும் நீர்தான் பாண்டிய நாட்டின் வறுமையைத் தீர்க்கிறதாம். வாயோரத்தில் வழியும் நீரே ஒருநாட்டின் வறுமையைப் போக்குகிற தென்றால், பாத்திரத்திலிருந்த முழுவதையும் கொட்டிக் கொண்ட நாஞ்சில் நாட்டின் வளம் கூறவும் வேண்டுமோ?

நம் மிடி— இதில் நம் என்பது குடிலன் கூறுவது. அவன் பாண்டிய நாட்டான் ஆதலின் பாண்டிய நாட்டின் வறுமை எனப் பொருள் கூறப்பட்டது.

### இலக்கணம்

இராப்பகல்—உம்மைத்தொகை.
தப்பினும்—உம்மை எதிர்மறை.
கொள்கலம்—வினைத்தொகை.
மிடிதீர்—இரண்டாம் வேற்றுமைத் தொகை.
தீர் சாரல்—வினைத்தொகை.

## 32—35. நன்னீர்.....................கரையொருகால்

### சொற்பொருள்

நன்னீர்ப் பெருக்கும்-நல்ல நீரையுடைய ஆற்றின் வெள்ளப் பெருக்கும்,
முந்நீர் நீத்தமும்-கடலின் வெள்ளமும்,
எய்யாது-இடைவிடாது,
என்றும்-எப்பொழுதும்,
எதிர்த்திடும் பிணக்கில்-எதிர்த்து மோதுகின்ற போரில்,
நடுகடல் நன்னீர் -நடுக்கடலிலே இருக்கும் நீர்,
ஒருகால் சுவைத்திடும் - ஒவ்வொரு சமயம் இனிய சுவையுடையதாக இருக்கும்,
ஒருகால்-மற்றொரு சமயம்,
வயல்கரை-வயலின் கரையருகில்
மரக்கலம் வந்திடும் - மரக்கலங்கள் ஓடிவரும்.

### கருத்து

ஆற்று வெள்ளமும் கடல் நீரும் இடைவிடாது மோதிக் கொண்டிருப்பதால் கடல் நீர் ஒரு சமயம் இனிக்கும்; ஒரு சமயம் மரக்கலம் வயலுக்கருகில் வரும்.

### விளக்கம்

ஆற்று வெள்ளம் வேகமாகக் கடலுக்குள் பாய்கிறது பாயும் வேகத்தில் கடலின் நடுவரையில் செல்கிறது. அப்போது அங்குள்ள நீர் இனிமையாக இருக்கிறது. கடலும் எதிர்த்து அலை வீசுகிறது. அப்போது கடல்நீர் ஆற்றுக்குள் செல்லும். அது செல்லும் வேகத்தில் தன்மேல் மிதக்கும் படகுகளை இழுத்துக்கொண்டு ஆற்றங்கரையில் உள்ள வயற்கரைகள்வரை சென்று மீள்கிறது.

ஆறு கடலொடு கலக்குமிடத்தில், ஆற்றுநீர் கடலுக்குள் பாய்வதையும் கடல்நீர் எதிர்த்து ஆற்றுக்குள் செல்வதையும் காணலாம்.

ஆறு, வயல் மருதத்துக்குரியன; கடல், கலம் நெய்தற்குரியன இவை மயங்கிவந்த திணைமயக்கம்.

முந்நீர்——கடல். ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் மூன்று நீர்மை (தன்மை) களையுடையது என்று பொருள். சிலர் ஆற்று நீர், ஊற்றுநீர், வேற்றுநீர் என்னும் மூன்று நீரையுடையது என்றுஞ் சொல்வர்.

நீத்தம்——நீந்தப்படுவது; நீந்து+அம்——நீத்தம். அம்——செயப்படு பொருள்.

### இலக்கணம்

**நன்னீர்——பண்புத்தொகை.** நன்மை+நீர்.
**வயற்கரை——ஆறும் வேற்றுமைத் தொகை.**
முந்நீர்——**பண்புத்தொகை.** மூன்று+நீர்.

## 36—38. வாய்தலை.........................ஒருசார்

### சொற்பொருள்

அந்நாட்டிடை ஒருசார் - அந் நாஞ்சில் நாட்டின் ஒருபுறத்தில்,
வாய்த்தலை விம்மிய - கால்வாய்களிடத்தே விம்மி ஏறிய,
மதகு பாய் வெள்ளம் - மதகில் பாய்கின்ற வெள்ளமானது,
ஓ இறந்து - மதகு பலகையைக் கடந்து,
ஓம் என ஒலிக்க-ஓம் என்ற ஒலியை எழுப்ப.
பிரணவ நாதமே தொனிக்கும்- பிரணவ மந்திரத்தின் ஒலியே கேட்கும்.

### கருத்து

கால்வாயில் மிக்குவரும் வெள்ளம் மதகு பலகையை மோதிக் கடந்து செல்லும் இரைச்சல் ஓம் என்ற பிரணவ மந்திர ஒலி போலவே கேட்கும்.

### விளக்கம்

வெள்ளம் மிகுதியாகப் பாய்கின்ற பகுதிகளில் அந் நீர்ப் போக்கில் ஓ வென்ற இரைச்சலைக் கேட்கலாம். அவ்வொலி ஓம் என்ற ஒலிபோலக் கேட்பதால் எங்கும் பிரணவநாதம் தொனிக்கிறது ' என்கிறார். ஓ என்பது மதகு பலகை.

### இலக்கணம்

பாய் வெள்ளம்—வினைத்தொகை.

## 39—52. நறுமலர்.....................ஆர்தரும் ஒருசார்

### சொற்பொருள்

ஒருசார் – மற்றொரு பக்கம்,
நறுமலர் குவளையும் - மணம் பொருந்திய மலர்களையுடைய குவளைக் கொடிகளும்,
நானிறத்து இரணமும் - நானு விதமான நிறங்களையுடைய உப்பளங்களும்,
படர்தரும் பழனம் - படர்ந்துள்ள வயலாகிய,
கம்பளம் பரப்பி - கம்பளத்தை விரித்து,
தாமரை தூமுகை - தாமரையின் தூய்மையான மொட்டுக்களை,
தூமம் இல் விளக்கா - புகையில்லாத விளக்காகக் கொண்டு,
நிலவு ஒளி முத்தும் - நிலாவொளியை வீசுகின்ற வெண்முத்துக்களையும்,
கவடியும் – சோவிகளையும்,
பணம்ஆ - பணங்களாகக் கொண்டு,
அலவன் பல விரல் - நண்டு தனது பல விரல்களினாலும்,
ஆய்ந்து எண்ண – வரவு செலவு பார்த்து அவற்றை நோட்டம் பார்த்து எண்ணவும்,
துகிர்கால் அன்னமும் – பவழம் போன்ற கால்களையுடைய அன்னமும்,
புகர் கால் கொக்கும் – தவிட்டு நிறக் கால்களையுடைய கொக்கும்,

செம் கண் போத்தும் - சிவந்த கண்களையுடைய செம்போத்தும்,
கம்புள் கோழியும் - சம்பங் கோழியும்,
கனைகுரல் நாரையும் - உரத்த குரலையுடைய நாரையும்,
சினம் மிகு காடையும் - தம் மினத்தையே சினந்து பார்க்கின்ற காடையும்,
பொய்யாப் புள்ளும் - பொய்யாப்புள் என்ற பறவையும்,
உள்ளான் குருகும் - மீன்கொத்திப் பறவையும்,
என்று இவை பலவும் - என்றிவை போன்ற பல பறவைகளும்,
எண் இல குழீஇ - அளவில்லாதனவாகக் கூடியிருந்து,
சிரம் சிறிது அசைத்தும் - தலையைச் சிறிது ஆட்டியும்,
சிறகை அடித்தும் - சிறகுகளை அடித்தும்,
அந்தி அங்காடி சந்தம் காட்டி - மாலைவேளையில் கூடும் கடைத்தெருவின் தோற்றத்தையும் இரைச்சலையும் போல,
தம் நம் - தங்கள் தங்களுடைய,
குழூஉ குரல்தமை - கூட்டங்களுக்குரிய குரல்களை,
விரித்து எழுப்பும் - பரவும்படி எழுப்புகின்ற
பேர் ஒலி ஒன்றுமே - பேரோசை மட்டும்,
ஆர் தரும் - நிறையும்.

## கருத்து

வயல்களைக் கம்பளமாகக் கொண்டு, தாமரை மொட்டுக்களைப் புகையில்லாத விளக்குக்களாகக் கொண்டு முத்துக்களையும் சோவிகளையும் பணமாகக் கொண்டு, நண்டுகள் அவற்றை எண்ணிப் பார்க்கவும், அன்னம், கொக்கு, செம்போத்து, சம்பங்கோழி, நாரை, காடை, பொய்யாப்புள் ,மீன்கொத்தி இவைபோன்ற பறவைகளும் கூடியிருந்து தலையசைத்தும் சிறகடித்தும் மாலை வேளையிற் கூடும் கடைத்தெரு என்றெண்ணும்படியாக ஒலியெழுப்பின.

## விளக்கம்

இப்பகுதியில் கடைத்தெருவாக உருவஞ் செய்திருப்பது படித்தின்புறத்தக்கது

குவளைமலர்க் கொடிகளும் பலநிற உப்பளங்களும் பொருந்திய நிலப்பகுதி பல்வகை நிறங்களைக்கொண்ட இரத்தினக் கம்பளம் போல விளங்குகிறது.

எல்லாக் கடைத்தெருக்களிலும் உள்ள விளக்குக்கள் புகையுடையனவே. இங்கேவுள்ள விளக்கோ புகையில்லாதது. தாமரை மொட்டு வடிவம் பழங்கால விளக்கை நினைவூட்டும்.

சந்தம்—ஒலி, அழகு என்னும் இருபொருளையும் இங்கே குறிக்கிறது

குழூஉக்குரல்—கூட்டமாகிய குரல். வணிகர்கள் தங்களுக்குள் வெளிப்படையாகப் பேசார் ; குழூஉக்குறியால் பேசுவதியல்பு. அவ்வியல்பையும் குழூஉக்குரல் என்னுஞ் சொல்லால் குறிப்பிடும் நயம் அறிந்து இன்புறற்பாலது.

### இலக்கணம்

விளக்கா, பணமா—விளக்காக, பணமாக என்பவற்றின் ககரம் தொக்கது தொகுத்தல் விகாரம்.
துகிர்க்கால்—உவமைத்தொகை.
கனைகுரல்—வினைத்தொகை.
குழீஇ—இசைநிறையளபெடை. சொல்லிசையளபெடை எனவும் சொல்வர்.
குழூஉக்குரல்—இன்னிசையளபெடை.
பேரொலி—பண்புத்தொகை. பெருமை+ஒலி.

# VI பல்சுவை

## அ. 1. புறநானூறு

பல வகையான சுவைகளையுடைய பாடல்கள் எனப் பொருள் படும். புறநானூறு, தனிப்பாடல் திரட்டு, ஈங்கோய் எழுபது, திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ், மலரும் மாலையும், தேவாரம், திருவாசகம், திருவாய் மொழி முதலிய பல நூல்களிலிருந்து பல சுவைப் பாடல்கள் எடுத்து இங்கே தரப்பட்டுள்ளன.

நின்னயந்துறைநர்க்கும் என்று தொடங்கும் பாடல் புறநானூற்றிலிருந்து எடுக்கப்பட்டது. புறநானூற்றைப் பற்றிய குறிப்பு முன்பு தரப்பட்டுள்ளது. இப்பாடல் பெருஞ்சித்திரனுர் என்ற புலவர் குமணனைப் பாடி, அவனிடம் பரிசில் பெற்றுக் கொணர்ந்து தன் மனையாளிடம் கூறியது.

இச் செய்யுள் பாடாண்டிணையாகும். துறை பரிசிற்றுறையாகும்.

பாடாண்டிணையாவது பாடப்படும் ஆண் மகனுடைய ஒழுகலாற்றைப் புகழ்ந்து பாடுவது. அஃதாவது அவனுடைய கொடை, வீரம், புகழ் முதலியனவற்றைப் புகழ்ந்து பாடுவது. பாடு+ஆண்+திணை.

பரிசிற்றுறையாவது வள்ளல் முன்னே பரிசிலர் தாம் கருதிய பேறு இஃதெனச் சொல்லுதல். இங்கே புலவர் தாம் பெற்று வந்த பரிசிலைப் பயன் படுத்தும் முறைகளைத் தம் மனைவியிடம் கூறுவதாக வந்துள்ளது. ஆயினும் அப்பரிசிலைப் பற்றிக் கூறுவதால் இதுவும் அத்துறையே யாகும்.

### நின்னயந்து.........................................வளனே

#### சொற்பொருள்

மனை கிழவோய் - எனது மனைக்கு உரியவளே,
பழம் தூங்கு முதிரத்து கிழவன்- பலாப்பழம் முதலியன நிறையத் தொங்கும் முதிரமலைக்குத் தலைவனாகிய,
திருந்து வேல் குமணன் - திருந்திய வேலையுடைய குமணன்,

இப்பாட்டு, பொதுவியல் திணையாகும். **பொதுவியலாவது** எல்லாத் திணைகட்கும் பொதுவான இலக்கணங் கூறுவது.

துறை: பொருண்மொழிக் காஞ்சி. பெரியோர், உயிர்க்கு இம்மை மறுமைகளில் நன்மை தருவதாகத் தெளிந்த பொருளைக் கூறுவது **பொருள்மொழிக் காஞ்சி** எனப்படும்.

**உற்றுழி உதவியும்......................அவன்கட்படுமே**

**சொற்பொருள்**

பிறப்பு ஓரன்ன—பிறப்பு ஒரே தன்மையாகிய,
உடன் வயிற்றுள்ளும்—ஒரு வயிற்றில் பிறந்தவருள்ளும்,
சிறப்பின் பாலால் — (கல்விச்) சிறப்பினால்,
தாயும் மனம் திரியும்—பெற்ற தாயும் மனம் வேறுபடுவாள்,
ஒருகுடிப் பிறந்த — ஒரே குடும்பத்திற் பிறந்த,
பல்லோருள்ளும்—பலருள்ளும்,
மூத்தோன் வருக என்னாது—மூத்தவன் வருக என்று அவனை அழைக்காமல்,
அவருள்—அக்குடியிற்பிறந்த பலருள்ளும்,
அறிவுடையோன் ஆறு— அறிவுடையவன் காட்டும் நெறியிலே,
அரசும் செல்லும் — அரசனும் செல்லுவான்,
வேற்றுமை தெரிந்த—வேறுபாடுகளைக் கொண்ட,
நாற்பாலுள்ளும்- நான்குவகைப் பிரிவினுள்ளும்,
கீழ்ப்பால் ஒருவன் கற்பின் — கீழ்க் குலத்தில் பிறந்த ஒருவன் கல்வி கற்றால்,
மேல்பால் ஒருவனும் — மேற் குலத்தில் பிறந்தவனாக இருப்பினும் (அவன்),
அவன்கண் படும்—(இவன் கீழ்க் குலத்தான் என்று கருதாது கல்வியின் காரணமாக) அவனிடத்துச் சென்று வழிபட்டு நிற்பான், (ஆதலால்)
உற்ற உழி உதவியும் — ஆசிரியர்க்கு ஒரு துன்பம் நேரின் அதனை நீக்குதற்கு உதவிசெய்தும்,
உறு பொருள் கொடுத்தும் — மிகுந்த பொருளைக் கொடுத்தும்,
பிற்றை நிலை முனியாது—ஆசிரியர்க்கு வழிபாடு செய்தலில் வெறுப்புக்கொள்ளாது,
கற்றல் நன்று - கல்வியைக் கற்றுக் கொள்வது ஒருவனுக்கு அழகாகும்.

**கருத்து**

பெற்ற தாயும் தான் பெற்ற பல மக்களுள் கல்வியுடையானிடத்தே தனியன்பு செலுத்துவாள். அரசனும் ஒரு குடியில் பிறந்த பலருள்ளும் வயதுப் பெருமை பாராட்டி மூத்தவனை விரும்பாது, அறிவுப் பெருமை பாராட்டி அறிவுடையவனையே விரும்பி அவன் வழிச் செல்லுவான்; பிறப்பு வேறுபாடும் கல்வியினால் ஒழியும்; ஆதலால் ஒருவன் ஆசிரியர் துயர் நீங்க உதவியும், மிகுந்த பொருள் கொடுத்தும், வழிபாடு செய்தும் கற்க வேண்டும்.

நல்கிய வளன் - கொடுத்த செல்வத்தை,
நின் நயந்து உறைநர்க்கும் — நின்னை விரும்பி நின் சார்வாக உள்ள மகளிர்க்கும்,
நீ நயந்து உறைநர்க்கும் - நீ அன்பு செய்து ஒழுகும் மகளிர்க்கும்,
பல் மாண் கற்பின் - பல குணங்களாலும் மாட்சிமைப் பட்ட கற்பினையுடைய,
நின் கிளை முதலோர்க்கும் - நின் சுற்றத்துள் மூத்த மகளிர்க்கும்,
கடும்பின் கடும்பசி தீர - நமது சுற்றத்தின் கொடிய பசி நீங்கும் படி,
நின் நெடும் குறி எதிர்ப்பை - நினக்கு நெடு நாட்களாகக் குறித்த எதிர்ப்பை,
நல்கியோர்க்கும் - கொடுத்துதவிய மகளிர்க்கும்,
இன்னோர்க்கு என்னது-(மற்றும்) இப்படிப் பட்ட தன்மையுடையவர் என்று கருதாமல்,
என்னொடும் சூழாது - என்னையும் கலந்து ஆலோசிக்காமல்,
வல்லாங்கு வாழ்த்தும் என்னது - இனிக் கவலையின்றி நன்கு வாழக் கடவோம் என்று கருதாமல்,
நீயும் எல்லோர்க்கும் கொடு — நீயும் யாவர்க்கும் வழங்குவாயாக.

### கருத்து

என் மனைக்குரியவளே! வள்ளல் குமணன் வாரி வழங்கிய செல்வத்தை உனக்கு வேண்டியவர்கட்கும், நமக்கு உதவியவர்கட்கும் மற்றவர்கட்கும் வழங்குவாயாக. என்னைக் கேளாமல், நாளைக்கு வேண்டு மென்று கருதாமல் எல்லோர்க்கும் வழங்குவாயாக.

### விளக்கம்

இப்பாடல் புலவர் பெருஞ்சித்திரனாருடைய விரிந்த உள்ளத்தையும் அவர் மனப் பண்பிற்கேற்ப மனைவி யமைந்ததையும் அழகுற விளக்குகிறது.

புலவர் வறுமையில் வாடி வதங்கியவர்; அதுவும் பல நாள் குடும்பத்தோடு பட்டினி கிடந்தவர். இந்நிலையைக் குமணனிடம் கூறிப் பரிசில் பெற்று வந்தார். அப்பெரும் பரிசிலைப் பல நாள் வைத்துக் கொண்டு இன்பமாகக் காலங் கழித்திருக்கலாம். ஆனால் புலவர் உள்ளம் அதை விரும்ப வில்லை. எல்லோர்க்கும் வாரி வாரி வழங்கு என்று கூறுகின்றார். இதனால் அவர் பொருளைப் பெரிதாகக் கருதாதவர் என்பதும் ஈந்து மகிழும் பேருள்ளம் படைத்தவர் என்பதும் புலனாகின்றது.

அவர் மனைவியாரும் இவர் உளப் பாங்கிற்கேற்ப நடக்கும் இயல்பினராக இருத்தலினால், இப்படி யிப்படி வழங்கு எனக் கூறுகின்றார். மாறாக இருப்பின் எல்லோர்க்கும் வழங்கு என்று கூற முடியாதல்லவா?

இவருடைய மனைவியால் அன்பு செய்யப்பட்ட மகளிரும் அவ்வம்மையாரிடம் அன்பு காட்டுவோரும் என இருவகையினர் உளர். அவ்விருவகை மகளிர்க்கும் வழங்குக என்கின்றார்.

குறியெதிர்ப்பை என்பது அயல் வீட்டுப் பெண்களிடம் ஏதே னும் ஒரு பொருளை, திரும்பத் தருவதாக அளவிட்டு வாங்குவது. அஃதாவது 'ஒரு படி அரிசிதாருங்கள் இரண்டு நாளில் தருகிறேன்' என்று இப்படி அளவு குறித்து வாங்குவது குறியெதிர்ப்பை எனப் படும்.

இவ்வாறு உதவியவராயினும் மற்றோராயினும் வழங்குக; இவர் கட்கு இவ்வளவு கொடுக்கலாமா, இன்னவர்க்குக் கொடுக்கலாமா என்றெல்லாம் என்னைக் கலந்து ஆலோசிக்க வேண்டுவதில்லை. உன் விருப்பப்படி வழங்குக எனப் பெண்ணுரிமை வழங்குகிறார் புலவர்.

'வல்லாங்கு வாழ்தும் என்னாது' என்ற பகுதிதான் புலவருள் ளத்தின் உச்ச நிலையைக் காட்டுகிறது. இவ்வளவு நாட்கள் வறு மையில் உழன்றோம்; இப்பொழுது நிறையச் செல்வம் கிடைத் திருக்கிறது; இதைப் பேணி வைத்து வருங்காலத்தில் நலமாக வாழ்வோம் என்று கருதிப் பொருளை இறுகப்பிடிப்பது மகளிர் இயல்பு. ஆனால் புலவர் அவ்வாறு எண்ணாதே என்று சொல்கிறார். நாளைக்கு வேண்டும் என்று எண்ணாதே; நாளையைப் பற்றிக் கவலையில்லை; இன்று என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய். 'செல்வத்துப் பயனே ஈதல்' ஆதலால் எல்லோர்க்கும் கொடு, கொடு என்று கூறுகின்றார்.

நீயும் கொடு என்ற உம்மையினால் நானும் கொடுப்பேன் என்ற கருத்துப் பெறப்படுகிறது.

நாமென்ன பாடுபட்டா சம்பாதித்தோம்; அவன் கொடுத்த செல்வந்தானே. அதனால் தாராளமாகக் கொடு என்ற குறிப்பு "குமணன் நல்கிய வளனே" என்பதால் தெரிய வருகிறது.

'மனைகிழவோய்' என்பதனால் வீட்டிற்கு உரியவள் நீதான்; ஆகவே எல்லோர்க்கும் வழங்கும் உரிமை உனக்குத் தான் உண்டு என்னுங் குறிப்பை உணர்த்துகின்றார்.

## இலக்கணம்

நின்னயந்து—இரண்டாம் வேற்றுமைத் தொகை.
(நின்+நயந்து)
கடும்பசி—பண்புத்தொகை.
யாழ, மதி—இரண்டும் முன்னிலை அசைச் சொற்கள்.
சூழாது—எதிர்மறை வினையெச்சம்.
வாழ்தும்-எதிர்காலத் தன்மைப் பன்மை வினைமுற்று.
நீயும்—உம்மை எதிரது தழுவிய எச்சவும்மை.
கிழவோய்—விளி
தூங்கு முதிரம்—வினைத்தொகை
வேற்குமணன்—இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை.
வளன்—மொழியிறுதிப்போலி

உறைநர்—உறை+ந்+அர். உறை - பகுதி, ந்-பெயரிடை நிலை, அர் - விகுதி.

சூழாது—சூழ்+ஆ+த்+உ. சூழ் - பகுதி, ஆ - எதிர்மறை இடைநிலை, த் - எழுத்துப் பேறு, உ - வினையெச்ச விகுதி.

வாழ்தும்—வாழ்+தும் வாழ்—பகுதி, தும் — தன்மைப் பன்மை வினைமுற்றுவிகுதி.

கிழவன்—உரியவன். கிழமை+அன் ஷம விகுதி கெட்டு வ் என்ற உடம்படுமெய் பெற்றுக் கிழவன்என்றாயிற்று.

## 2. சடையப்பர் கொடைச்சிறப்பு

'இரவு நண்பகல்' என்று தொடங்கும் பாடல் கண்டி நாட்டரசனாகிய பரராச சிங்கன் பாடியது. கண்டி ஈழ நாட்டின் ஒரு பகுதி. இவன் பரராச சேகரன் எனவும் வழங்கப்படுவான். சடையப்ப வள்ளலைப் புகழ்ந்து பாடியது இது.

ஒரு சமயம் கண்டி நாடு பஞ்சத்தால் வாடியது. அப்பொழுது அங்குச் சென்றிருந்த புலவரொருவர் சடையப்ப வள்ளலின் கொடைத் திறத்தைப் புகழ்ந்து கூறி, அவர்பால் உதவி பெற முயல்க என்றனர். அவர் சொற்படியே பரராச சிங்கன் வள்ளலை வேண்டிச் செய்தியனுப்பினான்.

ஈயும் இதயம் படைத்த வள்ளல் பல மரக்கலங்களில் சோழ நாட்டு நெல்லை அனுப்பினார். நெல்லைப் பெற்றுப் பஞ்சம் தீர்ந்த பரராசன் நன்றி தெரிவிக்கும் முறையில் வாயாரப் புகழ்ந்து இப் பாடலைப் பாடி அனுப்பினான்.

சடையப்பர் திருவெண்ணெய்நல்லூரினர். கம்பரை ஆதரித்து வந்த பெருந்தகை.

### இரவு நண்பகல்..............................வாழவே

#### சொற்பொருள்

தரு உயர்ந்திடு புதுவை அம்பதி - மரங்கள் செழித்து வளர்ந்துள்ள புதுச்சேரி என்னும் பதியிலே,

தங்கும் மானிய சேகரன் - வாழ்ந்துவரும் பெருமிதமுடைய தலைவனாகிய,

சங்கரன் தரு - சங்கர வள்ளல் பெற்றெடுத்த,

சடையன் என்ற ஒரு-சடையப்ப வள்ளல் என்னும் ஒப்பற்ற,

தரும தேவதை வாழவே - தரும தேவதை சோழமண்டலத்தில் வாழ்வதன் காரணமாகவே,

இரவு நண்பகல் ஆகில் என் - இரவு பகலானால் என்ன?,

பகல் இருள் அறா இரவு ஆகில் என் - பகற் பொழுது இருள் நீங்கா இரவானாலென்ன?,

இரவி எண்திசை மாறில் என் - கதிரவன் எட்டுத் திசைகளிலும் மாறிச்சென்றால் என்ன?,

கடல் ஏழும் - ஏழு கடல்களும்,
ஏறில் என் வற்றில் என்-பொங்கினுலென்ன? வற்றிவறண்டாலென்ன?,

மரபு தங்கிய - அரசர் மரபில் வந்த,

முறைமை பேணிய - நீதியைக் காத்து வளர்த்த,

மன்னர் போகில் என் ஆகில் என் – அரசர்கள் போனுலென்ன இருந்தாலென்ன?,

வளமை இன்புறு – வளப்பமும் இன்பமும் பொருந்திய,

சோழ மண்டல வாழ்க்கை காரணமாக-சோழ மண்டலத்தின் வாழ்வு காரணமாகவே,

கருது செம்பொனின் அம்பலத்தில் - விரும்பத்தக்க பொன்னம்பலத்தில்,

ஓர் கடவுள் நின்று நடிக்கும் - ஒப்பற்ற கடவுளாகிய சிவபெருமான் நடமாடுகின்றுன்,

காவிரி திருநதியில் - அழகிய காவிரியாற்றின் இடையே,

ஒரு கருணைமா முகில் துயிலும் - ஒப்பற்ற அருட் கொண்டலாகிய திருமால் அறிதுயில் கொள்ளும்.

## கருத்து

சடையப்பன் வாழ்தலினுல் சோழ மண்டல மக்களுக்கு இரவு பகலாகிலென்? பகல் இரவாகிலென்? கதிரவன் திசை மாறினுலென்? கடல் பொங்கினுலென்? வற்றினுலென்? அரசர்கள் இருந்தாலென்? இறந்தாலென்? ஒரு கவலையுமில்லை. சோழ மண்டல வாழ்வு காரணமாகவே பொன்னம்பலத்தில் சிவன் நடமிடுகின்றுன்; திருமால் திருவரங்கத்தில் துயில்கின்றுன்.

## விளக்கம்

நடமாடுவது மகிழ்ச்சிப் பெருக்கிலேதான் இயலும்; உறக்கமும் நல்லமைதியிலேதான் வரும். அவ்விருவரும் மகிழ்ந்து ஆடுவதும், அமைதியாக உறங்குவதும் எதனுல்? சடையப்ப வள்ளல் இருப்பதனுல்.

வள்ளல் வாழ்வதனுல் மக்களுக்கும் ஒரு குறையும் கவலையும் இல்லை. அதனுல் பொழுது மாறினுல் என்ன? உலகம் எப்படி யானுல் என்ன? என்றிருக்கிறுர்கள்.

இவரைத் தருமதேவதை என்பதன் காரணம், இவர் தம்நாடு பிறநாடு என வேற்றுமை பாராட்டாது உதவும் பெருங்குணம் உடையவராக இருப்பதாலாகும்.

## இலக்கணம்

அரு—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
ஏழும்—முற்றும்மை.
ஓர்—குறுக்கல்விகாரம்.
கடவுணின்று—கடவுள் + நின்று.
முகில்—உவமையாகுபெயர்.

# ஆ. இரட்டுற மொழிதல்

அஃதாவது இரண்டு+உற+மொழிதல். இரண்டு இரட்டு என விகாரப்பட்டது. ஒரு சொல்லோ தொடரோ நின்று இரு பொருள் தருமாறு பாடுவது இரட்டுற மொழிதல் எனப்படும். இதனைச் சிலேடை என்றும் சொல்லுவர். அது செம்மொழிச் சிலேடை என்றும், பிரிமொழிச் சிலேடை என்றும் இருவகைப் படும். இங்கு இப் பகுதியில் காளமேகப் புலவர் பாடலும் அந்தக் கவி வீரராகவ முதலியார் பாடலும் வந்துள்ளன.

'பெரிய விடமே சேரும்' என்று தொடங்கும் பாடலை இயற்றியவர் காளமேகப் புலவர். இவர் திருக்குடந்தையைச் சேர்ந்தவர். வைணவர். திருவரங்கத்துக் கோவிலில் மடைப் பள்ளியில் பணியாற்றி வந்தவர். திருவானைக்காக் கோவில் தாசி மோகனாங்கியிடம் காதல் கொண்டு அவளுக்காகச் சிவநெறியை மேற் கொண்டவர். விரைந்து கவிபாடும் ஆற்றல் பெற்றவர். வசை கவி பாடுவதில் பெயர் பெற்றவர். மனிதர்கள் மேல் மட்டுமின்றிக் கடவுளர் மேலும் வசைகவி பாடியிருக்கிறார். "வசைக்கவிக்கோர் காளமேகம்" எனப் புகழப் பட்டவர். இவர் சுமார் நானூறு ஆண்டு கட்கு முற்பட்டவர் என்பர்.

## 1. பாம்பும் எலுமிச்சம்பழமும்

### பெரியவிடமே..................................பழம்

#### சொற்பொருள்

தேம் பொழியும் சோலை - தேன் சிந்துகின்ற பூஞ்சோலைகள் சூழ்ந்துள்ள,
திருமலைராயன் வரையில் - திருமலைராயன் என்பவனுடைய மலையில்,
பாம்பு - பாம்பானது,
பெரிய விடமே சேரும் - மிகுந்த நஞ்சை உடையதாகும்,
பித்தர் முடி ஏறும் - பித்தன் என்னும் பேரையுடைய சிவன் முடியில் பொருந்தியிருக்கும்,
அரி உண்ணும் - காற்றை உண்ணும்,
உப்பும் - காற்றால் உடல் பருக்கும்,
மேல் ஆடும் - மேலெழுந்து படமெடுத்து ஆடும்;
எரிகுணமாம் - கோபக் குணமுடையதாகும்;
எலுமிச்சம் பழம் - எலுமிச்சம் பழமானது,
பெரிய இடமே சேரும் - பெரியவர்கள் கையில் கொடுக்கப் படும்,
பித்தர் முடியேறும் - பித்தர்கள் தலையில் தேய்க்கப்படும்,
அரியுண்ணும்- (ஊறுகாய்க்காக) அரியப்படும்,
உப்பு மேலாடும் - உப்பு அதன் மேல் தூவப்படும்,
எரி குணமாம் - அதன் சாறு பட்டால் எரிச்சல் உண்டாகும்; (ஆதலால்) பாம்பு எலுமிச்சம் பழத்துக்குச் சமம்.

### கருத்து

பாம்பு நச்சுடையது, சிவன் முடியில் பொருந்தும், காற்றை உணவாகக் கொள்ளும், அதனால் உடல் பருக்கும், தலை தூக்கி ஆடும், கோபக் குணமுடையது. எலுமிச்சம் பழம் பெரியவர்கள் கையில் கொடுக்கப்படும், பித்தர்கள் தலையில் தேய்க்கப்படும், நறுக்கப்படும், உப்பு தூவப்படும் ; அதன் சாறு எரிச்சலைக் கொடுக்கும்.

### விளக்கம்

இப்பாட்டின் முதல் இரண்டடியும் இரட்டுற மொழிதல். பாம்புக்கு பெரிய+விடம் எனவும் உப்பும்+மேல்+ஆடும் எனவும் பிரித்து, எலுமிச்சம் பழத்துக்கு, பெரிய+இடம் எனவும் உப்பு+மேலாடும் எனவும் பிரித்துப் பொருள் கொள்ளவேண்டும். இவ்வாறு பிரித்து இருபொருள் கொள்வது பிரிமொழிச் சிலேடை எனப்படும். பித்தர் முடியேறும், அரியுண்ணும், எரிகுணமாம் என்பன அவ்வாறே செம்மொழியாகவே நின்று இருபொருள் தருவதால் செம்மொழிச்சிலேடை எனப்படும்.

பெரியவர்களைக் காணச் செல்பவர்கள் எலுமிச்சம் பழங் கொண்டு செல்வது மரபு. பித்துப் பிடித்தவர்களுக்கு எலுமிச்சம் பழம் தேய்ப்பது இயல்பு.

### இலக்கணம்

தேம் பொழியும்—தேன்+பொழியும்.

## 2. பாணனும் விறலியும்

இம்பர்வான் என்று தொடங்கும் பாடல் அந்தகக் கவி வீரராகவ முதலியாரால் பாடப்பட்டது. இவர் இராமன் என்னும் வள்ளலைப் பாடி அவன்பால் பெற்றுவந்த யானையைப்பற்றி விறலியிடம் கூறுவதாக அமைந்துள்ளது இந்தப் பாடல்.

### ஆசிரியரைப்பற்றி

பெயர் : அந்தகக்கவி வீரராகவ முதலியார்.
ஊர் ; பொன்விளைந்தகளத்தூர் (செங்கற்பட்டு மாவட்டம்)
தந்தை ; வடுகநாத முதலியார்.
காலம் : 17-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி.

இவர் பிறவியிலேயே குருடரானமையாலும், கவி எழுதும் வல்லமை பெற்றிருந்தமையாலும் அந்தகக்கவி என்று அழைக்கப்பட்டார். குருடராயிருந்தமையால் இவருடைய தந்தை எழுத்துக்களை இவருடைய முதுகில் எழுதி எழுதிக் கற்பித்தார். தந்தையார் பல நூல்களைப் படிக்க கேட்டுக் கேட்டுப் புலமை பெற்றார் என்று கூறுவர்.

இப்பாடல் உரையாடலாகவும், நகைச்சுவை நிரம்பியதாகவும் அமைந்துள்ளது. யானை எனப் பொருள்படும் பல சொற்களை அழகாகக் கையாண்டிருக்கிறார்.

## இம்பர்வான்...........................கலங்கினளே

### சொற்பொருள்

பாணி-பாடினியானவள்,
பாணே நீ-பாணனே நீ,
இம்பர் வான் எல்லை - இவ்வுலகமும் விண்ணுலகமும் தன் புகழ்க்கு எல்லையாகவுடைய,
இராமனையே பாடி - இராமன் என்னும் வள்ளலைப் புகழ்ந்து பாடி,
என் கொணர்ந்தாய் - என்ன பரிசில் கொண்டு வந்தாய்;
என்றாள்-என்று கேட்டாள்,
வம்பதாம் களபம் என்றேன்-(யானை என்பதைக் குறிக்க) புதிய களபம் என்று கூறினேன்
பூசும் என்றாள் - (அவள் சந்தனமென்று கருதிக்கொண்டு) உடம்பில தடவும் என்றாள்,
மாதங்கம் என்றேன் — (மீண்டும் யானையைக் குறிக்க) மாதங்கம் என்று சொன்னேன்,
யாம் வாழ்ந்தேம் என்றாள்-(அவள் மா தங்கம் என்று எணணி) வறுமையில் தப்பிப் பிழைத்தோம் என்றாள்,
பம்பு சீர் வேழம் என்றேன் - மிகுந்த புகழையுடை வேழம் என்றுரைத்தேன்,
தின்னும் என்றாள்-(அவள் கரும்பென்று எண்ணிக்கொண்டு) தின்னும் என்றாள்,
பகடு என்றேன் - பகடென்று கூறினேன்,
பழனம் தன்னை உழும் என்றாள்-(எருது என்று கருதிக்கொண்டு) வயலை உழுங்கள் என்றாள்,
கம்பமா என்றேன் - கம்பமா என்று கூறினேன்,
நல் களியாம் என்றாள்- (கம்பரிசிமாவென்று எண்ணி) நல்ல களியாகும் என்றாள்,
கைம்மா என்றேன் - துதிக்கையையுடைய யானை (கைம்மா) என்று சொன்னேன்,
சும்மா கலங்கினளே - ஒன்றும் பேசாது திகைத்தாள்.

### கருத்து

பாடினி என்ன பரிசில் பெற்று வந்தீர் என்று வினவினள். நான் யானைக்குரிய பெயர்களை யெல்லாம் சொன்னேன். அவள் ஒவ்வொன்றுக்கும் வேறு பொருள் கொண்டு, கடைசியில் யானை என்று சொன்னவுடன் திகைத்தாள்.

### விளக்கம்

யானைக்குரிய மறுபெயர்கள் களபம், மாதங்கம், வேழம், பகடு, கம்பமா என்பனவாம். இவற்றிற்குப் பாடினி கொண்ட வேறு பொருள்கள் முறையே சந்தனம், பெரிய தங்கம், கரும்பு, எருது, கம்பரிசிமா என்பனவாம்.

கம்பமா—கம்பத்தில் கட்டப்படும் மா. அஃதாவது யானை
கைம்மா—கையையுடைய மா = யானை.

பாணன் என்பதற்குப் பெண்பால் பாணினி—இடைக்குறைந்து நின்றது.

**இலக்கணம்**

இம்பர்வான்—உம்மைத்தொகை
வாழ்ந்தோம்—தன்மைப்பன்மை வினைமுற்று
பூசும், தின்னும்—செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்கள்.
கைம்மா—இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை.

# இ. சீட்டுக்கவி

புலவர்கள் அரசர்களிடமோ வள்ளல்களிடமோ தாம் பெற நினைக்கும் பொருளைக் குறித்துக் கடிதம் எழுதுவார்கள். புலவர்கள் கடிதம் எழுதினால் உரைநடையிலா எழுதுவர்? செய்யுள் வடிவிலேதான் எழுதுவர். அவ்வாறு செய்யுள் வடிவில் எழுதப்படும் கடிதத்திற்குத் தீட்டுக்கவி என்று பெயர். அது சீட்டுக்கவியென மாறியது.

இப்பாடல் மதுரைச் சொக்கநாதர் (மதியழகர் அஃதாவது சோமசுந்தரக் கடவுள்) எழுதியது. இவர் தமக்குப் பொருள் வேண்டி எழுதவில்லை. பாணபத்திரர் என்பவர் தம் வறுமையை நீக்கச் சொக்கநாதரிடம் முறையிட்டார் அவர் சேர மன்னனுக்கு ஒரு பரிவுரைக் கடிதம் (சிபாரிசுக் கடிதம்) கொடுத்தனுப்பினார். அக் கடிதமே இந்தச் சீட்டுக்கவி. இது இறைவனால் பாடப்பட்டதாகலின் திருமுகப் பாசுரம் எனவும் படும்.

**மதிமலி......................................விடுப்பதுவே**

**சொற்பொருள்**

மதிமலிபுரிசை - திங்கள் தவழும் மதிற் சுவரும்,
மாடம் - மாடங்களும் நிறைந்த,
கூடல் பதிமிசை நிலவும் - மதுரையம்பதியில் வாழ்கின்ற,
பால் நிறம் வரிச்சிறகு அன்னம் - பால் போன்ற வெண்மை நிறம் பொருந்திய கோடு பொருந்திய சிறகுகளையுடைய அன்னங்கள்,
பயில்பொழில் - பயின்று திரிகின்ற சோலையையுடைய,
ஆலவாயில் - திருவாலவாய்ப் பதியில்,
மன்னிய சிவன் யான் - எப்பொழுதும் வீற்றிருக்கும் சிவனாகிய நான்,
மொழிந்திடும் மாற்றம் - தெரிவிக்கும் செய்தியாவது,
பருவக் கொண்மூ படி என - கார் காலத்து மேகத்தின் தன்மையைப் போல,
பாவலர்க்கு - தன்பால் வரும் புலவர்கட்கு,
ஒருமையின் - ஒருமித்த மனத்தோடு,
உரிமையின் உதவி - அவ்வவர்க்கு ஏற்பப் பொருள்களைக் கொடுத்து,
அணி திகழ் குரு மாமணி திகழ் - அழகு பொருந்திய நல்ல நிறம் விளங்குகின்ற உயர்ந்த இரத்தினங்கள் பொருந்திய,

உலவிய குடைக்கீழ் - விரிந்த வெண் கொற்றக் குடையின் கீழிருந்து,
செருமா உகைக்கும் - போரில் யானையை நடத்துகின்ற,
சேரலன் காண்க - சேர மன்ன னே இதனைக் காண்பாயாக,
பண்பால் யாழ் பயில் - முறை யாக யாழைப் பயின்ற,
பாணபத்திரன் - பாணபத்திரன் என்பான்,
தன்போல் என்பால் அன்பன் - உன்னைப் போல என்னிடத்து அன்புடையவன்,
தன்பால் காண்பது கருதி - உன் னைப் பார்க்க எண்ணி,
போந்தனன் - வருகின்றான்,
மாண்பொருள் கொடுத்து - அவ னுக்கு மிக்க பொருளைத் தந்து
வர விடுப்பதுவே - இங்கு வரும் படி அனுப்புவாயாக.

### கருத்து

மதுரையில் தங்கியிருக்கும் சிவனாகிய நான் விடுக்கும் ஓலையைச் சேர மன்னனே காண்பாயாக. பாணபத்திரன் என்பான் உன்னைக் கருதி வருகின்றான். அவனுக்கு நிறையப் பொருள் தந்து அனுப்பு வாயாக.

### விளக்கம்

கூடல், ஆலவாய் என்பன மதுரைக்குரிய பெயர்கள். மதி மலிபுரிசை என்பது மதிலின் உயர்ந்த்தைக் குறிக்கிறது.

கார் காலத்து மேகம் பொழிவதைப் போல நீ புலவர்க்கு வழங்குபவன் ஆதலின் இவனுக்கு மிகுதியாக வழங்குவாய் என் னுங் குறிப்பை யுள்ளடக்கி நிற்கின்றது "பருவக் கொண்மூ...... உதவி" என்ற பகுதி. இவ்வாறு ஒரு கருத்தை உட்கொண்ட அடைமொழிகளை அமைத்துக் கூறுவது **கருத்துடை அடைமொழி யணி** எனப்படும் கொண்மூ—மேகம். படி—தன்மை.

### இலக்கணம்

பாணிறம்—பால் + நிறம் — உவமைத் தொகை.
காண்க—வியங்கோள் வினைமுற்று.
போந்தனன்—(வருகின்றான்) காலவழுவமைதி.

# ஈ. இயற்கை எழில்

இயற்கையின் எழிலைத் திரட்டிக் கூறும் பாடல்கள் இப்பகுதி யில் இடம் பெறுகின்றன. ஈங்கோய் எழுபது, திருச் செந்தூர்ப் பிள்ளைத் தமிழ், மலரும் மாலையும் என்னும் நூல்களிலிருந்து பாடல்கள் எடுக்கப் பெற்றுள்ளன.

## 1. ஈங்கோய் எழுபது

சைவச் சார்புடைய பன்னிரு திருமுறைகளுள், பதினோராந் திருமுறையின் பல நூல்களுள் இந்த 'ஈங்கோய் மலை எழுபது' என்ற நூலும் ஒன்று. ஈங்கோய் மலையைப் பற்றிப் பாடிய எழுபது

பாடல்களைக் கொண்ட நூல். இதன் ஆசிரியர் நக்கீர தேவ நாயனார். இவர் வேறு. சங்கப் புலவரான நக்கீரர் வேறு. நக்கீர ருக்குப் பன்னூறு ஆண்டுகட்குப் பின் தோன்றியவர் இந்த நக்கீர தேவ நாயனார். இவர் பாடிய வேறு நூல்கள்: கைலைபாதி காளத்தி பாதி அந்தாதி, திருவலஞ்சுழி மும் மணிக்கோவை, கோபம் பிரசாதம் முதலியன.

இந்நூல் எழுபது பாடல்களையுடையதேனும் சில பாடல்கள் சிதைந்தொழிந்தன.

## வண்டும் மந்தியும்

வழகு இதழ் காந்தள் மேல் - மெல்லிய இதழ்களையுடைய காந்தள் மலர்க்கொத்தின் மேல்,
வண்டு இருப்ப - (தேனைப்பருக) வண்டுகள் வந்து அமர,
ஒண் தீ முழுகியது என்று - அவை ஒளி பொருந்திய நெருப்பிலே மூழ்கி விட்டனவோ என்று,
முது மந்தி அஞ்சி - கிழக் குரங் கொன்று பயந்து, (இரக்கங் கொண்டு)
பழகி எழுந்து எழுந்து — அடிக் கடி எழுந்தெழுந்து,
கை நெரிக்கும் - கைகளை நெரிப் பதற்கு இடமான,
ஈங்கோய் - ஈங்கோய் மலையா னது,
திங்கள் கொழுந்து எழுந்த - பிறைச் சந்திரன் பொருந்திய,
செம்சடையான் - சிவந்த சடை முடியையுடையவனாகிய சிவ பெருமானுடைய,
குன்று - திருமலையாகும்.

### கருத்து

செங்காந்தட் கொத்துக்குள் அமர்ந்த வண்டைக் கண்ட கிழக் குரங்கு, அது நெருப்பினுள் மூழ்கியதோ என்று இரங்கி அடிக்கடி கையை நெரிப்பதற்கு இடமான ஈங்கோய் மலை பிறைசூடிய பெரு மானுடைய மலையாகும்.

### விளக்கம்

மலையில் செங்காந்தள் குப்பென்று பூத்திருக்கிறது. பூத்து மலர்ந்த அத்தோற்றம் பார்வைக்கு நெருப்புப் போல இருக்கிறது. மந்திக்கு அப்படியே தோன்றுகிறது. முது மந்தியல்லவா அது. பார்வை மங்கியிருக்கத்தானே செய்யும். நெருப்புக்கு அஞ்சும் இயல்புடையது குரங்கு. ஆகவே சிறிது எட்டியிருந்தது. அப் பொழுது தேனைப் பருக வண்டு ஓடி வந்து விழுந்தது.

ஐயையோ! பாவம்! வண்டு நெருப்புக்குள் வீழ்கிறதே! என் செய்வது? என்று இரங்கிக் கையை நெரிக்கிறது. ஒரு முறையன்று; பல முறை நெரிக்கிறது. பெண் குரங்கல்லவா? பெண்மைக்கு இயல்பாகிய இரக்கம் அதனிடம் இருக்கத்தானே செய்யும். மந்தி—பெண்குரங்கு. கை நெரித்தல் பெண்களுக் குரிய செயல். திங்கள் கொழுந்து—பிறைச்சந்திரன்.

ஈங்கோய் மலையில் அஃறிணைப் பொருள்களும் இரக்கம் உடையன என்பது விளங்குகிறது.

**இப்பாடல் மயக்கஅணி.** மயக்க அணியாவது ஒப்புமையினாலே ஒரு பொருளை மற்றொரு பொருளாக அறிதல். இங்கு குரங்கு காந்தளை நெருப்பாகக் கருதி மயங்கியது.

**இலக்கணம்**

**முதுமந்தி—பண்புத்தொகை.**
**எழுந்துஎழுந்து—அடுக்குத்தொடர்.**
**செஞ்சடை—பண்புத்தொகை.**

## 2. திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்

திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமான் மீது பாடப்பட்ட பிள்ளைத்தமிழ் என்னும் நூல் எனப் பொருள்படும்.

பிள்ளைத்தமிழ் என்பது தமிழில் வழங்கும் தொண்ணூற்றாறு வகை நூல்களுள் ஒன்று. இஃது ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இரு வகைப்படும். பாட்டுடைத் தலைவரைப் பிள்ளையாகக் கருதி, பிள்ளைகட்குரிய பருவ நிகழ்ச்சிகளை அடிப்படையாக வைத்துப் பாடப்படுவது பிள்ளைத் தமிழாம். இது பத்துப் பருவங்களைக் கொண்டது. ஒரு பருவத்துக்குப் பத்துப் பாடலாக அமைந்திருக்கும். சில பிள்ளைத்தமிழ் நூல்களில் பருவத்திற்கு ஐந்து பாடலும் உண்டு

**ஆண்பாற்பிள்ளைத்தமிழ் :** காப்பு, செங்கீரை, தால், சப்பாணி முத்தம், வருகை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர், என்னும் பத்துப் பருவங்களை யுடையது.

**பெண்பாற்பிள்ளைத்தமிழ் :** மேற்கூறிய பருவங்களில் சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்னும் மூன்று பருவங்களை நீக்கிவிட்டுக் கழங்கு, அம்மானை, ஊசல் என்னும் மூன்று பருவங்களைச் சேர்த்துக் கூறுவது.

திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழின் ஆசிரியர் பகழிக் கூத்தர் என்னும் புலவராவர். இந் நூலில் வரும் பாடல்கள் சொற்சுவை, பொருட்சுவை நிரம்பப் பெற்றவையாகும்,

**ஆசிரியரைப்பற்றி**

பெயர் : பகழிக் கூத்தர்.
ஊர் : சன்னுசிக்கிராமம். (செம்பிய நாட்டைச் சார்ந்தது).
தந்தை : தர்ப்பாதன் என்பவர்.
சமயம் : வைணவம்.
வேறுநூல் ; சீவக சிந்தாமணியைச் சுருக்கிப் பாடியிருப்ப தாகத் தெரிகிறது.

**நூல் இயற்றக் காரணம் :** இவர் ஒரு சமயம் வயிற்று வலி நோயால் துன்புற்றார். அப்பொழுது திருச்செந்தூர் முருகனை வழி

பட்டால் நோய் நீங்கும் என்று சிலர் கூறினர். இவர் வைணவரா யிருந்தும் முருகன்மீது இப் பிள்ளைத் தமிழைப் பாடினார். உடனே அந்நோய் நீங்கப் பெற்றார் என்ப.

வாரானைப் பருவத்திலுள்ள பாடல் இங்குப் பாடமாக வந்துள்ளது. வாரானைப் பருவம் வருகைப் பருவம் எனவும் வழங்கப்படும். இது குழந்தையின் பன்னிரண்டாம் மாதத்திற்குரிய பருவ நிகழ்ச்சியைக் குறிக்கும் பெற்றோர் குழந்தையைத் தம்பால் வருமாறு அழைக்கும் முறையில் அமைந்திருக்கும் இப் பருவத்தின் பாடல்கள். வாரானை—வருகை, தொழிற்பெயர். ஆனை என்பது தொழிற்பெயர் விகுதி.

## திருச்செந்தூர் வளம்

### வெண்மைச் சிறை ......................வருகவே

### சொற்பொருள்

வெண்மைச் சிறை புள் - வெண்மையாகிய சிறகுகளையுடைய பறவைகளாகிய,
ஓதிமங்கள் - அன்னங்கள்,
விரை கேதகையின் - மணம் பொருந்திய தாழையினுடைய,
மடல் எடுத்து-மடலை எடுத்து,
விரும்பும் குழவி என - விரும்பப் படுகின்ற குழந்தையைப் போல,
மடியின்மீது இருத்தி - மடியில் வைத்துக்கொண்டு,
கோதாட்டி - (கண்ணே, செல்வமே என்று) பாராட்டி,
திண்மை சுரி சங்கினில் - திண்ணிய வளைந்த சங்கிலே,
குவளை தேறல் முகந்து - குவளை மலரின் தேனை முகந்து,
பால் ஊட்டி - பாலாக உண்பித்து,
செழும் தாமரை-செழுமையான தாமரையினுடைய,
நெட்டு இதழ் விரித்து - நெடிய இதழ்களை விரியச் செய்து,
சேர்த்து - அத்தாமரையிலே கிடத்தி,
துயிற்றி தாலாட்ட - உறங்கப் பண்ணித் தாலாட்ட,
பெண்மை குருகுக்கு - பெண் நாரைப் பறவைக்கு,
ஒரு சேவல் பெரிய குருகு - ஒரு பெரிய ஆண் நாரையானது,
தன் வாயில் பெய்யும் இரையை- தன் வாயிற் கொண்ட இரையை,
கூர் அலகு பிளந்து-கூரிய வாயலகைப் பிளந்து,
பெட்பின் இனிது அளிக்கும் - விருப்புடன் மகிழ்ந்து கொடுக்கின்ற,
வண்மை புதுமை திருச்செந்தூர்-வண்மையும் புதுமையும் நிறைந்த திருச் செந்தூரில் எழுந்தருளியிருக்கின்ற,
வடிவேல் முருகா - கூரிய வேலை ஏந்திய முருகனே,
வருகவே—,
வளரும் களபம் மார்பு இலங்கு— நாடோறும் வளர்ந்து வரும் சந்தனம் பூசிய மார்புகளையுடைய
வள்ளி கணவா வருக - வள்ளி மணாளனே வருக.

### கருத்து

அன்னப் பறவைகள் தாழை மடலை எடுத்துக் குழந்தையாகக் கருதி, சீராட்டிப் பாலூட்டித் தாமரையில் தாலாட்டுதற்கு இடமான திருச்செந்தூர். ஆண் நாரை தன் பெண் நாரைக்கு அலகு திறந்து இரையூட்டும் காட்சி நிறைந்த திருச்செந்தூர். வண்மையும் புதுமையும் நிறைந்த திருச்செந்தூர். அப்பதி வாழும் முருகனே வருவாயாக.

### விளக்கம்

இப்பாடலில் திருச்செந்தூரின் வளம் கூறப்படுகிறது. தாழை, சுரிசங்கு இவை கூறப்படுவதால் கடற்கரையிலுள்ள திருச்செந்தூரின் நெய்தல் வளமும், அன்னம், குவளை, தாமரை இவை கூறப்படுவதால் அதன் மருத வளமும் கூறப்படுகின்றன.

தாழை மடலைக் குழந்தை என மயங்கிய அன்னங்கள் மடியிருத்தி, பாராட்டி, குவளைத் தேனுகிய பாலூட்டி, துயிலத் தாலாட்டின எனத் தாய்மைப் பண்பை அழகுறக் காட்டுகிறார் ஆசிரியர்.

அஃறிணைப் பொருள்களாயினும் இவ்வூர்க் குருகுகள் காதற் பண்பும், பரிவும் உடையன என்பது தோன்றப் "பெட்பினின் இனிது அளிக்கும்" என்றார்.

அஃறிணையாகிய அன்னம் மடலிடத்துத் தாயன்பு காட்டுகிறது; ஆண் குருகு தன் பெண் குருகிடம் காதலன்பு காட்டுகிறது என்றால் உயர்திணையாகிய மக்களிடம் உள்ள மனவளம் கூறாமலே அமையும்

இத்தகைய ஈத்துவக்கும் பண்பும் வியத்தகு காட்சியும் கொண்டமையால் "வண்மைப் புதுமைத் திருச்செந்தூர்" என்றார்.

### இலக்கணம்

சிறைப்புள் — இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை
புள்ளோதிமம்—இருபெயரொட்டுப் பண்புத் தொகை.
சுரிசங்கு—வினைத் தொகை.
செழுந்தாமரை—பண்புத்தொகை.
நெட்டிதழ்—பண்புத்தொகை.
சேவல்—ஆண்மையைக் குறிக்கும் மரபுப் பெயர்.
செழுந்தாமரை—செழுமை+தாமரை.
நெட்டிதழ்—நெடுமை+இதழ்.
முகந்து—முக+த்+த்+உ. முக—பகுதி, த்—சந்தி, சந்தியாக வந்த தகரம் நகரமானது விகாரம், த்—இறந்த கால இடை நிலை, உ—வினையெச்ச விகுதி.

# 3. மலரும் மாலையும்

தனி மலர்கள் போன்ற பாடல்களும், மலர்களாலாகிய மாலை போன்ற தொடர்நிலைச் செய்யுட்களும், தன்னகத்தே கொண்ட நூலாதலின் இது "மலரும் மாலையும்" எனப் பெயர் பெறுவதாயிற்று. இந்நூலிருந்து "வெண்ணிலா" என்ற தலைப்பிலுள்ள பாடற் பகுதி பாடமாக வந்துள்ளது.

மலர் என்பது தனிச் செய்யுளையும், மாலை என்பது தொடர் நிலைச் செய்யுளையும் குறிக்கும். இந்த நூலின் ஆசிரியர் கவிமணி தேசிக விநாயம் பிள்ளை ஆவார்.

## ஆசிரியரைப்பற்றி:

பெயர்: கவிமணி சி. தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள்.
ஊர்: நாகர் கோவில் பகுதியிலுள்ள சுசீந்திரத்தை அடுத்துள்ள தேரூர்.
தந்தை: சிவதாணுப் பிள்ளை.
தாய்: ஆதிலட்சுமி அம்மாள்.
காலம்: 1876—1954.
இயற்றிய நூல்கள்: மலரும் மாலையும், நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியம், காந்தளூர்ச்சாலை, உமர்கய்யாம்.
பணி: கோட்டாறு, நாகர்கோவில், திருவனந்தபுரம் முதலிய இடங்களில் ஆசிரியராகப் பணி புரிந்தார்.

## மீன்கள் கோடி.........உறங்குவாயோ வெண்ணிலாவே

### சொற்பொருள்

மீன்கள் - விண் மீன்கள்,
கோடி கோடி சூழ - பலகோடிகள் சூழ்ந்துவர,
ஒரு வெள்ளி ஓடம் போல- வெள்ளியினாற் செய்யப்பட்ட ஓர் அழகிய ஓடத்தைப் போல,
வரும் வெண்ணிலாவே - உலவி வருகின்ற வெண்மையான நிலாவே,
பானுவெம் கதிர் - சூரியனுடைய வெம்மையான கதிர்களிலே,
குளிக்கும் வெண்ணிலாவே- குளித்தெழுகின்ற வெண்ணிலாவே,
நித்தம் - நாடோறும்,
பாற் கடலும் - பாற் கடலுக்குள்ளும்,
ஆடுவையோ - நீராடி வருவாயோ,
ஆம்பல் களிகூர - அல்லிமலர்கள் மகிழ்ந்து மலர,
வரும் வெண்ணிலாவே - எழுந்து வரும் வெண்ணிலாவே,
அம்புயம் - தாமரையானது,
உனக்கு செய் தீங்கு - உனக்கு இழைத்த தீமைதான்,
எதுவோ - யாதோ?
இரவையும் - இரவுப் பொழுதையும்,
நண் பகல் ஆக்கும் வெண்ணிலாவே - நடுப்பகல் போல ஆகும்படி செய்கின்ற வெண்ணிலவே,
உன்னை இராகுவும் விழுங்கிடுமோ - இராகு என்ற பாம்

பானது உன்னை விழுங்கவும் செய்யுமா ?
வளர்ந்து வளர்ந்து - நாடோறும் சிறிது சிறிதாக வளரப் பெற்று,
வந்த வெண்ணிலாவே - உருப் பெற்று வந்த வெண்ணிலவே,
மீண்டும் - மறுபடியும் நாடோறும்,
வாடி வாடி போவதேனோ- குறைந்து குறைந்து மெலிந்து போவது ஏன் ?
கூகை ஆந்தை போல - கோட்டானையும் ஆந்தையையும் போல,
நீயும் - வெண்ணிலாவாகிய நீயும்,
பகல் - பகற் பொழுதெல்லாம்,
கூட்டினில் உறங்குவாயோ- கூட்டுக்குள்ளேயே உறங்கிக் கொண்டிருப்பாயோ.

## விளக்கம்

வானத்துப் பிறை நிலா நிலத்திலிருந்து நோக்குவார்க்கு, நீரில் மிதக்கும் ஓடம் போலக்காட்சி தரும் ஆதலின் வெள்ளியோடம் போல என்றார். நிலாவை ஓடம் என்று கூறியதற்கு ஏற்ப, அதனைச் சூழ்ந்துள்ள நட்சத்திரங்களை "மீன்கள்" என்ற சொல்லால் குறித்த நயம் பாராட்டத் தக்கது. ஓடம் செல்லும் நீரில் மீனினங் கள் உண்டல்லவா ?

நிலா கதிரவனுடைய ஒளியை வாங்கித்தான் நமக்கு ஒளியைத் தருகிறது. அதனை உணர்த்த "வெங்கதிர் குளிக்கும்" என்றார். நிலா வெண்ணிறமாகத் தோன்றுகிற காரணத்தால் அதனை நோக்கிப் பாற்கடலில் மூழ்கியதால் இந்நிறம் பெற்றாயோ என்று கேட்கும் பொருளில் "பாற்கடலும் ஆடுவையோ" என்றார். வெங்கதிரிலும் குளிக்கின்றாய், பாற்கடலிலும் குளிக்கின்றாய் என்று வியக்கின்றார்.

நிலாவைக் கண்டு அல்லி மலரும், தாமரை குவியும். இஃது இயல்பு. இதனைக் கண்டு தாமரை வாடும்படியாக நீ செய்வதற்கு அஃது என்ன தவறு செய்தது என்று கவிஞர் கேட்கிறார்.

இராகு என்ற பாம்பு சந்திரனை விழுங்குவதாகச் சொல்வது புராண மரபு. இதனைச் சந்திர கிரகணம் என்பர் உலகோர்.

வளர்ந்து வளர்ந்து என்ற பகுதியில், தோன்றிய பொருள் ஒரு நாள் மறைதலுண்டு என்னும் உலகியல்பைக் குறிப்பாக உணர்த்து கிறார்.

கூகையும் ஆந்தையும் பகலில் வெளிப்பட்டுத் தோன்றா. கூடுகளிலேயே உறையும். நிலவும் பகலில் வெளிவராது. அதனால் நிலவும், கூகை முதலியன போலப் பகற்பொழுதில் கூட்டுக்குள்ளே இருந்து விடுமோ என்று ஐயுறுவது போல் கேட்கின்றார்.

## இலக்கணம்

கோடி கோடி—அடுக்குத்தொடர்.
வெண்ணிலா—பண்புத்தொகை (வெண்மை+நிலா)

வெள்ளியோடம்—மூன்றும் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத் தொகை
கடலும்—இறந்தது தழுவிய எச்ச உம்மை.
ஆடுவை—முன்னிலை ஒருமை வினைமுற்று (ஆடு+வ்+ஐ)
செய் தீங்கு—வினைத்தொகை.
கூகை ஆந்தை—உம்மைத்தொகை.

# உ. இன்னிசைப்பாக்கள்

## 1. ஆதிவேதம்...............................பணியாயே

ஆதிவேதம் என்று தொடங்கும் இப்பாடல் சீவக சிந்தாமணி என்னும் நூலில் பதுமையார் இலம்பகம் என்ற பகுதியில் உள்ளதாகும். சீவக சிந்தாமணி ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகும். இது சீவகன் வரலாற்றைப் பற்றிக் கூறுவது. இந்நூலின் ஆசிரியர் திருத்தக்கதேவர். இப்பாடல் சீவகன் அரணபாதம் என்னும் மலையில் எழுந்தருளியுள்ள அருகக்கடவுளை வழிபட்டுப் பாடுவதாக அமைந்துள்ளது.

### ஆசிரியரைப்பற்றி:

பெயர் : திருத்தக்க தேவர்.
குலம் : சோழர் குலம்.
காலம் : கி பி. பத்தாம் நூற்றாண்டு என்பர்.
சமயம் : சைனம்.
பிற நூல் : நரி விருத்தம்.

இவர் திருத்தகு முனிவர், திருத்தகு மாமுனிவர், திருத்தக்க மகாமுனிகள், தேவர் என்றும் வழங்கப் பெறுவர்.

### சொற்பொருள்

ஆதிவேதம் – கொலை முதலியன இல்லாத முதன்மையான வேதத்தை,
பயந்தோய் நீ - படைத்து உலகுக்குக் கொடுத்தவன் நீ,
அலர் பெய்மாரி அமைந்தோய் நீ – உலகம் பூமழை பெய்து ஏத்தும்படி இருப்பவன் நீ,
நீதி நெறியை – சன்மார்க்கங்களை,
உணர்ந்தோய் நீ—முற்ற உணர்ந்தவன் நீ,
திகர் இல் காட்சிக்கு – ஒப்பில்லாத ஞானத்திற்கு,
இறையோய் நீ – தலைவன் நீ,
நாதன் எனப்படுவோய் நீ - உலகுக்கெல்லாம் தலைவன் நீ,
(இந்தன்மையனாகிய நீ)
உன்பாத கமலம் தொழுவேங்கள் - திருவடித் தாமரைகளைத் தொழுகின்ற எங்களுடைய,
நவைசெய் – குற்றத்தைச் செய்கின்ற,
பிறவிக் கடல் அகத்து – பிறவியாகிய கடலகத்து,
பசை யாப்பு அவிழ – பற்றாகிய தொடர்ச்சி நீங்கும்படி,
பணியாய்—அருள் செய்வாயாக

### கருத்து

ஆதி வேதம் பயந்தவனே, மலர் மழை பெய்ய அமைந்தவனே, நீதிநெறி உணர்ந்தவனே, நிகரில்லாப் பெருஞானம் உடையவனே, உலகத் தலைவனே உன் திருவடி தொழும் எங்களுடைய பிறவித் துயருக்குக் காரணமான பற்றுக்களை நீக்கியருள்வாயாக.

### விளக்கம்

வேள்வியின் பெயரால் கொலையை ஆதரிக்கும் வேதங்களும் உள. அவற்றிலிருந்து வேறு பிரித்துக்கூற 'ஆதிவேதம்' என்பதற்குக் கொலை முதலியன இல்லாத வேதம் எனப்பொருள் உரைக்கப் பட்டது; அருக வேதம் அதை விலக்குவதால்.

காட்சி என்பது பேரறிவு. இறைவன் வாலறிவன் ஆதலின் 'நிகரில் காட்சிக் கிறையோய்' எனப்பட்டான்.

பிறவி குற்றங்களைச் செய்வதற்கு ஏதுவாக இருத்தலினால். 'நவை செய் பிறவி' என்றார்.

கடத்தற்கரியதாகலானும், அளவிட்டுக் கூற முடியாதாகலானும் பிறவி, கடல் எனப்பட்டது.

பிறவிக்குப் பற்று, காரணமாக இருப்பதால் 'பசையாப்பவிழ' என்றார். பற்றினால் பிறவியும் பிறவியால் பற்றும் மாறி மாறித் தொடர்ந்து தொடர் சங்கிலி போல் வருவதால் பசையை(பற்றை) 'யாப்பு' என்றார்.

பிறவிக் கடலை நீந்துவதற்கு இறைவன் அடியே புணையாகும் என்னுங் குறிப்பைப் 'பாத கமலந் தொழுவேங்கள்' என்பதால் வெளியிடுகின்றார்.

பசையை யாப்பு எனக் கூறியதற்கேற்ப அது நீங்குதலை 'அவிழ' என்றார்.

### இலக்கணம்

பிறவிக் கடல்—உருவகம்.
பாத கமலம்—உருவகம்.
பசை யாப்பு—உருவகம்.
பயந்தோய்—பய+த்+த்+ஆய். பய—பகுதி, த்—சந்தி, இது நகரமானது விகாரம், த்—இறந்த கால இடைநிலை, ஆய்—முன்னிலை ஒருமை விகுதி. விகுதியிலுள்ள ஆகாரம் ஓகாரமாகத் திரிந்தது.

## 2. பண்ணிடை..............................நீயன்றே

இப்பாடல் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தில் "திருக் குருகாவூர் வெள்ளடை" என்ற தலைப்பில் உள்ளது. ஒரு சமயம் இவர் சீர்காழி இறைவனை வணங்கி விட்டு திருக்குருகாவூரைத் தொழுவதற்குத் தம் அன்பர்களுடன் போய்க் கொண்டிருந்தார். அப்பொழுது இவருக்குப் பசியும் தாகமும் அதிகமாயின. இதை

யுணர்ந்த சிவபெருமான் ஒரு பந்தரை வழியில் அமைத்துக் கொண்டு தண்ணீரும், கட்டுச் சோறும் வைத்துக் கொண்டிருந்து, சுந்தரர் வந்தவுடன் யாவருக்கும் வழங்கிப் பின் மறைந்தருளினார். இறைவன் திருவருளை எண்ணிச் சுந்தரர் இப்பதிகத்தைப் பாடினார்.

## ஆசிரியரைப்பற்றி:

பெயர் : சுந்தரமூர்த்தி சுவாமிகள்.
ஊர் : திருமுனைப்பாடி நாட்டில் உள்ள திருநாவலூர்.
தந்தை : சடையனார்.
தாய் : இசைஞானியார்.
மரபு : ஆதி சைவர்.
காலம்: கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கம் என்பர்.

இவருடைய இயற் பெயர் நம்பி ஆரூரர் என்பதாகும். இவர் சிவபெருமானால் தடுத்தாட் கொள்ளப் பட்டவர்.

## சொற்பொருள்

பண் இடை – பாடல்களிலே பொருந்தியிருக்கின்ற,
தமிழ் ஒப்பாய் – தமிழைப் போன்றவனே,
பழத்தினில் சுவை ஒப்பாய் – பழத்தில் பொருந்தி யிருக்கின்ற சுவை போன்றவனே,
கண் இடை மணி ஒப்பாய் – கண்களின் ஊடேயிருக்கின்ற கருமணி போன்றவனே,
கடு இருள் சுடர் ஒப்பாய்–கடுமையாகிய இருளிலேதோன்றி உதவுகின்ற சோதி போன்றவனே,
மண் இடை – உலகத்தின்கண் வாழுகின்ற,
அடியார்கள் மனத்து–அடியவர்களுடைய மனத்தின்கண்,
இடர் வாராமே–துன்பம் வாராமல் (காப்பாற்றுவாய்)
விண்ணிடைக் குருகாவூர்–தேவலோகம் போன்ற திருக்குருகாவூரில் எழுந்தருளியிருக்கின்ற,
வெள்ளடை நீ - வெள்ளடை யப்பனாகிய நீ.

## கருத்து

பண்ணுக்குத் தமிழாகவும், பழத்துக்குச் சுவையாகவும், கண்ணுக்கு மணியாகவும் இருந்து இருளில் ஒளி நல்கும் சோதியே! திருக்குருகாவூர் வெள்ளடையப்பனே! நீ அடியார்களுடைய மனத்துயரை நீக்கி அருள்வாய்.

## விளக்கம்

"பண்ணிடைத் தமிழ் ஒப்பாய்" என்பது தமிழில் இசை இல்லை என்பார்க்குத் தரும் ஓர் அறிவு விளக்கம் ஆகும் பண்ணுக்குத் தமிழும், பழத்திற்குச் சுவையும், கண்ணுக்கு மணியும் இருப்பது எப்படி இயல்போ அதுபோல இறைவன் அடியார்தம் துயர் துடைப்பதும் அவனுக்கு இயல்பு என்றார்.

கடு இருள் சுடர் ஒப்பாய்—இருளில் துயரின்றி நடந்து செல்லச் சுடர் உதவுகிறது. அதைப்போல அடியார் மனத்துயர் நீங்கி இனிது வாழ இறைவன் உதவுகிறான். இப்பகுதியால் வழியிடையே

தாகத்தையும் பசியையும் நீக்கியருளிய இறைவனுடைய அருள் திறத்தைக் குறிப்பாக உணர்த்துகின்றார்.

வெள்ளடை என்பது திருக்குருகாவூரில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனுடைய திருப் பெயராகும். வெள்ளடைநீ இடர் வாராமே காப்பாய் என ஒரு சொல் வருவிக்க.

### இலக்கணம்

கடு இருள்—பண்புத்தொகை.
வாராமே — எதிர்மறை வினையெச்சம் வா+ஆ+மே.
வா—பகுதி விகாரப்பட்டது.
ஆ—எதிர் மறை இடைநிலை.
மே—எதிர் மறை வினையெச்ச விகுதி.

## 3. பால்நினைந்து................................இனியே

### ஆசிரியரைப்பற்றி:

பெயர் : மாணிக்கவாசகர் (திருவாதவூரர்).
ஊர் : பாண்டிய நாட்டிலுள்ள திருவாதவூர்.
பணி : அரிமர்த்தன பாண்டியனிடம் அமைச்சர்.
காலம் : கி. பி. 2ஆம் நூற்றாண்டென்றும், 9ஆம் நூற்றாண் டென்றும் கூறுவர்.
சிறப்புப் பெயர் : தென்னவன் பிரமராயன், இது பாண்டியனால் கொடுக்கப்பட்டது.
வேறு நூல் : திருக்கோவையார்.

இப்பாடல் மாணிக்கவாசகர் அருளிய திருவாசகத்தில் "பிடித்த பத்து" என்னும் பதிகத்தில் உள்ளதாகும்.

### சொற்பொருள்

சிவபெருமானே நீ -
பால் நினைந்து ஊட்டும் தாயினும் - குழந்தைக்குப் பசிக்குங் காலத்தைத் தானே நினைந்து, பாலை உண்பிக்கின்ற தாயைக் காட்டிலும்,
சாலப் பரிந்து - மிகுதியும் அன்பு கொண்டு இரங்கி,
பாவியேனுடைய - பாவியாகிய என்னுடைய,
ஊனினை உருக்கி - புற உடம்பை மெலிவித்து,
உள் ஒளி பெருக்கி - உள்ளத்தே ஞான ஒளியை மிகுவித்து,
உலப்பு இலா - கேடில்லாத,
ஆனந்தம் ஆய - இன்பமாகிய,
தேனினைச் சொரிந்து - தேனை வார்த்து,
புறம் புறம் திரிந்த-புறமெல்லாம் திரிகின்ற,
செல்வமே - பெறுதற்கரிய செல்வமே,
யான் உனை தொடர்ந்து - நான் உன்னையே பின் தொடர்ந்து வந்து,
சிக்கெனப் பிடித்தேன்-நன்றாகப் பற்றிக் கொண்டேன்,
இனி எங்கு எழுந்தருளுவது - இனிமேல் நீ எங்கே எழுந்து செல்ல முடியும்?

### கருத்து

தாயைக் காட்டிலும் அன்பு கொண்டு என்னுடைய அறிவொளியைப் பெருக்கி இன்பந் தந்தருளிய சிவபெருமானே! உன்னைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டேன். இனி நீ எனக்கு அருள் செய்யாமல் எங்கே செல்ல முடியும் ?

### விளக்கம்

உலகில் குழந்தை பசித்து அழுதால் ஓடி வந்து பால் தரும் தாயரும், அழுதாலும் காலந் தாழ்த்தித் தரும் அன்னையரும் எனப் பலவகையாக உள்ளனர். ஆனல் இங்கே கூறப்படுகின்ற தாய் குழந்தை அழா முன்பே பசிக்கும் காலத்தையறிந்து பாலூட்டும் தாய். அத்தகைய தாயன்னைக் காட்டிலும் சிறந்தது சிவபெருமான் அன்பு எனச் செப்புகின்ருர்.

தாய் ஊனினைப் பெருக்குவாள். இறைவனே உள்ளொளியைப் பெருக்கி அருளுகின்றான். பாவியேன் என்றது அடியார்கள் இறைவன் முன்பு தம்மை அடக்கமாகக் கூறிக்கொள்ளும் மரபு பற்றியாகும். நான் பாவியாக இருந்தும் எனக்கு அருள் புரிந்தனையே என இறைவன் அருட் குறிப்பைப் புலப்படுத்துகின்ருர். ஊன் உருகுதலும், உள்ளொளி பெருகுதலும் அடியவர்க்கு இயல்பு.

சிக்கென—கன்னடத்திலிருந்து தமிழில் வந்து வழங்கும் திசைச் சொல். உன்னையே தொடர்ந்து வந்து நன்ருக இறுகப் பிடித்துக் கொண்டேன். அந்தப் பிடியிலிருந்து நீ தப்பவே முடியாது. கட்டாயம் எனக்கு அருள் செய்துதான் தீர வேண்டும் என்று கூறுகிருர்.

### இலக்கணம்

சால— உரிச்சொல்
ஊன்—சினையாகுபெயர்
இலா—ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சம்
உனை— இடைக்குறை

ஆழ்வார்கள் திருமால் மீது பாடிய பாக்களின் தொகுதி நாலாயிர திவ்விய பிரபந்தம் எனப்படும். நம் பாடப் பகுதி பெரிய திருமொழி என்னும் பகுதியில் வருவதாகும். இப்பாடலின் ஆசிரியர் திருமங்கை ஆழ்வார். இவர் திருமாலடியாரான பன்னிரு ஆழ்வார்களில் ஒருவர். இவர் திருமங்கை மன்னன் என்றும் சொல்லப் படுவார்.

## 4. குலந்தரும்..........................................னாம்

### சொற்பொருள்

குலம் தரும் - உயர்குடிப்பிறப்பைத் தருவதும்,
செல்வம் தந்திடும்-செல்வ வளத்தைத் தருவதும்,
அடியார் படுதுயர் ஆயின எல்லாம்-அடியவர் அடையும் துன்பமெல்லாவற்றையும்,

நிலந்தரம் செய்யும்-நீக்குவதும்,
நீள் விசும்பு அருளும் - உயர்ந்த
 வீடுபேற்றைக் கொடுப்பதும்,
அருளொடு பெரு நிலம் அளிக்
 கும் கருணையொடு பெரிய
 நிலத்தையும் கொடுப்பதும்,
வலம் தரும் - வெற்றியைக்
 கொடுப்பதும்,
மற்றும் தந்திடும் - ஏனையவற்
 றையும் கொடுப்பதும்,
பெற்ற தாயினும்-பெற்றெடுத்த
 தாயைக் காட்டிலும்,
ஆயின செய்யும் - நல்லனவற்
 றைச் செய்வதும்,
நலம் தரும்-எல்லா நலன்களையும்
 தருவதும்(ஆகிய),
சொல்லை-ஒரு சொல்லை,
நான் கண்டு கொண்டேன்-நான்
 அறிந்து கொண்டேன், (அது
 யாதெனின்)
நாராயணா என்னும் நாமம் - நா
 ராயணா என்று சொல்லப்படு
 கின்ற திருப் பெயரேயாகும்.

### கருத்து

குலம், செல்வம், நீள்விசும்பு, அருள், பெரு நிலம், வலம், நலம் முதலிய எல்லா நலன்களையும் தருவதும் அடியவர் துன்பம் நீக்கித் தாயைக் காட்டிலும் மேலானவற்றைச் செய்வதும் ஆகிய ஒரு சொல்லை நான் அறிந்து கொண்டேன். அதுதான் நாராயணா என்னும் நாமமாகும்.

### விளக்கம்

நாராயணனுடைய திரு நாமத்தைச் சொன்னால் இவ்வளவு நன்மைகளும் உண்டாகும். அதனால் உலகத்தார் அனைவரும் அத் திரு நாமத்தைச் சொல்லுங்கள் என்றவாறு. இவ்வுலகத்து நன்மைகளையும் மறுவுலகத்து நன்மைகளையும் பெற அரிய முயற்சிகள் தேவையில்லை; ஒரு சொல்லே போதும்; அதவும் நாராயணா என்ற ஒன்றே போதும் என்கிறார்.

'நான் கண்டு கொண்டேன்' என்பதால் எனக்கு இனி ஒரு குறையும் இல்லை; ஒரு கவலையும் இல்லை என்கிறார்.

'பெற்ற தாயினும் ஆயின செய்யும்' என்பதைப் 'பால் நினைந் தூட்டும் தாயினும் சாலப் பரிந்து' என்னும் திருவாசகத்துடன் ஒப்பிட்டுக் காண்க.

### இலக்கணம்

தரும், தந்திடும், அருளும், அளிக்கும், செய்யும்—அனைத்தும்
 செய்யுமென்னும் வாய் பாட்டுப் பெயரெச்சங்கள்.
படுதுயர்—வினைத்தொகை.
அருளொடு— ஒடு எண்ணுப் பொருளில் வந்தது.
ஆயின— வினையாலணையும் பெயர்.

5. சிறந்தமெய்........................மறந்தவரே •

இப்பாடல் சீறுப் புராணத்தில் வருவதாகும். சீறுப்புராணம் என்பது பெரியோர்களுடைய புகழ் நெறிகளைக் கூறும் பழைய வரலாறு எனப் பொருள் படும். சீறு—பெரியோர்களுடைய புகழ்,

ஒழுக்கம். இந்நூல் முகம்மது நபியின் வாழ்க்கை வரலாற்றை விவரிப்பதாகும் சொல்லழகு, பொருளழகு வாய்ந்து, ஓசை நயத்துடன் இலங்குவது. இசுலாம் மதக் கொள்கைகளை விளக்குவது. இதனை இயற்றிய ஆசிரியர் உமறுப் புலவர் என்பவர் ஆவர்.

## ஆசிரியரைப்பற்றி :

பெயர் : உமறுப் புலவர்
ஊர் : நாகலாபுரம் (பாண்டிய நாடு)
தந்தை : மாப்பிள்ளை முகம்மது நயினார் பிள்ளை
மரபு: குறைஷி (குருமார்) குலம்
மதம் : இசுலாமிய மதம்
காலம் : கி பி. பதினேழாம் நூற்றாண்டின் இறுதி
இவர் கடிகை முத்துப் புலவரின் மாணவர் ; எட்டையபுரத்து மன்னரின் அவைக்களப் புலவராக இருந்தவர்

## சொற்பொருள்

சிறந்த மெய்ப்பொருளை - சிறப்புடையதான நிலைத்த உண்மைப் பொருளும்,
அழிவுஇலா மணியை-என்றும் அழியாத மணியும், (ஆகிய இறைவனை)
தெரிந்து முக்காலமும் உணர்ந்து - அறிந்து முக்கால நிகழ்ச்சிகளையும் உணரப் பெற்று,
துறந்தவர்—இவ்வுலகப் பற்றுக்களைத் துறந்த பெரியவர்களுடைய,
இதய ஆசனத்து இருந்தவனை - மனமாகிய பீடத்தில் எழுந்தருளியவனும்,
தொடர் இன்பம் துன்பம் - பிறவிதோறும் தொடர்ந்து வருகின்ற இன்ப துன்பங்கள்,
அற்றவனை - நீங்கப் பெற்றவனும்,
பிறந்த பல் உயிரின் - உலகில் பிறந்த உயிர்களினுடைய,
மனத்து அளவு உறைந்து-மனத்தளவிலே தங்கி,
பிறப்பு இறப்பு என்று இலாதவனை - பிறப்பும் இறப்பும் ஆகிய ஒன்றுமே இல்லாதவனும், (ஆகிய தலைவனை)
மறந்தவர் - மறந்தவர்கள்,
சுவர்க்கம் பதியையும் மறந்து — சுவர்க்கம் என்ற பதி ஒன்று உளதாதலையும் மறந்து,
மண்ணினில் - இவ்வுலகில்,
மதி மறந்தவரே - தம் அறிவையும் மறந்தவரே ஆவர்.

## கருத்து

மெய்ப்பொருளும், அழிவிலா மணியும் ஆகிய இறைவனையறிந்து, இவ்வுலகத்தைத் துறந்தவர்களுடைய மனத்தில் இருப்பவனும் இன்ப துன்ப மற்றவனும் பிறப்பு இறப்பு இல்லாதவனும் ஆன ஆண்டவனை மறந்தவர்கள் சுவர்க்கத்தையும் தம் அறிவையும் மறந்தவராவர்.

### விளக்கம்

மெய்ப்பொருளைத் தெரிந்தவர்களே முக்காலமும் உணர முடியும் என்பதை அறிவுறுத்த 'மெய்ப் பொருளைத் தெரிந்து முக்காலமும் உணர்ந்து' என்றார்.

முக்கால நிகழ்ச்சிகளையும் உணர வல்லார் துறவிகளே யாதலின் 'முக்காலமுமுணர்ந்து துறந்தவர்' என்றார்.

'துறந்தவர் இதயாசனத்திருந்தவனை' இப்பகுதி 'மலர்மிசை ஏகினான்' என்னும் குறளையும் 'நினைப்பவர் மனம் கோவிலாகக் கொண்டவன்' என்ற தேவாரப் பகுதியையும் நினைவூட்டுகிறது.

இறைவன் இன்பதுன்பங்களுக்குக் காரணமான வேண்டுதல் வேண்டாமை இல்லாதவனாதலின் அவனை 'இன்பதுன்பமற்றவன்' என்றார்.

இன்பமும் துன்பமும் பிறவிதோறும் தொடர்ந்து வருவதாலும் இன்பத்தைத் தொடர்ந்து துன்பமும் துன்பத்தைத் தொடர்ந்து இன்பமும் வருவதாலும் 'தொடர் இன்ப துன்பம்' எனப்பட்டது.

அவனை மறந்தவர்களுக்குச் சுவர்க்கமும் இல்லை; மதியும் இல்லை என்பார் 'பதியும் மறந்து மதியும் மறந்தவரே' என்று கூறுகின்றார்.

### இலக்கணம்

இலா—ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்
இதயாசனம்—உருவகம்
இன்ப துன்பம், பிறப்பிறப்பு—இரண்டும் உம்மைத் தொகைகள்
மறந்தவர்—வினையாலணையும் பெயர்
சுவர்க்கப்பதி—இருபெயரொட்டுப் பண்புத்தொகை
பதியையும் மறந்து—உம்மை எதிரது தழுவிய எச்சவும்மை, பின்னே வரும் மதிமறத்தலைத் தழுவி வந்தமையால் எதிரது தழுவியதாயிற்று.
மறந்தவரே—ஏகாரம் தேற்றப் பொருளில் வந்தது.

## 6. தடையில்............................சொல்வதே

இப்பாடல் மாயூரம் வேதநாயகம் பிள்ளை அவர்களால் பாடப்பட்டதாகும்.

### ஆசிரியரைப்பற்றி:

பெயர்: மாயூரம் வேதநாயகம் பிள்ளை
ஊர்: திருச்சியை அடுத்த குளத்தூர்
மதம்: கத்தோலிக்கக் கிறித்தவர். ஆயினும் பொதுநோக்குடையவர்.
காலம்: பிறப்பு: 11—10—1826. மறைவு: 21—7—1889.

பிறநூல்கள் : நீதிநூல், பெண்மதிமாலை, சர்வசமய சமரசக் கீர்த்தனை, பிரதாப முதலியார் சரித்திரம், சுகுண சுந்தரி, சில தனிப்பாடல்கள்.

இவர் மாயூரம், சீர்காழி முதலிய இடங்களில் 'ஜில்லா முன்சீப்'பாக இருந்தவர்; தமிழில் 'நாவல்' எழுதுவதற்கு அடிகோலியவர்.

## சொற்பொருள்

தடை இல் கொடை - தங்கு தடையில்லாமல் கொடுக்கின்ற வள்ளன்மைக் குணமுடைய,
சுப்பிரமணிய ஐய - சுப்பிரமணிய தேசிகர் என்னும் பெயரையுடைய பெரியோய்,
நின் சார்ந்தவர் கொள் கொடையை - உன்னைச் சார்ந்து வந்தவர்கள் பெற்ற கொடைத் திறமையைப்பற்றி,
அவர் சொல வேண்டுங்கொலோ - அவர்களே சொல்ல வேண்டுமோ ?
அவர் குட்சி சொலும் - அவர்களுடைய வயிறு சொல்லும்,
இடைசொலும் - அவர்களுடைய இடையிலுள்ள பட்டாடைகள் சொல்லும்,
கண்டமும் காதும் சொலும் - அவர்களுடைய கழுத்திலும் காதிலும் உள்ள அணிகலன்கள் சொல்லும்,
இறுமாப்புடைய நடை சொலும் - செருக்குடன் நடக்கும் அவர்களுடைய நடையும் சொல்லும்,
கையில் குடை சொலும் - அவர்களுடைய கையில் உள்ள குடையும் சொல்லும், (இவைகளே நின் கொடைப் பெருமையைச் சொல்லி விட்ட பிறகு)
வேறு என்ன நான் சொல்வது - நான் சொல்வதற்கு வேறென்ன இருக்கிறது?

## கருத்து

சுப்பிரமணியப் பெருந்தகையே உன்னுடைய கொடைப் பெருமையை உன்னிடம் வந்து பரிசில் பெற்றவர்கள் சொல்லவாவேண்டும் ? நின்பால் அவர்கள் பரிசிலாகப் பெற்று இடையிலும் கழுத்திலும் காதிலும் அணிந்திருக்கும் பொருள்களும் அவர்களுடைய பெருமித நடையும் கையில் வைத்துள்ள குடையுமே சொல்லும். அவ்வாறிருக்க நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது ?

## விளக்கம்

சுப்பிரமணிய வள்ளல் தன்பால் வந்தவர்கட்கு வயிரார உணவும், பட்டாடையும், கழுத்தணி, காதணிகளும், குடை முதலிய பொருள்களும் பரிசில்களாகக் கொடுத்துச் சிறப்புச் செய்துள்ளார். இத்தகைய பரிசில்கள் பெற்ற காரணத்தால், அவர்கள் பெருமிதமாக நடை போடுகிறார்கள். அதனால் அவருடைய கொடைப் பெருமையை இடையும் நடையும் குடையும் கண்டமும் காதும் சொல்லும் என்று கூறுகின்றார். குட்சி - வயிறு.

### இலக்கணம்

நிற்சார்ந்தவர்—நின்+சார்ந்தவர். இரண்டாம் வேற்றுமைத் தொகை.

சொல்—சொல்ல என்பதன் இடைக்குறை.

வேண்டுங்கொலோ—கொல்—அசைநிலை; ஓ—வினாப்பொருள்.

இடை, கண்டம், காது—இடவாகுபெயர்கள். இடை முதலிய இடங்களில் உள்ள பொருள்களைக் குறிக்கும்.

# ௰. தமிழும் தமிழரும்

தமிழ் மொழியின் சிறப்பையும், தமிழரின் சிறப்பையும் பாராட்டிக் கூறும் பாடல்கள் இப்பகுதியில் இடம் பெறுகின்றன. பழம் பாடலொன்றும், பாரதியார், பாரதிதாசன், நாமக்கல் கவிஞர், இவர்களுடைய பாடல்களும் இங்குப் பாடமாக வந்துள்ளன.

## 1. தமிழ்

ஓங்கலிடை.........................................தமிழ்

### சொற்பொருள்

ஓங்கல் இடை வந்து - மலையிடைப் பிறந்து,

உயர்ந்தோர் தொழ விளங்கி - சான்றோர்கள் தொழும்படியாக விளக்கமுற்று,

ஓங்கு ஒலி நீர் - மிக்க ஒலியையுடைய கடல் நீரால் சூழப்பட்ட,

ஞாலத்து இருள் அகற்றும் - உலகத்து இருளை நீக்குகின்ற,

அவற்றுள் ஒன்று - இரண்டு பொருள்களுள் ஒன்று,

மின் ஏர் தனி ஆழி - ஒளியும், அழகும், ஒற்றைச் சக்கரமும் உடைய,

வெம் கதிர் - வெப்பம் பொருந்திய கதிரோன் ஆகும்,

ஏனையது - மற்றொன்று,

தன் நேர் இலாத தமிழ் - தனக்கு ஒப்பில்லாத தமிழ் மொழி ஆகும்.

### விளக்கம்

ஓங்கலிடை வருதலும், உயர்ந்தோர் தொழ விளங்குதலும், ஞாலத்து இருள் அகற்றலும் கதிரவனுக்கும் தமிழுக்கும் உரிய தொழில்கள்.

கதிரவனுக்கு : உதயகிரியில் தோன்றுதலும் காலையில் பெரியவர்களால் தொழப்படுதலும் உலகில் இரவுப் பொழுதை விலக்குதலுமாகக் கொள்க.

தமிழுக்கு: பொதிய மலையில் பிறத்தலும், சான்றோரால் புகழ்ந்து வணங்கப் படுதலும் உலகத்து அறியாமை இருளை அகற்றுதலுமாகக் கொள்க.

கதிரவன் தேருக்கு ஒற்றைச் சக்கரந்தான் உண்டு எனக் கூறுவர். இப்பாடலில் வேற்றுமை அணி அமைந்துள்ளது. வேற்றுமை அணியாவது உவமான உவமேயங்களாகிய இரண்டு பொருள்களுள் யாதேனும் ஒன்றைச் சிறப்புடையதாகச் சொல்வது. இப்பாடலில் தமிழாகிய உவமேயத்தையும், கதிரவனாகிய உவமானத்தையும் ஒன்றுபடுத்திக் கூறிய ஆசிரியர், தமிழைக் கூறும் பொழுது தனக்கு ஒப்பில்லாத தமிழ் என்று கூறுகின்றார். இதனால் கதிரவனுக்கு ஒப்புச் சொல்ல உலகில் ஒரு பொருள் உண்டென்றும், தமிழுக்கு ஒப்புச் சொல்ல ஒரு பொருள் இல்லையென்றும் அறிகின்றோம். ஆகவே கதிரவனை விடத் தமிழ் சிறப்புடைத்து என்பதாயிற்று. அதனால் இது வேற்றுமை அணியின்பாற்படும்.

இலக்கணம்

நீர்—தானி ஆகுபெயர். (இடத்திலுள்ள பெயர் இடத்திற்காயிற்று.)

இலாத—இடைக்குறை,

## 2. தமிழ் மொழி

தமிழ் மொழி, தமிழ்ப் புலவர் என்ற இரு தலைப்பிலும் வரும் பாடல்களிரண்டும் பாரதியார் கவிதைகள் என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டவை.

**ஆசிரியரைப்பற்றி:**

பெயர்: தேசியக் கவி சி. சுப்பிரமணிய பாரதியார்.
ஊர்: பாண்டிய நாட்டிலுள்ள எட்டையபுரம்.
தந்தை: சின்னசாமி ஐயர்.
தாய்: இலக்குமி அம்மாள்.
காலம்: தோற்றம்–1882. மறைவு–1921 செப்டம்பர் 11.

இவர் மொழிப் பற்றும் நாட்டுப் பற்றும் வாய்ந்தவர். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய உணர்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு பல பாடல்கள் இயற்றினார். இளமையிலேயே பாடல் இயற்றும் வன்மை பெற்றிருந்தமையால் 'பாரதி' என்ற பட்டம் பெற்றனர். நாட்டு விடுதலைப்போரில் பேரார்வம் காட்டினார். கவிதைத் துறையில் புதுமையையும் புரட்சியையும் உண்டாக்கிப் புதிய கவிஞர் பரம்பரையைத் தோற்றுவித்தார். 'சுதேசமித்திரன்' பத்திரிகையில் துணையாசிரியராகப் பணி புரிந்தார். 'இந்தியா' என்ற பத்திரிகையைத் தாமே நடத்திவந்தார். அரசியல் அடக்கு முறையால் புதுச்சேரியில் சில காலம் தங்கியிருந்தார். இறுதியில் திருவல்லிக்கேணியில் உயிர் துறந்தார்.

பாரதியார் பாடல்கள் எளிமையும் இனிமையும் உடையன. நாட்டுப்பற்றையும் மொழிப்பற்றையும் ஊட்டுவன. பயில்வார்தம் உள்ளுணர்ச்சிகளைத் தட்டி எழுப்பி, விசையொடிந்த தேகங்களில் முறுக்கேற்றி வீரமூட்டுவன. இவர் கதைகளும் எழுதியுள்ளார்.

## யாமறிந்த..........................................வேண்டும்

பாடல்கள் எளிமையானமையால் சொற்பொருள் தரப்படவில்லை.

### கருத்து

யாம் தெரிந்துகொண்ட பல மொழிகளுக்குள்ளும் தமிழ் மொழியைப் போன்ற இனிய மொழி எங்குமே கண்டதில்லை. (அவ்வளவு சிறந்த மொழியை நாம் பெற்றிருந்தும்) பாமரத் தன்மையுடையவர்களாய், விலங்குகளாய் உலகத்தார் நம்மை இகழ்ந்து பேச, இயல்பு கெட்டுப் பெயரளவிலே தமிழர் என்று சொல்லிக் கொண்டு உயிர் வாழ்வது நல்லதா? சொல்லுங்கள். இனிமையான தமிழோசை உலகமுழுவதும் பரவும்படி இனி நாம் செய்ய வேண்டும்.

### விளக்கம்

பாமரர்—கல்வியறிவில்லாதவர்; பான்மை—இயல்பு; நாமம்—பெயர்; தேமதுரம்—தேனின் இனிமை.

பாரதியார் இந்தி, வடமொழி, ஆங்கிலம் போன்ற பல மொழிகளும் பயின்றுள்ளார்; ஆதலின் 'யாமறிந்த மொழிகளிலே' என்றார்.

விலங்குகள் பேசாதவை. மனிதர்களோ பேசுபவர்கள். அதிலும் நாமோ இனிய தமிழ் மொழியைப் பேசுபவர்கள். அது நமது தாய் மொழி. அதனைக் கற்பதும் வளர்ப்பதும் நமது கடமை. விலங்குகளுக்கு அந்த அக்கறையே இல்லை. நாமும் அவ்வாறு இருந்தால் நமக்கும் விலங்கினங்களுக்கும் வேறுபாடில்லை யாதலின் 'விலங்குகளாய்' என்றார். தமிழர்கள் மான உணர்ச்சி உடையவர்கள். பிறர் பழித்துரைக்க இடங்கொடார். ஆனால் இன்றோ உலகம் இகழ்ச்சி சொல்கிறது அதைக் கேட்டும் சும்மா கிடக்கின்றார்கள். தாய் மொழியில் அக்கறை கொள்வதாக இல்லை. இவ்வாறு மானவுணர்ச்சியற்ற நிலையில் தமிழர் என்ற பெயரளவில் வாழ்கின்றார்களே தவிரச் செயலளவில் தமிழராக இல்லை என்று வருந்தி 'நாமமது தமிழரெனக் கொண்டு' என்று கூறுகின்றார்.

இனியேனும் தமிழின் ஒலி திக்கெட்டும் பரவட்டும் என ஆணையிடுகிறார்.

### இலக்கணம்

காணேம்—தன்மைப் பன்மை எதிர்மறைவினைமுற்று.
தேமதுரம்—தேன்+மதுரம்.
செய்தல் வேண்டும்—செய்க என்னும் பொருள்பட்டு வியங்கோள் வினை முற்றின்பாற்படும்.

## தமிழ்ப் புலவர்

**யாமறிந்த......................................செய்வீர்**

### கருத்து

யாம் தெரிந்துகொண்ட புலவர்களுக்குள் கம்பர், வள்ளுவர், இளங்கோ என்ற புலவர்களைப்போல உலகில் எங்கும் பிறந்திலர். இது உண்மையேயன்றி புகழ்ச்சியன்று. நாம் ஊமையாகவும், செவிடாகவும், குருடாகவும் வாழ்கின்றேம்; உங்கட்கு ஒன்று சொல்லுவேன் நீங்கள் நலமாக, இன்பமாக வாழவேண்டுமென்ருல் தெருவெல்லாம் தமிழ் முழங்கச்செய்வீர்.

### விளக்கம்

பலமொழிக் காப்பியங்களையும் பயின்றவராதலின் இவர்களைப் போன்ற புலவர்கள் எங்குமே பிறந்ததில்லை என்று அறுதியிட்டுக் கூறுகின்ருர்.

தமிழ் என் தாய்மொழியாக இருப்பதால் உயர்வு நவிற்சியாகப் புகழ்ந்து கூறுகின்றேன் என்று எண்ண வேண்டாம். இது முற்றிலும் 'சத்தியம்' என்று கூறுவார்; 'உண்மை' என்று ஓதுகின்ருர்.

பாரதிக்குத் தாழ்வுற்றுக் கிடக்கும் தமிழ்ச் சமுதாயத்தைக் கண்டதும் சினம் பொங்கிக் கொண்டு வருகின்றது. தமிழின் பெருமையை ஓதாத வாய் ஊமையே; தமிழைக் கேளாத உலகனைத்தும் இகழ்ச்சி சொல அதையும் கேளாத செவி செவிடே; நம் நாட்டுத் தாழ்நிலையை, மற்ற நாடுகளின் மொழிப் பற்றைக் காணுத கண்கள் குருடே எனக் குமுறுகிருர்.

இனி அதிகம் சொல்வானேன்; ஒரே சொல், அதுவும் உறுதி தரும் சொல் கூறுவேன்; அதை உன்னிப்பாகக் கேளுங்கள் என்பார் "ஒரு சொற் கேளீர்" என்ருர்.

தமிழர் நலம் பெற வேண்டுமானல் தெருவெங்கும் தமிழ் முழங்க வேண்டும். முழங்காவிடின் அவர்கள் வாழ்வு விடியாது என்றும் மனம் நொந்து பாடுகிறார். சேமம்—நலம்.

இலக்கணம்

இடை—இடைக்குறை.

## 3. திருவள்ளுவர்

திருவள்ளுவரைப் பற்றி வருகின்ற இவ்விரு பாடல்களும் பாரதிதாசன் கவிதைகள்—(இரண்டாம் தொகுதி) என்னும் நூலில் வள்ளுவர் வழங்கிய முத்துக்கள் என்னும் தலைப்பில் வருவனவாம்.

ஆசிரியரைப்பற்றி:

பெயர் : பாரதி தாசன்.

இயற் பெயர் : கனக சுப்பு ரத்தினம்.

ஊர் : புதுச்சேரி.

தந்தை : கனகசபை முதலியார்.

காலம் : 1891 ஏப்பிரல் 29ல் பிறந்தார்.

பிறநூல்கள் : குடும்ப விளக்கு, இருண்ட வீடு, பாண்டியன் பரிசு, தமிழியக்கம், எதிர்பாராத முத்தம், சேரதாண்டவம் முதலிய நூல்கள்.

இவர்பாரதிபரம்பையில் தலைசிறந்தவராவர். அவரோடு நெருங்கிய தொடர்புடையவர். அவர்பால் கொண்ட பேரன்பு காரணமாகத் தமது பெயரை பாரதிதாசன் என வைத்துக் கொண்டார். இவர் தம் பாடல்கள் புரட்சிக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டவை. அதனல் புரட்சிக் கவிஞர் எனப்பட்டார். தமிழைப் பற்றி இவர் பாடுமிடமெல்லாம் இனிக்கும். பகுத்தறிவுப் பணியில் பெரும் பங்கு கொண்டவர். சமுதாயச் சீர்த்திருத்தத்தில் பெரும் நாட்டம் கொண்டவர். நாடு, மொழி, இனம் இவற்றிடம் நீங்காப் பற்றுக் கொண்டவர். இவர்தம் பாடல்கள் சில கனல் கக்கும்; சில தென்றலென வீசும்; சில தேன் என இனிக்கும். அனைவராலும் ஒருமுகமாகப் பெருங்கவிஞர் என்று பாராட்டப் பட்டவர்.

**தெள்ளு..............................................வையகமே**

### சொற்பொருள்

தெள்ளு தமிழ் நடை - தெளிவாகிய தமிழ் நடையால் ஆக்கப்பட்ட,
சின்னஞ்சிறிய இரண்டடிகள்- மிகச் சிறிய இரண்டு அடிகளையுடைய குறட்பாவில்,
அள்ளுதொறும் சுவை - அள்ளி அள்ளிப் பருகுந்தொறும் சுவையும்,
உள்ளுந்தொறும் உணர்வு- நினைக்குந்தொறும் நினைக்குந் தொறும் நல் உணர்வும்,
ஆகும் வண்ணம் - உண்டாகும் படியாக,
கொள்ளும் அறம் பொருள் இன்பம் - விரும்பி ஏற்றுக் கொள்ளத்தக்க அறம், பொருள் இன்பமாகிய,
அனைத்தும் கொடுத்த - எல்லாவற்றையும் தந்தருளிய,
திருவள்ளுவனை - திருவள்ளுவப் பெருந்தகையை,
பெற்றதால் - பெற்றெடுத்த காரணத்தால்,
வையகமும் புகழ் பெற்றது- இவ்வுலகம் பெரும் புகழை அடைந்தது.

### கருத்து

தெளிந்த தமிழ் நடையையுடைய இரண்டடிக் குறட்பாவில் சுவையும், உணர்வும் தோயும் வண்ணம் அறம் பொருள், இன்பம் முதலிய அனைத்தும் ஓதியருளிய வள்ளுவனைப் பெற்றமையால் உலகம் புகழைப் பெற்றது.

### விளக்கம்

ஏனைய சுவைகள் ஒரு முறைக்கு மேல் உண்டால் தெவிட்டும் தன்மையன. ஆனால் திருக்குறள் தரும் சுவையோ எத்தனை முறை உண்டாலும் தெவிட்டாமல் சுவைக்கும் இயல்புடையது என்பது தோன்ற "அள்ளுதொறும் சுவை" என்றார்.

எல்லா நூல்களும் சுவை தருவனவாக இருக்கலாம். உணர்வை எழுப்பவல்லன ஆகா. சில, சுவையொடு உணர்வையும் எழுப்ப வல்லனவாக இருக்கலாம். ஆயினும் அந்நூல்களைப் படிக்கும் பொழுதுதான் அவ்வாற்றல் உடையனவாக இருக்கும். திருக்குறளோ படிக்கும் பொழுதும், படித்த பின் நினைக்கும் பொழுதும் உணர்வை எழுப்ப வல்லது. அதுவும் நினைக்கும் பொழுதெல்லாம் எழுப்பவல்லது என்பது தோன்ற "உள்ளுந்தொறும் உணர்வாகும்" என்றார். இப்பகுதி "நவில்தொறும் நூல்நயம் போலும்" என்பதை நினைப்பூட்டுகிறது.

அறம், பொருள், இன்பம் என்பனவற்றை வேண்டாதவர் உலகில் ஒருவரும் இலர்; யாவரும் விரும்பி ஏற்றுக் கொள்ளுவர். ஆதலின் "கொள்ளும்" என அடைமொழி கொடுக்கப்பட்டது.

சிறிய இரண்டடிக்குள் அனைத்தையும் கொடுத்த ஒரு வள்ளுநனை இந்த வையகம் பெற்றது என்று வியக்கின்றார்.

### இலக்கணம்

அறம், பொருள், இன்பம்—உம்மைத்தொகை.
அனைத்தும்—உம்மை முற்றும்மை.

**வெல்லாத..............................................இந்நிலத்தே**

### சொற்பொருள்

திருவள்ளுவன் வாய்விளைத் தவற்றுள் - திருவள்ளுவருடைய வாய் தோற்றுவித்த குறட்பாக்களுக்குள்,
வெல்லாதது இல்லை - வெற்றி பெறாதது ஒன்றுமில்லை (அனைத்தும் வெற்றியுடையன),
புரை தீர்ந்த வாழ்வினில் - குற்றமற்ற வாழ்வுக்கு,
அழைத்துச் செல்லாதது இல்லை- மக்களை அழைத்துச் செல்லாத ஒரு பகுதியும் இல்லை,
பொது மறையான திருக்குறளில் - பொது மறையென்று புகழப்படுகின்ற திருக்குறளிலே,
இல்லாதது இல்லை - இல்லாத பொருள் உலகில் எங்கும் இல்லை,
இந்நிலத்து - இந்த உலகத்திலே,
முப்பாலுக்கு இணையில்லை- மூன்று பகுப்பினதாகிய திருக்குறளுக்கு ஒப்பான நூல் ஒன்றுமில்லை.

### கருத்து

திருக்குறட்பாக்கள் அனைத்தும் வெல்லும் தன்மையன; நன்மை தருவன; நல்வாழ்வுக்கு வழி காட்டுவன; எல்லாப் பொருளையும் மொழிவன; ஆதலின் திருக்குறளுக்கு ஒப்பான நூல் ஒன்றுமில்லை.

### விளக்கம்

திருக்குறளை மறுவற நன்குணர்ந்தவர்கள் தம் வாழ்வில் எக் குற்றமும் வாராமல் காத்துக் கொள்வர். ஆதலின் "புரைதீர்ந்த வாழ்வினிலே அழைத்துச் செல்லாததில்லை" என்றார். வள்ளுவன் சொல்லை வெல்லும் சொல் ஒன்றில்லையாதலின், பிற சொல்லை இவன் சொல் வென்று விடுகிறது. அதனால் "வெல்லாததில்லை" என்றார்.

இது பொதுமறையாதலினாலே எல்லார்க்கும் உகந்த பொருள்களனைத்தும் கூறப்பட்டிருக்கும். அதனால் "இல்லாததில்லை" என்றார். முப்பால்—திருக்குறள்; அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் மூன்று பால்களையுடையது.

### இலக்கணம்

வெல்லாதது—வினையாலணையும் பெயர்.
வாழ்வினில்—உருபு மயக்கம் (வாழ்வுக்கு)

## 4. தமிழன்

'தமிழன் என்ற பெருமையோடு' என்று தொடங்கும் பாடல் நாமக்கல் கவிஞருடைய 'தமிழன் இதயம்' என்னும் நூலின் 'இளந் தமிழருக்கு' என்ற தலைப்பில் வருவதாகும்.

### ஆசிரியரைப்பற்றி:

பெயர் : வே. இராமலிங்கம் பிள்ளை.
ஊர் : மோகனூரில் பிறந்தார்; நாமக்கல்லை வாழ்விடமாகக் கொண்டார்.
தந்தை : வேங்கடராம பிள்ளை.
காலம் : 1888 அக்டோபர் 10-ஆம் நாள் பிறந்தார்.
பிற நூல்கள் : அவனும் அவளும், மலைக்கள்ளன், சங்கொலி, மாமன் மகள், முதலியன.

இவர் கவிஞராக விளங்குவதுடன் சிறந்த ஓவியரும் ஆவார். விடுதலைப் போரில் பேரார்வம் காட்டியவர். 'கத்தியின்றி ரத்த மின்றி' என்ற இவரது பாடல் தமிழகமெங்கும் அறிமுகமான பாடலாகும். 'மலைக்கள்ளன்' பெயர் பெற்ற பெருங்கதை நூலாகும். இவர் நாமக்கல் கவிஞர் என அன்பாக அழைக்கப்படுகிறார். சென்னை அரசவைக் கவிஞராகவும் இருந்தார்.

### தமிழனென்ற..............................நீண்டநாள்

### சொற்பொருள்

இளந்தமிழா!
தமிழன் என்ற பெருமையோடு—நான் தமிழினத்தான் என்னும் பெருமிதத்துடன்,
தலை நிமிர்ந்து நில்லடா-தலையை நிமிர்த்தி நிற்பாயாக,
தரணி எங்கும் — உலகமுழுவதும்,
இணை இலா- ஒப்பில்லாத,
உன் சரிதை கொண்டு சொல்லடா — உன் வரலாற்றைப் பரப்புவாயாக,
அமிழ்தம் என்ற தமிழின் ஓசை—அமிழ்தம் போன்ற இனிமையான தமிழோசையை,
அண்டம் முட்ட—வானமுகட்டில் மோதும்படியாக,
உலகு எலாம்-உலக முழுவதும்,
அகில தேச மக்களும் — அனைத்து நாட்டு மக்களும்,
கண்டு ஆசை கொள்ளச்செய்து—பார்த்துத் தாமும் பயில வேண்டுமென்று விரும்பும்படி செய்து,

மேல் — மேலும்,
கமழ் மணத்தின் தமிழில்—புகழ் மணக்கும் தமிழ் மொழியில்,
பிற நாட்டில் உள்ள-ஏனைய நாட்டு மொழிகளில் உள்ள,
கலை எலாம் — சிறந்த கலைகளை யெல்லாம்,
கட்டி வந்து—ஒருசேரக் கொண்டு வந்து,
தமிழர் வீட்டில் — தமிழ் மக்களுடைய இல்லங்களிலெல்லாம்,
கதவு இடித்து கொட்டி — கதவிடிக்கும்படியாக நிறையச் செய்து,
நமது சொந்தம் இந்த நாடு—நமக்கே சொந்தமாகிய இந்தத் தமிழ்நாடு,
நானிலத்தில்—இந்த உலகிலே,
மீளவும்—மீண்டும்,
நல்ல வாழ்வு கொள்ள — நல் வாழ்வு பெறும்படியாக,
சேவை செய்து — தொண்டுகள் செய்து,
நீண்ட நாள் வாழ்க—நீண்ட காலம் வாழ்வாயாக.

## கருத்து

இளந்தமிழனே! தமிழன் என்ற பெருமிதத்துடன் நிமிர்ந்து நில்; உன் வரலாற்றை உலகெங்கும் பரப்பு; தமிழ் மொழியைத் தரணி முழுவதும் பரப்பி எல்லா நாட்டு மக்களும் விரும்பும்படி செய்; தமிழ் மொழியில் பிறமொழிக் கலைகளை மொழி பெயர்த்து வை; நம் நாடு மீண்டும் நல்வாழ்வு வாழப் பாடுபடு; நாட்டை உயர்த்தி நீண்ட நாள் வாழ்க.

## விளக்கம்

இப்பாடல் வளர்ந்து வரும் தமிழ்ச் சமுதாயச் செல்வங்களுக்கு நல்லதோர் அறிவுரையாகும்.

இந்த நாட்டு மகனை நோக்கி, நீ யார் என்றால் 'நான் தமிழன்' என்று சொல்லத் தயங்குகிறான்: அப்படியோர் இனமுண்டா என மயங்குகின்றான். அவனை நோக்கித் தட்டிக் கொடுத்து, இளைஞனே! தமிழன் என்றோர் இனமுண்டு; நீ அந்த இனத்தவன்தான். இனி மேலும் தமிழன் என்று சொல்; பெருமிதத்துடன் சொல்; தலை நிமிர்ந்து சொல் என்று இனவுணர்வை ஊட்டுகிறார் கவிஞர்.

'தமிழ் மகனே! உன் வரலாறு ஒப்பற்ற வரலாறு; உலகெங்குந் தேடினாலும் இதைப் போலக் காண முடியாது. அத்தகைய வரலாறு யாவரும் அறிய முடியாமல் மங்கிக் கிடக்கிறது. அதைத் திரை நீக்கி உலகுக்கு உணர்த்துவது உனது கடமை' எனக் கடமையுணர்வைச் சுட்டிக் காட்டுகிறார்.

தமிழ் மொழி அமிழ்தினும் இனியது; அவ்வினிமையை நீ மட்டும் நுகர்ந்தால் போதாது; உலகத்தார் எல்லாம் ஆசை கொள்ளும்படியாகச் செய்வதும் உன் பொறுப்பு என்று மொழியார்வத்தையும் மொழித் தொண்டையும் நினைப்பூட்டுகிறார். வெளிநாட்டில் உன் மொழியைப் பரப்பும்போது விழிப்பாக இரு, அஃதாவது

நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியதொன்றுண்டு. யாதெனில் கட்டாயப்படுத்தி வற்புறுத்தி உன் மொழியைப் புகுத்தாதே! அவர்களாகவே விரும்பிப் பயில வேண்டும். அதற்கு எது வழியோ அதைச் செய் என்று நளினமாக ‘ஆசை கொள்ளச் செய்’ என்கிறார்.

இன்னுமொரு மொழித் தொண்டு உண்டு. தமிழின் அருமையை வெளிநாட்டில் பரப்புவது போல் அந்நாட்டுக் கலைகளையும் நீ மொழி பெயர்த்துக் கொள். ஆயினும் அப்படியே உன் நாட்டுக்குள் நுழைய விடாதே என்பார் ‘கமழ் மணத்தின் தமிழில் கட்டி வா’ என்றும் முன்னறிவிப்புச் செய்கிறார்.

“நமது சொந்தம் இந்த நாடு” என்று கூறி இளைஞர் உள்ளத்தில் நாட்டுப்பற்றை ஊட்டுகிறார். அந்நாடு நல்வாழ்வு கொள்ளச் சேவை செய்ய வேண்டுவது இளைஞர்கள் கடமையாகும் என்று கூறி அதற்காகவே நீண்ட நாள வாழ்க என வாழ்த்தவும் செய்கிறார்.

“மீளவும்” என்பதனால் நம் நாடு முன்னர் நல்வாழ்வு வாழ்ந்திருந்தது என்பதையும் புலப்படுத்துகிறார். நாட்டுக்கு உழைப்பது தனக்குப் பயன் கருதியதாக இருத்தல் கூடாது என்பார் “சேவை” என்று கூறுகிறார்.

## இலக்கணம்

இலா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
நானிலம்—காரணப் பெயர்
வாழ்க—வியங்கோள் வினைமுற்று.

# பொதுச் செய்யுள் - வினாவிடை

## I. வாழ்த்து

### அ. கடவுள் வாழ்த்து

---

## 1. திருவருட்பா

1. இராமலிங்கர் எம்பெருமான் நடம்புரியும் இடமாக எதைக் குறிப்பிடுகின்றார் ?

ஒரு சிறிதும் வேறுபாடு கருதாது, எல்லாவுயிர்களையும் தம் முயிர்போல் ஒரே தன்மையாகக் கருதிக் களிப்பவருடைய நெஞ்சந்தான் எம்பெருமான் நடம்புரியும் இடமாகும் என்று இராமலிங்கர் கூறுகின்றார்.

2. வித்தகர்தம் அடிக்கு ஏவல் செய்ய அடிகளார் சிந்தை விழையக் காரணம் என்ன ?

எல்லாவுயிர்களையும் தம்முயிர்போல் கருதும் அந்த வித்தகருடைய நெஞ்சிற்றான் இறைவன் களித்து நடமாடுகின்றான். ஆதலால் அந்த வித்தகர்தம் அடிக்கு ஏவல் செய்ய இராமலிங்க அடிகளாருடைய சிந்தை விழைந்தது. அடியார்க்குச் செய்யும் சேவை ஆண்டவனுக்குச் செய்யும் சேவையாகும் என்பது அவருடைய கருத்து.

3. இலக்கணக் குறிப்பு வரைக :

சிந்தை விழைந்தது—காலவழுவமைதி.
எவ்வுயிரும்—முற்றும்மை.

4. உறுப்பிலக்கணந் தருக :

உறாது — உறு+ஆ+த்+உ. உறு—பகுதி, ஆ—எதிர்மறை இடைநிலை, த்—எழுத்துப்பேறு, உ—வினையெச்சவிகுதி.

விழைந்தது—விழை+த்+த்+அ+து. விழை—பகுதி, த்—சந்தி நகரமானது விகாரம், த்—இறந்தகால இடைநிலை, அ—சாரியை, து—ஒன்றன்பால் வினைமுற்று விகுதி.

## 2. அருள் வேட்டல்

**1. திரு. வி. க. இறைவனிடம் யாது சொல்லி முறையிடுகின்றார் ?**

எங்கும் நிறைந்து, வித்துக்கும் வித்தாகி, மேலெழும்பும் மூலைக்கு மூலையாகி விளங்கிவரும் இறைவனே ! உன்னைத் தவிர வேறொரு பொருள் உலகில் எங்கும் இல்லை. உனையன்றி ஓரணுவும் அசையாது. அனைத்துயிர்க்கும் அன்னையாகிய கடவுளே ! யான் உன்னை மறந்து எவ்வாறு உயிர்வாழ முடியும் ? என்று திரு. வி. க. இறைவனிடம் முறையிடுகின்றார்.

**2. இறைவன் இயல்பைத் திரு. வி. க. எவ்வாறு இயம்புகிறார்?**

எல்லா வுலகங்களும் இனிது வாழ எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பரம்பொருள் என்றும் வித்துக்கும் வித்தாகி, மூலைகட்கும் மூலையாகி விளங்கும் தெய்வமென்றும் எந்த இடத்தும் அவனையன்றி ஒரு பொருளும் இல்லை என்றும் ஓரணுவும் அவனில்லாமல் இயங்காது என்றும் எல்லாவுயிர்க்கும் தாயாக விளங்கும் இறைவன் என்றும் திரு. வி. க. இறைவன் இயல்பை இயம்புகின்றார்.

3. பிரித்தெழுதுக :

எவ்வுலகும்—எ+உலகு+உம்.
எம்மூலை—எ+மூலை.

4. உறுப்பிலக்கணந்தருக :

உய்வேன்—உய்+வ்+ஏன். உய்—பகுதி, வ்—எதிர்கால இடைநிலை, ஏன்—தன்மை ஒருமை வினைமுற்று விகுதி.

## ஆ. தமிழ்மொழி வாழ்த்து

**1. தமிழராகிய நாம் நையக் காரணங்கள் யாவை ? தமிழன்னைக்கு நாம் செய்யவேண்டிய பணிகள் யாவை ?**

தாய்மொழியாகிய தமிழ்மொழியின் நிலையைக் கண்டு அஃது உயர்வடைய முயலாமையாலும் பிறநாட்டு மொழிகளையே விரும்பிக் கற்று மகிழ்ந்தமையாலும் தமிழராகிய நாம் மனம் நொந்து வருந்தித் துன்புற்று மெலிந்தோம்.

தமிழன்னைக்கு நாம் செய்யவேண்டிய பணிகளாவன : நாம் கற்றுணர்ந்த பிறநாட்டுக் கலைகளைத் தமிழ் மொழியில் பெயர்த்துக் காட்டுதல். தமிழ் மொழியின் வளம் அனைத்தையும் எல்லாத் திசைகளிலும் சென்று விளக்கி வெற்றி முரசு கொட்டுதல், இவ்வாறு செய்து தமிழ்மொழி வாழிய வாழிய என வாழ்த்துதல்.

2. இலக்கணக் குறிப்பு வரைக :
அடி வாழ்த்துவம்—தன்மைப் பன்மை வினைமுற்று.
அவ்வே வாழிய—வியங்கோள் வினைமுற்று.

3. உறுப்பிலக்கணந் தருக :
பயின்று—பயில்+ற்+உ. பயில்—பகுதி, ற்—இறந்தகால இடைநிலை, உ—வினையெச்ச விகுதி.
முழக்குவம்—முழக்கு+வ்+அம். முழக்கு—பகுதி, வ்—எதிர்கால இடைநிலை, அம்—தன்மைப்பன்மை வினைமுற்று விகுதி.

## இ. நாட்டு வாழ்த்து

1. தமிழ் நாட்டின் சிறப்பை ஆசிரியர் எவ்வாறு விவரிக்கின்றார்?

தமிழ்நாடு இவ்வுலகத்திலேயே புகழ் பெற்ற நாடு; பூஞ்சோலைகளும் எழில்வனங்களும் மலைகளும் வற்றாது ஓடும் ஆறுகளும் நிறைந்திருக்கும் நாடு; கம்பன், ஔவை, திருவள்ளுவர், இளங்கோ, பாரதி முதலான புலவர்கள் பிறந்த நாடு; வாரி வழங்கும் வள்ளல்களும் மன்னர்களும் வாழ்ந்த நாடு என்று தமிழ்நாட்டின் சிறப்பை ஆசிரியர் விவரிக்கின்றார்.

2. இலக்கணக் குறிப்பு வரைக.
பைந்தமிழ்—பண்புத் தொகை.
பாய் நதி—வினைத்தொகை.
கவி பாரதி—இருபெயரொட்டுப் பண்புத் தொகை.

3. பிரித் தெழுதுக.
பைந்தமிழ்—பசுமை+தமிழ்

---

# II. அறவுரை

## அ. புறநானூறு

1. ஒருவன் எவ்வாறு கல்வி கற்க வேண்டும்?

ஆசிரியருக்குத் துன்பம் வந்த பொழுது அது நீங்கும்படி உதவி செய்தும், மிகுந்த பொருள் கொடுத்தும், ஆசிரியருக்கு வழிபாடு செய்வதில் வெறுப்புக் கொள்ளாமலும் ஒருவன் கல்வி கற்க வேண்டும்.

2. **கல்வியினால் விளையும் சிறப்புக்களாக நெடுஞ்செழியன் கூறுவன யாவை?**

பெற்றதாயும் தான்பெற்ற பல மக்களுக்குள் கல்வியுடையானிடத்தே தனியன்பு செலுத்துவாள். அரசனும், ஒரு குடியிற் பிறந்த பலருள்ளும் வயதுப் பெருமை பாராட்டி மூத்தவனை விரும்பாது, அறிவுப் பெருமை ஒன்றே கொண்டு அறிவுடைய ஒருவனையே விரும்பி அவன் வழிச் செல்லுவான். கீழ்ப்பால் ஒருவன் கற்றால் மேற்பாலவனும் கீழ்ப்படிந்து நடப்பான். அஃதாவது பிறப்பு வேறுபாடு ஒழியும். இவை கல்வியினால் விளையும் சிறப்புக்களாம்.

3. **ஏன் ஒருவன் கல்வி கற்க வேண்டும்?**

இவ்வினாவிற்கு 2ஆம் வினாவிற்குக் கூறிய விடையை எழுதி இறுதியில், இக்காரணங்களால் ஒருவன் கட்டாயம் கல்வி கற்க வேண்டும் என்று எழுதி முடிக்க.

4. **இலக்கணக் குறிப்பு வரைக.**

உற்றுழி—அகரம் தொகுத்தல் விகாரம்.
தாயும் மனந்திரியும்—உயர்வு சிறப்பும்மை.

5. **உறுப்பிலக்கணந் தருக.**

முனியாது—முனி+ஆ+த்+உ. முனி—பகுதி, ஆ—எதிர்மறை இடை நிலை, த்—எழுத்துப்பேறு, உ—வினையெச்ச விகுதி.

## ஆ. திருமந்திரம்

1. **திருமூலர் மக்களை நோக்கிக் கூறும் அறவுரை யாவை?**

உலகத்தீரே இன்னார் இனியார் என்று பாராமல் எல்லோர்க்கும் உதவுங்கள். விருந்தை எதிர் பார்த்திருந்து உண்ணுங்கள். பழம் பொருளைக் கட்டி வைத்துக் காத்துக் கொண்டிராதீர். தனித்திருந்து உண்ண விரையாதீர். காக்கையைப் பார்த்து அதன் பண்பைக் கடைப்பிடித்து ஒழுகுங்கள் என்று திருமூலர் உலகத்தார்க்கு அறவுரை கூறுகிறார்.

2. **எல்லோராலும் எளிதாகச் செய்யத் தக்க அறங்களாகத் திருமூலர் கூறுவன யாவை?**

இறைவனைப் பச்சிலையிட்டு வணங்குவதும் பசுவுக்கு ஒருவாய் உணவு கொடுப்பதும் பசித்தவனுக்கு ஒரு பிடி சோறு வழங்குவதும் பிறரிடம் இன்னுரை பேசுவதும் யாவராலும் செய்யத்தக்க அறங்களாகும் எனத் திருமூலர் கூறுகிறார்.

3. **இலக்கணக் குறிப்பு வரைக.**

ஆர்க்கும் இடுமின்—முற்றும்மை.
காலம் அறிமின்—ஏவற்பன்மை வினைமுற்று.
உண்ணன்மின்—எதிர்மறை ஏவல் பன்மை வினைமுற்று.
ஒரு கைப்பிடி—அளவையாகு பெயர்.

4. **உறுப்பிலக்கணந் தருக.**

உண்ணன்மின்—உண்+அல்+மின். உண்-பகுதி, அல்—எதிர்மறை இடை நிலை, மின்—முன்னிலைப் பன்மை வினைமுற்று விகுதி.

5. **பிரித்தெழுதுக.**

பச்சிலை-பசுமை+இலை. மை விகுதி கெட்டுப் பசு என நின்று, தன்னொற்று இரட்டித்துப் பச்சு என ஆகி, பச்சு+இலை—பச்சிலை என்றாயிற்று.

இறைவற்கு—இறைவன்+கு.

## இ. திருக்குறள்

1. **திருவள்ளுவர் கூறும் அறஞ் செய்யும் வழி யாது?**

அறம் பொருந்தும் இடமாகிய மனம், வாக்கு, காயம் என்னும் மூன்று வழியாலும், தத்தமக்கு ஏற்ற வகையில் இடைவிடாமல் அறம் செய்ய வேண்டுமென்று அது செய்தற்குரிய வழியைக் கூறுகின்றார்.

2. **அறமாவது யாது? பிற எத்தன்மையன?**

மனத்தின் கண் குற்றமில்லாதிருத்தலே சிறந்த அறமாகும், பிற சொல்லும் செயலும் ஆரவாரத் தன்மையுடையனவே யாகும்.

3. **பொறையுடைமையின் சிறப்பு யாது? மிக்கவை செய்தாரை யாது செய்தல்வேண்டும்?**

தீமை செய்தவர்களைத் தண்டிப்பவர்கட்கு அந்த ஒரு நாளைய இன்பந்தான் உண்டு; ஆனால் பொறுத்துக் கொள்பவர்களுக்கோ உலகம் உள்ளளவும் புகழ் உண்டு. இது பொறையுடைமையின் சிறப்பாகும்.

மிக்கவை செய்தாரைத் தாம் தம் பொறுமையாகிய தகுதியால் வென்றி கொள்ளுதல் வேண்டும். அஃதாவது பதிலுக்குத் தீமை செய்து அவரோடு சமம் என்றாகாமல் பொறுத்துக் கொண்டு அவரினும் மேம்பட்டு நின்று வெல்க என்பதாம்.

4. **அழுக்காற்றினால் விளையும் தீமைகள் யாவை?**

பிறர்க்குக் கொடுக்கும் பொருளைக் கண்டு அழுக்காறு கொண்டால் தான் கெடுதலேயன்றித் தன் சுற்றமும் உடுக்க உடையும் உண்ண உணவும் இல்லாமற் கெடும். மேலும் அழுக்காறு என்ற

அந்தப் பாவி, இப்பிறப்பிற் செல்வத்தைக் கெடுத்து, மறுமையில் நரகத்திலும் செலுத்தி விடும். இவையே அழுக்காற்றினுல் விளையும் தீமைகள்.

5. தீயவை தீயினும் அஞ்சப்படக் காரணம் என்ன ?

தீயவை தீயைப்போலத் தொட்ட இடத்தில், தொட்ட சமயத்தில் தொட்ட உடம்பைச் சுடாமல் இறந்த பிறகும் பிறிதொரு காலத்தும் பிரிதொரு தேயத்தும் பிறிதோருடம்பிலும் சென்று வருத்துவதால் அவை தீயினும் அஞ்சப்படும்.

6. தீயவை செய்தார் கெடுதலை எவ்வாறு உறுதிப்படுத்துகிருர் ? இச் செய்யுளில் அமைந்த அணி யாது ?

ஒருவனுடைய நிழலானது நெடிதாகப் போயும் அவனை விட்டு நீங்காமல் வந்து அவன் காலடியிலேயே தங்கிய தன்மை போல, ஒருவர் செய்த தீமைகளும் அவரை விட்டகலாது அவரையே வந்தடைந்து துன்பந் தரும் என்று உறுதி செய்கிருர்.

இச் செய்யுளில் அமைந்துள்ள அணி உவமை யணியாகும்.

7. மக்களாய்த் தோன்றுவார் எவ்வாறு தோன்ற வேண்டும் ?

மக்களாய்ப் பிறப்பவர்கள் புகழுக்கு ஏதுவாகிய குணங்களுடன் தோன்ற வேண்டும். அக்குணம் இல்லாதவர் மக்களாய்ப் பிறப்பதைவிட விலங்காய்ப் பிறப்பது நன்று.

8. வாழ்வார் யார் ? வாழாதார் யார் ?

புகழுண்டாகும்படி வாழ்பவர்களே உயிருடன் வாழ்பவராவர்: பழியுண்டாகும்படி வாழ்பவர்கள் இறந்தவர்களே யாவார்கள்.

9. குடிகள் கோல் நோக்கி வாழ்தலுக்குக் கூறப்பட்ட உவமை யாது ? இஃது எவ்வணியின்பாற்படும் ?

உலகத்து உயிர்களெல்லாம் மழையை நோக்கி வாழ்தல், குடிகள் கோல் நோக்கி வாழ்தலுக்கு உவமையாகக் கூறப்பட்டது. இச்செய்யுள் எடுத்துக் காட்டுவமையணியின் பாற்படும்.

10. அரசனைக் காப்பது எது ? எந்த அரசனை அது காக்கும் ?

குறைவு நேரக்கூடிய காலத்திலும் குறைவு நேர்ந்துவிடாமல் செலுத்தக்கூடிய செங்கோன்மை, அரசனைக் காக்கும். அஃது இந்த உலகம் முழுவதையும் நன்கு காக்கின்ற அரசனைக் காக்கும்.

11. அறிவுடையார் நட்பும் அறிவிலார் நட்பும் எத்தகையன ?

அறிவுடையவர் நட்பு பிறை நிலாவைப் போல நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வருந்தன்மையது. அறிவிலார் நட்பு முழு நிலா தேய்வதைப் போல நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வருந் தன்மையது.

12. நட்பின் இலக்கணம் யாது? இப்பாடலில் வந்துள்ள அணி யாது?

பலர் முன்னிலையில் ஒருவனுக்கு ஆடை குலையும்பொழுது அவனுடைய கை அவன் மனம் எண்ணு முன்பே விரைந்து சென்று உதவுவதுபோல ஒருவன் தன் நண்பனுக்கு இடுக்கண் வந்த பொழுது தன்னியல்புணர்ச்சியால் விரைந்து வந்து உதவுவதுதான் நட்பாகும்.

இச் செய்யுளில் அமைந்துள்ள அணி உவமை யணியாகும்.

13. யாக்கைக்கு எப்பொழுது மருந்து வேண்டா?

முதலில் உண்ட உணவு நன்கு செரித்துவிட்டது என்பதைக் குறிகளால் கண்டு பிறகு உணவை உட்கொண்டால் அந்த யாக்கைக்கு மருந்தென வேண்டாவாம்.

14. மருத்துவர் கைக்கொள்ள வேண்டிய வழிகள் யாவை?

நோயாளியின் நோயைக் குறிகளினாலே இன்ன நோய் எனத் துணிதலும், பின் அந்நோய் வருதற்குரிய காரணத்தை ஆராய்ந்தறிதலும், அதைத் தீர்ப்பதற்குரிய வழிகளைத் தெளிதலும், தெளிந்து அவற்றைச் செய்யும்பொழுது தப்பாமற் செய்தலும் மருத்துவர் கைக்கொள்ள வேண்டிய வழிகளாம்.

15. மானம் குன்றும்படியான செயல் வந்தால் யாது செய்தல் வேண்டும்?

மானங் குன்றும்படியான செயல்கள் வருமானால் அவை எவ்வளவு இன்றியமையாதவையாக இருந்தாலும் அவற்றைச் செய்யாமல் விட்டுவிட்டு, மானத்தையே காத்தல் வேண்டும்.

16. கவரிமாவைப் போன்றவரின் இயல்பு யாது?

தம் மயிர்த்திரளில் ஒரு மயிர் நீங்கினாலும் உயிர்வாழாத கவரிமாவைப் போன்ற பெரியோர்கள் மானம் குன்றும்படியான ஒரு நிலை வருமானால் தம்முடைய உயிரைவிட்டு மானத்தைக் காத்துக் கொள்ளும் இயல்புடையவர்கள்.

17. உலகம் உளதாதற்குக் கூறப்படும் காரணமென்ன? அஃதில்லையேல் என்னாகும்?

இவ்வுலகம் பண்புடையார் வழி வருவதால் உளதாக இருக்கிறது. அஃதில்லையாயின் இவ்வுலகம் மண்ணின்கட் புகுந்து மாய்ந்துவிடும்.

18. மக்கட் பண்பில்லாதார் எதனைப் போல்வர்? இதனுள் அமைந்த அணி யாது?

மக்கட் பண்பில்லாதவர்கள் அரம்போன்ற கூர்மையான அறிவு படைத்திருப்பினும் ஓரறிவு படைத்த மரத்தினைப் போல்வர்.

இச் செய்யுளில் உவமையணி அமைந்துள்ளது.

19. இலக்கணக் குறிப்பு வரைக.

அறவினை—இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
ஓவாது—எதிர்மறை வினையெச்சம்.
வாயெல்லாம் செயல்—வியங்கோள் வினைமுற்று.
அனைத்து அறன்—மொழியிறுதிப் போலி.
ஆகுல நீர—அன்சாரியை பெறுது வந்த அஃறிணைப் பன்மை வினை முற்று.
உடுப்பதூஉம் உண்பதூஉம்—இன்னிசையளபெடைகள்.
தீய பயத்தலால் — அன்சாரியை பெறுது வந்த அஃறிணைப் பன்மை வினைமுற்று.
தீயவை செய்தார்—வினையாலணையும் பெயர்.
புகழொடு தோன்றுக—காரியவாகுபெயர்.
வான் நோக்கி, கோல் நோக்கி—கருவியாகு பெயர்கள்.
வாழும் உலகு—இடவாகு பெயர்.
முட்டாச் செயின்—ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம்.
உடுக்கை யிழந்தவன்—காரணப் பெயர்.
போற்றி உணின்—இடைக்குறை.
வாய்ப்பச் செயல் — வியங்கோள் வினைமுற்று.
இன்றி யமையா — ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
குன்ற வருப — அஃறிணைப் பன்மை வினைமுற்று. வினையாலணையும் பெயர்.
நீப்பின் வாழா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
வாழாக் கவரிமா — இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
மாய்வது மன்—ஒழியிசை
அரம் போலும்—ஆகுபெயர்.

20. பிரித்தெழுதுக.

வானேக்கி — வான்+நோக்கி.
கோனேக்கி — கோல்+நோக்கி.
முதனடி — முதல்+நாடி.
நிழறன்னை — நிழல்+தன்னை.

21. உறுப்பிலக்கணந் தருக.

ஓவாது — ஓவு+ஆ+த்+உ. ஓவு—பகுதி, ஆ—எதிர் மறை இடைநிலை, த்—எழுத்துப்பேறு, உ—வினையெச்ச விகுதி.
நீர—நீர்மை+அ நீர்மை—பகுதி, அ—அஃறிணைப் பன்மை வினைமுற்று விகுதி.
வருப — வா+ப்+அ. வா—பகுதி, இது விகாரப்பட்டு வரு என நின்றது, ப்—எதிர்கால இடைநிலை, அ—அஃறிணைப் பன்மை வினைமுற்று விகுதி.

# ஈ பழமொழி

1. குலவித்தை கல்லாமற் பாகம் படும். எவ்வாறு?

வழக்குரைக்க வந்த முதியோர் இருவர், சோழன் கரிகாற் பெருவளத்தான் இளம் பருவத்தனாக இருத்தலைக் கண்டு, இவன் நம் வழக்கை ஆய்ந்து காணும் அறிவுரம் பெற்றிரான் என்று கருதிச் செல்ல, அதனையறிந்த சோழன் முதுமை வேடம் புனைந்து வந்து அவர்கட்கு நீதி வழங்கினான். இதனால் இவன் இளைஞனாயினும், அவன் குல வித்தையாகிய நீதி வழங்கல் அவனுக்கு இயல்பாகவே அமைந்து கிடந்தமை தெரிகிறது.

2. 'உரை முடிவு காணான்' என்று தொடங்கும் பாடல் என்ன அணி? அவ்வணியின் இலக்கணம் யாது?

இச்செய்யுள் வேற்றுப் பொருள் வைப்பணி, இவ்வணியின் இலக்கணமாவது: பொதுப் பொருளால் சிறப்புப் பொருளையும், சிறப்புப் பொருளால் பொதுப் பொருளையும் உறுதிப்படுத்திக் கூறுவது. அஃதாவது வேறொரு பொருளை வைத்துத் தான் சொல்லக்கருதும் பொருளை உறுதிப்படுத்துவது.

3. பொல்லாத சொல்லும் பேதையின் இயல்பு யாது? இவனுக்குக் கூறப்பட்ட உவமை யாது?

பிறரைப் பொல்லாங்கு சொல்லிக் கரந்து வாழும் பேதை தான் சொல்லும் சொல்லாலே தன்னைத் துன்பத்தின்கண் அகப்படுத்துவான். இவனுக்குக் கூறப்பட்ட உவமை: மணலுக்குள் மறைந்து வாழும் தவளை, தன் குரலை வெளிப்படுத்திக் காட்டித் தன்னைத் தின்னும் பிராணிகட்கு அகப்படுதல்.

4. 'பொல்லாத சொல்லி' என்று தொடங்கும் செய்யுள் என்ன அணி? அவ்வணியின் இலக்கணம் யாது?

இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமையணியாகும். அதனிலக்கணம் உவமேயத்தை விளக்க ஓர் உவமானத்தை எடுத்துக் காட்டுவதாகும். உவமானமும் உவமேயமும் தனித்தனிச் சொற்றொடர்களாக வந்து இடையே அதுபோல என்ற சொல் மறைந்தேனும் வெளிப்பட்டேனும் வரும்.

5. நண்பர் எப்பொழுது பலராவர்? எப்பொழுது ஒருவரும் இலராவர்?

ஒருவர் முட்டுப்பாடில்லாமல் செல்வம் உடையராக இருக்கும் பொழுது, வீட்டில் உள்ள உணவை உண்ணும் நண்பர் மிகப் பலராவர். வறுமை வந்து பொருளிழந்தபொழுது நண்பர் ஒருவரும் இலராவர்.

6. நாடறிந்த செல்வருடைய இயல்பு யாது? இதை விளக்க வந்த உவமை யாது? இப்பாடல் என்ன அணி?

நாடறிந்த செல்வர் வறுமையால் வாடினலும் தம்மைப் பிறர் தாழ்த்தச் சம்மதியார்; தாழ்த்துவதற்குப் பிறரும் அஞ்சுவர். இஃது அவருடைய இயல்பு.

இதை விளக்க வந்த உவமை: புலி தளர்ந்து படுத்த படுக்கையாய்க் கிடந்தாலும் நாய் அதனை நெருங்காது என்பதாம்.

இச்செய்யுள் எடுத்துக்காட்டு உவமையணி.

7. இலக்கணக் குறிப்பு வரைக.

**விச்சை**—வித்தை என்பதன் மரூஉ.
**நல்லாய்**—மகடூஉ முன்னிலை.
**பொல்லாத சொல்லி**—வினையாலணையும் பெயர்.
**கட்டலர்தார் மார்ப**—ஆடூஉ முன்னிலை.
**அட்டிற்று**—ஒன்றன்பால் குறிப்பு வினைமுற்று.
**பலர் ஆயிரவர் ஆப** — பலர்பால் வினைமுற்று வட்குப—பலர்பால் வினைமுற்று.

8. உறுப்பிலக்கணம் தருக.

உவப்ப—உவ+ப்+ப்+அ; உவ—பகுதி; ப்—சந்தி. ப்—எதிர் கால இடைநிலை. அ—வினையெச்ச விகுதி.
அட்டிற்று—அடு+ல்+து; அடு+ல் அட்டில் என்றாகி அனைத்தும் சேர்ந்து பகுதியாக நின்று து என்னும் குறிப்பு வினைமுற்று விகுதி பெற்று முடிந்தது.
ஆப—ஆ+ப; ஆ—பகுதி, ப—பலர்பால் விகுதி.
வட்குப—வட்கு+ப; வட்கு — பகுதி, ப — பலர்பால் வினைமுற்று விகுதி.

---

# III. தொடர்நிலைச் செய்யுள்

## அ. சிலப்பதிகாரம்

1. புகார் நகரத்துக் கொடியிடையார் இரவுக் கோலம் பூண்டதை எழுதுக.

கதிரவன் மறைந்த மாலைப் பொழுதில் கொடியிடையார் அகன்ற வீடுகளில் எல்லாம் அழகிய விளக்கினை ஏற்றி வைத்து, முறுக்கவிழ்ந்த முல்லை மலர்களையும் நெல்லையும் கலந்து தூவி வழிபட்டுத் தமக்கேற்ற மென்மையானவற்றை உடுத்தும் புனைந்தும் இராப் பொழுதிற் கேற்றவாறு ஒப்பனை செய்து கொண்டார்கள்.

2. பாசண்டச் சாத்தற்குப் பாடுகிடந்தாள் யார்? ஏன் பாடுகிடந்தாள்?

பாசண்டச் சாத்தற்குப் பாடு கிடந்தவள் மாலதி என்னும் பார்ப்பனி யாவாள்.

அவள் பாடுகிடக்கக் காரணம்: அவள் ஒருநாள் தன் மாற்றாளின் குழந்தைக்குப் பாலைச் சங்கினால் ஊட்டும்பொழுது பால் விக்கிக் குழந்தை இறந்து விட்டது. அதுகண்டு மாலதி கலங்கி, 'மாற்றாளும் கணவனும் நான் வேண்டுமென்றே கொன்று விட்டதாக என் மேல் வீண் பழி சுமத்துவார்களே! எவ்வளவு எடுத்துரைப்பினும் உண்மையை உணர மாட்டார்களே! நான் என் செய்வேன்?' என்று அக்குழந்தையை எடுத்துக் கொண்டு பாசண்டச் சாத்தனிடம் சென்று பாடு கிடந்தாள்.

3. மாலதி இறந்த குழந்தையை எடுத்துக்கொண்டு எவ்வெவ் கோவில்களுக்குச் சென்றாள்?

மாலதி இறந்த குழந்தையைக் கையில் எடுத்துக்கொண்டு, கற்பக தரு நிற்கும் கோவில், ஐராவதம் என்னும் வெள்ளானை நிற்கும் கோவில், பல தேவர் கோவில், சூரியன் கோவில், சிவன் கோவில், முருகன் கோவில், வச்சிரப்படை நிற்கும் கோவில், சாதவாகனன் கோவில், அருகன் கோவில், சந்திரன் கோவில் என்னும் இவ்வளவு கோவில்களுக்குஞ் சென்று முறையிட்டாள்.

4. பாடுகிடந்த பார்ப்பனிக்குப் பேய்மகளால் நேர்ந்த துயர் யாது?

இடு காட்டில் பிணங்களைத் தின்று திரியும் இடாகினி என்னும் பேய் மகள் அழகிய ஒரு பெண் வடிவங் கொண்டு தோன்றி, 'குற்றமற்ற பெண்ணே! தவம் செய்யாதவர்களுக்குத் தேவர் வரம் கொடார். இது பொய்யன்று; உண்மையேயாகும். அப்பிணத்தை என் கையிற் கொடு பார்க்கலாம்' என்று சொல்லி மாலதியின் கையிலிருந்த அக்குழந்தையின் பிணத்தைப் பறித்து விழுங்கி விட்டாள்.

5. வரங்கிடந்த மாலதிக்குச் சாத்தன் எவ்வாறு அருள் புரிந்தான்?

இடாகினிப் பேய் குழந்தையைப் பறித்து விழுங்கினவுடன் இடியேறுண்ட மயில் அகவுதல் போல மாலதி ஏங்கி அழச் சாத்தன் தோன்றி 'தாயே! நீ அழாதே; நீ வீட்டிற்குச் செல்; செல்லும் வழியில் ஒரு சோலையில் உயிருடன் கிடக்கும் அக்குழந்தையை நீ காண்பாய்' என்று கூறி, அத்தெய்வமே குழந்தை வடிவு கொண்டு கிடக்க, அம்மாலதி மகிழ்ந்து குழந்தையை வாரியெடுத்துச் சென்று குழந்தையின் தாய் கையிற் கொடுத்தாள். இவ்வண்ணம் சாத்தன் மாலதிக்கு அருள் புரிந்தான்.

6. குழந்தையாக வந்த சாத்தன் வரலாற்றைச் சுருக்கி எழுதுக.

குழந்தையாக வந்த சாத்தன் வளர்ந்து நல்லாசானை அடுத்துக் கல்வி கேள்விகளில் நன்கு தேர்ச்சி பெற்று, தாய்தந்தையர் இறந்த பின்பு அவர்க்குச் செய்ய வேண்டிய கடன் முடித்துத் தாயத்தாரு

டன் வழக்காடி வென்று வாழும் நாளில் தேவந்தி என்பவளை மணந்து சில காலம் அவளுடனிருந்து இல்லறம் நடத்திப் பின் பொரு நாளில் அவளுக்குத் தன் தெய்வ வடிவைக் காட்டி 'நீ எமது கோட்டத்திற்கு வருவாயாக' என்று கூறி மறைந்தான்.

7. தேவந்தி கண்ணகியை எவ்வாறு வாழ்த்தினாள்?

கண்ணகியின் தோழியாகிய தேவந்தி, கண்ணகிக்குக் கணவன் பிரிந்ததனால் உண்டாகிய துன்பமொன்று உளது என்று நினைந்து வருந்தி, கோவிலை அடைந்து அறுகு, பூளைப்பூ, நெல் முதலியவற்றைத் தூவி வழிபட்டு வந்து கண்ணகியை நோக்கி, 'நீ பிரிந்த கணவனை மீண்டும் பெறுவாயாக' என்று வாழ்த்தினாள்.

8. வாழ்த்திய தேவந்திக்குக் கண்ணகி உரைத்த கனாத் திறத்தை வரைக.

'தோழி! உன் வாழ்த்தால் என் கணவனைப் பெறுவேனாயினும் நான் கண்ட கனவால் என் மனம் ஐயுறுகின்றது. அக்கனவு யாதெனில், நானும் என் கணவனும் ஒரு பெரு நகருள் நுழைந்தோம். அந்நகரிலே அவ்வூர் மக்கள் ஏலாததோர் பழிச் சொல்லை இடுதேள் இடுமாறு போல என் மேற் போட்டனர். அப் பழி மொழியால் கோவலனுக்கு ஒரு தீங்குண்டாயிற்று என்று பிறர் சொல்லக் கேட்டு, அவ்வூர் அரசன் முன்பு சென்று நான் வழக்குரைத்தேன். அதனால் அவ்வரசனுக்கும் ஊர்க்கும் தீங்கொன்றும் உண்டாயிற்று. அது தீக்கனவாக இருத்தலால் உன்னிடம் அதனைக் கூறேன். பின்னர்த் தீக்குற்றம் உற்ற என்னுடன் பொருந்திய கணவனுடன் நான் பெற்ற பேற்றைக் கூறக் கேட்டால் உனக்குச் சிரிப்பை உண்டாக்கும்! என்று தேவந்திபால் கண்ணகி தான் கண்ட கனாத் திறத்தை உரைத்தாள்.

9. கண்ணகி மீண்டும் தன் கணவனைப் பெறத் தேவந்தி கூறிய வழி யாது? அதற்குக் கண்ணகி தந்த மறு மொழி யாது?

'கண்ணகி! நீ உன் கணவனால் வெறுக்கப்பட்டாயல்லை; முற்பிறப்பில் கணவன் பொருட்டுச் செய்ய வேண்டிய ஒரு நோன்பைச் செய்யாது விட்டனை. அதனால் உண்டாகிய தீங்கு ஒழிவதாக. காவிரி கடலுடன் கலக்குமிடத்தில் சோமகுண்டம் சூரியகுண்டம் என்னும் பெயரையுடைய இரு பொய்கைகள் உள. அவற்றில் மூழ்கி, மன்மதன் கோவிலை யடைந்து அவனை வணங்குவோர் இவ்வுலகில் மகளிர் தம் கணவருடன் பிரியாதிருந்து இன்பம் நுகர்வர். மறுமையிலும் போக பூமியிற் பிறந்து கணவரோடு இன்பம் நுகர்வர். ஆதலால் நாமும் அவற்றில் ஒருநாள் நீராடுவோம்! என்று தேவந்தி கண்ணகிக்குக் கூறினாள்.

அதற்குக் கண்ணகி, 'அங்ஙனம் துறை மூழ்குதலும் தெய்வந் தொழுதலும் எங்கட்கு இயல்பன்று; பெருமையுமன்று' என மறுமொழி கூறினாள்.

**10. கண்ணகிபால் திரும்பிவந்த கோவலன் அவளிடம் யாது கூறி வருந்தினான்?**

திரும்பி வந்த கோவலன் படுக்கையறையிற் புக்குத் தன் மனைவியின் உடல் மெலிவையும் உள நலிவையும் கண்டு வருந்தி, வஞ்ச மகளாகிய மாதவியின் கூட்டுறவால் முன்னோர் தேடி வைத்த செல்வமெல்லாம் தொலைத்தேன். அதனால் விளைந்த வறுமை எனக்கு நாணத்தைத் தருகிறது என்று கண்ணகியிடம் கூறினான்.

**11. நாணுத்தரும் என்றுரைத்த கோவலனுக்குக் கண்ணகி யாதுரைத்தனள்?**

கோவலன் நாணுத்தரும் என்று கூறக்கேட்ட கண்ணகி ஒளி பொருந்திய தனது முகத்தில் புன்முறுவலைத் தோற்றுவித்து, 'இன்னும் இரண்டு சிலம்புகள் உள்ளன; அவற்றைப் பெற்றுக் கொள்ளுங்கள்' என்று கூறினாள்.

**12. சிலம்பைப் பெற்ற கோவலன் கண்ணகியை யாது கூறி அழைத்தான்?**

சிலம்பைப் பெற்ற கோவலன் கண்ணகியை நோக்கிச் 'சேயிழையே! மாடங்கள் பொருந்திய மதுரைக்குச் சென்று, இச் சிலம்பையே முதலாகக் கொண்டு வாணிகம் செய்து நான் இழந்த செல்வங்களையும் அணிகலன்களையும் தேடிப் பெறத் துணிந்தேன். ஆதலால் நீயும் என்னுடன் புறப்படு' என்று கூறி அவளுடன் பொழுது புலராமுன் புறப்பட்டான்.

**13. இடஞ் சுட்டி விளக்குக:**

(அ) 'பீடன்று என இருந்த பின்னர்'

(ஆ) 'எனக்கு நாணுத்தரும்'

(இ) 'சிலம்புள கொண்ம்'

(அ) 'பீடன்று என இருந்த பின்னர்' இது கண்ணகியின் கூற்று; அவளுடைய தோழியாகிய தேவந்தியை நோக்கிக் கூறப்பட்டது. தேவந்தி கண்ணகியிடம் வந்து 'காவிரி கடலொடு கலக்குமிடத்திலுள்ள சோமகுண்டம் சூரிய குண்டம் என்னும் பொய்கைகளில் நாம் நீராடி மன்மதனை வழிபடுவோம். வழிபாட்டால் உன் கணவனை நீ அடையப் பெறுவாய்' என்று கூறியபொழுது கண்ணகி 'பீடன்று' எனக் கூறியிருந்தாள்.

(ஆ) 'எனக்கு நாணுத்தரும்' இது கோவலன் கூற்று. கண்ணகியைநோக்கிக் கூறியது. மாதவியிடமிருந்து திரும்பிவந்த கோவலன் கண்ணகியின் மெலிவையும் நலிவையும் கண்டுவருந்தி, மாதவியின் சேர்க்கையால் என் முன்னோர் தேடிவைத்த செல்வமெலாம் இழந்தேன். அதனால் ஏற்பட்ட வறுமை எனக்கு 'நாணுத்தரும்' என்று கூறுகிறான்.

(இ) 'சிலம்புள கொண்ம்' இது கண்ணகியின் கூற்று. வருந்திய கோவலனை நோக்கிக் கூறப்பட்டது. பொருளையெல்லாம் இழந்து திரும்பி வந்த கோவலன் தனது வறுமைக்கு வருந்தி 'நாணுத்தரும்' என்றான். அதனைக் கேட்ட கண்ணகி, மாதவிக்குத் தரப் பொருள் இல்லாமையால் இவ்வாறு கூறுகின்றான் எனக் கருதிக் கொண்டு, 'சிலம்புள கொண்ம்' என்று கூறினாள்.

14. இலக்கணக் குறிப்பு வரைக:

நெல்லொடு தூஉய்—இசை நிறையளபடை.
பகல் மாய்ந்த—காலவாகு பெயர்.
கொடியிடை—உவமைத் தொகை.
படாதன விட்டு—வினையாலணையும் பெயர்.
உறுநோய் தீர்ம்—ஏவற்பன்மை வினைமுற்று.
ஓர் இளங்கொடியாய்—உவமையாகு பெயர்.
செய்தவம் இல்லோர்க்கு—வினைத்தொகை.
இடாகினிப் பேய்—இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
ஏங்கி அழல்—எதிர்மறை வியங்கோள் வினைமுற்று.
பொருட்கேள்வி துறைபோய்—உம்மைத்தொகை.
மூவா இளநலம்—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
தூமொழி—பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.
கணவனோடு பெறுக—உருபு மயக்கம்.
பிடித்தனன் போய்—முற்றெச்சம்.
பெறுகேன்—தன்மை ஒருமை எதிர்கால வினைமுற்று.
செறிதொடீஇ—வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித தொகை.
பொற்றொடீஇ—வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன் மொழித் தொகை.
கைத்தாயும் அல்லை—எதிர் மறை முன்னிலை ஒருமை வினை முற்று.
அலைக்கும் முன்றில்—இலக்கணப் போலி.
பூமியினும் போய்—இறந்தது தழுவிய எச்சவும்மை.
ஒரு நாள் ஆடுதும்—உளப் பாட்டுத் தன்மைப் பன்மை வினை முற்று.
என்ற அணியிழைக்கு—பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன் மொழித் தொகை
சிலம்புள கொண்ம்—ஏவல் வினைமுற்று.

15. பிரித்தெழுதுக:

அகனகர்—அகல்+நகர்.
உறுவனோடியான்—உறுவனோடு+யான்.
பைந்தொடி—பசுமை+தொடி.
சேயிழை—செம்மை+இழை.

**16. உறுப்பிலக்கணம் தருக :**

கொடார்—கொடு+ஆ+ஆர். கொடு—பகுதி, ஆ—எதிர் மறை இடை நிலை புணர்ந்து கெட்டது. ஆர்—பலர்பால் விகுதி.

இட்டார்—இடு+ஆர். இடு—பகுதி, ஆர்—பலர்பால் விகுதி. பகுதி இரட்டித்து இறந்த காலங் காட்டிற்று.

அழல்—அழு+அல். அழு—பகுதி, அல்—எதிர்மறை வியங்கோள் விகுதி.

பெறுகேன்—பெறு+கு+ஏன். பெறு—பகுதி, கு—தன்மை ஒருமை விகுதி, ஏன்—விகுதி மேல் விகுதி.

ஆடுதும்—ஆடு+தும். ஆடு—பகுதி, தும்—தன்மைப் பன்மை விகுதி.

உலந்த—உல+த்+த்+அ. உல—பகுதி, த்—சந்தி. நகரமானது விகாரம், த்—இறந்தகால இடைநிலை, அ—பெயரெச்ச விகுதி.

உற்றேன்—உறு+ஏன். உறு—பகுதி, ஏன்—தன்மை ஒருமை விகுதி, பகுதி இரட்டித்து இறந்த காலம் காட்டிற்று.

# ஆ. பெரிய புராணம்

## மெய்ப்பொருள் நாயனர் புராணம்

1. பெரியபுராணம்—பெயர்க்காரணத்தை எழுதுக.

2. பெரிய புராண நூலாசிரியர் வரலாற்றை வரைக.

இவ்விரு வினக்கட்கும் விடை உரைப் பகுதியிற் கண்டு கொள்க.

3. மெய்பொருளார் ஒழுகலாற்றைத் திரட்டி எழுதுக.

சேதி நாட்டுத் திருக்கோவலூரில் மெய்ப்பொருள் நாயனர் வாழ்ந்து வந்தார். சிவனடியார்களின் திருவேடத்தையே மெய்ப் பொருளாகக் கொண்டு வாழ்ந்து வந்தமையால் இவர் மெய்ப் பொருள் நாயனர் எனப் பெயர் பெற்றார்.

வேத விதிப்படி சிவனடியாரிடம் பக்தி செலுத்தி அவர் தம் குறிப்புணர்ந்து, தொண்டு செய்வார். அரசியல் நெறிப்படி அறந் தவருமல் ஆட்சி புரிவார். போர்க் களத்தில் பகைவரைத் தம் தோள் வலியால் முறியடிப்பவர். வாய்மை தவருதவர், நற்குணங் கள் மிக்கவர். சிவனடியார் வேடத்தை மெய்ப் பொருளாகக் கொள்பவர்.

சிவனுறையும் கோவில் தோறும் பூசனைகள் குறைவின்றி நடை பெறவும் ஆடல் பாடல் முதலியன சிறப்புடன் நிகழவும் ஆவன செய்து வந்தார். தம் செல்வமனைத்தும் அடியவர்க்கே உரியன

வாகும் என்று கருதி, அவ்வடியவர் தம்மை நாடி வந்த போது வேண்டிய வெல்லாம் கொடுத்து வந்தார். மெய்ப் பொருளார் இவ்வண்ணம் வாழ்ந்து வந்தார்.

4. மெய்ப் பொருளாரை வெல்ல முத்தநாதன் செய்த சூழ்ச்சி யாது ?

முத்தநாதன் என்ற பகையரசன் மெய்ப் பொருளாரை வெல்லக் கருதிப் பல முறை படையெடுத்து வந்தான். போரில் யானைப் படை குதிரைப் படை முதலிய எல்லாப் படைகளையும் இழந்து தோற்று ஓடினன். பல முறை இவ்வாறு அவமானப் பட்டுப் போன முத்தநாதன் எப்படியும் மெய்ப் பொருளாரை வெற்றி கொள்ள வேண்டு மென்று முடிவு செய்து, மெய்ப்பொருளார் அடியவர்பால் கொண்ட பக்தியை அறிந்து, அந்த அடியார் வேடமே பூண்டு. தக்க சமயமறிந்து அவரைக் கொல்ல நினைத்துக் கொடிய எண்ணத்துடன் திருக்கோவலூரை அடைந்தான்.

5. முத்தநாதன் தவவேடங் கொண்டதை ஆசிரியர் எவ் எவ்வாறு கூறுகின்றார் ?

முத்தநாதன் உடம்பெல்லாம் வெண்ணீறு பூசி, தலையில் சடைகளை ஒன்றாகச் சேர்த்து முடித்து, உடைவாளை மறைத்து வைத்திருக்கும் புத்தகக் கவளியைக் கையில் தாங்கிக் கொண்டு, புகையைத் தன்னுள்ளே அடக்கிக் கொண்டிருக்கும் விளக்கைப்போல மனத்துக்குள்ளே வஞ்சகத்தை மறைத்து வைத்துப் பொய்த்தவ வேடங் கொண்டான் என ஆசிரியர் கூறுகின்றார்.

6. தவவேடம் புனைந்த முத்தநாதன் மெய்ப் பொருளார் அரண்மனைக்குள் எவ்வாறு புகுந்தான் ?

பொய்வேடங் கொண்ட முத்தநாதன் அரண்மனை வாயிலை அடைந்தவுடன் வாயில் காப்போர் அவனைக் கண்டு கை குவித்து வணங்கி ஒதுங்கி நின்று, சிவனடியார் கருணையால் தாமாகவே வந்துள்ளார் என்று சொல்லி, 'உள்ளே எழுந்தருள்க' என வேண்ட, அவன் பல வாயில்களையும் கடந்து உள்ளே சென்றான். நாயனார் இருக்கும் இடத்திலுள்ள உயிர்க்காவலன் தத்தன் என்பான் 'அரசர் துயில்கின்றார்; தாங்கள் காலமறிந்து செல்லவேண்டும்' என்றான். அதற்கு முத்தநாதன் 'நான் அரசனுக்கு உறுதிமொழிகள் கூற வந்துள்ளேன்; நீயும் தடை செய்யாது நில்' என்று அவனைத் தடுத்துக் கூறி உள்ளே சென்றான்.

7. மெய்ப் பொருளார் முத்தநாதனைக் கண்டு வணங்கிக் கேட்க முத்தநாதன் கூறியன யாவை ?

முத்தநாதன் மெய்ப் பொருளார் துயிலும் இடத்தை யணுக நாயனார் மனைவி விரைந்து கட்டிலிலிருந்து இறங்கி அரசனை எழுப்ப, அரசன் கண் விழித்து முத்தநாதனைக் கண்டு சிவனடியார் எனக் கருதிக் கை குவித்து வணங்கித் 'தாங்கள் இங்கு எழுந்தருளி

யது யாது கருதியோ?' என்று வினவ, முத்தநாதன் 'உங்கள் சிவ பெருமான் ஓதியருளிய ஆகம நூலில் எங்கும் இல்லாததான அரிய ஒரு நூலை உமக்கு உபதேசிக்கவே இங்குக் கொண்டு வந்துள்ளேன்' என்ருன்.

8. முத்தநாதன் எவ்வாறு எண்ணியதை முடித்தான்?

பொய் வேடங்கொண்ட முத்தநாதன் 'உமக்கு ஆகம நூல் உரைக்க வந்தேன்' என்று கூற, மெய்ப்பொருளார் 'அடியேனுக்கு இதனினும் வேறு பேறு உளதோ? அச் சிவாகம நூலை உபதேசித் தருள வேண்டும்' என்று வணங்கிக் கேட்க, முத்தநாதன் 'நாமும் நீயும் தனியாக இருக்கவேண்டும்' என்ருன். அரசர் அரசியை நோக்கக் குறிப்பறிந்து அவ்வம்மையும் அந்தப்புரம் சென்றனர். அரசர் அவனை ஆசனத்திலிருக்கச் செய்து தாம் கீழிருந்து 'இனி அருள் செய்க' என்று வணங்கினர். அப்பொழுது முத்தநாதன் புத்தகக் கட்டை அவிழ்ப்பான்போல உடைவாளை எடுத்துத் தான் எண்ணியதை முடித்தான். அரசர் 'சிவவேடமே மெய்ப் பொருள் எனத் தொழுதார்.

9. மெய்ப் பொருளார் தவவேடத்திற் கொண்டுள்ள மெய்யன்பை விளக்கி வரைக

பொய்த்தவ வேடம் பூண்ட முத்தநாதன் உள்ளே நுழையும் பொழுது அவன்பால் மனத்தைச் செலுத்தியிருந்த தத்தன் நிலைமையை அறிந்ததும் உள்ளே தாவிச் சென்று முத்தநாதனை வெட்ட வாளை ஓங்கினுன். அப்பொழுது இரத்தம் வடியும்படி கீழே சாய்கின்ற நாயனுர் 'தத்தா! இவர் நமர்' என்று தடுத்துக் கீழே விழுந்தார். தத்தன் அவர் தலையைத் தாங்கியவண்ணம் 'நான் யாது செய்ய வேண்டும்?' என்று கேட்டான். 'இவருக்கு எந்தவித இடையூறும் இல்லாமல் நகருக்கு வெளியே கொண்டு விட்டு வருக' என ஆணையிட்டார். தத்தன் அவ்வாறே அவனை அழைத்துச் செல்ல, வெறியில் ஊரார் முத்தநாதனைக் கொல்ல முயன்றனர். தத்தன் தடுத்து 'இஃது அரசர் ஆணை' என்னலும் அனைவரும் அஞ்சி விலக, நகரெல்லைக்கு அப்பால் கொண்டு போய் விடுத்து வந்து, அரசரை வணங்கித் 'தங்கள் கட்டளைப்படியே செய்துவிட்டேன்' என்று கூறினுன். நாயனுர் முகமலர்ந்து 'ஐயன் செய்தது யார் செய்யவல்லார்' என அவனைப் பாராட்டி உயிர் துறந்தார். இதனுல் மெய்ப் பொருளார் தவ வேடத்திற் கொண்டுள்ள மெய்யன்பு புலனுகின்றது.

10. நாயனுர் தம்மைச் சார்ந்தவர்கட்கு இறுதியாகக் கூறிய உறுதி மொழிகள் யாவை?

நாயனுர் தம்மைச் சூழ்ந்து நிற்கும் அரசியல் சுற்றத்தார்க்கும் மற்றையோர்க்கும் 'உலக முழுதும் மேன்மையுடன் பரவி வருகின்ற திரு வெண்ணீற்றிடத்தில் அன்பு வைத்து அதற்கு ஒரு ஊறையும் நேரிடாமல் பாதுகாத்து வருவீர்களாக' என்று தம்

கொள்கையை இறுதியாகக் கூறி, இறைவன் திருவடியை அடைந்தார்.

11. இடஞ் சுட்டுக:

(அ) 'இடை தெரிந்தருள வேண்டும்'

(ஆ) 'மங்கலம் பெருக மற்றென் வாழ்வு வந்தணைந்தது'

(இ) இன்றெனக் கையன் செய்தது யார் செய்ய வல்லார்?'

(அ) 'இடை தெரிந்தருள வேண்டும்'—இது தத்தன் கூறியது; பொய் வேடங் கொண்டு வந்த முத்தநாதனை நோக்கிக் கூறியது. முத்தநாதன் நாயனுருடைய பள்ளியறையில் புகும்பொழுது 'அரசர் துயில்கின்றுர்; இடை தெரிந்தருள வேண்டும்' என்று கூறினுன்.

(ஆ) 'மங்கலம் பெருக மற்றென் வாழ்வு வந்தணைந்தது'— இது மெய்ப் பொருளார் முத்தநாதனை நோக்கிக் கூறியது அந்தப் புரத்துள் நுழைந்த முத்தநாதனைக் கண்டதும் அரசியார் எழுப்பக் கண்விழித்த நாயனுர் முத்தநாதனை வணங்கி இவ்வாறு கூறினுர்.

(இ) 'இன்றெனக் கையன் செய்தது யார் செய்யவல்லார்'— இது மெய்ப்பொருளார் கூற்று. தத்தனை நோக்கிக் கூறியது. தத்தன் முத்தநாதனை எந்த ஊறுமின்றி நகரெல்லையில் கொண்டு போய் விட்டு வந்தபொழுது நாயனுர் அவனைப் பாராட்டி 'இன்றெனக்கையன் செய்தது யார் செய்யவல்லார்' என்று கூறினுர்.

12. இலக்கணக் குறிப்பு வரைக:

அறநெறி வழாது—இரு பெயரொட்டுப் பண்புத்தொகை.
கோயில்—கோவில் என்பதன் மரூஉ மொழி.
குழை கொடி ஆட—உவமை ஆகுபெயர்.
வீழ்கின்றுர்—வினையாலணையும் பெயர்.
கழல் சிந்தைசெய்வார்—தானியாகு பெயர்.
இமயப் பாவை—உவமையாகு பெயர்.

# இ. கம்பராமாயணம்

## கைகேசி சூழ் வினைப்படலம்

1. இராமனுக்கு முன் வந்த கைகேயியைக் கம்பர் எவ்வாறு வருணிக்கிறுர் ?

தயரதன் இருக்கும் இடத்தை இராமன் தேடிவருதலை நோக்கி, தயரதன் பரதன் நாடாளவேண்டும் என்பதையும் இராமன் காடே

செல்லென்று என்பதையும் இராமனிடம் கூறமாட்டான்; நானே அவனிடம் கூறுவேன்' என்று எண்ணி, தாயென நினையும் இராமனுக்கு முன்னே யமனைப்போலக் கைகேயி வந்தாள் என்று கம்பர் கூறுகின்றார்.

2. கைகேயியைக் கண்ட இராமன் யாது செய்தான்?

மாலைப்பொழுதில் வீட்டிற்குத் திரும்பிவரும் தாய்ப் பசுவைக் கண்ட கன்றைப்போல மகிழ்ந்த இராமன் தன்பால் வந்த கைகேயியை நோக்கி, தரையில் விழுந்து வணங்கி, பவழம் போன்ற வாயைக் கையினால் பொத்திக்கொண்டு, மற்றொரு கையினால் ஆடையின் முன்தானையை மரியாதையுடன் மடக்கிப் பிடித்துக்கொண்டு வணங்கி நின்றான்.

3. உரைப்பதோர் உரையொன்றுண்டு என்ற கைகேயிக்கு இராமன் கூறியன யாவை?

'தாயே! என் தந்தை ஏவவும் அதை நீங்கள் என்னிடம் சொல்லவும் வாய்க்கப் பெற்றால் நான் கடைத்தேறினவன் ஆவேன். என்னைப்போலப் பிறந்தவர் உலகில் உளரோ? முற்பிறப்பில் நான் செய்த தவத்தின் பயன் தானாகவே வந்திருக்கிறது. இதைவிடச் சிறந்ததொன்று உளதோ? தாயும் தந்தையும் நீரேதான். உங்கள் ஆணையைத் தலைமேற் கொள்கின்றேன். ஆணையிடுங்கள்' என்று கூறினான்.

4. கைகேயி இராமனிடம் தயரதன் கூறியனவாகக் கூறியன யாவை?

இவ்வுலகமெல்லாம் பரதனே ஆட்சி செய்யவும், நீ காடு சென்று சடைமுடிகள் தாங்கி, செய்தற்கரிய தவத்தை மேற்கொண்டு, புண்ணியத்தன்மை வாய்ந்த நீர்த்துறைகளில் மூழ்கி, பதினான்கு ஆண்டுகள் கழித்துத் திரும்பி வா என்று அரசன் கூறினான் எனக் கைகேயி இராமனிடம் கூறினாள்.

5. கைகேயி அரசன் ஆணையைக் கூறக்கேட்ட இராமன் முகத்தோற்றத்தைக் கம்பர் எவ்வாறு வருணிக்கிறார்?

கைகேயியின் சொற்களைக் கேட்ட இராமன் முகம் இருந்த செவ்வியை எம்போன்ற புலவர்களால் சொல்ல முடியுமோ? முன்பெல்லாம் அவன் முகம் செந்தாமரையைப் போல விளங்கும். ஆனால் இப்பொழுது இவள் உரையைக் கேட்டதும் மலர்ந்த செந்தாமரையை வென்று விட்டது என்று கம்பர் வருணிக்கிறார்.

6. அரசன் ஆணையைக் கைகேயி கூறியதும் இராமன் கூறிய மாற்றம் யாது?

'தாயே! அரசனுடைய ஆணை அன்று என்றாலும் உங்கள் கட்டளையை நான் மறுக்கவா போகின்றேன்? என் தம்பி பெற்ற

செல்வம் நான் பெற்ற செல்வமல்லவா? இதனினும் நன்மை தருஞ் செயல் வேறென்ன உளது? இக்கட்டளையைத் தலைமேற் கொண்டு இன்றே காட்டுக்குச் செல்கின்றேன். தங்களிடம் விடையும் பெற்றுக் கொள்கிறேன்' என்று இராமன் கைகேயியிடம் கூறினான்.

7. கோசலைமுன் இராமன் எவ்வாறு சென்றான்?

இருபுறமும் வீசுகின்ற வெண்சாமரம் இல்லாமலும் வெண் கொற்றக் குடையும் இல்லாமலும் துன்பந் தரும் விதிமுன்னே செல்லத் தருமம் பின்னே இரங்கிச் செல்ல, முடிசூடி வருவான் என்று மகிழ்ந்து எதிர் நோக்கிக் கொண்டிருந்த கோசலையின் முன் தனியனாகி இராமன் சென்றான்.

8. வணங்கிய இராமனை நோக்கிக் கோசலை கூறியன யாவை?

இராமன் முடி சூடவில்லை; மஞ்சன நீராடவில்லை; யாது காரணம் என்று ஐயுற்ற கோசலை தன்னுடைய கால்களில் விழுந்து வணங்கிய இராமனை நோக்கி மனங் குழைந்து வாழ்த்தி, 'அரசன் உனக்கு முடிசூட்ட நினைந்தது என்னவாயிற்று? நீ முடிசூடுவதற்கு ஏதாவது இடையூறு விளைந்ததா?" என்று வினவினாள்.

9. நெடுமுடிபுனைதற்கு இடையூறுண்டோ? என்று வினவிய கோசலைக்கு இராமன் கூறிய மறுமொழி யாது?

நெடுமுடி புனைதற்கு இடையூறுண்டோ என்று வினவிய கோசலையைக் கைகுவித்து வணங்கி நின்று, 'உன் அன்புக்குரிய மகனும் என் தம்பியும் ஆகிய பரதன் முடிசூடுகின்றான்' என்று மறுமொழி கூறினான்.

10. பரதன் முடிசூடுகின்றான் என்ற இராமனுக்குக் கோசலை கூறியன யாவை?

பரதன் முடி சூடுகின்றான் என்று கூறிய இராமனை நோக்கி 'மூத்தவனிருக்க இளையவன் முடி சூடுதல் முறைமையன்று என்பதொன்றுண்டு; அதைத்தவிர வேறு குறையேயில்லை; பரதன் நிறைந்த நற்பண்புகள் உடையவன்; உன்னைவிட மிகவும் நல்லவன்; ஒரு குறையும் இல்லாதவன்' என்று கோசலை கூறினாள். மேலும் 'மக்னே! மன்னவன் ஏவலை மறுத்துரையாமல் இருப்பதுவே உனக்கு அறமாகும். உன் தம்பிக்கு நாட்டைக் கொடுத்துவிட்டு நீ அவனுடன் ஒன்றுபட்டுப் பல ஊழி வாழ்வாயாக' என்று வாழ்த்தினாள்.

**11. பரதனுக்கு நாட்டைக் கொடுத்து, அவனுடன் ஒன்றி வாழ்க என்று கோசலை வாழ்த்திய பிறகு இராமன் யாது கூறினன்?**

கோசலை வாழ்த்தைக் கேட்ட இராமன் சிந்தை மகிழ்ந்து தலைவணங்கிய தயரதன் என்னை நல்வழிப் படுத்துதற்கு ஏவிய பணி மற்றொன்றும் உளது. அப்பணி யாதெனின், பதினான்கு ஆண்டுகள் பெரிய காட்டில் மாமுனிவர்களுடன் தங்கிப் பிறகு நாட்டிற்குத் திரும்பி வரவேண்டும் என்பதாகும் என்று இராமன் கோசலையிடம் கூறினான்.

**12. மன்னவன் கட்டளையை இராமன் கூறக்கேட்ட கோசலை யாது கூறிப் புலம்பினாள்?**

இராமன் கூறிய அச்சொல்லாகிய நெருப்பு அவள் செவியிற் படாமுன்பு ஏங்கி, இளைத்து, திகைத்து, மனம் விம்மி, விழுந்து புலம்பினாள்.

இந்நாட்டைப் பொறுப்பாக ஆளவேண்டும் என்று தயரதன் கூறிய சொல் வஞ்சனையோ? அல்லது அது நஞ்சுபோலக் கொடுமை வாய்ந்ததோ? இனி நான் உயிர்வாழவா போகின்றேன்? என்னுயிர் அஞ்சுகிறதே! அஞ்சுகிறதே!

அன்பு காட்டிய அரசனுக்கு நீ என்ன தவறு செய்தாய்? அறமென்பது என்னைப் பொறுத்தவரை இல்லையோ? தெய்வங்களே! என்னுயிர் நைந்து இற்றுப் போகும்படியாக விடுத்தது யாது காரணம்? என்று கூறிக் கன்றைப் பிரிந்த தாய்ப் பசுவைப்போலக் கலங்கினாள்.

**13. கன்றைப் பிரிந்த பசுவெனக் கலங்கும் கோசலையை இராமன் எவ்வாறு தேற்றினான்?**

கற்பிற் சிறந்த தாயே! மெய் தவறாத நம் வேந்தனைப் பொய்யனாக ஆக்க விரும்புகின்றாயா சொல்; சிறந்த என் தம்பி அரசாளவும் என் தந்தை மறந்தும் பொய்க்கமாட்டான் என்பதை உறுதியாக்கவும் காட்டிலே வாழ்ந்துதீருவதென்று உறுதிபூண்டேன். நான் பிறந்து அடையவேண்டிய பேறு இதைவிடச் சிறந்தது யாதுளது?

விண்ணும் மண்ணும் முதலான ஐம்பெரும் பூதங்களும் இறந்தொழிந்தாலும் அரசன் ஏவலை அடியவனாகிய நான் மறுக்க முடியுமோ? இதற்காக நீ மனங்கலங்க வேண்டாமென்று கூறி இராமன் கோசலையைத் தேற்றினான்.

**14. அண்ணல் ஏவல் மறுக்க ஒண்ணுமோ? என்ற இராமனுக்குக் கோசலை என்ன கூறினாள்?**

மகனே! அரசனுடைய ஆணைப்படி காட்டிற்குப் போகவேண்டாம் என்று நானும் மறுத்துக் கூறவில்லை. சாகாமல் இன்னும்

இருக்கிற உயிரைத் தாங்கிக் கொண்டிருக்கும் என்னையும் காட்டிற்கு அழைத்துச் செல் என்று கோசலை கூறினாள்.

**15. என்னையும் அழைத்துச் செல் என்று கூறிய கோசலையை இராமன் எவ்வாறு தேற்றினான்?**

தாயே என்னைப் பிரிந்து துன்பக் கடலுள் மூழ்கும் அரசருக்கு வற்புறுத்தி ஆறுதல் கூறாமல் என்னுடன் காட்டிற்கு வருகிறேன் என்று துணிந்து கூறலாமா? கணவனுக்கு மனைவி ஆற்றவேண்டிய அறத்தைப் பார்க்காமல் பேசுகின்றாயே!

நீ ஏன் மனம் கலங்குகின்றாய்? தேவர்களுங்கூடத் தவஞ்செய்து தானே உயர்வடைந்தார்கள். நான் காட்டில் தங்கவேண்டிய ஆண்டுகள் எவ்வளவு உள்ளன. பதினான்கு ஆண்டுகளும் எனக்குப் பதினான்கு பகல்கள் அல்லவா? முன்பொரு சமயம் கோசிகமுனிவருடன் சென்று அவரருளால் நான்பெற்ற வித்தைகளும் அதன் பின் நான் அடைந்த பேறும் பிழைத்தா போய்விட்டன. இன்னும் அத்தகைய முனிவர்க்குப் பணிவிடை செய்தல் நல்லதேயாகும் என்று இராமன் கோசலையைத் தேற்றினான்.

**16. இடஞ்சுட்டுக.**

அ. 'கூற்றெனத் தமியள் வந்தாள்'

ஆ. 'தாயைக் கண்ட ஆன்கன்றின் அன்னான்'

இ. 'ஒன்றி வாழுதி ஊழிபல'

ஈ. 'கன்று பிரிந்துழிக் கறவை ஒப்பக்கலங்கினாள்'

உ. 'அன்னையே அறம் பார்க்கிலை'

அ. 'கூற்றெனத் தமியள் வந்தாள்' இஃது இராமன் தயரதனைத் தேடி, அவனிருக்கும் இடத்தை யறிந்து, கைகேயியின் அரண்மனைக்கு வரும்பொழுது அவளே அவனுக்கு எதிரில் வருகிறாள். அவள் வருவதைக் 'கூற்றெனத் தமியள் வந்தாள்' எனக் கம்பர் கூறுகிறார்.

ஆ. 'தாயைக் கண்ட ஆன் கன்றின் அன்னான்' கைகேயி தான் பெற்ற வரங்களைத் தயரதன் இராமனிடம் கூறான் என்று கருதி அவளே சொல்லக்கருதி அவனை எதிர் நோக்கிவருகின்றாள். அவனைக் கண்ட இராமன் நிலையைத் 'தாயைக்கண்ட ஆன்கன்றின் அன்னான்' என்று கம்பர் கூறுகிறார்.

இ. 'ஒன்றி வாழுதி ஊழி பல' இது கோசலையின் கூற்று. இராமனை நோக்கிக் கூறியது. முடிசூடாமல் வந்த இராமன் கோசலையிடம் பரதன்தான் முடிசூடுகின்றான் என்று கூறியபொழுது கோசலை 'ஒன்றி வாழுதி ஊழிபல' எனக் கூறுகின்றாள்.

ஈ. 'கன்று பிரிந்துழிக் கறவை ஒப்பக் கலங்கினாள்' இராமன் கோசலையிடம் தன்னைப் பதினான்கு ஆண்டுகள் காட்டிற்குச் செல்லு

மாறு மன்னன் பணிந்துள்ளான் என்று கூறியதும் கோசலை 'கன்று பிரிந்துழிக்கறவை யொப்பக் கலங்கினாள். என்று கம்பர் கூறு கின்றார்.

உ. 'அன்னையே அறம் பார்க்கிலை' இஃது இராமன் கூறியது. கோசலையை நோக்கிக் கூறியது. அவள் தானும் காட்டிற்கு வருகி றேன் என்று கூறியபொழுது இராமன் கூறியது.

17. இலக்கணக் குறிப்பு வரைக

குறுகினன் வருதல்—முற்றெச்சம்.
பகர்வென் என்ற—தன்மை ஒருமை வினைமுற்று.
பவளவாய்—உவமைத் தொகை.
செங்கையில்புதைத்து—உருபுமயக்கம்.
உனக்கு உந்தை—மரூஉமொழி.
பணிமின் என்றான்—ஏவல் பன்மை வினைமுற்று.
கவித்தனன் வரும்—முற்றெச்சம்.
புனைந்திலன் மௌலி—எதிர்மறைப்படர்க்கை வினைமுற்று.
நளினபாதம்—உவமைத் தொகை.
எம்பி பரதன்—மரூஉமொழி.
வேற்றுமை மாற்றினான்—வினையாலணையும் பெயர்.
உனக்கு அறன்—மொழியிறுதிப் போலி.
ஒன்றி வாழுதி—முன்னிலை ஒருமை வினைமுற்று.
ஏயது உண்டு—இடைக்குறை.
தூங்குசெவி—வினைத் தொகை.
விழுந்தாள் அரோ—அசைநிலை.
அஞ்சும் அஞ்சும்—அடுக்குத்தொடர்.
அழியேல் என்றான்—எதிர்மறைஏவல் வினைமுற்று.
ஏகல் என்பது—எதிர்மறை வியங்கோள் வினைமுற்று.
யானும் உரைக்கிலேன்—தன்மை ஒருமை எதிர்மறை வினை முற்று.
தேவரும் உயர்ந்தார்—உயர்வு சிறப்பும்மை.
தாங்கிய விஞ்சை—மரூஉமொழி.
ஏயின செய்தல்—இலக்கணப்போலி.

18. பிரித்தெழுதுக.

பகர்வென்—பகர்+வ்+என்.
உரையான்—உரை+ஆ+ஆன்.
துவண்டு—துவள்+ட்+உ.
தாங்கரும்—தாங்க+அரும்.
புனைந்திலன்—புனை+த்(ந்)+த்+இல்+அன்.
வாழுதி—வாழ்+உ+தி.
மாண்ட—மாண்+ட்+அ.
என்பதியாவது—என்பது+யாவது.
அழியேல்—அழி+ஏல்.

# ஈ. மனோன்மணீயம்

**1. மனோன்மணீயத்தில் கூறப்பட்ட மருதநிலவளத்தையும் நெய்தல் நிலவளத்தையும் சுருக்கி வரைக.**

நெய்தல் நிலத்தில் உலர்த்தியிருக்கும் மீனைக்கவர வரும் வண்டானம் என்ற பறவையின்மேல் நுளைச்சியர் தம் காதணியை எறிய அஃது அங்கே எருமைமேலிருந்து சிறகை உலர்த்திக்கொண்டிருக்கும் காக்கைக்குத் துயரம் தரும்.

தாழை மலரின் நிழலைத் தன் பெடையென்று கருதித் தாரா நெருங்கும். அதைக்கண்ட ஆம்பல் வாய் மலர்ந்து சிரிக்கும் அதனருகில் நிற்கும் கோங்கமரம் மகரந்தப் பொடிகளைச் சிந்தி அதன் வாயை அடைக்கும்

வெண்சங்குகள் ஈன்ற முத்துக்களை அன்னத்தின் முட்டை என்று கருதிப் பருந்துகள் கவர்ந்து சென்று அடம்புக் கொடிகளினூடே மறைத்துவைக்கும்.

கரும்பாலையிலிருந்து கிளம்பிய புகை நெய்தல் மலர்களை வாடச் செய்யும். அம்மலர்கள் குளிரும்படி எருமைகள் பாலைச் சொரியும்.

கலப்பை நுனி தாக்க அதனால் வருந்திய ஆமை, ஊடல் கொண்ட நுளைச்சியர் வழித்தெறிந்த குங்குமக் குழம்பிலே மறைந்து கொள்ளும்.

பரதவர் அடிக்கும் பறையொலி கேட்டு மருதமரங்களில் வாழும் அன்றிற் பறவைகள் உறங்கா. உப்பேற்றிய ஓடங்கள் நெற்பயிரின் அடியிலே கட்டப்பட்டிருக்கும்.

இரவும் பகலும் மாறி வந்தாலும் அங்கு மழை தப்பாது. ஆற்றுவெள்ளமும் கடல் வெள்ளமும் இடைவிடாது மோதுவதால் கடல் நீர் ஒரு சமயம் இனிக்கும். மரக்கலம் ஒருசமயம் ஆற்றுள் சென்று வயலுக்கருகில் வரும்.

கால்வாயில் மிக்கு வரும் வெள்ளம் மதகு பலகையை மோதிக் கடந்து செல்லும் இரைச்சல் ஓம் என்ற பிரணவ மந்திரத்தின் ஒலியை எழுப்பும்.

**2. நாஞ்சில் நாட்டிற் பறவைகள் முதலியவற்றின் தோற்றம் எவ்வாறு வருணிக்கப்படுகிறது?**

வயல்களைக் கம்பளமாகக் கொண்டு, தாமரை மொட்டுக்களைப் புகையில்லாத விளக்குகளாகக் கொண்டு, முத்துக்களையும் சோவிகளையும் பணமாகக் கொண்டு, நண்டுகள் அவற்றை எண்ணிப் பார்க்கவும், அன்னம், கொக்கு, செம்போத்து, சம்பங்கோழி, நாரை, காடை, பொய்யாப்புள், மீன்கொத்தி இவை போன்ற பறவைகள் கூடியிருந்து தலையசைத்தும் சிறகடித்தும் மாலை

வேலையிற் கூடும் கடைத்தெரு என்றெண்ணும்படியாக ஒலியெழுப்பின என்று வருணிக்கப்படுகிறது.

3. இலக்கணக் குறிப்புத் தருக.

ஓம்புபு நுளைச்சியர்—செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம்
புலர்மீன் கவர—வினைத்தொகை.
வால்வளை சூலுளைந்து—பண்புத்தொகை,
ஓதிமக்குடம்பை—ஆறும் வேற்றுமைத்தொகை.
என்று உன்னுபு—செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.
கரும்பு அடுசாலை—வினைத்தொகை.
நளிமீன் கோட்பறை—உரிச்சொற்றொடர்.
விளிகேட்டு உறங்கா—எதிர்மறைப் படர்க்கைப் பன்மை வினைமுற்று.
இராப்பகல்—உம்மைத்தொகை.
துகிர்க்கால் அன்னம்—உவமைத்தொகை.
கனைகுரல் நாரையும்—வினைத்தொகை.
குழூஉக்குரல்—இன்னிசையளபெடை.

4. பிரித்தெழுதுக.

கரும்படு சாலை—கரும்பு+அடுசாலை.
மேய்ந்தகல்—மேய்ந்து+அகல்.
சேற்றிடை—சேறு+இடை.
கோட் பறை—கொள்+பறை.
நாணிறம்—நான்கு+நிறம்; நால்+நிறம்.
கனைகுரனாரை—கனைகுரல்+நாரை.
பேரொலி—பெருமை+ஒலி.

# IV பல்சுவை

## அ. 1. புறநானூறு

1. கீழ்வரும் திணை, துறைகளை விளக்குக.
பாடாண்டிணை, பரிசிற்றுறை.

பாடாண்டிணையாவது பாடப்படும் ஆண் மகனுடைய ஒழுகலாற்றைப் புகழ்ந்து பாடுவது. அஃதாவது அவனுடைய கொடை, வீரம் புகழ் முதலியனவற்றைப் புகழ்ந்து பாடுவது. பாடு+ஆண்+திணை.

பரிசிற்றுறையாவது வள்ளல் முன்னே பரிசிலர் தாம் கருதிய பேறு இஃதெனச் சொல்லுதல்.

2, **பரிசில் பெற்றுவந்த பெருஞ் சித்திரனார் தம் மனைவிக்குக் கூறியன யாவை ?**

என் மனைக்கு உரியவளே ! வள்ளல் குமணன் வாரி வழங்கிய செல்வத்தை உன்னை விரும்பும் மகளிர்க்கும், உன்னால் விரும்பப்படும் மகளிர்க்கும், கற்பிற் சிறந்த நின் உறவினர் முதலானவர்கட்கும், நம் சுற்றத்தின் பசிதீரக் குறியெதிர்ப்பை நல்கியவர்கட்கும், இவர்களுக்குத்தான் கொடுக்கவேண்டும் என்று கருதாமல், என்னையும் கேளாமல், நாளைக்கு நாம் நன்கு வாழ்வோம் என்று சேமித்து வைக்காமல் நீயும் எல்லோர்க்கும் கொடுப்பாயாக என்று பெருஞ் சித்திரனார் தம் மனைவிக்குக் கூறினார்.

3. **இலக்கணக் குறிப்பு வரைக.**

**நின்னயந்து**—இரண்டாம் வேற்றுமைத் தொகை.
பசிதீர **யாழ** நின்—முன்னிலை அசை.
வல்லாங்கு **வாழ்தும்**—எதிர்காலத் தன்மைப்பன்மை வினை முற்று.
**நீயும்** கொடு—எதிரது தழுவிய எச்சவும்மை.
**மனை கிழவோய்**—விளிப் பெயர்.
நல்கிய **வளன்**—மொழியிறுதிப்போலி.

4. **உறுப்பிலக்கணந் தருக**

வாழ்தும்—வாழ்+தும். வாழ்—பகுதி, தும்—தன்மைப் பன்மை வினைமுற்று விகுதி.
கிழவன்—கிழமை+அன். கிழமை—பகுதி, அன்—விகுதி.

## 2. சடையப்ப வள்ளல்கொடைச் சிறப்பு.

1. **பரராச சிங்கன் சடையப்பரின் கொடைச் சிறப்பைப் புகழ்ந்து பாடக் காரணம் என்ன ?**

ஒரு சமயம் கண்டிநாடு பஞ்சத்தால் வாடியது. அப்பொழுது அங்குச் சென்றிருந்த புலவர் ஒருவர் சடையப்பரின் கொடைத் திறத்தைப் புகழ்ந்து கூறி, அவர்பால் உதவிபெற முயல்க என்றனர். அவர் சொற்படியே கண்டி நாட்டரசன் பரராச சிங்கன், வள்ளலை வேண்டிச் செய்தியனுப்பினான். ஈயும் இதயம் படைத்த வள்ளல் பல மரக்கலங்களில் சோழநாட்டு நெல்லை அனுப்பினார். நெல்லைப் பெற்றுப் பஞ்சம் தீர்ந்த பரராசன் நன்றி தெரிவிக்கும் முறையில் வாயாரப் புகழ்ந்து இப்பாடலைப் பாடி அனுப்பினான்.

**2. சடையப்பரின் கொடைச் சிறப்பைப் பரராச சிங்கன் எவ்வாறு புகழ்கிருன் ?**

புதுவையம்பதியில் வாழ்கிற சங்கரன் என்பவரின் மகளுகிய சடையப்பர் என்ற தரும தேவதை வாழ்கின்ற காரணத்தால் சோழ நாட்டு மக்களுக்கு இரவு பகலாளுல் என்ன ? பகல் இரவாளுல் என்ன ? கதிரவன் திசை மாறிளுல் என்ன ? கடல் பொங்கிளுல் என்ன ? வற்றிளுலென்ன ? அரசர்கள் இருந்தாலென்ன ? இறந்தாலென்ன ? ஒரு கவலேயும் இல்லே என்று பரராச சிங்கன் சடையப்பரின் கொடைச் சிறப்பைப் புகழ்ந்து கூறுகின்ருன்.

**3. சோழமண்டலத்தின் வாழ்க்கைக்குக் காரணங்களாகப் பரராசன் கூறுவன யாவை?**

சோழ மண்டலத்தின் நல்வாழ்வுக்குக் காரணம் சிவபெருமான் பொன்னம்பலத்தில் நின்று நடனமாடுவதும், திருமால் காவிரித் திருநதியில் (திருவரங்கத்தில்) பள்ளி கொண்டிருப்பதும் ஆகும் எனப் பரராச சிங்கன் கூறுகிருன்.

**4. இலக்கணக் குறிப்பு வரைக.**

இருள் அரு—ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
மா முகில் துயிலும்—உவமையாகு பெயர்.

# ஆ. இரட்டுற மொழிதல்

## 1. பாம்பும் எலுமிச்சம்பழமும்

**1. பாம்புக்கும் எலுமிச்சம்பழத்துக்கும் கூறிய சிலேடைப் பொருளே விளக்குக.**

பாம்பு (பெரியவிடமே சேரும்) மிகுத்த நஞ்சு பொருந்தியிருக்கும்; (பித்தர் முடி ஏறும்) பித்தளுகிய சிவன் முடியிற் பொருந்தியிருக்கும்; (அரி உண்ணும்) காற்றை உணவாகக் கொள்ளும்; (உப்பும்) உடம்பு பெருக்கும் ; (மேல் ஆடும்) மேலெழுந்து படம் விரித்தாடும் ; (எரி குணமாம்) கோபக் குணமுடையதாகும்.

எலுமிச்சம் பழம் (பெரிய இடமே சேரும்) பெரியோர்கள் கையிற் கொடுக்கப்பெறும்; (பித்தர் முடி ஏறும்) பித்துப் பிடித்தவர்களுடைய தலேயில் தேய்க்கப்படும்; (அரியுண்ணும்) நறுக்கப்படும். (உப்பு மேலாடும்) உப்பு அதன்மேல் தூவப்பெறும்; (எரி குணம்ஆம்) அதன் சாறு எரிச்சல் உண்டாக்கும் தன்மையது.

## பாணனும் விறலியும்

**1. யானை யென்னும் பொருளுக்குரிய வேறு பெயர்களாகக் கவி கூறும் சொற்கள் யாவை?**

யானைக்குரிய வேறு பெயர்களாவன : களபம், மாதங்கம், வேழம், பகடு, கம்பமா, கைம்மா என்பனவாகும்.

**2. பாணன் யானையைக் குறிக்கக் கூறிய சொற்களுக்குப் பாணி எவ்வாறு பொருள் கொண்டு கூறினாள்?**

களபம் என்ற சொல்லுக்கு மணப் பொருள் என்று கொண்டு உடலிற் பூசும் என்றாள். மாதங்கம் என்னுஞ் சொல்லுக்குப் பெரிய தங்கம் என்று பொருள்கொண்டு வாழ்ந்தோம் என்றாள். வேழம் என்பதற்குக் கரும்பென்று பொருள் கொண்டு தின்னும் என்றாள். பகடு என்ற சொல்லுக்கு எருது எனக்கொண்டு உழும் என்றாள். கம்பமா என்னும் சொல்லுக்குக் கம்பரிசிமா எனப் பொருள் கொண்டு களியாகும் என்றாள். கைம்மா என்றவுடன் யானை யென்றறிந்து சும்மா கலங்கினாள்.

**இம்பர்வான் எல்லை**—உம்மைத்தொகை.

**வாழ்ந்தோம்** என்றாள்—தன்மைப் பன்மை வினைமுற்று.

**கைம்மா** என்றேன்—இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

## இ. சீட்டுக் கவி

**1. மதியழகர் யார்யாருக்குச் சீட்டுக்கவி எழுதினார் அதில் எழுதப்பட்ட பொருள் என்ன?**

மதியழகர் பாணபத்திரன் பொருட்டுச் சேர மன்னன் ஒருவனுக்குச் சீட்டுக்கவி எழுதினார். அச்சீட்டுக் கவியில் 'மாடங்களை யுடைய கூடலில், அன்னம் பயில்கின்ற பொழில்கள் சூழ்ந்த திருவாலவாயிலில் மன்னியிருக்கும் சிவனாகிய யான் சொல்லும் செய்தியை, பாவலர்க்குப் பருவமேகம் போல வழங்கும் தன்மையுடைய — வெண் கொற்றக் குடைக்கீழிருந்து போர் யானையைச் செலுத்தும் சேர மன்னனே! காண்பாயாக. முறைப்படி யாழ் பயின்றுள்ள பாணபத்திரன் என்பவன் உன்னைப்போலவே என்னிடத்து அன்பு மிகுந்தவன். அவன் உன்னைக் காண வேண்டி உன்னிடம் வருகின்றான். அவனுக்கு மிகுந்த பொருள் கொடுத்து அனுப்புக' என்று குறித்திருந்தனர்.

2. **இலக்கணக் குறிப்புத் தருக.**

**பானிற** வரிச்சிறகு—உவமைத் தொகை.
**கருதிப் போந்தனன்**—கால வழுவமைதி.

3. **பிரித்தெழுதுக.**

**பானிறம்**—பால்+நிறம்.
**போந்தனன்**—போ+த்(ந்)+த்+அன்+அன்.

# ஈ. இயற்கை எழில்

## 1. ஈங்கோய் எழுபது

1. **ஈங்கோய் மலையின் இயற்கை எழில் எவ்வாறு கூறப்பட்டுள்ளது? அது யாருடைய குன்று?**

மென்மையான இதழ்களையுடைய செங்காந்தட் கொத்துக்களில் தேனைப் பருக வண்டு வந்து அமர, அதனைக் கண்ட கிழக் குரங்கு 'ஐயோ! இவ்வண்டு நெருப்பினுள் மூழ்கி விட்டதே' என்று அஞ்சியிரங்கி, அடிக்கடி எழுந்தெழுந்து கைகளை நெரிப்பதற்கு இடமான ஈங்கோய் மலை என்று அதன் இயற்கை எழில் கூறப்பட்டுள்ளது. இம்மலை பிறை சூடிய பெருமானுடைய குன்றாகும்.

2. **இலக்கணக் குறிப்பு வரைக.**

**முதுமந்தி** பழகி—பண்புத்தொகை.
**எழுந்தெழுந்து**—அடுக்குத் தொடர்.
**செஞ்சடை**—பண்புத்தொகை.

## 2. திருச்செந்தூர் வளம்

1. **பகழிக் கூத்தர் அன்னத்தின் செயலாகக் கூறும் எழிலை வரைக.**

வெண்மையான சிறகுகளையுடைய அன்னங்கள் தாமரை மலரின் மடலை எடுத்து, அன்புக் குழந்தை போல மடியில் வைத்துக் கொண்டு, பலவகையாகப் பாராட்டி, சங்கிலே குவளை மலரின் தேனை முகந்து அதைப் பாலாக ஊட்டி, செந்தாமரையின் இதழ்களை விரியச் செய்து, அதிலே கிடத்தி, உறங்கப் பண்ணித் தாலாட்டுப் பாடுகிறது என்று பகழிக் கூத்தர் பாடுகிறார்.

2. **குருகின் செயலாகப் பகழிக்கூத்தர் கூறுவதை வரைக.**

ஆண் குருகு தன் பெட்டைக் குருகுக்குத் தன்வாயிலே கொண்ட இரையை, அதன் கூரிய அலகுகளைப் பிளந்து விருப்பத்துடன் உண்பிக்கின்றது என்று பகழிக் கூத்தர் கூறுகிறார்.

3. **திருச்செந்தூரின் இயற்கை எழிலைப் பகழிக்கூத்தர் எங்ஙனம் வருணிக்கின்றார் ?**

இவ்வினாவிற்கு விடையாக முதலிரண்டு வினாக்கட்குரிய விடைகளையே தொகுத்துக் கூறிக் கொள்க.

4. **இலக்கணக் குறிப்பு வரைக.**

சிறைப் **புள்ஓதிமங்கள்** — இரு பெயரொட்டுப் பண்புத் தொகை
**திண்மைச் சுரிசங்கு**—வினைத்தொகை.

5. **பிரித்தெழுதுக.**

செழுந்தாமரை—செழுமை+தாமரை.
நெட்டிதழ்—நெடுமை+இதழ்.

6. **உறுப்பிலக்கணந் தருக.**

முகந்து—முக+த்(ந்)+த்+உ. முக—பகுதி. த்—சந்தி, நகரமானது விகாரம், த்—இறந்த கால இடைநிலை, உ—வினையெச்ச விகுதி.

## 3. மலரும் மாலையும்

1. **கவிமணி வெண்ணிலாவை நோக்கிக் கூறுவனயாவை?**

கோடிவிண்மீன்கள் சூழ்ந்துவர ஒரு வெள்ளி ஓடம்போல வருகின்ற வெண்ணிலாவே ! கதிரவனுடைய செங்கதிர்களில் குளிக்கும் நீ நாடோறும் பாற்கடலிலும் மூழ்குவாயோ ? ஆம்பல் மகிழும்படியாக வரும் நீ, தாமரை குவியும்படியாக வருகின்றாயே அஃது உனக்கென்ன தீமை செய்தது ? இரவையும் பகலாக்குகின்றாயே ! உன்னை இராகு விழுங்கிடுமோ ? வளர்ந்துகொண்டே வரும் நீ மீண்டும் வாடி வாடிப்போவதன் காரணம் என்ன ? கூகை ஆந்தை இவற்றைப்போல நீ பகற்பொழுதில் கூட்டுக்குள் உறங்குவாயோ ? என்று கவிமணி வெண்ணிலாவை நோக்கிக் கூறுகின்றார்.

2. **இலக்கணக் குறிப்பு வரைக.**

**கோடி கோடி**—அடுக்குத்தொடர்.
**வெள்ளியோடம்**—மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை.

**பாற்கடலும்**—இறந்தது தழுவிய எச்சவும்மை.
**கடலும் ஆடுவை**—முன்னிலை ஒருமை **வினைமுற்று.**
**கூகை ஆந்தை**—உம்மைத் தொகை.

## உ. இன்னிசைப் பாக்கள்

1. திருத்தக்கதேவர் பாடலில் இறைவன் எவ்வாறு வேண்டப்படுகிறார் ?

ஆதி வேதம் பயந்தவனே! மலர்மழை பெய்ய அமைந்தவனே! நீதிநெறி உணர்ந்தவனே! நிகரில்லாப் பெருஞானம் உடையவனே! உலகத் தலைவனே! உன்திருவடி தொழும் எங்களுடைய பிறவித்துயருக்குக் காரணமான பற்றுக்களை நீக்கியருள்வாயாக என்று வேண்டப்படுகிறார்.

2. இலக்கணக் குறிப்பு வரைக.

**பிறவிக்கடல்**
**பாதகமலம்** } உருவகங்கள்.
**பசையாப்பு**

3. உறுப்பிலக்கணந் தருக.

பயந்தோய்—பய+த்(ந்)+த்+ஆய்.பய—பகுதி, த்—சந்தி, நகரமானது விகாரம், த்—இறந்தகால இடைநிலை, ஆய்—முன்னிலை ஒருமை விகுதி, விகுதி ஆகாரம் ஓகாரமாகத் திரிந்தது.

4. திருக்குருகாவூர் வெள்ளடையப்பர் எவ்வியல்பினர்?

திருக்குருகாவூர் வெள்ளடையப்பர் பண்ணுக்குத் தமிழ்போலவும், பழத்திற்குச் சுவைபோலவும், கண்ணுக்குக் கருமணிபோலவும், இருளுக்குச் சுடர்போலவும் விளங்கி அடியவர்க்குத் துன்பம் வாராமல் காப்பது அவருடைய இயல்பாகும்.

5. இறைவன் தமக்கு அருள்செய்யாமல் இருக்கமுடியாது என்பதை மாணிக்கவாசகர் எங்ஙனம் இயம்புகின்றார்?

குழந்தையின் பசி நேரத்தைத் தானே அறிந்துவந்து பாலூட்டும் தாயைக் காட்டிலும் அன்புகாட்டி, என் உடலைச் சுருக்கி உள்ளொளியைப் பெருக்கி, கேடில்லாத ஆனந்தத் தேனைச் சொரிந்து புறமெல்லாம் திரிகின்ற செல்வமே! சிவபெருமானே! உன்னைத் தொடர்ந்து வந்து சிக்கெனப் பற்றிக்கொண்டேன். அதனால் எனக்கு நீ அருள் செய்யாமல் தப்பமுடியாது என்று மாணிக்கவாசகர் கூறுகின்றார்.

6. இலக்கணக் குறிப்பு வரைக.

**சாலப் பரிந்து**—உரிச்சொற்றொடர்.
**ஊனினை உருக்கி**—சினையாகுபெயர்.

7. நாராயணா என்னும் நாமம் என்னென்ன நன்மைகளைத்தரும் ?

நாராயணா என்ற நாமம் குடிப்பிறப்பைத்தரும்; செல்வத்தைக் கொடுக்கும்; அடியவர்கள் துன்பங்களை நீக்கும்; வீடு பேற்றையருளும்; அருளையும் பெரு நிலத்தையும் கொடுக்கும்; வெற்றியைத் தரும்; பிறநலங்களையும் தந்து தாயைக் காட்டிலும் மேலான பல நன்மைகளைச் செய்யும்.

8. உமறுப்புலவர் இறைவன் இயல்பை எவ்வாறியம்புகின்றார்? அவனை மறந்தவர் நிலையை எவ்வாறு கூறுகின்றார் ?

இறைவனை அறிந்து முக்கால நிகழ்ச்சிகளையும் உணர்ந்த துறவிகளின் மனத்தாமரையில் எழுந்தருளியவன்; தொடர்ந்துவரும் இன்பதுன்பங்கள் அற்றவன்; பலவுயிர்களின் மனத்தளவே தங்கிப் பிறப்பும் இறப்பும் இல்லாதவன் என்று உமறுப்புலவர் இறைவனியல்பை இயம்புகின்றார். அவனை மறந்தவர்க்கு வீடுபேறும் இல்லை; அறிவும் இல்லை என்று கூறுகிறார்.

9. இலக்கணக்குறிப்பு வரைக.

இதயாசனம்—உருவகம்.
இன்பதுன்பம்—உம்மைத்தொகை.
சுவர்க்கப்பதி—இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
பதியையும் மறந்து—எதிரது தழுவிய எச்சவும்மை.

10. சுப்பிரமணிய தேசிகருடைய கொடைத்திறத்தை எடுத்துச் சொல்வன யாவை ? அவை எவ்வாறு சொல்கின்றன ?

சுப்பிரமணிய தேசிகருடைய கொடைத்திறத்தைப் பரிசு பெற்றவர்களுடைய வயிறு சொல்லும், இடை சொல்லும், நடையும் சொல்லும், காதும் கழுத்தும் சொல்லும்.

வந்தவர்கட்கு வயிறார உணவிட்டு, பட்டாடை முதலியன உதவி, குடைமுதலியன கொடுத்து, காதணி, கழுத்தணி முதலியன நல்கப்பெற்றமையால் அவர்கள் பெருமிதமாக நடக்கின்றார்கள். அதனால் வயிறு முதலியன அவருடைய கொடைப்பெருமையைக் கூறுகின்றன.

11. இலக்கணக்குறிப்பு வரைக

நிற்சார்ந்தவர்—இரண்டாம் வேற்றுமைத் தொகை.
இடை, கண்டம், காது—இடவாகு பெயர்கள்.

# ஊ. தமிழும் தமிழரும்

## 1. தமிழ்

1. தமிழுக்கும் கதிரோனுக்கும் உள்ள பொதுத் தன்மைகள் யாவை? இப்பாடலில் அமைந்துள்ள அணி யாது?

தமிழ் (ஓங்கல் இடை வந்து) பொதிய மலையில் தோன்றி, (உயர்ந்தோர் தொழ விளங்கி) சான்றோரால் புகழப்பட்டு, (ஞாலத்து இருள் அகற்றும்) உலகத்தாரின் மன இருளை அகற்றுகிறது.

கதிரவன் (ஓங்கல் இடை வந்து) உதயகிரியில் தோன்றி, (உயர்ந்தோர் தொழ விளங்கி) உயர்ந்த மக்களால் வணங்கப்பட்டு, (ஞாலத்து இருள் அகற்றும்) உலகத்து இருளைப் போக்கும்.

இப்பாடல் வேற்றுமை யணியாகும்.

2. தமிழர்கள் தமிழ் மொழியைப் பொறுத்த வரையில் எவ்வாறிருக்கின்றார்கள்? அவர்கட்குப் பாரதியார் கூறும் அறிவுரை யாது?

பல மொழிகளுக்குள்ளே தமிழைப் போல இனிய மொழி எங்குமே கண்டதில்லை, அத்தகைய மொழியைப் பேணாமல், பாமரராய், விலங்குகளாய், உலகம் இகழ்ச்சி சொல்லப் பான்மை கெட்டுப் பெயரளவில் தமிழர்கள் என்று சொல்லிக் கொண்டு வாழ்ந்து வருகின்றார்கள் தமிழர்கள். 'இவ்வாறு வாழ்வது நல்ல செயலாகுமோ? இனியேனும் தேனினும் இனிய தமிழின் ஒலி உலகமெல்லாம் பரவும் வகை செய்ய வேண்டு'மென்று பாரதியார் அறிவுரை கூறுகின்றார்.

## தமிழ்ப்புலவர்

3. பாரதியார் சிறப்பித்துக் கூறும் புலவர்கள் யார் யார்? அவர்களை எவ்வாறு சிறப்பிக்கின்றார்?

'யாமறிந்த புலவர்களிலே கம்பனைப் போலவும், திருவள்ளுவரைப் போலவும் இளங்கோவைப் போலவும் பூமியில் எங்குமே பிறந்ததில்லை இது வெறும் புகழ்ச்சியன்று. உண்மையே யாகும்' என்று பாரதியார் சிறப்பித்துக் கூறுகின்றார்.

4. தமிழர் சேமமுறப் பாரதியார் இடித்துக் கூறும் அறி வுரை யாது ?

தமிழ்மக்களே ! ஊமையராய், செவிடர்களாய், குருடர்களாய் வாழ்கின்றீர். உங்கட்கு ஒன்று சொல்வேன் கேளுங்கள். இனி நீங்கள் இவ்வாறு வாழாமல் சேமமுற வேண்டுமானால் தமிழகத் துத் தெருவெல்லாந் தமிழ் முழக்கஞ் செழிக்கும்படி செய்வீர்களாக என்று பாரதியார் அறிவுரை கூறுகின்றார்.

## 3. திருவள்ளுவர்

5. வையகம் புகழ்பெறக் காரணமாகப் பாரதிதாசன் கூறுவது யாது ?

தெளிந்த தமிழ் நடையில் இரண்டடிப் பாக்களால் பயிலுந் தோறும் சுவையும் எண்ணுந்தோறும் உணர்வும் உண்டாகுமாறு, அறம், பொருள், இன்பம் முதலிய அனைத்தையும் திருக்குறள் நூலாகத்தந்த திருவள்ளுவரைப் பெற்ற காரணத்தால் வையகம் புகழ் பெற்றது என்று பாரதிதாசன் கூறுகின்றார்.

6. முப்பாலுக்கு இந்நிலத்தே இணையில்லாமைக்குக் கார ணங்கள் யாவை ?

திருவள்ளுவர் வாய் மலர்ந்தருளிய முப்பாலுள் வெற்றி பெறாதது ஒன்றுமேயில்லை; தீயதும் இல்லை; குற்றமற்ற வாழ்வு நெறியிலே மக்களை அழைத்துச் செல்லாததும் ஒன்றுமில்லை; பொது மறையாகிய திருக்குறளிலே இல்லாதது எங்கும் இல்லை. ஆதலால் முப்பாலுக்கு இணையில்லை.

7. பாரதிதாசன் திருக்குறளின் பெருமையை எவ்வாறு கூறுகின்றார் ?

இவ் வினவிற்கு விடையாக ஆறாம் வினவின் விடையையே தகுந்தவாறு அமைத்துக் கொள்க.

8. நாமக்கல் கவிஞர் தமிழ் மகனுக்குக் கூறும் அறிவுரை கள் யாவை ?

தமிழ் மகனே ! தமிழன் என்ற பெருமையுடன் தலை நிமிர்ந்து நில். உன் வரலாற்றை உலகமெங்கும் கொண்டு செல். அமிழ்தம் போன்ற தமிழ் மொழியின் ஓசை வானமுகட்டை முட்ட, உலகத்து மக்களெல்லாம் கண்டு விரும்பும்படி செய்து ஏனை நாட்டுக் கலை களையெல்லாம் தமிழில் மொழி பெயர்த்துத் தமிழர் வீட்டில் நிறைத்து, நமக்குச் சொந்தமான இந்த நாடு மீண்டும் நல்வாழ்வு பெறத் தொண்டு செய்து நீண்ட நாள் வாழ்க என்று நாமக்கல் கவிஞர் தமிழ் மகனுக்கு அறிவுரை கூறுகிறார்.

---

# பொது உரைநடை விஞ விடை

## 1. திருக்குறள்

1. மாந்தர்க்கு உறுதி யென உயர்ந்தோரால் எடுக்கப் பட்ட பொருள் எவை?

இந்திரன் முதலிய இறையவர் பதங்களும், அந்தம் இல்லாத இன்பத்தையுடைய அழிவில்லாத வீடும் நெறியறிந்து எய்துவதற்கு உரிய மாந்தர்க்கு உறுதியென உயர்ந்தோரால் எடுக்கப்பட்ட பொருள்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்குமே யாகும்.

2. நான்கு உறுதிப் பொருள்களுள் நூல்களால் கூறப் படாதது எது? ஏன்?

நான்கு உறுதிப் பொருள்களுள் நூல்களால் கூறப்படா தது வீடு என்னும் ஒன்று மட்டுமே. ஏனெனில் அது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகலின், துறவறமாகிய காரண வகையால் கூறப்படுவதல்லது இலக்கண வகையால் கூறப்படாமை யினுல் அது நூல்களால் கூறப்படவில்லை. ஏனைய மூன்றுமே நூல் களாற் கூறப்படுவன.

3. அறமாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்?

அறமாவது மநு முதலிய நூல்களில் விதித்தனவற்றைச் செய்தலும் விலக்கியனவற்றை நீக்குதலும் ஆகும். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூன்று வகைப்படும்.

4. ஒழுக்கம், வழக்கு, தண்டம் என்னும் மூன்றையும் விளக்குக.

ஒழுக்கமாவது அந்தணர் முதலியவர்கள் தத்தமக்கு விதிக்கப் பட்ட பிரமசரியம் முதலான நிலைகளினின்று, அவ்வவற்றுக்கு ஓதப்பட்ட அறங்களில் வழுவாது ஒழுகுவதாம்.

வழக்காவது ஒரு பொருளைத் தனித்தனியே எனது எனது என் றிருப்பவர்கள் அது காரணமாகத் தமக்குள் மாறுபட்டு அப்பொ ருள் மேற் செல்வது. அது கடன் கொள்ளுதல் முதலிய பதினெட்டு நிலைகளையுடையது.

தண்டமாவது அவ்வொழுக்க நெறியினும் வழக்கு நெறியினும் வழுவினவர்களை அந்நெறியிலே நிலை நிறுத்துதற் பொருட்டு, ஆராய்ந்தறிந்து அதற்குத் தக்கபடி தண்டித்தல்.

**5. ஒழுக்கம், வழக்கு, தண்டம் என்னும் மூன்றனுள்ளும் திருவள்ளுவரால் அறமென எடுத்துக் கொள்ளப் பட்டது எது? ஏன்?**

இம் மூன்றனுள்ளும் ஒழுக்கம் ஒன்று மட்டுமே திருவள்ளுவ ரால் அறமென எடுத்துக் கொள்ளப்பட்டது. ஏனெனில் ஏனைய வழக்கும் தண்டமும் உலக நெறியில் நிறுத்துதலாகிய பயனையுடை யனவே தவிர ஒழுக்கம்போல மக்கள் உயிர்க்கு உறுதி பயக்கும் சிறப்புடையன அல்ல. மேலும் அவ்விரண்டும் நூலாலேயன்றி உணர்வு மிகுதியாலும் தேய இயற்கையாலும் அறியப்படும். அதனுல் வள்ளுவர் அவ்விரண்டையும் விடுத்து ஒழுக்கம் ஒன்றை மட்டும் அறமென எடுத்தோதுகின்ருர்.

**6. வள்ளுவர் அறத்தை எத்தனை வகை நிலையால் கூறு கின்ருர்? அவற்றுள் முதலில் எதனைக் கூறுகின் ருர்? ஏன்?**

வள்ளுவர் அறத்தை இல்லறம், துறவறம் என இருவகை நிலையாற் கூறுகின்ருர். அவற்றுள் இல்லறத்தை முதற்கண் கூறு கின்ருர். இல்லறம் இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்கின்ற நெறிக் கண் நின்று அதற்குத் துணையாகிய கற்புடைய மனைவியோடும் கூடி நின்று செய்யப்படுவதனுல் அதனை முதற்கண் கூறுகின்ருர்,

## 2. மாணவரும் தாய் மொழியும்

**1. உலகில் இருளகற்றும் பொருள்கள் எவை? அவை எவ்வாறு இருளகற்றுகின்றன?**

இருளகற்றும் பொருள்கள் இரண்டு. ஒன்று கதிரவன்; மற் ருென்று தமிழ்.

கதிரவன் உதயகிரியிலே தோன்றிப் பெரியோர்கள் வணங்கக் கடல் சூழ்ந்த உலகத்தில் இருளையகற்றுகின்ருன். தமிழ், பொதிய மலையிலே பிறந்து, சான்ருேர்களால் புகழப்பட்டு, அறியாமை யிருளை அகற்றுகின்றது.

**2. மொழி எவ்வாறு தோன்றி வளர்ந்தது என்பதைச் சுருக்கமாக எழுதுக.**

மனிதன் தோன்றிய பொழுதே மொழியும் தோன்றி விட வில்லை. மனிதன் முதலில் விலங்குகளைப் போலவே ஒலிக் குறிகளா லும் கைக்குறி முகக்குறிகளாலும் தன் மனக் கருத்தைப் பிறருக்கு அறிவித்திருக்க வேண்டும். தனித்து வாழ்ந்து வந்த மனிதன் பிறகு நாளடைவில் பலருடன் ஒன்று கூடி வாழத் தலைப்பட்டதும் மொழி தோன்றி வளரலாயிற்று.

3. மொழியின் சிறப்புக்கள் யாவை?

ஒன்றுபட்ட மக்களின் பொது வாழ்க்கைக்கு மொழி இன்றியமையாதது, பல்வேறுன கொள்கைகள், ஏற்றத்தாழ்வுகள், நிலைகள், தொழில்கள் ஆகியவற்றுல் வேற்றுமையுற்ற பலரும் பேசும் தாய் மொழியால் ஒன்றுபடுகின்றனர். மக்களையும் மாக்களையும் வேறு பிரித்துக் காட்டும் சிறப்பியல்களுள் மொழியும் ஒன்று. எண்ணத்தை வெளிப்படுத்துவதற்கு மொழி கருவியாக இருக்கிறது.

4. தாய்மொழி என்று கூறப்படுவது எது? அஃது அவ்வாறு கூறப்படுவதற்குக் காரணம் என்ன?

உலகில் பிறந்தது முதல் இறக்கும் வரை, தொட்டிலிலிருந்து சுடு காடு வரை ஒருவர் கேட்டும் பேசியும் வரும் மொழியே தாய் மொழி எனப்படும்.

குழந்தை பிறந்து மொழிபயிலுங்கால் அதனுடைய தாயினுல் முதன் முதலில் பாலூட்டி, சீராட்டி, தாலாட்டி, பாராட்டிப் பயிற்றப்படும் மொழியே தாய்மொழி எனப்படும். இச்சிறப்புக் கருதியே தமிழ் மொழி 'பால்வாய்ப் பசுந்தமிழ்' எனப்பட்டது. இவ்வாறு தாயின் வாயிலாகக் கேட்டு மழலைமொழி பேசித் தேறுவதால் அது தாய்மொழி எனப்படுகிறது.

5 தமிழ்மொழியின், பழம் பெருமைகள் யாவை?

தமிழ் மொழி அமிழ்தினும் இனியது என எல்லோராலும் போற்றப் படுகிறது. இது கல் தோன்றி மண்தோன்றுக் காலத்தே தோன்றி மேம்பட்டு வருவது. இவ்வாறு இனிமையும் பழமையும் பொருந்தி விளங்கும் தமிழ் மொழி புதுமையும் பொருந்தி உலக வழக்கறியாமல் நின்று நிலவுகின்ற 'உயர் தனிச் செம்மொழியாகும். பேராசிரியர் சுந்தரம் பிள்ளை கூறுவதுபோல் பல்லுயிரும் பலவுலகும் படைத்துக் காத்து அழித்தாலும் தான் மட்டும் மாறுபடாது நிற்கின்ற பரம் பொருளைப் போல் தமிழ் மொழியும் பல மொழிகளைத் தோற்றுவித்தும் தான் மாறுபாடின்றிப் பழமைக்குப் பழமையாய், புதுமைக்குப் புதுமையாய் விளங்கிப் பொலிவது.

6, உயர் தனிச் செம்மொழி என்றுல் என்ன? அத்தகைய மொழிகள் எவை?

தான் வழங்கும் நாட்டிலுள்ள பல மொழிகட்கும் தலைமையுடையதாயும், அவற்றினும் மேம்பட்டதாயும் உள்ள மொழியே **உயர் மொழி**. பிற மொழிகளின் உதவியில்லாமலே தானே தனித்தியங்கும் ஆற்றல் பெற்ற மொழியே **தனிமொழி** எனப்படும். திருந்திய பண்பும் சீர்த்த நாகரிகமும் பொருந்திய மொழியே **செம்மொழி** எனப்படும். இம் மூன்றிலக்கணங்களையும் உடைய மொழி **உயர் தனிச் செம்மொழியாம்.**

அத்தகைய சிறப்புடைய மொழிகள் தமிழ், வடமொழி, எபிரேயம், இலத்தீன் போன்ற மொழிகளாகும்.

**7. தமிழ் மொழியின் பேராற்றலையும் அதன் தாழ்நிலையையும் வரைக.**

பரந்த நோக்கங் கொண்டு சிறந்து விளங்கும் நம் தமிழ்மொழியானது பிற மொழியின் சேர்க்கையால் விளையும் தீமைகளை ஒழித்து, நன்மைகளை மட்டும் ஏற்றுக் கொண்டு, அம் மொழிகளிலிருந்து வரும் கருத்துக்களையும் சொற்களையும் தன்னியல்பாக்கும் தனிப் பேராற்றல் வாய்ந்ததாயிருக்கிறது. எந்தக் கலையாயினும் அதனை எடுத்துரைக்க வல்ல சொல் வளம் நிரம்பப் பெற்றது.

ஆனால் தன்பால் தஞ்சமென வந்தோர்க்குத் தஞ்சமளித்து, நாளடைவில் தன் ஆட்சிப் பரப்பையும் செல்வாக்கையும் குறைத்துக்கொண்டது. பல மொழிகள் பிரிந்து போனதாலும், பல முறை கடல் கோள் நிகழ்ந்தமையாலும்—தமிழ் வழங்கிய பெரிய நிலப் பரப்பு இன்று பதினொரு கோட்டங்கள் கொண்ட சிறிய பரப்பாகி நிற்கின்றது. தன் சேய்களாகிய தமிழ் மக்களும் தன்னைப் பேணாது பிறரையே பேணித் திரியும் பேதமை கண்டு ஏங்கி நிற்கிறது. தன்னைப் பேணும் ஆசிரியர்களும் மாணவர்களும் தாழ்ச்சி உறுவது கண்டு உளம் நைந்து உருகுகின்றது. முன்னாள் போல் இந்நாளும் தனியரசோச்ச வழி வகைகளை எதிர் நோக்கி நிற்கின்றது.

**8. தாய் மொழிப் பயிற்சி புறக்கணிக்கப் பட்டு ஆங்கில மொழிப் பயிற்சியே போற்றப்பட்டு வரக் காரணம் என்ன ?**

ஆங்கில மொழியின் நெருக்கலினாலும் அயல் மொழிகளின் கலப்பாலும் தமிழ் மொழியை ஆர்வத்துடன் கற்பவரும் இலர்; கற்பிப்பவரும் இலர்; ஆங்கிலம் கற்றவர்க்கே உயர்ந்த வேலைகளும், மிக்க வருவாயும், நன்மதிப்பும் கிடைத்து வந்தகாரணத்தால் பெற்றோரும் மாணவரும் தாய் மொழித் தேர்ச்சியில் ஊக்கம் செலுத்துவதில்லை. அதற்கேற்பப் பள்ளிகளிலும் தாய் மொழிப் பயிற்சி புறக்கணிக்கப்பட்டு, ஆங்கில மொழிப் பயிற்சி போற்றப் பட்டது.

**9. நுண்ணிய எண்ணங்களும் தெளிவான கருத்துக்களும் தோற்றுவதற்கு அடிப்படையான நோக்கங்கள் யாவை ?**

(அ) ஒரு பொருளைப் பற்றி எளிய முறையில் தெளிவாகப் பேசவும்,

(ஆ) ஒரு பொருளைப் பற்றித் தெளிவான முறையில் ஒருவர் பேசுவதைக் கேட்கவும், கேட்டுப் பொருளுணரவும்,

(இ) ஒரு பொருளைப் பற்றித் தெளிவான முறையிற் படிக்கவும், படித்துப் பொருளுணரவும்,

(ஈ) ஒரு பொருளைப் பற்றித் தெளிவான எளிய முறையில் எழுதவுமான ஆற்றலை உண்டு பண்ணுவதாகும்.

## 10. தாய்மொழிப் பயிற்சியால் விளையும் நன்மைகள் யாவை ?

ஒரு தனிப்பட்ட மகிழ்ச்சி ஏற்படுவதோடு, மாணவர்களுடைய மனம், ஒழுக்கம், மனவெழுச்சி முதலியவையும் பண்பட்டு வளர்ச்சி அடைய இடமுண்டு. மாணவர்களின் முழுவளர்ச்சிக்குத் தாய் மொழியே அடிப்படையானது என்னலாம். அதிலும் சிறப்பாகத் தாய்மொழியின் கண்ணுள்ள சிறந்த செய்யுட்களும் இலக்கியங்களுமே அவர்களின் மனவெழுச்சிகளைப் பண்படுத்தித் தனித் தன்மையை வளர்க்கும்.

## 11. நல்லறிவு வளர என்ன செய்ய வேண்டும்?

பல நூல்களையோ சில நூல்களையோ படிப்பதனால் மட்டும் ஒருவர் அறிஞர் ஆகிவிடுவார் என்று எண்ணுவதற்கில்லை. படித்த நூல்களின் உண்மைக் கருத்துக்களை நன்குணர்ந்து, இவர் உள்ளத் தமைத்திருக்கின்றனரா? பொருள்களைப் பகுத்துணரும் அறிவும், ஆழ்ந்து சிந்திக்கும் ஆற்றலும் இவர்பால் உண்டா? என்றும் ஆராயவேண்டும். அங்ஙனம் ஆராய்ந்து பார்த்தால், பல நூல்களை உள்ளத்தமையாது நுனிப்புல் மேய்வதுபோலக் கற்பதால் நல்லறிவு உண்டாகாது என்பதும், சில பொருள்களையேனும் திருத்தமாகக் கற்பதனால் மட்டுமே நல்லறிவு வளரும் என்பதும் புலப்படும்.

## 12. கற்றலின் மிகச் சிறந்த நோக்கம் யாது ?

உயர்ந்த ஆசிரியர்களால் எழுதப்பட்ட நூல்கள் 'தொட்டனைத் தூறும் மணற் கேணி' போல இன்பமுறும் ஊற்றுக்களாம். இலக்கியங்கள் நம்முன்னோர்களாகிய தெய்வப் புலமைச் சான்றோர்கள், தங்கள் வாழ்நாட்களில் பட்டறிந்து கண்டு வைத்த உண்மைகளாகிய விலை மதிக்க வொண்ணு மணிகள் நிரப்பி வைத்திருக்கின்ற பொற்பேழைகளாம். இவற்றைப் பெற்று மகிழ்வது, அவர்கள் கால்வழியில் வந்த பிற்றைநாள் தலைமுறைகளின் தலையாய கடனாகும். இவற்றைப் பயின்று, இவற்றில் இலைமறை காய்களாய்ச் செறிந்து கிடக்கும் பொருள் நயங்களையும், இவற்றின் வெளித் தோற்றங்களாகிய சொல் நயங்களையும் கண்டுணர்ந்து சுவைத்து இன்புறுதலே கற்றலின் மிகச்சிறந்த நோக்கமாகும்.

## 13. தாய்மொழிப் படிப்பால் விளையும் பயன்கள் யாவை?

தாய்மொழிப் படிப்பு, ஒரு மாணவனுடைய நிலைத்ததும் ஆழ்ந்ததுமான ஈடுபாட்டைக் கல்வியிற் செலுத்தி, முறைப்படி ஒழுங்காக வேலை செய்தல், குறித்ததைக் குறித்த மொழியில் வெளியிடல், கலைத் துறைகளில் இறங்கி உழைத்தல் முதலிய நற் பழக்கங்களில் பயிற்சியையும் அளிக்கும் என்று மொழி முறை அறிந்த அறிஞர் உறுதியாக அறுதியிட்டுச் சாற்றுகின்றனர்.

தாய்மொழி இலக்கியத்தைப் படிப்பதனுல் அந்நாட்டு வரலாறு, வாழ்க்கை முறை, நடை, உடை, எண்ணங்கள், பழக்க வழக்கங்கள், அரசியல், சமய நிலைகள், இசை, கூத்து முதலிய கலைகள், அந்நாட்டில் நிறுவப்பட்ட நிலையங்கள் முதலியவற்றை நன்முய் உணர்வதற்கும் அவற்றின் இயல்புகளை நன்முய் ஆராய்வதற்கும் ஆன ஒரு நல்ல வாய்ப்பை அளிக்கும் நோக்கமும் மொழிப் படிப்புக்கு உண்டு.

## 14. தமிழ் மொழியில் உள்ள சிறந்த நூல்கள் யாவை? அவற்ருல் விளையும் பயன்கள் யாவை?

தமிழ் மொழியில் அறம் பொருளின்ப வீடுகளினியல்பைத் திறம்பட விளக்கும் சீரிய நூல்களும், உள்ளத்தை உருக்கிக் கொள்ளை கொண்டு கடவுள் நெறியிற் செலுத்த வல்ல கடவுள் வாழ்த்து, வணக்கப் பாடல்களும், அற நூல்களும், ஒழுக்க முறை நூல்களும் எண்ணிறந்தன உள்ளன. இவற்றைப் படிப்பதால் நல்லொழுக்கமும், கடவுள் அன்பும் நேர்முகமாகவும் அமைய இடமுண்டு. நன்னெறி வகுப்புக்களில் இவற்றை ஏற்றவாறு பிற ஆசிரியர்களும் மேற்கொள்ளலாம். தாய் மொழி இலக்கியப் பயிற்சி, ஒழுக்க அமைப்பில் ஒரு சிறந்த பங்கை எடுத்துக்கொள்கிறது என்பதில் ஐயமேயில்லை.

## 15. கல்வியின் முடிந்த நோக்கங்கள் யாவை?

"கற்கக் கசடறக் கற்பவை ; கற்றபின்,
நிற்க அதற்குத் தக."
"கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்ருள் தொழாஅர் எனின்?"

என்றெல்லாம் கல்வியின் முடிந்த நோக்கங்களாகத் தமிழ் மறை வகுக்கின்றது. மொழிப் படிப்பின் சிறந்த நோக்கங்களை ஹான்ஸ்சின் என்னும் பேராசிரியர், மொழித் திறமை, ஒழுங்கு, அறிவு, இன்புறல் என்ற நான்கில் அடக்கி விடலாம் என்பார்.

# 3. மனையியல்

## 1. நமது நாட்டில் மனையியலைப் பற்றி நிலவும் தவருன கருத்துக்கள் யாவை?

'வெறும் சமையலும் தையலும்தானே மனைக்கலை ; இவற்றையும் குழந்தை வளர்ப்பையும் தெரிந்து கொள்வதற்கு ஒரு கல்லூரிக்கு ஏன் செல்ல வேண்டும்? நமது தாய்மார்களும் பாட்டிமார்களும் கல்லூரிகளுக்குச் செல்லாமலே, தாமாக அனுபவ வாயிலாகவும், இயல்பாக அமைந்த நுண்ணறிவின் மூலமாகவும் இவற்றை உணர்ந்து, குடும்பத்தை இனிது நடத்தி, நமது பண்பாட்டை நிலைக்கச் செய்ய வில்லையா?' என்ற இத்தகைய பல தவருன கருத்துக்கள் நமது நாட்டில் நிலவி வருகின்றன.

## 2. குடும்ப வாழ்க்கையின் சிறப்புக்கள் யாவை?

மனித நாகரிகம் ஆரம்பித்த காலத்திலிருந்து சமூக வளர்ச்சிக்கும் நலத்திற்கும் பெருமைக்கும் இன்பத்திற்கும், அடிப்படையாகவும் ஆதாரமாகவும் இருந்து வருவன வீடும் குடும்பமுமே. வீடு கோவில்; அதிலுள்ள தாய் தெய்வம். தாயிடமிருந்தும் அவள் தரும் சூழ்நிலையில் இருந்தும் நற்பண்புகளாகிய தியாகம், சகோதரத்துவம், அன்பு, அறம், பொறுமை, அருள், அறிவு, பந்தங்கள் முதலியன உண்டாகின்றன. குடும்பத்தின் குத்து விளக்காகிய பெண்கள் மனைமாட்சியால் மட்டற்ற ஆற்றல் பெற்று அன்பினால் அருஞ்செயல்கள் பல ஆற்றியிருக்கின்றனர். இத்தகைய சிறப்புக்கள் குடும்ப வாழ்க்கையினால் உண்டாகின்றன.

## 3. வீட்டுக் கலையை இன்று கல்வி நிலையங்களில் கற்பிக்க வேண்டிய அவசியம் என்ன?

வேகமாக முன்னேறிச் செல்லும் இன்றைய நாகரிக வெள்ளத்தில், வீட்டு வாழ்க்கையின் அடிப்படைகளான இறை வழிபாடு, பக்தி, தியாகம் முதலிய நற்குணங்கள் ஒழிந்து படாமல் பாதுகாக்கப்பட வேண்டும். வாழ்க்கைத்தரம், கல்விநிலை, சமூக வாழ்க்கை முதலியன மாறிக் கொண்டே வருகின்றன. அம்மாற்றத்திற்கேற்ப வீட்டுக் குடும்பமும் பாதிக்கப் பட்டுப் பழைய பழக்க வழக்கங்கள், கடமை, கட்டுப்பாடு முதலியன இடம் பெறுமல் போய் விடுகின்றன. இக்காலத்தில் சமூக நலனுக்காகவும் தம் தேவைகளுக்காகவும் வீட்டிற்கு வெளியே வேலை செய்யும் நிலைமை மகளிர்க்கு ஏற்பட்டிருக்கிறது மக்களாட்சிக் காலத்தில் பெண்கள் அரசியலில் பெரும்பங்கு பெற்றுள்ளனர். இத்தனை மாறுதல்களையும் பெண்கள் சமாளிக்க வேண்டியிருப்பதால் வீட்டுக் கலையைக் கல்வி நிலையங்களில் கற்பிக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

## 4. மனையியற் கல்வியின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் விளக்கி எழுதுக.

1908-ஆம் ஆண்டில் அமெரிக்காவில் டாக்டர் எலன் எச். ரிச்சர்ட்ஸ் என்ற அம்மையார் பெண்கள் கூட்டமொன்றைக் கூட்டி 'அமெரிக்க மனையியல் சங்கம்' என்ற ஒரு நிறுவனத்தைத் தோற்றுவித்தனர். பிறகு நமது நாட்டில் டெல்லிமாநகரில் 'அகில இந்தியப் பெண்கள் சங்க'த்தின் முயற்சியால் 1932-ஆம் ஆண்டில் மனையியல் கற்பிக்க லேடி இர்வின் கல்லூரி நிறுவப்பட்டது. 1952-ஆம் ஆண்டில் சென்னையில் நிகழ்ந்த கூட்டத்தில் 'இந்திய மனையியல் சங்கம்' நிறுவப் பெற்றது. இன்று சென்னை உட்படச் சுமார் 16 பல்கலைக் கழகங்களிலும், ஏராளமான உயர்நிலைப் பள்ளிகளிலும், ஆதாரக் கல்வியிலும், பல்செயல் திட்டத்திலும் மனையியல் பாடமாகச் சேர்க்கப்பட்டுள்ளது.

5. மனையியலும் கல்வியும் ஒன்றேயாகும் என்பதை விளக்குக.

ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்குக் காரணமான குடும்ப வாழ்க்கையின் குறிக்கோள்களை அமைத்துத் தருவதும், ஆன்மீக வாழ்க்கையைத் தருவதும், குழந்தைகளை நன்கு வளர்த்து ஆளாக்குவதும், மாறாத இன்பத்தையும் நற்குணங்களையும் அளிப்பதும் வீடும் குடும்பமுமாகும். தனி மனிதனுடைய வாழ்க்கைக்கும் சமூக வாழ்க்கைக்கும் இன்றியமையாத கூறுபாடுகளைக் கொண்ட குடும்பத்தைச் சீர்படுத்தி நடத்தும் வழிகளைக் கற்பிப்பது மனையியல். கல்வியின் நோக்கங்களில் முக்கியமான சமூக உணர்ச்சி, ஒழுக்கம், மனநிறைவு, சுகம், தொழில் திறமை, ஓய்வு நேரத்தை வளம்படப் பயன்படுத்தல், ஒழுங்கான குடும்ப வாழ்க்கை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டதே மனையியல். ஆகவே இவற்றைக் கற்பிப்பதால் கல்வியும் மனையியலும் ஒன்றே யாகும்.

6. மனையியல், கல்விக்கு உயிர் நாடி போல விளங்குவது எவ்வாறு ?

மனையியலானது வாழ்க்கைக்குக் குறிக்கோளைத் தந்து, அக்குறிக்கோளைத் தெளிவாக்கி, அதனுடைய வழியையும் காட்டி, மனித உள்ளத்தைப் பக்குவப் படுத்திக் குடும்பத்தை மலர வைக்கிறது ; அதன் மூலமாகச் சமூகத்தை வனப்புறுத்துகிறது. அதனால் அஃது எக்காலத்திலும், எந்நாட்டினருக்கும், ஆண், பெண், இளைஞர் முதியோர் ஆகிய அனைவர்க்கும் பயன்படுகின்ற செல்வமாகி மக்கள் நலத்தையே முதலில் வைப்பதால் மனையியலானது கல்விக்கு உயிர் நாடி போல விளங்குகிறது.

7. மனையியல் எவ்வெத் துறைகளை அடிப்படையாகக் கொண்டு விளங்குகிறது ?

மனையியலானது நமக்கு நாடோறும் தேவையான உணவு, உடை, வீடு, பணம், உடல் வளர்ச்சி, உடல் நலம், குழந்தை வளர்ப்பு, நோயில் பாது காப்பு, ஒப்பனை, சமூகக் கடமைகள் ஆகிய பல துறைகளைக் கொண்டது. மேலும் இசை, வரலாறு, கலையழகு, பண்பாடு, இறை வழிபாடு ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டது. வீட்டலங்காரத்தையும் கற்பிப்பது. "தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்றாங்கு ஐம்புலத்தாறு ஓம்பல்தலை" என்ற கடமைகளை வேதமாகக் கொண்டது.

8. மனையியல் கல்வித் திட்டங்களில் முக்கியமானவை எவை ?

மனையியல் கல்வித் திட்டங்களில் முக்கியமானவை : பொருளியல்கள், உயிர் உடற் கூற்றியல்கள், பொருளாதாரம் போன்ற சமூக இயல்கள், உளவியல், கலைகட்டிடவியல் முதலிய விஞ்ஞானக் கலைகளாம்.

**9. உணவுத் துறையில் விஞ்ஞான முறைப்படி நாம் தெரிந்து கொள்ள வேண்டியவை யாவை?**

உணவின் இயல்பு, இரசாயனக் கூறுகள், தேவைகள், உடல் வளர்ச்சிக்கேற்ற உணவுகள், நோயில் என்னென்ன தேவை என்பன வற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும். மேலும் உணவுக் குறை யால் விளையும் நோய்களைத் தவிர்க்கும் வகை, கிடைக்கும் உண வைச் சிறந்த வகையில் பயன்படுத்தும் முறை, உணவினால் உடலில் ஏற்படும் இரசாயன மாறுதல்கள் என்பனவற்றையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

**10. உடையைப் பற்றிக் கல்லூரிகளில் தெரிந்து கொள்ள வேண்டியவை எவை எவை?**

உடையின் இயல்பு, இரசாயனக் கூறுகள், குணங்கள், நெசவு, நிறத்தின் வன்மை, சுருங்குவது நீண்டுபோவது முதலியன, பட்டு, கம்பளி, செயற்கைப்பட்டு, பருத்தி, லினன் என்பவற்றால் ஆகிய துணிகளின் சிறப்புக்களும் குறைகளும், உடையை அமைப்பது, தைப்பது, அலங்காரத்தையல், வயதிற்கேற்ப உடைகளை அமைப் பது, தட்ப வெட்ப நிலைக்கேற்ப உடுத்துவது, உடைகளைப் பேணு வது, தூய்மையாகத் துவைப்பது, உலர்த்துவது, பெட்டி போடு வது, கம்பளி பட்டு முதலியவற்றைப் பூச்சிகள் அரிக்காவண்ணம் பது, கிழிந்தவற்றைப் புதுப்பிப்பது முதலியவை கல்லூரிகளில் காப் ந்துகொள்ள வேண்டியவையாம்.

**11. வீட்டமைப்பில் நாம் தெரிந்துகொள்ள வேண்டி யவை யாவை?**

வீட்டமைப்பில் நாம் தெரிந்துகொள்ள வேண்டியவை: சுகாதாரம், வெளிச்சம், நடமாட்ட வசதி, அழகு, தொழில் நுணுக்கம் முதலியன நன்கு அமையும்படி வீடு கட்டுவது, முன்பே கட்டப்பட்ட வீடாக இருக்குமானால் வசதிக்கேற்ப ஒழுங்குசெய்து கொள்வது, வீடு, பணம் பண்பாடு இவற்றிற்கேற்ற மேசை, நாற்காலி முதலியன வாங்குவது, அழகுக்கும் உணவுத் தேவைக் கும் ஏற்பத் தோட்டம் போடுவது என்பனவாம்.

**12. வீட்டுப் பொருளாதாரத்தில் நாம் கவனிக்கவேண்டி யவை எவை?**

வரவுக்குத் தக்க செலவு செய்வது, எல்லாச் செல்வங்களையும் பெருக்குவது, தேவைகளின் அவசரத்திற்கேற்பச் செலவு செய்வது, எதிர் காலத்திற்குப் பொருள் சேமித்து வைப்பது, குடும்பத்தைச் சாமர்த்தியமாக நடத்திப் பல வகைச் சுருக்கு முறைகளைக் கண்டு பிடித்துக் கையாண்டு இன்பம் பெறுவது என்னும் இவை வீட்டுப் பொருளாதாரத்தில் நாம் கைக் கொள்ள வேண்டியவையாகும்.

**13. உடற் சுகத்தைப் பற்றி நாம் கவனிக்க வேண்டியவை யாவை ?**

நலமுள்ள உடலில் தான் நலமுள்ள மனம் வாழும். ஆகவே நலத்தைக் கெடுக்கும் பழக்க வழக்கங்கள், கொள்கைகள், உண்ணும் உணவு, உறையுமிடம், பருகும் நீர், அணியும் ஆடை, நோய்க்குக் காரணமான அணுக்கள், அவற்றைத் தவிர்க்கும் முறைகள், நோய் வந்த பொழுது எடுத்துக் கொள்ள வேண்டிய நடவடிக்கைகள், நோயுற்றவர்களைக் காக்கும் முறைகள் ஆகியவற்றை நாம் கவனிக்க வேண்டும்.

**14. குழந்தை வளர்ப்புத் துறையில் நாம் கையாள வேண்டிய முறைகள் யாவை ?**

குழந்தைகளை வீரத்துடனும், ஆண்மையுடனும், உண்மையுடனும், வளர்க்க, இளம் பருவத்திலேயே நல்ல சூழ்நிலைகளை அமைத்துத் தர வேண்டும். குழந்தைகளின் உடல் வளர்ச்சி உள்ளத்து வளர்ச்சிகளிலுள்ள பருவங்கள் மாறுதல்கள் இவற்றை யறிந்து, அவர்கட்கேற்ற உணவு, உடை, உறையுள், நல்ல பழக்கங்கள், விளையாட்டு, கல்வி முதலியனவற்றைத் தெரிந்து கொண்டு அம் முறையில் வளர்க்க வேண்டும். இவையே குழந்தை வளர்ப்புத் துறையில் நாம் கையாள வேண்டியவையாகும்.

**15. மனையியல் வாயிலாகப் பெறும் நன்மைகள் யாவை ?**

மனிதன் உலகத்தோடு ஒத்துச் சமூகத்தில் மலர் முகத்துடன் பழகி ஒன்றாகக் கூட்டுறவுடன் காரியங்களைச் செய்ய உதவுவது ' சமூகப் பந்தங்கள் ' என்ற துறையாகும். இதனை மனையியற் கல்வியால் பெறுகின்றோம்.

மேலும் குடும்ப வாழ்க்கையில் வரக்கூடிய அவசரங்கள், அவசியங்கள் அனைத்தையும் திறம்படச் செய்யத்தக்க துணிவையும் வல்லமையையும் இம் மனையியல் மூலமாகப் பெறுகிறோம்.

நற்குண நற்செய்கையால் மேம்பட்ட மனைவியிருக்கும் வீட்டில் இல்லாததொன்றும் இல்லை; அஃதாவது எல்லாம் நிறைந்திருக்கும் என்ற கருத்தை மெய்ப்பிக்கவும், தன்னைக் காத்துத் தற்கொண்டானைப் பேணித் தகை சான்ற சொல்லையும் காத்துச் சோர்வில்லாமல் இருக்கின்ற பெண்மையைக் காக்கவும் மனையியல் உதவுகின்றது.

குழந்தை நன்கு வளர்வதற்கும், அன்பு மலர்வதற்கும், முதுமையில் ஓய்வும் நலமும் கிடைப்பதற்கும், பக்தியும் பண்பாடும் சிறந்து ஓங்குவதற்கும் உறுதுணையாக இருக்கும் வீட்டை அழகுடன் வைத்துப் பாதுகாக்க உதவுவதும் மனையியற் கல்வியேயாகும்.

# 4. இலக்கிய நயம்

## 1. அறிஞரின் திறம் வியந்து பாராட்டற்குரியது ஏன்?

நாம் ஏதேனும் ஒரு நூலைப் படிக்குங்கால், சில சொற்றொடர்களோ பகுதிகளோ நம்முடைய மனத்தைக் கவர்கின்றன. அவற்றை நினைக்குந்தோறும் உள்ளத்திற்கும், சொல்லுந்தோறும் நாவிற்கும், கேட்குந்தோறும் காதிற்கும் இன்பம் உண்டாகிறது. இத்தகைய இனிய சுவைப் பகுதிகளை ஆங்காங்கே புலவர்கள் அமைத்துள்ளமையால் அவ்வறிஞர்களின் திறம் வியந்து பாராட்டற்குரியதாக இருக்கின்றது.

## 2. தமது முடி நரைக்காமைக்குப் பிசிராந்தையார் கூறும் காரணங்கள் யாவை?

மாட்சிமைப்பட்ட தன் மனைவியும் மக்களும் கல்வியறிவினால் நிரம்பப் பெற்றனர் என்றும், தன் பணியாளர் குறிப்பறிந்து ஒழுகும் குணமுடையவர் என்றும், தன் நாட்டு மன்னன் நீதிக்குப் புறம்பானவற்றைச் செய்யான் என்றும், அங்கேயுள்ள சான்றோர் புலனடக்கம் பெற்றவர் என்றும், அதனால் தமக்கு எவ்விதமான கவலையும் கிடையாதென்றும் பிசிராந்தையார் தமக்கு நரையின்மைக்குக் காரணங்கள் கூறினார்.

## 3. இன்று யாண்டு சிலவாக நரையுளவாதல் யாங்ஙனம் என்று வினவக்கூடிய நிலை ஏற்படக் காரணமென்ன?

அக்கால மக்கள் போதுமென்ற மனமே பொன்செய்யுமருந்து என்னும் பழமொழிக்கேற்பப் பெற்றதைக்கொண்டு சுற்றம் அருத்தி வாழ்ந்து வந்தனர். இன்றோ தேவைகள் மிகுந்துவிட்டன. அதனால் கவலைகளும் கணக்கிலவாயின. கவலை மிகுந்தமையால் மக்கள் விரைவில் முதுமை பெறுகின்றனர். ஆதலால் யாண்டு சிலவாக நரையுளவாதல் யாங்ஙனம்? என வினவும் நிலை ஏற்பட்டுவிட்டது.

## 4. பேச்சுத் திறமையால் என்ன பயன் விளையும்? அதை எவ்வாறு கையாள வேண்டும்?

ஒருவர் பேச்சுத் திறமையால் உலகத்தையே தன்வயப்படுத்தலாம். அதனாலன்றோ 'நா அசைந்தால் நாடசையும், உதடசைந்தால் ஊரசையும்' என்னும் மொழிகள் உண்டாயின. வள்ளுவரும் 'விரைந்து தொழில் கேட்கும் ஞாலம் நிரந்தினிது, சொல்லுதல் வல்லார்ப் பெறின்'—என்றார்.

அப்பேச்சுத் திறனைக் கையாளவேண்டியமுறை: தான்சொல்ல வேண்டியவற்றை ஒழுங்குபடுத்திக் கோவையாகவும், இனிமையாகவும், சுருக்கமாகவும், விளக்கமாகவும், சொற்குற்றம் பொருட்

குற்ற மில்லாமலும், முன்னுக்குப்பின் முரண்பாடில்லாமலும் சொல்லுதல் வேண்டும். அத்தகையோரையே அவனியிலுள்ளோர் போற்றுவர்.

5. பேச்சுத் திறனை அடைய வழி யாது? உதாரணத்துடன் விளக்குக?

அடிக்கடி பேசிப்பேசி அத்திறனைப் பெறலாம். 'சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்' என்னும் பாடலும் இதனையே வலியுறுத்துகிறது. உதாரணமாகக் கிரேக்க நாட்டு 'டெமஸ்தனீஸ்' என்பவன் தெற்றுவாயனாக இருந்தான். சிறந்த பேச்சாளனாக வரவேண்டும் என்ற எண்ணங் கொண்டான். அவன் நாடோறும் கடற்கரைக்குச் சென்று கூழாங்கற்களை வாயில் அடக்கிக்கொண்டு உரத்த குரலில் பேசிப் பழகிக் கொண்டான். அம்முயற்சியால் அவன் பிற்காலத்தில் சிறந்த பேச்சாளனாக விளங்கினான்.

6. பேச்சுக்கலை எவ்வாறிருக்க வேண்டும்?

ஒருவர் பேசும் பேச்சானது எவரும் மறுத்துக் கூறாத வண்ணம் அமைந்திருக்க வேண்டும். மேலும், அப்பேச்சைக் கேளாதவர்கள் தாம் கேட்க முடியாமற் போயிற்றே என்று இரக்கங் கொள்ளத் தக்கதாயும் இருக்க வேண்டும். பகைவரும் கேட்டுப் பேச்சில் மயங்கிப் பகையை மறந்திருக்க வேண்டும். இவ்வாறு பேச்சுக்கலை அமைதல் வேண்டும்.

7. சிலப்பதிகாரத்தில் இலக்கிய நயம் அமைந்த ஒரு பகுதியைக் குறிப்பிட்டு விளக்குக.

கவுந்தியடிகள் கண்ணகியை மாதரி என்னும் இடைக்குல மடந்தையிடம் ஒப்புவிக்கும் இடத்தில் இளங்கோவடிகள் 'வண்ணச் சீரடி மண்மகள் அறிந்திலள்' என்று குறிப்பிடுகின்றார். இத்தொடர் இலக்கிய நயம் அமைந்ததாகும். அதில் அமைந்த நயமாவது கண்ணகி வீட்டை விட்டு வெளியிற் சென்றறியாதவள் என்பதும் கொடியவேனிற் பருவத்தில் நடந்து வந்தமையால் கால்கள் கொப்புளித்து அவை நிலத்தில் பதியவில்லை என்பதும், கண்ணகியின் மென்மையைக் கண்டு நிலமகள் குறிஞ்சி, முல்லை முதலிய வலிய நிலப்பகுதிகளை மென்மையாக்கவில்லை என்பதும் ஆம்.

8. சீவக சிந்தாமணியில் நயம் அமைந்த ஒரு பகுதியை விளக்குக.

சிந்தாமணியில் தக்க நாட்டின் பெருமை கூறுமிடத்து மகளிர் கற்பை ஓர் உதாரண முகத்தால் விளக்குகிறார் ஆசிரியர். அந்நாட்டின் அகழியில் வாழ்கின்ற ஓர் இளைய வாளைமீன், தன் மீது நண்டின் நகம் பட்டுவிட்டதென்று நாணமும் நடுக்கமும் கொண்டு

அவ்விடத்தை விட்டுச் சென்று கிடங்கின் ஆழத்தில் ஒளிந்து கொண்டு, உணவையும் வெறுத்து விட்டது என்று கூறுகிறார்.

9. கம்பன் பாடலில் அமைந்துள்ள நயத்தை விளக்குக.

விசுவாமித்திரர் தம் வேள்வியைக் காக்க இராமஇலக்குவரைத் தம்முடன் அனுப்புமாறு தயரதனிடம் சொல்லுகிறார். அதுகேட்ட மன்னன் மன நிலையை 'எறிவேல் பாய்ந்த புண்ணிலாம் பெரும் புழையில் கனல் நுழைந்தாலெனக் கலங்கினான் என்று கம்பர் கூறுகின்றார்.

முன்பொரு சமயம் தயரதன் வேட்டையாடச் சென்றிருந்த பொழுது இவனுடைய அம்பு தவறுதலாக அந்தணச் சிறுவன் மீது பட்டு இறந்தான். அச்சிறுவனுடைய தந்தை 'புத்திரசோகத்தால் நீயும் இறப்பாய்' எனச் சபித்தனர். அச்சாபத்தால் அவன் மனம் புண்பட்டிருந்தது அந்தப் புண்ணில் விசுவாமித்திரனுடைய சொல் நெருப்பாகப் பட்டது என்று கம்பர் கூறுகிறார். உவமைகள் எளியனவாயினும் முன்னிகழ்ச்சிகளை யெல்லாம் அடக்கிக் கொண்டிருக்கும் நயம் காணப்படுகிறது.

10. 'பாரி பறித்த கலனும்' என்று தொடங்கும் ஔவையார் பாடலில் குறித்துள்ள நிகழ்ச்சிகள் யாவை?

பாரி வள்ளலிடம் சிறிது காலந்தங்கியிருந்த ஔவையார் தாம் செல்லுதற்கு விடை கேட்டார். அவன் அவரைப் பிரிய மனமில்லாமல் வேண்டிய பரிசில்கள் கொடுத்தனுப்பினான். பிறகு தன்னுடைய ஆட்களை ஏவிக் கள்வர் போலச் சென்று அப்பொருட்களை யெல்லாம் கவர்ந்து வரச் செய்தான். ஔவையார் திரும்பி வந்து அவனிடம் முறையிட்டார். இதன் காரணமாகச் சில நாட்கள் ஔவை தன்னுடன் தங்க நேர்ந்தமைக்கு அரசன் மகிழ்ந்தான். 'பாரி பறித்த கலனும்' என்பது இந்நிகழ்ச்சியைக் குறிக்கும்.

ஒருசமயம் காரி என்ற வள்ளலும் இவரைப் பிரிய மனமில்லாமல் அவரிடம் களை எடுக்கும் கருவியைக் கொடுத்தான். களை பறிக்கும் பணியை மேற்கொண்டதால் ஔவை சிறிது காலம் அங்கே தங்க நேர்ந்தது. 'பழையனூர்க்காரி அன்று ஈந்த களைக் கோலும்' என்பதில் இந்நிகழ்ச்சி யடங்கியிருக்கிறது.

சேரமான் ஒருநாள் எல்லோர்க்கும் விருந்தளித்தார். அப்போது ஒரு பெரியவர் வந்தார். அவருக்கு இடமின்றி, ஔவையாரை 'இப்படி வாருங்கள்' என்று கூறி அப்பெரியவரை அமரச்செய்தான் இந்நிகழ்ச்சியை குறிப்பதாகும் 'சேரமான் வாராயோ எனவுரைத்த வாய் மொழியும்' என்ற பகுதி.

11. எம்மூன்றும் எதற்கு நேராகும்?

**பாரி பறித்த கலனும், பழையனூர்க்காரியீந்த களைக்கோலும், சேரமான் வாராயோ எனவுரைத்த வாய் மொழியும் ஆகிய இம் மூன்றும் பாரிமகளிர் தந்த நீலச் சிற்றாடைக்கு நேராகும்.**

## 5. தமிழ் இசைக் கருவிகள்

**1. தமிழர் இசையுணர்ச்சியுடையராயிருந்தனர் என்பதற்குச் சான்று தருக.**

தமிழ் மொழியானது தொன்று தொட்டு இயல், இசை, நாடகம் என மூன்று பிரிவுகளையுடையதாக வழங்கி வருகின்றது. இம் மூன்றனுள் இசைத்தமிழை நடுநாயகமாக வைத்த ஒன்றே தமிழர் இசையுணர்ச்சியுடையராயிருந்தனர் என்பதற்குப் போதிய சான்றாகும். மேலும் இயற்றமிழ் நூல்கள் பெரும்பாலும் இசை தழுவிய பாக்களால் ஆனவை. இதனாலும் அவ்வுண்மை புலனாகின்றது.

**2. இசைத் தமிழின் அடிப்படையாக விளங்கும் நூல்கள் சிலவற்றை எழுதுக.**

நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்தில் வரிப் பாடல்களும், தெய்வ மணங்கமழும் தேவார திருவாசகங்களும், தேனினும் இனிய திவ்வியப் பிரபந்தங்களும் இசைத் தமிழின் அடிப்படையாக விளங்கும் நூல்களாம்.

**3. இசைக் கருவிகளின் வகை எத்தனை ? அவை யாவை ? விளக்குக.**

இசைக் கருவிகள் நான்கு வகைப்படும். அவையாவன : தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக் கருவி, கஞ்சக் கருவி என்பனவாம்.

தோலால் போர்த்த வார் கயிறு இவற்றால் இழுத்துக் கட்டப் பட்டு முழங்குவன தோற்கருவிகளாம். பேரிகை, மத்தளம், பறை போன்றன தோற்கருவிகள் எனப்படும். நரம்புகளை இழுத்துக் கட்டி ஒலியுண்டாக்குவன நரம்புக் கருவிகள். அவை யாழ், வீணை, தம்புரா முதலியன. மூங்கில் முதலிய பொருள்களில் துளையிட்டு ஒலியுண்டாக்குவன துளைக் கருவிகள். அவை புல்லாங்குழல், நாதசுரம் முதலியன. ஒன்றோடொன்று தட்டி ஒலியுண்டாக்குவன கஞ்சக் கருவிகள். அவை தாளம், சேகண்டி, சப்பளாக்கட்டை முதலியன.

**4. தோற்கருவிகளில் சிலவற்றின் பெயர்களை எழுதுக.**

தோற்கருவிகளில் சிலவற்றின் பெயர்கள் : பேரிகை, படகம், இடக்கை, உடுக்கை, மத்தளம், சல்லிகை, கரடிகை, திமிலை, குடமுழா, தக்கை, கணப்பறை, தமருகம், தண்ணுமை, தடாரி, முழவு, மொந்தை, சிறுபறை, துடி, பெரும்பறை முதலியன.

**5. தோற்கருவிகள் சிலவற்றின் பெயர்க் காரணங்களை எழுதுக.**

சிலவற்றின் பெயர்க்காரணம் : மத்தளம்—இதில் 'மத்து' என்பது ஓசையின் பெயர். இசைக்கு இடமாகிய கருவிகட்கெல்

லாம் இது தளமாதலின் மத்தளம் என்ற பெயர் பெற்றது. 'சல்' என்னும் ஒலியுடைய காரணத்தால் சல்லிகை எனப் பெற்றது. உறுமல் ஒலியுடையது உறுமி. 'பம் பம்' என்ற ஒலியை எழுப்புவது பம்பை. 'முர் முர்' என்று ஒலிப்பது முருடு. கரடி போல முழங்குவது கரடிகை. 'மொகு மொகு' என ஒலிப்பது தமருகம்.

## 6. எது வீர முரசம் எனப்படும்? அதன் அமைப்பு பெருமை இவற்றை எழுதுக.

போரில் தோற்றுப்போன பகையரசனின் காவல் மரத்தை வெட்டி, அதனை முரசமாக்கி வெற்றி முழக்கம் செய்வது வீர முரசமாகும்.

புலியொடு பொருது, அதனைத்தன் கொம்புகளாற் குத்திக் கொன்று, கொம்பில் மண்ணுடன் பாய்ந்து சென்று உயிர்விட்ட காளையின் மயிர் சீவாத தோலைப் போர்த்துச் செய்யப்படுவது மயிர்க்கண் முரசம் என்று நூல் கூறும். இதுவும் வீரமுரசத்தின் பாற்படும்.

அதன் பெருமையாவது :—பண்டைய வேந்தர் இம்முரசினைத் தெய்வத்தன்மை யுடையதாகக் கருதினர். மலர் பரப்பிய தனிக் கட்டிலில் இதனை வைத்துச் சிறப்புச் செய்வர். நாடோறும் இசை முழக்கத்துடன் நீர்த்துறைக்கு எடுத்துச் சென்று நீராட்டி மாலை சூட்டி வழிபடுவர். இதற்குப் பலியிடுவதும் உண்டு.

## 7. போர் முரசின் இயல்பு யாது?

போர் முரசு போர்க்களத்தில் வீரர்களுக்கு வீரவெறியூட்டிப் புத்துணர்ச்சி யூட்டும். பம்பை, தடாரி, முருடு முதலிய இசைக் கருவிகளுடன் சேர்ந்து முழங்கியதும் வீரர்களின் தலை சுழலும்; நரம்புகளெல்லாம் முறுக்கேறி நிற்கும்; போர் வெறி ஏறியவுடன் செருக்களம் நோக்கிப் புறப்படுவர். 'செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி நின்முள் மறக்குடியிற் பிறந்த மகள்' எனக் கூறுவதாலும் போர் முரசின் இயல்பை அறியலாம்.

## 8. தமிழகத்தின் நானிலங்களுக்கும் உரிய பறைகள் யாவை?

முல்லை நிலத்துக்குரிய பறை தடாரி. குறிஞ்சி நிலத்துக்குரியது தொண்டகப்பறை. மருத நிலத்துக்குக் கிணைப்பறை. நெய்தலுக்கு மீன் கோட் பறை. பகைவரிடமிருந்து ஆ நிரைகளைக் கவரும்போது வீரர்கள் முழக்குவது ஆ கோட் பறை எனப்படும்.

## 9. துளைக் கருவிகளில் மிகப் பழைமையானது எது? அதை எவ்வாறு அமைத்தனர்?

துளைக்கருவிகளில் மிகப் பழமையானது குழலேயாகும். எல்லா வாத்தியங்களிலும் குழலே முன்னதாகக் கூறப்படுகிறது. 'குழல்

இனிது யாழ் இனிது' எனக் குறளில் முதலில் வைத்துக் கூறப்படுகிறது. 'குழல் வழி நின்றது யாழே' எனச் சிலம்பு கூறுகிறது.

காட்டில் வளர்ந்திருந்த மூங்கில்களில் வண்டுகள் துளை செய்திருக்கும். அத்துளைகளின் வழியே காற்று வீசும்போது இனிய ஓசை உண்டாவதைக் கேட்ட முன்னைத் தமிழ் மக்கள் குழலை அமைத்தனர். முதன் முதலாக மூங்கிலில் செய்யப்பட்ட காரணத்தால் அதற்குப் புல்லாங்குழல் என்னும் பெயர் வந்தது. புல் மூங்கில். இதற்கு வங்கியம், கொன்றையங்குழல், முல்லைக்குழல், ஆம்பலந்தீங்குழல் எனப் பலபெயர்கள் இலக்கியங்களில் வழங்குகின்றன.

## 10. துளைக் கருவிகளில் அடங்கும் பிற கருவிகள் எவை?

துளைக்கருவிகளில் அடங்கும் பிற கருவிகள் :—நாதசுரம், மகுடி, சங்கு, எக்காளம், கொம்பு, தாரை முதலியனவாம். நாதசுரத்திற்கு நாககசுரம், நாகசின்னம், நாயனம் என்னும் பெயர்களும் உண்டு. இக்கருவி 14-ஆம் நூற்றாண்டிலிருந்தே வழங்கி வருகிறது என்பர்.

## 11. நரம்புக் கருவிகள் எவை? அவற்றுள் மிகப் பழமை வாய்ந்தது எது? அதன் வகைகள் யாவை?

யாழ், வீணை, கோட்டு வாத்தியம், கெத்து வாத்தியம், பிடில், தம்புரா முதலியன நரம்புக் கருவிகளாம். இவற்றுள் மிகப் பழமையானது யாழ் என்னும் கருவியாகும். இஃது ஆதியாழ், பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் எனப் பல வகைப்படும். ஆதியாழ் ஆயிரம் நரம்புகளை யுடையது. பேரியாழ் இருபத்தொரு நரம்புகளை உடையது. மகரயாழ் பத்தொன்பது நரம்புகளை உடையது. சகோடயாழ் பதினான்கு நரம்புகளை யுடையது. செங்கோட்டியாழுக்கு ஏழு நரம்புகள்.

## 12. யாழின் இன்றைய நிலை என்ன?

யாழ் வகைகள் இன்று பெரிதும் வழக்கொழிந்தன. இவற்றின் பெயர்களை நூல்களில் அறிகின்றோமே தவிர அவற்றின் உருவங்கள் தெரியவில்லை. இயக்குவோரும் அருகிப் போயினர். ஆயினும் தமிழ்த்தாயின் தவப் புதல்வராகிய விபுலாநந்த அடிகள், மறைந்து போன யாழைத் தமிழகம் கண்டு களிக்கப் புதுப்பித்தருளினர். இக்காலத்தில் வழங்கி வரும் வீணை யாழின் திரிபு என்பர்.

## 13. கஞ்சக் கருவிகள் யாவை?

வெண்கலத்தாற் செய்த தாளம், ஜாலரா, சேகண்டி, கிண்கிணி முதலியன கஞ்சக் கருவிகளாகும்.

## இயம் என்னும் சொல்லைப் பற்றிக் குறிப்பு வரைக.

இசைக் கருவிகளை 'இயம்' என்றே சங்க நூல்கள் இயம்புகின்றன. பல்வகை வாத்தியங்களுக்குப் 'பல்லியம்' என்று பெயர். பலவகை இசைக் கருவிகளையும் இயக்கத் தெரிந்த ஒரு புலவருக்கு 'நெடும் பல்லியத்தனார்' என்ற பெயர் இருந்ததாகத் தெரிகிறது.

15. இசைத் துறையில் தமிழர்கள் கடமை யாது ?

சங்க காலத்தில் இசை நூல்கள் பல இருந்தன. அவை யாவும் காலக் கழகில் மறைந்தன. பல நுணுக்கங்களும் பல்லுயிரையும் தன் வயப்படுத்தும் ஆற்றலும் கொண்ட நம் தமிழ்ப் பண்கள் வடமொழிப் போர்வை போர்த்துக் கருநாடக சங்கீதமாயின. இன்னிசைக் கருவிகளுள் அயலவர் படையெடுப்பாலும் அயல் ஆட்சியாலும் சிரழிந்தவை போக இன்று எஞ்சியிருக்கும் சிலவற்றையாவது போற்றிக் காப்பது தமிழ் மக்கள் கடமையாகும்.

## 6. சோழன் கரிகாலன்

1. கரிகால் வளவனிடம் முதல் முதியவன் எடுத்துக் கூறிய வழக்கு யாது ?

" அரசே ! நானும் இவனும் உடன்பிறந்தவராவோம். நான் மூத்தவன். கடல் கடந்து சென்று பெரும் பொருள் ஈட்டி வந்துள்ளேன். எனக்கு மக்கள் ஒருவரும் இலர். எங்கள் தந்தை இறக்கும்பொழுது என் தம்பியின்பால் ஒன்பது மணிகளைக் கொடுத்துச் சென்றுள்ளார். மணி ஒவ்வொன்றும் ஓராயிரம் பொன் பெறும். அத்தகைய மணி ஐந்தினை என்னை எடுத்துக் கொள்ளுமாறு வற்புறுத்துகிறான். எனக்குப் பொருளிடத்தே ஆசையில்லை ; மக்கட்பேறும் இல்லை. அதனால் அவ் வைந்து மணிகளையும் என் தம்பியின் மக்கள் மூவருமே பெறுமாறு செய்தருள வேண்டும், என்று முதல் முதியவர் கரிகால் வளவனிடம் தமது வழக்கை எடுத்துக் கூறினார்.

2. இரண்டாம் முதியவர் எடுத்துரைத்த வழக்கு யாது ?

"வேந்தர் பெரும! எங்கள் தந்தை உயிர் நீங்கும் தறுவாயில் 'வீடும், நிலமும், நான்கு மணிகளும் நீ பெற்றுக் கொண்டு எஞ்சிய ஐந்து மணிகளையும் உன் தமையனிடம் ஒப்படைத்து விடு' என்று என்னிடம் உறுதிமொழி பெற்றார். மேலும் என்மக்கள் மூவருள் ஒருவர் புலவர் ; இரண்டாமவர் உழவர் ; மூன்றாமவர் திருமண மாகத நங்கைப்பருவத்தினர். இவர்கள் அனைவரும் போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து என்னும் கொள்கையினர். ஆதலால் எங்கட்குக் கிடைத்துள்ள செல்வங்களே போதுமானவை. நான் என் தந்தையின் சொற்படி நடவாத குற்றத்திற்கும் பிறர்க்குரிய பொருளை அனுபவித்த குற்றத்திற்கும் ஆளாகாமல் நல்வழக்குத்தர நாடுகின்றேன்" என இரண்டாம் முதியவர் வழக்குரைத்தார்.

3. இரு முதியவரும் கூறிய வழக்குரைகளைக்கேட்ட கரிகாலன் எவ்வாறு தீர்ப்பு வழங்கினான் ?

'பெரியோர்களே ! நீங்கள் ஒவ்வொரு வரும் உங்கள் தந்தையின் சொற்படியே நடத்தற்கு உரியவராவீர். முன்னவர் ஐந்து

மணிகளையும் பின்னவர் நான்கு மணிகளுடன் நிலமும் வீடும் பெறுக. இருவருள் ஒருவர்க்கு மக்கட்பேறின்மையால் உங்கள் வழித்தோன்றல்களாகவுள்ள அம் மூன்று மக்கட்குமே உம் இருவர் சொத்துக்களையும் பொதுவாக்கவேண்டும். உங்கள் மக்களுள் மூத்தவர் புலவராயிருத்தலால் மூன்று மணிகளும் வீடும் அவர்க்குரியனவாக்குக. அவர் அறிஞராதலின் உணவுகுறையாது வாழ்வியலை நடத்த உணர்ந்திருப்பார். மற்றவர் உழவராதலின் நிலமும் ஏனைய மூன்று மணிகளும் சேரட்டும். மூன்றாமவரோ மணமாகாத பெண்ணைக் இருப்பதால் மணம் புரிவித்து எஞ்சிய மூன்று மணிகளையும் கடல் கடந்து தேடிய செல்வங்களையும் அவளுக்குத் தருக. இவ்வாறு பகுத்துக் கொடுத்து நீவிர் இருவரும் அவர்கட்கு உற்ற துணைவர்களாக இருந்து இன்புற்று மகிழ்வீர்களாக!'' என்று கரிகாலன் முடிவு கூறினன்.

4. கரிகாலன் மாறுவேடம் களைந்ததைக் கண்ட முதியவர்கள் பொறுத்தருளுமாறு வேண்டியபொழுது அவன் கூறியன யாவை?

முதியவர்களே! ஒரு பசுவின் கன்றுக்காகத் தன் மகனைக் கொன்று நீதி வழங்கிய சோழன் வாயிலில் நுழைந்து, 'அரசன் இளைஞன். அவன் நம் வழக்கை உணரும் அறிவு பெற்றிரான்' என முடிவுகட்டி, வளவன் வாயில்வரை வந்தும் வழக்கு முடிவுகாணாது போனால் அஃது எம் குலத்துக்கு அழகா? அதனால் முதியவனாக மாறுவேடம் பூண்டு நும் வழக்கைத் தீர்த்துவைத்தேன். சிறியோரெல்லாம் சிறியருமல்லர்; வயதிற் பெரியோரெல்லாம் பெரியரும் ஆகார். மகிழம்பூ சிறிதெனினும் தாழையை விட மணம் மிக்கதல்லவா? அறிவுடையவர்க்கு இளமையும் முதுமையும் என்ன செய்யும்? ஆதலால் உங்களைப் போன்றவர்களின் நல்வாழ்த்துக்களைப் பெற்று நல்லெறியில் சிறந்து விளங்க வேண்டு மென்பதே என் கருத்தாகும்' என்று கரிகாலன் கூறினான்.

5. கரிகாலனிடம் இரும்பிடர்த் தலையார் யாது கூறினார்?

'பொன்னி நாட! நீ வாழ்க! நீ இன்று முதுமை வேடம் பூண்டு வழக்கு முடித்தமையை இம்மூவுலகும் கொண்டாடும். காவிரிக்குக் கரை காணும் காவலனே! உன் ஆணைப்படி ஏனைய வேந்தர் அனைவரும் தம்முடைய ஆட்களையனுப்பி, காவிரிக்குக் கரையமைத்து உன் நாட்டிற்குத் தொண்டு செய்யும்போது, பிரதாபருத்திரன் என்னும் சிற்றரசன் மட்டும் இதில் பங்குகொள்ளாதிருக்கின்றான். உனக்குத் திறைகட்டும் மன்னனாக இருந்தும் உன் ஆணைக்குப் பணியாதிருப்பதை நோக்கினால் உன்னை அவன் மதிக்கவில்லை என்பது புலனாகிறது. ஆதலால் வளவனே! இப்பொழுதே ஆவன செய்ய வேண்டும்' என்று இரும்பிடர்த் தலையார் கரிகாலனிடம் கூறினார்.

6. கரிகாலனுக்கு எந்தெந்த நாட்டு மன்னர் என்னென்ன பொருள்களைத் திறையாகக் கொடுத்தனர்?

வட நாட்டு மன்னர் பலர் அவர்களுடைய அரிய பொருள்களைக் கொடுத்தனர். அவந்தி நாட்டு மன்னன் வாயில் தோரணம் கொடுத்தான். மகத நாட்டு மன்னன் பட்டிமண்டபம் கொடுத்தான். வச்சிர நாட்டு வேந்தன் முத்துப் பந்தர் தந்தான்.

7. பிரதாபருத்திரன் காவிரிக்குக் கரையமைக்க உதவவில்லை என்பதை இரும்பிடர்த் தலையார் கூறக் கேட்ட கரிகாலன் வெகுண்டு கூறியன யாவை?

இனிய மாமா! வடவரும் அவந்தி, மகதம், வச்சிரம் முதலான நாட்டு வேந்தரெல்லாம் திறைகட்டி என் ஆணையின்படி நடப்பதை இவன் அறியான் போலும். என்னே இறுமாப்பு! மலையும் கடலும் வானும் காற்றும் என் கருத்துப்படி அமையும் என்பதை அறியானோ? எந் நாட்டவரும் பணிந்து நிற்க, இவன் மட்டும் இறுமாந்திருப்ப தென்றால் இவனிடம் ஏதாவது ஒரு சிறப்பு நிலை இருக்கவேண்டும். இவன் உருவப்படம் இருக்குமானால் கொணர்க என்று கரிகாலன் இரும்பிடர்த் தலையாரிடம் கூறினான்.

8. பிரதாபருத்திரன் படத்தைக் கண்ட கரிகாலன் யாது செய்தனன்?

அவனுடைய படத்தைக் கண்ட கரிகாலன் பிரதாபருத்திரன் நெற்றியில் சிவபெருமானையொப்ப ஓர் அழகிய சிறு கண் இருப்பதைக் கண்டு வியந்து 'ஓ இதனாற்றான் இவன் இறுமாப்புக் கொண்டுள்ளான்' என்று கூறித் தன் உடைவாளை எடுத்துச் சினத்துடன் அக்கண்ணைக் குத்தினான்.

## 7. வான் வெளிச் செலவு

1. அண்மையில் விஞ்ஞான உலகிலே நேர்ந்த புதுமையான சாதனை என்ன?

செயற்கைச் சந்திரன் ஒன்றமைத்து, அதனைப் பூமியைச் சுற்றி வரச் செய்தது. அதைத் தொடர்ந்து வெகு தொலைவில் உள்ள இயற்கைச் சந்திரனையே சுற்றி வட்டமிடுமாறு திட்டமிட்டு, அத்திட்டத்தின்படி ஒரு செயற்கைச் சந்திரனையும் அமைத்து 1958 அக்டோபர் 11ம்தேதி இயக்கி விட்டது. இச் செயல்கள் விஞ்ஞான உலகில் நேர்ந்த புதிய சாதனைகளாம்.

2. சர்வதேச பூபௌதிக ஆண்டு என்றால் என்ன?

உலகிலுள்ள எழுபது நாடுகள் தங்கள் அரசியற் பகைமைகளை ஒதுக்கி வைத்து, விஞ்ஞான அடிப்படையில் ஒன்று பட்டு 5,000

விஞ்ஞானிகள் கூடிச் சில திட்டங்களை வகுத்துக் கொண்டு 1957—ஆம் ஆண்டு ஜூலை மாதம் முதல் தேதியிலிருந்து 1958—ஆம் ஆண்டு இறுதி வரையுள்ள பதினெட்டு மாதங்களிலும் ஆராய்ந்தனர். 1957 ஜூலை முதல் 1958 இறுதி வரையுள்ள பதினெட்டு மாதங்களையும் உள்ளடக்கிய ஆண்டுக்குச் சர்வதேச பூபௌதிக ஆண்டு என்று பெயர்.

## 3. பூபௌதிக ஆண்டுத் திட்டத்தின் முக்கிய நோக்கங்கள் யாவை?

இதன் முக்கிய நோக்கங்களாவன :

1. பூமியின் உள்ளமைப்பைத் திட்ட வட்டமாக அறிவது, 2. உலகின் தட்ப வெப்ப நிலையை முன் கூட்டியே அறிவதற்கான புள்ளி விவரங்கள் கணிப்பது, 3. காற்று மண்டலத்தில் ஏற்படும் எண்ணிறந்த மின்சார—காந்த விளைவுகளை ஆராய்ந்தறிவது என்பனவாம்.

முக்கியமாகக் காந்தப் புயல்கள் உண்டாகக் காரணமென்ன? சூரியப் புள்ளிகள் உச்ச நிலையில் இருக்கும்போது காந்தப் புயல்கள் ஏன் பெருத்த அளவில் ஏற்படுகின்றன? துருவப் பிரதேச மக்களைப் பேரச்சத்தில் ஆழ்த்திவைக்கும் செவ்வான ஜோதியின் மர்மமென்ன? என்பவைகளை அறிவதும், நாம் வாழும் பூமியைப் பற்றியும் பூமியைச் சூழ்ந்துள்ள காற்று மண்டலத்தின் விபரீதத் தோற்றங்களைப் பற்றியும் நன்கு அறிவதும் பூபௌதிக ஆண்டுத் திட்டத்தின் முக்கிய நோக்கங்களாகும்.

## 4. செயற்கைச் சந்திரனை வான வெளியில் அனுப்பக் காரணம் என்ன?

காற்றுக் கவசத்திற்கு அப்பால் வெளிப் புறத்திலிருந்து சில அபூர்வக் கதிர்களும் சில மின்னணுக்களும் அடிக்கடி காற்று மண்டலத்தைத் தாக்கிக் கொண்டிருப்பதால் பல விபரீத நிகழ்ச்சிகள் நிகழ்கின்றன. சூரியனிடமிருந்து புற ஊதாக் கதிர்களும், எக்ஸ்—கதிர்களும், மின்னணுக்களும் பூமியை அடிக்கடி தாக்கிக் கொண்டிருக்கின்றன. நட்சத்திர மண்டலங்களிலிருந்து கொடிய சில கதிர்கள் காற்றுக் கவசத்தினூடே பாய்ந்த வண்ணமிருக்கின்றன.

இவ்வாறு காற்று மண்டலத்தைத் தாக்கும் மின்னணுக்கள், கதிர்கள் இவற்றின் இயல்புகளைத் தெரிந்துகொள்ள விஞ்ஞானக் கருவிகளைக் காற்றுக் கவசத்திற்கு அப்பால் எடுத்துச் செல்லவேண்டும். அதனால் விஞ்ஞானக் கருவிகள் கொண்ட செயற்கைச் சந்திரனை—பூமியை வட்டமிடுமாறு அமைத்துப் புள்ளி விவரங்கள் சேகரிக்க ஏற்பாடு செய்தார்கள்.

5. செயற்கைச் சந்திரனை அனுப்புவதில் யார், எந்த நாடு வெற்றி கண்டது ?

செயற்கைச் சந்திரனை அனுப்புவதில் முதன் முதல் வெற்றி கண்ட நாடு ரஷிய நாடேயாகும்.

இவ்வெற்றிக்கு முக்கிய காரணராக இருந்தவர் பீட்டர் கபிட்சா என்ற விஞ்ஞானியாவர்.

6. செயற்கைச் சந்திரன் என்ருல் என்ன ? அதனை ரஷியர் எவ்வாறு அழைப்பர் ?

செயற்கைச் சந்திரன் என்பது ஒரே ஒரு விஞ்ஞானக் கருவி மட்டுமன்று. பல விஞ்ஞானக் கருவிகளை உள்ளடக்கிய ஒரு வியத்தகு கோளமாகும். இதனை ரஷியர்கள் 'ஸ்புட்னிக்' என அழைக்கிருர்கள்.

7. முதல் 'ஸ்புட்னிக்' எவ்வாறு அமைக்கப்பட்டிருந்தது?

ரஷியாவின் முதல் 'ஸ்புட்னிக்' இரண்டடி விட்டமுள்ள ஓர் உருண்டைக் கூண்டு. இதற்குள் வெப்ப நிலையை அளக்கும் ஒரு வெப்பமானி, காற்றின் அமுக்க நிலையைக் கணிக்கும் ஓர் அமுக்க மானி, ஈரநிலையைப் பதிவு செய்யும் ஓர் ஈரமானி இவைகள் அமைக்கப் பட்டிருந்தன. அதனுடன் சூரியனிடமிருந்து வரும் புற ஊதாக் கதிர்கள், எக்ஸ்—கதிர்கள் மின்னணுக்கள், நட்சத்திர மண்டலங்களிருந்து வரும் காமாக் கதிர்கள், காஸ்மிக் கதிர்கள் இவற்றைத் தனித்தனியே பதிவு செய்யும் வெவ்வேறு கருவிகள், இவைகளை இயக்கும் மின்கலங்கள் ஆகிய யாவும் பக்குவமாக அமைக்கப்பட்டிருந்தன.

8. செயற்கைச் சந்திரனில் உள்ள கருவிகள் விஞ்ஞானப் புள்ளி விவரங்களை நமக்கு எவ்வாறு அறிவிக்கின்றன ?

அக்கருவிகள் விஞ்ஞானப் புள்ளி விவரங்களைப் பதிவு செய்து, அவற்றை வானெலி அலைகளாகமாற்றி, வெளியில் நீட்டிக் கொண்டிருக்கும் ஏரியல் கம்பிகளிலிருந்து பூமியை நோக்கி வானெலி அலைகளாக அனுப்பும். இவைகளைப் பூமியில் உள்ள ஆராய்ச்சி நிலையங்களில் வாங்கிப் பதிவு செய்து கொள்வார்கள்.

9. அகற்சி விசை என்ருல் என்ன? விளக்குக.

ஒருவன் சைக்கிளில் வளைவான பாதையில் செல்லும்போது, தன்னையறியாமலே தனது உடலை வளைவின் உட்புறமாகச் சிறிது சாய்த்துக் கொள்கிருன். அவ்வாறு சாய்த்துக் கொள்ளாவிடில் திடீரென்று வளைவின் வெளிப்புறமாக வீசி எறியப்படுவான். எனவே வளைவான பாதையில் இயங்கும் ஒரு பொருளை, வளைவின் மையத்திலிருந்து அப்பால் வீசி எறியக் கூடிய ஒரு விசை இயல்பாக அமைந்துள்ளது. அதுவே அகற்சி விசை எனப்படும்.

10. சந்திரன் நெடுவட்டமாகப் பூமியைச் சுற்றக் காரண மென்ன?

சந்திரன் பூமியைச் சுற்றும் வேகம் காரணமாக ஏற்படும் அகற்சி விசையால் சந்திரன் பூமிக்கு அப்பால் செல்ல முயலுகிறது. பூமிக்குக் கவர்ச்சி விசையிருப்பதால் அதனைப் போகவிடாமல் இழுத்துக் கொள்ளுகிறது. இந்த அகற்சி விசையும் கவர்ச்சி விசையும் சமமாக அமையுமானல் சந்திரன் சுற்றிவரும் பாதை வட்டமாக இருக்கும். ஆனல் இரண்டும் சமமாக அமைவது அரிது. ஆகவே சந்திரன் சுற்றிவரும் பாதை நெடுவட்டமாக அமைகிறது.

11. செயற்கைச் சந்திரன் எத்தனை மைல் வேகத்தில் சுற்றுகிறது? ஏன்?

பூமியிலிருந்து செயற்கைச் சந்திரன் இரண்டரை இலட்சம் மைல் தூரத்தில் விலகியிருக்குமானல் அஃது இரண்டாயிரம் மைல் வேகத்தில் சுற்றினல் போதும். ஆனல் அது பூமியிலிருந்து 560 மைல் தூரத்தில் சுற்றுவதால் அதிக வேகத்துடன் அஃதாவது 18,000 மைல் வேகத்துடன் சுற்றுகிறது.

12. செயற்கைச் சந்திரனை வான வெளியில் எவ்வாறு இயக்கவேண்டும்?

செயற்கைச் சந்திரனை வான வெளியில் எடுத்துச் சென்று அதைப் பூமிக்கு நேர்மட்டமாக இயக்கவேண்டும். செங்குத்தாக இயக்குவோமானல், மேலே வீசி எறியப்பட்ட கல்லைப்போல, வேகம் குறைந்தவுடன் சென்ற வழியே திரும்பிப் பூமியை அடையும். நேர்மட்டமாக இயக்கினல்தான் அது வட்டமாகச் சுற்றி வரமுடியும்.

13. செயற்கைச் சந்திரனை உயரத்திற்கு எடுத்துச் செல்வது எது? அதன் தத்துவம் என்ன? விளக்குக.

செயற்கைச் சந்திரனை உயரத்திற்கு எடுத்துச் செல்லும் வாகனம் 'ராக்கெட்' என்பதாகும். இதில் அமைந்த தத்துவம் நியூட்டனின் மூன்ருவது விதியாகிய 'ஒவ்வொரு விசைக்கும் சமமான எதிர்விசை உண்டு' என்பதேயாகும். உதாரணமாக பலூனைச் சொல்லலாம். பலூனுள்ளே அடைக்கப்பட்டுள்ள அமுக்கம் நிறைந்த காற்று வாய் வழியாகப் பீறிட்டுக்கொண்டு வெளிவருகிறது. அப்பொழுது எதிர்விசையானது பலூனை மேல் நோக்கி உந்தச் செய்கிறது. இதைப் போலவே அமுக்கம் நிறைந்த காற்று ராக்கெட்டின் வாய் வழியாகக் கீழே வெளிப்படும்போது எதிர் விசையினல் ராக்கெட் மேல் நோக்கிச் செல்கிறது. இது தான் ராக்கெட்டின் தத்துவம்.

14. ராக்கெட்டின் அமைப்புக்கள் எத்தகையன?

ராக்கெட் வாகனம் ஒரு நீண்ட சுருட்டு வடிவமுள்ள குழாயாக அமைக்கப்பட்டுள்ளது. காற்றை எளிதாகத் துளைத்துச் செல்ல மேல் முனையில் ஒரு கூம்புபோன்ற மூக்கு அமைந்துள்ளது. அடிப்பாகம் திறந்திருக்கும். ராக்கெட் சாயாமல் செல்வதற்கு இரண்டு தகடுகள் அடியில் அமைந்திருக்கும். குழாயின் உள்ளே ஆல்கஹால், கேசொலின் போன்ற எரி பொருளுள்ள தொட்டியும், எரிபொருள் எரிவதற்குவேண்டிய பிராணவாயு திரவமாகவுள்ள தொட்டியும் ஆக இரு தொட்டிகள் இருக்கும். இத்திரவங்கள் திவலைகளாகத் தெளிப்பதற்கேற்ற அமைப்புக்களும் இருக்கின்றன.

15. ராக்கெட் வாகனம் எவ்வாறு செங்குத்தாகவே மேல் நோக்கிச் செல்கிறது?

ராக்கெட் குழாய்களில் அமைந்துள்ள ஒருவழிக் கதவுகள் விநாடிக்கு 30 தடவை திறந்து மூடும். எரி பொருள் வாயுவும் பிராணவாயுவும் சேர்ந்து தீப்பற்றி வெடிப்பதற்கு அறையில் மின் சாரத் தீப்பொறி எப்பொழுதும் இருந்துகொண்டேயிருக்கும். இதனால் எரிபொருள் வெடித்து வெப்பநிலை சுமார் 2000°c-க்கு உயருகிறது. அதனால் காற்றைவிட அழுக்கம் முப்பது மடங்கு உயர, வாயுக்கள் கீழ்நோக்கிப் பீறிட்டுக்கொண்டு வெளி வருகின்றன. ராக்கெட் வாகனம் எதிர்விசையால் செங்குத்தாக மேல்நோக்கி உந்தப்படுகிறது.

16. செயற்கைச் சந்திரனை வானவெளியில் இயக்க மூன்றடுக்கு ராக்கெட்டுகளைப் பயன்படுத்தக் காரணமென்ன?

ரஷியா இயக்கிவிட்ட முதல் ஸ்புட்னிக் 183 பவுண்டு எடையுள்ளது. அதை இயக்கிய ராக்கெட்டின் எடை 11 டன். இஃது ஒரே அமைப்பாக இருந்தால் இவ்வளவு கனத்தையும் கடைசி வரை கொண்டுபோக வேண்டிவரும். இது தேவையில்லை. மூன்றடுக்காக அமைக்கப்பட்டிருந்தால், மேலே செல்லும்போது அடியிலுள்ள முதல் ராக்கெட்டில் எரி பொருள் தீர்ந்தவுடன் அதை நழுவ விட்டுவிடலாம். அதனால் எடை குறைந்து அதிக வேகம் பெறும். இதைப்போலவே இரண்டாவதையும் விட்டுவிட்டால் இன்னும் அதிக வேகத்துடன் மூன்றாவது ராக்கெட் செல்லும். மேலும் செயற்கைச் சந்திரனை நேர்மட்டமான நிலையில் உந்தச் செய்ய மூன்றடுக்கு ராக்கெட்டு அவசியமாகிறது.

17. மூன்றடுக்கு ராக்கெட் எவ்வாறு செயற்கைச் சந்திரனை இயக்குகிறது?

ராக்கெட்டைச் செங்குத்தாக நிறுத்தி ஒரு தாங்கிமீது பொருத்தி வைக்கிறார்கள். மூன்றாவது ராக்கெட்டின் தலையில் செயற்கைச் சந்திர உருண்டையைப் பொருத்தி வைத்து முதல் ராக்கெட்டை

இயக்குகிறார்கள். அது செங்குத்தாக மேலே கிளம்பி 300 மைல் வேகத்தில் 30 மைல் உயரத்தை அடைகிறது. இப்பொழுது முதல் ராக்கெட் இரண்டாவதை இயக்கிவிட்டுக் கழன்று விடும். இரண்டாம் ராக்கெட் சுமார் 45° கோணத்தில் சாய்ந்து செல்லுமாறு அமைக்கப்பட்டிருக்கும். இது 260 மைல் உயரத்தில் செல்லும்போது மணிக்கு 12,000 மைல் வேகத்தில் செல்கிறது. இப்பொழுது மூன்றாவதை இயக்கிவிட்டு இரண்டாவது கழன்றுவிடும். மூன்றாவது ராக்கெட் இன்னும் சிறிது சிறிதாகச் சாய்ந்து கொண்டே சுமார் 560 மைல் உயரத்திற்குச் சென்றதும் 18,000 மைல் வேகத்தில் மட்டமாக இயங்கிக் கொண்டிருக்கும். இப்போது மூன்றாவது ராக்கெட் செயற்கைச் சந்திரனைத் தன் பிடியிலிருந்து விட்டு விடுகிறது. செயற்கைச் சந்திரன் தன்னந் தனியாகப் பூமியைச் சுற்றி வட்டமிடுகிறது.

18. செயற்கைச் சந்திரன்கள் என்றும் நிரந்தரமாகப் பூமியைச் சுற்றிக் கொண்டிருக்குமா ?

சுற்றிக் கொண்டிரா. 1000 மைல் உயரத்துக்குமேல் ஓரளவேனும் காற்று இருக்கத்தான் செய்யும். இதன் காரணமாகச் செயற்கைச் சந்திரனின் (ஸ்புட்னிக்கின்) வேகம் வரவரக் குறையும். இதனால் அது பூமியை நெருங்கிக்கொண்டே பறந்து வரும். அப்பாதையைப் படம் வரைந்தால் ஒரு சுருள் கம்பி போல இருக்கும். இவ்வாறு பூமியை நெருங்கிவந்து அடர்த்திமிகுந்த காற்றை ஊடறுத்துச் செல்லும்போது வெப்பம் மிகுந்து எரிந்து சாம்பலாகி விடும்.

19. சந்திரமண்டலத்துக்கே செல்ல வல்ல செயற்கைச் சந்திரனை இயக்கியவர்கள் யார் ? அவர்கள் முயற்சி என்னவாயிற்று ?

செயற்கைச் சந்திரனைச் சந்திரமண்டலத்துக்கே இயக்கியவர்கள் அமெரிக்க விஞ்ஞானிகள். அவர்கள் முயற்சியால் அதை ஏற்றிச் சென்ற ராக்கெட் 80,000 மைல் உயரம் சென்று அதிலுள்ள கருவிகளில் ஏற்பட்ட கோளாறுகளால் பூமியை நோக்கித் திரும்பிவந்து காற்று மண்டலத்தை யடைந்து எரிந்துவிட்டது.

20. செயற்கைச் சந்திரன் இயற்கைச் சந்திரனை அடைவதில் வெற்றிகண்டால் விளையும் நன்மைகள் யாவை?

செயற்கைச் சந்திரன் இயற்கைச் சந்திரனை வட்டமிடும்போது பூமியிலிருந்து நமக்குத் தெரியாத சந்திரனின் எதிர்ப்புறத்தைப் படம் பிடித்து, வானொலி அலைகளாக மாற்றி, அதிலுள்ள கருவிகள் அனுப்பும். அவ்வலைகளைத் திரும்பவும் படங்களாக மாற்றி ஆராயலாம்.

அடுத்தபடியாக மனிதனையே ஏற்றிச்செல்லக்கூடிய வாகனங்களை அமைத்துச் சந்திரமண்டலத்திற்குப் போய்வரும்படியான வசதிகள் ஏற்படலாம்.

21. சந்திரமண்டலம் எவ்வாறிருக்கும்?

சந்திரமண்டலத்தில் காற்று என்பதே கிடையாது; தண்ணீர், குளம், குட்டை எதுவுமே இல்லை; கரியமேகங்கள் அங்கில்லை; இதனால் தாவர இனங்களோ, விலங்குகளோ அங்குவாழ இயலாது. காற்றில்லாமையால் பேச்சொலி பரவாது.

22. சந்திரனில், சூரியன் உதயமாகி மறையப் பதினான்கு நாட்களாகும். எவ்வாறு?

சந்திரன் பூமியைச் சுற்றிவர 28 நாட்களாகின்றன. தன்னைத் தானே சுற்றவும் 28 நாட்களாகின்றன. அதனால் சந்திரன் தனது ஒரு முகத்தையே பூமியின் பக்கமாக வைத்துக்கொண்டு பூமியைச் சுற்றிவருகிறது. இதனால் பூமியை நோக்கியுள்ள சந்திரனின் முகம் தொடர்ந்து 14 நாட்களுக்குச் சூரியனைப் பார்த்தும் அடுத்த பதினான்கு நாட்களுக்குச் சூரியனுக்கு எதிர்ப்பக்கமாகவும் இருக்கும். ஆகையால் சந்திரனில் பகல் 14 நாட்களாகவும், இரவு 14 நாட்களாகவும் அமைந்திருக்கிறது. அதனால் சந்திரனில் சூரியன் தோன்றி மறைய 14 நாட்களாகத் தெரிகிறது.

23. சந்திரமண்டலத்தை அணுகுவதால் என்ன நன்மைகள் உண்டாகும்?

சந்திரனின் அமைப்பை, அதுவும் அதன் எதிர்முகத்தைப் பார்த்தால் எதிர்பாராத புள்ளிவிவரங்கள் கிடைக்கலாம். சந்திரனில் காந்தமண்டலம் உண்டா இல்லையா என்று அறியலாம். சூரியமண்டலம் எப்படி உண்டானது, பிரபஞ்சத்தின் அமைப்பென்ன என்ற வினாக்களுக்கு விடைகாண வழியேற்படும்.

## 8. தமிழ் நாட்டின் சிறுதொழில் வளம்

1. சிறு தொழில்களை அரசியலார் எவ்வாறு வரையறுக்கின்றனர் ?

சிறு தொழில்களை அரசியலார் பின்வருமாறு வரையறுக்கின்றனர். குடிசைத் தொழிலினின்றும் இதைப் பிரித்துப் பேசும் அளவில், ஐம்பதுக்கு மேற்பட்ட தொழிலாளர்களைக் கொண்டு, ஐந்து இலட்ச ரூபாய் முதலுக்கு மிகாது இயங்கும் தொழில்கள் எல்லாம் சிறு தொழில்களே.

2. அரசியலார் சிறு தொழில்கள் வளர்ச்சியடைய என்ன ஏற்பாடுகள் செய்துள்ளனர் ?

இத்தொழில்களை வளர்ப்பதற்குக் கடன் கொடுத்து உதவுகின்றனர். தொழிற் கூடங்கள் ஏற்படுத்தி, அவற்றிற்கு மின்சாரம், இயந்திர உதவிகள் அளித்து அவைகளைத் தொழில் ஆர்வமுள்ள மக்கள், தவணை முறையில் வாங்கி 20-ஆண்டுகளில் உரிமையாக்கிக்

கொள்ள வசதி செய்துள்ளது அரசாங்கம். தொழிற்பணிக் கூடங்கள் சிலவும் நிறுவப்பட்டுள்ளன ; சென்னையில் ஒற்றவாடைச் சாலையில் நிறுவப்பட்டுள்ள 'பிரஸ்டுமெட்டல்' தொழிற் பணிக் கூடம் இதில் முதன்மையானது.

3. சிறு தொழில் வளர மத்திய அரசு என்ன செய்கிறது? அதன் பணிகள் யாவை ?

சிறு தொழில் வளம் பெருக்க மத்திய சர்க்காரின் விற்பனைக் கழகம் ஒன்று சென்னையில் இயங்குகிறது. சிறு தொழில்களின் உற்பத்திப் பொருட்கள் பெரும்பாலனவற்றை விற்க வழி செய்து கொடுப்பதும், புதுச்சிறு தொழில்கள் இயங்க, விற்பனை வட்டாரங்கள் ஏற்படுத்திக் கொடுப்பதும் இதன் பணிகள்.

4. தொழில் துவங்குவதற்கு அடிப்படையாகச் சிந்திக்க வேண்டியவை எவை ?

தொழில் துவங்குவதற்கு அடிபடையாக, அத்தொழிலால் உற்பத்தியாக்கப்படும் பொருட்களுக்கு விற்பனை இடங்கள் முக்கியமாக வேண்டியதும், அத்தொழிலில் முன்னரே வல்லமை பெற்று இயங்கி வரும் தொழிற்சாலைகளுடன் புதுத் தொழில்களுக்கு வந்து சேரும் தொழிற் போட்டியும் இதில் மிகவும் சிந்திக்க வேண்டியன வாகும்.

5. அமெரிக்காவில் சிறு தொழிற்சாலைகளின் முக்கியம் நாளுக்கு நாள் பெருகி வரக் காரணங்கள் என்ன ?

அமெரிக்காவில் இதன் முக்கியம் நாளுக்கு நாள் பெருகி வருகிறது. அங்கெல்லாம் சிறு தொழிற்சாலைகளை அரசினர் நன்கு கண்காணித்து, அவை பெருந் தொழிற்சாலைகளின் போட்டியினால் நலிவுறுவண்ணம் பாதுகாக்கின்றனர். இதை யொட்டி 1953-ல் ஒரு சட்டம் இயற்றியுள்ளனர். அதன்படி சிறு தொழில்களுக்கு உதவி, முன்னேற்ற வழிகள், பாதுகாப்பு முதலியன அளிக்கப்பட்டு வருகின்றன. இவற்றை நடத்திக் கொடுக்கச் சிறு கைத்தொழில்கள் ஆட்சி என்ற ஓர் இயக்கத்தினை அரசியலாரே அங்கு ஏற்படுத்தியுள்ளனர்.

6. சிறு தொழில் நலிவுக்குக் காரணங்களாக அமெரிக்காவில் கண்டறிந்த உண்மைகள் யாவை?

அடிப்படையாக நிர்வாகத் திறமை சிறு தொழில் நிர்வாகிகளிடையே சரிவர இல்லாமை தான் தொழில் நலிவுக்குக் காரணம் என்று கண்டனர். பெருந் தொழிற் சாலைகளின் நிர்வாகிகளைக் காட்டிலும் இவர்களிடையே பரந்த அறிவு வேண்டும். உற்பத்தி, விற்பனை, வரவு செலவு கணக்கிடுதல் இவை மூன்றனுள் ஒன்றில் வல்லமை குறையினும் சிறு தொழில் நலிவுறும். அமெரிக்கச் சிறு தொழில் நிர்வாகிகள், இம்மூன்று பணிகளில் ஒன்றையே சிறப்பா

கக் கருதி, மற்றவற்றைப் பொருட்படுத்த மறந்து விடுவது தான் அங்குச் சிறு தொழில் நலிவுக்குக் காரணம் என்று கண்டனர்.

7. நலிவுறும் சிறு தொழிலுக்கு அமெரிக்காவில் அளிக்கும் உதவிக்கு உதாரணந் தந்து விளக்குக.

நலிவுறும் சிறு தொழில்களுக்கு அமெரிக்காவில் அளிக்கும் உதவி பெரிது. உதாரணமாக அங்குள்ள ஜெனரல் மோட்டார் கார்ப்பொரேஷன் இருபத்தாறுயிரம் சிறு தொழிற்சாலைகளிலிருந்து சிறு பொருட்களையும், கருவிகளையும் பெறுகிறது. இவைகளைப் பாதுகாத்துத் தகுந்த இலாபம் அளிக்கவும் உறுதியளித்துள்ளது.

8. அமெரிக்காவில் சில தொழிற்சாலைகள் எவ்வாறு தொழில்கள் செய்கின்றன? நம் அரசினர் சிறு தொழிற்சாலைகளைப் பொருத்த வரை என்ன செய்ய வேண்டும்?

அமெரிக்காவில் நூற்றுக்கு எழுபது விழுக்காடு சிறு தொழிற்சாலைகள் ஒப்பந்தத் தொழில்களைச் செய்து வருகின்றன. எஞ்சிய முப்பது விழுக்காடு தொழிற்சாலைகளே வேறு தனித் தொழில்கள் செய்கின்றன. இத்தகைய ஒப்பந்தத் தொழில் நம் சிறு தொழில்களுக்குக் கிடைத்து நிலை பெறவும், அதன் உற்பத்தியில், போட்டியினின்றும் சிறு தொழில்களைப் பாதுகாக்கவும் அரசினர் உதவ வேண்டும். 'ஒரு தொழில் ஒரே தொழிற்சாலை' என்ற சட்டம் இயற்ற வேண்டும்.

9. தமிழ் நாட்டில் பெருந் தொழிற்சாலைகள் தொடங்காமைக்கு அரசினர் கூறும் பதிலென்ன?

"தோல்களைப் பொறுத்த வரையில் பொருள் செலவிட்டுப் பெருந் தொழில்கள் துவக்குவதற்குத் தமிழ்நாடு இடங் கொடுக்கவில்லை; வளம் போதாது. பெருந் தொழில்களுக்கு வேண்டிய நிலக்கரி, இரும்புக் கனிச் சேர்க்கை இங்கில்லை; கிடைக்கும் நிலக்கரியின் தரமும் குறைவு. இரும்புக் கனியும் அவ்வாறே" என்று விளக்கிப் பதிலளிக்கின்றனர்.

10. பெருந் தொழில் தொடங்க இயலாதென்ற அரசினரை நாம் கேட்க வேண்டியவை யாவை?

நாம் கேட்க வேண்டிய தெல்லாம் பெருந் தொழில்களுக்குச் சென்னை மாகாணத்தில் வளமில்லையாயின் வேண்டாம். சிறு தொழில்கள் வேண்டும். நூற்றுக்குக் குறைந்த தொழிலாளர்களைக் கொண்டு பிரிட்டனில் 42,000 தொழிற்சாலைகள் நடத்தப்படுகின்றன. அவற்றுள் இரும்பு நிறைந்த அளவில் தேவைப்படும் தொழில்களை நிறுத்தி வையுங்கள். மற்றும் தமிழ் நாட்டின் பொருளாதார, தட்ப வெப்ப நிலைக்கு ஒவ்வாது என்று தோன்றும் தொழில்களையும் ஒதுக்கி விடுங்கள். எஞ்சிய தொழில்களை ஆரம்பிக்க வழிசெய்யுங்கள் என்று தான் நாம் கேட்க வேண்டும்.

11. சிறு தொழில்களைப் பொறுத்தவரை நாம் செய்ய வேண்டுவதென்ன ?

நாம் செய்ய வேண்டுவதெல்லாம் தொழிலில் - இந்த வகைப் பட்ட தொழிலில் முன்னேறியுள்ள நாடுகளின் உதவி பெற்று அத் தொழில் முறைகளை அப்படியே பின்பற்ற வேண்டியதுதான். சிறு தொழில்களை ஏற்படுத்துவதில் நாம் பிரிட்டனைப் பின்பற்றலாம், ஜப்பானைப் பின்பற்றலாம்.

12. ஜப்பானின் சிறு தொழில் ஆற்றலை வரைக.

ஒரு பூகம்பத்தில் பல தொழிற்சாலைகள் மண்ணுக்குள் புதைந் தாலும், ஜப்பானுக்கு அவைகளை மீண்டும் நிலைநாட்ட ஓரிரு மாதங்களே போதும். ஜப்பானிய முறை இதில் மிகவும் மேலானது. பல ஆண்டுகள் முயன்று உலகில் மற்ற நாடுகள் சாதிக்கும் தொழில் வளத்தினை ஜப்பான் அப்படியே பிரதிப் படுத்தி ஓர் ஆண்டிலேயே நடைமுறைக்குக் கொண்டு வந்து விடும். அமெரிக் கர் பத்து ஆண்டுகள் முயன்று ஓர் இயந்திரமோ கருவியோ கண்டு பிடித்திருப்பர். அதை அடுத்த ஆண்டிலேயே ஜப்பான் பல ஆயிரக் கணக்கில் உற்பத்தி செய்வதையும், அமெரிக்கர்களுடன் போட்டியிட்டு உலகச் சந்தையில் அதைச் சில சமயம் அமெரிக்கர் விலைக்குப் பாதியினும் குறைவாக விற்கும்.

13. சிறு தொழில் செழிப்பதற்கு வேண்டிய சாதனங்கள் யாவை ?

சிறு தொழில்கள் செழிப்பதற்கு வேண்டிய சாதனங்கள் வருமாறு :—

(1) நீடித்து நிலைக்கும் விற்பனை.
(2) மிகக் குறைந்த விலையில் மூலப்பொருள்கள் பெறு வதற்குரிய வழிகள்.
(3) தொழில் நடத்தும் முறை.
(4) தொழிற் பாதுகாப்பு.

14. பொதுவாக மக்கள் வாழ்க்கைத் தரத்தை எத்தனை வகையாகப் பிரிக்கலாம்? அவை எவை?

பொதுவாக மக்களின் வாழ்க்கைத் தரத்தை இரண்டாகக் கூறலாம். ஒன்று உடலில் உயிர் நிலைத்து வாழ்வதற்கான தேவை மட்டும். இரண்டாவதோ உலகத்தோடு ஒட்ட வாழ வாழும் நாகரிக வாழ்வு. உண்பது உடுப்பதுடன் படிப்பதும் பழகுவதும்.

15. நிறைந்த அளவில் மக்களுக்குத் தேவையான பொருள்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் எவை ?

சிறு விவசாயக் கருவிகள் உற்பத்திச்சாலை, உர உற்பத்திச் சாலை, நீர் இறைக்கும் கருவிகள் உற்பத்திச்சாலை, உடைக்கஉன

பொருள்கள் உற்பத்திச்சாலை, செருப்புத் தொழில், வீடுகள் கட்ட உதவும் பொருள்கள்—ஆணிகள், கீல்கள், பூட்டுகள், மரச்சட்டங்கள் முதலியவற்றை உண்டாக்கும் தொழில்கள் ஆகும்.

**16. உலக நிலைக்குத் தேவையான உயர்கல்விக்கு ஏற்ற சாதனங்கள் எவை?**

அதற்கேற்ற சாதனங்கள், பள்ளிகள், கல்லூரிகள், நூல்கள் புகைப்படங்கள், திரைப்படங்கள், சோதனைக் கருவிகள் அனைத்தும் வேண்டும். உந்து வண்டிகள், புகைவண்டிகள், விமானம், தட்டெழுத்துப்பொறி, அச்சுப்பொறி, கப்பல், குழந்தைகளுக்கு வித விதமான விளையாட்டுக் கருவிகள்.

**17. சிறு தொழில்களுக்கு வேண்டிய சந்தைப் பணிகள் எவை?**

முன்னரே ஏற்பட்டுள்ள மார்க்கெட்டுகளையுடைய சிறு தொழில்களை வளர்ப்பது ஒன்று; புதுத் தொழில்களுக்கு மார்க்கெட் ஏற்படுத்துவது ஒன்று. ஆக இருவகைச் சந்தைப் பணிகள் உள்ளன.

## 9. குறளைத்திருத்திய பாதிரியார்

**1. தியாகராசச் செட்டியார் திடுக்கிடும்படியாகப் பாதிரியார் சொல்லிய மொழிகள் யாவை?**

செட்டியாரவர்களைக் காண வந்த பாதிரியார் "நான் யாப்பிலக்கணம் படித்தேன். திருக்குறளும் படித்தேன். யாப்பிலக்கணத்தின்படி திருக்குறளில் சில இடங்களில் திருத்தியிருக்கிறேன். அதைத் தங்களிடம் காட்ட வந்தேன்" என்று கூறினார். இந்த மொழிகள் செட்டியாரைத் திடுக்கிட வைத்தன.

**2. பாதிரியார் எந்தக் குறட்பாவை எவ்வாறு திருத்தினார்? ஏன் திருத்தினார்?**

"தக்கார் தகவிலர் என்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும்" என்ற குறட்பாவைத்
"தக்கார் தகவிலர் என்ப தவரவர்
மக்களாற் காணப் படும்" என்று திருத்தினார்.

'தக்கார், எச்சத்தால்' என்பதில் எதுகை நயம் இல்லை என்று கருதி, எதுகை நயம் நோக்கி, 'தக்கார்—மக்களால்' எனத் திருத்தினார்.

**3. குறட்பாவின் திருத்தத்தைக் கேட்ட செட்டியார் என்ன செய்தார்?**

திருத்தத்தைக் கேட்டவுடன் செட்டியார் எழுந்து, தலையிலே அடித்துக் கொண்டு, காதைப் பொத்திக் கொண்டார். மேலும்

பாதிரியாரை நோக்கி நீர் திருவள்ளுவரைவிடப் புத்திசாலியாகி விட்டீரோ? குறளைத் திருத்த வேண்டுமென்ற இந்த ஞானம் உமக்கு எப்படி ஏற்பட்டது? திருக்குறள் எப்படிப்பட்ட நூல்! உம்முடைய கையில் சிக்கிச் சீர்குலையவா அதைத் திருவள்ளுவர் இயற்றினார்? எச்சமென்பதும் மக்களென்பதும் ஒன்றாகுமா? இந்த வித்தியாசம் தெரியாதவருக்குக் குறளைக் கையிலே தொடுவதற்குக் கூட யோக்கியதை இல்லையே! இந்த மாபாதகச் செயலைச் செய்தவர் முகத்தில் விழிப்பதே பாவம்' என்று சொல்லிக் கொண்டே போய்க் கதவை அடைத்துக் கொண்டார்.

4. பாதிரியார் தியாகராசச் செட்டியாரிடம் வரக் காரணம் என்ன?

பாதிரியார் மதுரையில் ஒரு தமிழ்ப் புலவரிடம் நன்னூலையும் யாப்பிலக்கணத்தையும் கற்றுக் கொண்டார். யாப்பிலக்கணத்தின்படியே திருக்குறள் இருக்கிறதா என்று சோதித்துத் 'தக்கார் தகவிலார்' என்ற குறளைத் திருத்தித் தமிழ்ப் புலவரிடம் காட்டினார். அவர் மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் திண்டாடி, 'நீங்கள் திருத்தியிருப்பது நன்றாக இருக்கிறது. ஆனாலும் இப்படிப்பட்ட செயல்களில் பெரும் புலவர்களுடைய ஒப்புதலையும் பெறுவது நல்லது' என்று கூறித் தப்பித்துக் கொண்டார். பாதிரியார் யார் பெரும் புலவர் என்று விசாரித்தறிந்ததில் செட்டியாரவர்கள் என அறிந்து அவரிடம் திருத்தத்தைக் காண்பிக்க வந்தார்.

5. துரையவர்களை இப்படி அவமதிக்கலாமா? என்று கேட்டவர்கட்குச் செட்டியார் கூறிய மறுமொழி யாது?

'இந்த மகானுபாவரை நான் தாம்பூலம் வைத்து அழைக்கவில்லையே! குறளைத் திருத்தும் துணிவு படைத்த ஒருவருக்குத் தமிழ் நாட்டில் மதிப்பு எவ்வாறு கிடைக்கும்? இவர் திருவள்ளுவருக்கே அவமதிப்பை உண்டாக்குகிறவர். இவர் சக்கரவர்த்தியாகத்தான் இருந்தாலென்ன!' என்று மறுமொழி கூறினார் செட்டியார்.

## 10. பழந்தமிழ் நாடும் நகரமும்

1. பழைய தமிழகத்தைப்பற்றிய செய்திகளைக் கூறும் நூல்கள் யாவை?

பத்துப்பாட்டு, எட்டுத் தொகை என்னும் கடைச் சங்ககால இலக்கியம், சிலப்பதிகாரம் ஆகிய நூல்கள், தமிழகத்தைப் பற்றிய செய்திகளைக் கூறுவனவாம்.

2. பழந் தமிழ் நாட்டை ஆண்ட மன்னர்களும் அவர்களுடைய தலைநகரங்களும் யாவை?

பழந்தமிழ் நாட்டை ஆண்ட மன்னர்கள் சேர சோழ பாண்டியர்களாவர்.

சேரர் தலைநகரம் வஞ்சி; சோழர் தலைநகரம் காவிரிபுகும் பட்டினம். பாண்டியர் தலைநகரம் மதுரை.

3. காவிரிபுகும் பட்டினத்தைப் பற்றி நீவிர் அறிந்தவற்றை எழுதுக.

காவிரி கடலொடு கலக்கும் இடத்திலுள்ளது காவிரிபுகும் பட்டினம். அங்கே பலதரப்பட்ட மக்கள் வாழ்ந்தனர்; தட்ப வெப்பநிலை நன்றாக அமைந்திருந்தது. மண் நல்ல வளம் பொருந்தியதாக இருந்தது. அந்நகர மக்களின் சிறந்த தொழில் உழவே. அவர்கள் வேளாண்மைக்காக வானத்தை நோக்கி வாழ்ந்தவரல்லர். நெல்லும் கரும்பும் ஏராளமாக விளைவிக்கப்பட்டன. உழவுக்கு அடுத்த சிறப்புடைய கைத்தொழிலாய் அங்கு நெசவுத் தொழில் அமைந்திருந்தது. அந்நகரத்தில் பஞ்சமும் தொழு நோயும் ஏற்படவில்லை.

4. காவிரிபுகும் பட்டினத்தை ஆண்ட சோழனைப் பற்றியும் அவன் அரசாட்சியைப் பற்றியும் சிலப்பதிகாரம் கூறுவன யாவை?

காவிரிபுகும் பட்டினத்தை ஆண்டுவந்த சோழனே நாட்டின் முதற்குடிமகனாக மக்கள் மதித்தார்கள் என்பதை, 'பெருநில முழுதாளும் பெருமகன் தலைவைத்த......குடிகள்' என்ற பகுதியால் அறியலாம்.

அமைச்சர், புரோகிதர், சேனபதியர், தூதுவர், சாரணர் ஆகிய ஐம்பெருங் குழுவினரையும் கரணத்தியலவர், கருமகாரர், கனகச் சுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், படைத்தலைவர், யானை வீரர் குதிரைவீரர் ஆகிய எண் பேராயத்தார் என்பவரையும் உற்ற துணைவராகக்கொண்டு அவ்வரசன் செங்கோலினனாக ஆண்டு வந்தான் என்பதையும் அறியலாம்.

5. சோழன் வரி வாங்குவதைப்பற்றிப் பட்டினப்பாலை எவ்வாறு கூறுகிறது?

சோழன் தக்க ஆட்களை அமைத்து, வரிகளை உரிய முறையில் வாங்கிக் குடிமக்களின் நன்மைக்குப் பயன்படுத்தி வந்தான். உதாரணமாக, கரிகால் வளவன் என்ற சோழன் தன் நகர எல்லையை அடைந்த பண்டங்களுக்குச் சுங்கம் வாங்கும்படி பணித்திருந்தான் அவ்வாறு சுங்கம் வசூலிக்கப்பட்டுவிட்ட பொருள்களின்மீது அவனுடைய ஏவலர்கள் அவனது புலி முத்திரையை இடுவது வழக்கம் இவ்வாறு அவனது நகரத்தில் இறக்குமதி செய்து குவிக்கப்பட்ட

பண்டங்கள் பல குன்றுகளைப்போலக் காட்சியளித்தன என்று பட்டினப்பாலை அறிவிக்கிறது.

**6. காவிரி புகும் பட்டினத்தில் இறக்குமதியாகும் பண்டங்கள் யாவை? அவை எங்கெங்கிருந்து வந்தன?**

அரேபியாவிலிருந்து கப்பல்களில் குதிரைகளும், மேற்குக் கடற்கரைப் பகுதியிலிருந்து படகுகளில் மிளகுப் பொதிகளும், மேருவிலிருந்து மாணிக்கமும், பொதிய மலையிலிருந்து சந்தனமரமும், பாண்டி நாட்டிலிருந்து முத்துக்களும், கீழ்க்கடற் பகுதியிலிருந்து பவளங்களும் வந்திறங்கின.

ஈழ நாட்டிலிருந்து பனைவெல்லம் முதலிய உணவுப் பொருள்களும், பர்மாவிலிருந்து சில மணப் பொருள்களும், சீன தேசத்திலிருந்து கர்ப்பூரம் குங்குமம் முதலிய பொருள்களும் வந்திறங்கின.

**7. உருத்திரங் கண்ணனார் காவிரி புகும் பட்டினத்தில் வாழ்ந்த மக்கள் பகற் பொழுதிலும் இரவிலும் ஓய்வு நேரத்தை எவ்வாறு கழித்ததாகக் கூறியுள்ளார்?**

காவிரிபுகும் பட்டினத்தில் வாழ்ந்த மக்கள் நன்றாக உண்டு உடுத்து வாழ்ந்தவர்கள். சில வேளைகளில் ஊர் நடுவே கூடுவர்; ஆட்டுக்கிடாயையும் சிவலென்னும் பறவையையும் முட்டவிட்டு விளையாட்டுப் பார்ப்பதை வழக்கமாகவுடையவர். இன்னும் சில வேளைகளில் களரியில் புகுந்து குத்துச் சண்டை, வெட்டுச் சண்டை, கவண் எறிதல் முதலியவற்றில் ஈடுபடுவர்; பல வேளைகளில் கடலாடியும், புனல் படிந்தும், நண்டுகளைப் பிடித்து ஆட்டியும், அலைகளோடு போட்டியிட்டும் பகலில் பொழுது போக்குவர்.

இரவில் பட்டாடைகளை நீக்கி மெல்லிய பருத்தியாடைகளை உடுப்பர்; பாடல் கேட்பர்; நாடகம் காண்பர்; வெண்ணிலாவின் பயனையும் துய்ப்பர் என்று உருத்திரங்கண்ணனார் கூறுகிறார்.

**8. நாடகம் நயந்தும் ஆடல் ஓர்ந்தும் பொழுது போக்கிய மக்களைப்பற்றி ஆசிரியர் குறிப்பன யாவை?**

நாடகம் நயந்தும் ஆடல் ஓர்ந்தும் இனிமையாகப் பொழுது போக்கினர் என்றால் அம் மக்கள் மிக்க செல்வம் படைத்தவராகவும், உழைத்து உழைத்து ஊதியம் திரட்டியவராகவும் இருந்தனர் என்பது சொல்லாமலே விளங்கும். அன்றியும் அவரெல்லாம் பகலிலே சாயுங்காலம் வரையும் பொழுதுபோன பின்னரும் தொழில் ஆற்றினவர். அவர்களிற் சிலர் பூவும் புகையும் விற்றவர்கள்; சிலர் வண்ணமும் சுண்ணமும் விலை பகர்ந்தவர்கள்: சிலர் பட்டாலும் எலிமயிராலும் பருத்தி நூலாலும் ஆன ஆடைகளை நெய்து விலைக்கு விற்றவர்கள்; இன்னும் சிலர் அவரை துவரை முதலிய தானியங்களை விற்று ஊதியம் தேடியவர்கள்; சிலர் பிட்டும் அப்பமும் விற்றவர்கள்; மீன் விற்றவரும் உப்பு விற்றவரும் உண்டு. வெண்கலக் கன்னாரும், செம்புக் கொட்டிகளும், மர வேலை செய்த தச்சரும், உழைத்துக் களைத்துப் போன கொல்லரும், நாடகம் நயந்

தும் ஆடல் ஓர்ந்தும் வந்தார்களென்று அறிவதாக ஆசிரியர் குறிக்கின்றார்.

9. புகார்க் காண்டத்தால் காவிரி புகும் பட்டினத்தில் எவ்வெத் தொழிலாளர் வாழ்ந்ததாக அறிகிறோம்?

உருக்குத் தட்டார், பணித் தட்டார், சிற்பாசிரியர்கள், சித்திரக்காரரர்கள், தையற்காரரர்கள், முதலியோர் விரும்பித் தொழில் புரிந்தனர். துணி, நெட்டி முதலியவற்றால் பூ, வாடா மாலை, பொய்க் கொண்டை முதலிய பொருள்களை அமைக்கும் கைத்தொழில் வல்லவரும் காவிரி புகும் பட்டினத்தில் வாழ்ந்ததாகப் புகார்க் காண்டத்தால் அறிகிறோம்.

10. காவிரி புகும் பட்டினத்தின் இரு பிரிவுகள் யாவை? அங்கு வாழ்ந்தவர்கள் யார் ?

காவிரி புகும் பட்டினத்தின் கடற்கரைப் பக்கம் மருவூர்ப் பாக்கம் என ஒரு பிரிவாகவும், உட் பக்கம் பட்டினப் பாக்கம் என ஒரு பிரிவாகவும் பிரிக்கப் பட்டிருந்தன.

மருவூர்ப் பாக்கத்தில் தொழிலாளர்களும், பட்டினப் பாக்கத்தில் அரசரும் செல்வரும் வாழ்ந்து வந்தனர்.

11. மாங்குடி மருதனார் மதுரை நகரத் தெருக்களைப்பற்றிக் கூறியுள்ள தென்ன ?

மதுரை, ஆறு கிடந்தாற் போன்ற அகன்ற தெருக்களையுடையது. தெரு ஆறுபோலவும் இருபக்கத்து வீடுகள் ஆற்றின் கரை போலவும் அமைந்திருந்தன என்று மாங்குடி மருதனார் கூறியுள்ளார்.

12. மதுரையில் வாணிகம் நடந்து வந்ததைப்பற்றி மதுரைக் காஞ்சி கூறுவன யாவை ?

சிலர் அறுத்த சங்கினை வளையல் முதலியனவாகக் கடைந்து தருவர்; சிலர் அழகிய மணிகளுக்குத் துளையிடுவர்; சிலர் பொன்னை உரைத்து மாற்றுக் காண்பர் ; சிலர் பொன் வேலை செய்வர் ; சிலர் புடவை விற்பர் ; சிலர் அருமையான ஓவியம் வரைவர் ; சிலர் சிற்றுடையும் பெரும் புடவைகளும் கொண்டு வந்து தத்தம் சிறுவரோடு நான்கு தெருக்கள் கூடும் இடங்களில் கால் கடுக்க நின்று விற்பர். பலாப்பழம், வாழைப்பழம், மாம்பழம், பாகற்காய், வழுதுணங்காய், வாழைக்காய், கிழங்குகள், கீரை முதலானவற்றை விற்கும் பல இரவுக் கடைகளும் உண்டு என்று மதுரைக் காஞ்சி கூறுகிறது.

13. மதுரையில் அன்று தொழில் புரிந்தோரைப் பற்றிச் சிலப்பதிகாரம் கூறுவதை வரைக.

சிலர் செம்பாலும் வெண்கலத்தாலும் பாத்திரங்கள் செய்வர். சிலர் ஆனைக்கொம்பு முதலியவற்றைக் கடையும் தொழிலில் ஈடுபடுவர். வண்டியும் தேர் வட்டையும், தேர்க்கொடிஞ்சியும் செய்

வோர் பற்பலர். கையில் துலாக் கோலோடும் மரக்காலோடும் நின்று பண்டங்களை நின்ற விடத்திலேயே நிறுத்தும் அளந்தும் கொடுப்போர் பலர். சில கடைகளில் ஆடகப் பசும்பொன் விற்கப் படும். "இங்கே சாம்பூநதம் விற்கப்படும்;" "இங்கே சாதரூபம் விற்கப்படும்" என்ற குறிப்புப்படி எழுதப்பட்ட கொடிகள் திக ழும். அதனால் பொருள் வாங்குவோர் ஒவ்வொரு கடையிலும் புகுந்து திரும்பாமல் வேண்டிய கடையில் புகக் கூடிய வசதி செய் யப்பட்டிருந்தது என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது.

14. வஞ்சியைப் பற்றிச் சிலப்பதிகாரத்தில் அறியப் படு வன யாவை?

வஞ்சி என்னும் நகரம் நானிலத்தின் பான்மையும் பொருந்தப் பெற்றது. 'குறத்தியர் பாடிய குறஞ்சிப் பாட்டினையும் உழவர் பாடிய ஓதைப் பாணியையும் இடையர் பாடிய குழலின் பாணியை யும் நுளைச்சியர் பாடிய நெய்தற் பாணியையும் செங்குட்டுவன் மனைவி கேட்டனளாய்ப் படுக்கையில் இருந்தாள்' என்று சிலப்பதி காரத்தில் கூறப்பட்டிருப்பதால் அந்நகரத்தில் மலையும் கடலும் கானும் வயலு மூண்டு என்பதும், அங்கு வாழ்ந்த மக்கள் வேட்டு வரும் உழவரும் இடையரும் பரதவரும் என்பதும், அந்நகரின் வெப்ப தட்ப நிலை கலப்பு வாய்ந்தது என்பதும் அறியப்படும். மேலும் சிவனுக்கும் திருமாலுக்கும் கோவில்கள் இருந்தன என்றும் அறிகிறோம்.

15. பண்டைத் தமிழரசருடைய தலைநகரங்களில் பிற நாட்டு ஒற்றர்கள் வாழ்ந்து வந்தனர்என்பதை எதனா லறியலாம்?

சேரன் செங்குட்டுவன் வடநாடு புகுந்து வெற்றி கொள்ள வேண்டும் எனத் தன் அமைச்சனிடம் சொல்லவும், அவன் கண்ண கிக்குக் கோயில் எடுக்க ஒரு கல்லிற்காகத்தானே போக வேண்டும், வட நாட்டு மன்னர்க்கு முடங்கல் அனுப்பினால் வந்து விடும் என் றான். அப்பொழுது அழும்பில் வேள் என்பான் 'முடங்கல் வரைய வேண்டா; இந்த ஊரில் பறையறைந்தாற் போதும்; இவ்வூரின் கண் வட நாட்டு மன்னரின் ஒற்றராய் வந்திருப்போர் அறிவித்து விடுவர்' என்று செங்குட்டுவனுக்குச் சொன்னதாகச் சிலப்பதிகார வஞ்சிக்காண்டத்திலுள்ளது. இதனால் சேரருடைய தலைநகரத்தில் பிற வேந்தரது ஒற்றர்கள் வந்து தங்கியிருந்தனர் என்பதை அறியலாம்.

16. உப்பு வாணிகர் வாழ்க்கையைப் பற்றி, பெரும் பாணாற்றுப் படையால் அறியப்படுவது யாது?

உப்புவாணிகர் வண்டி நிறைய உப்பு மூட்டைகளை ஏற்றிப் பக்கத்து ஊருக்குக் கொண்டு போய்ச் சேர்ப்பர். அப்படிப் போகுங் கால் வண்டியில் பூட்டப்பட்ட எருது சோர்ந்தால் பூட்டுதற்கு வேண்டும் என வேறு எருதுகளைத் தம்மோடு கொண்டு போவர்.

வண்டியில் ஆடவர் ஏறிக்கொள்ளாது மகளிரை ஓட்டச் செய்து, தாம் சாலையில் இருமருங்கும் எருதுகள் திருகாமலும் வண்டியச்சு முறியாமலும் பாதுகாத்துச் செல்வர். சில வேளைகளில் கையிலே குழந்தையையுடைய மகளிரும் அவ்வாறு எருதுகளைத் துரத்தி வண்டியை ஓட்டிக் கொண்டு போவது உண்டு என உப்புவாணிகர் வாழ்க்கையைப் பற்றி பெரும்பாணாற்றுப் படையால் அறியப் படுகிறது.

## 17. பெரும்பாணாற்றுப் படையில் வறியவரையும் செல்வரையும் பற்றி எவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது ?

ஈச்ச இலையால் வேயப்பட்டுள்ள ஒரு குடிசையில் குழந்தையைப் பெற்றுள்ள பெண்ணொருத்தி குழந்தையோடு மான் தோலில் முடங்கிக் கிடக்கிருள். அவ்வீட்டிலுள்ள பிற பெண்டிர் இன்னொரு இடத்தில் கடப்பாறையினுல் குத்தித் தோண்டி எறும்புகள் தேடி வைத்துள்ள புல்லரிசியைக் கொண்டு வந்து, பார்வை கட்டின இடம் தேய்ந்துள்ள விளாமரத்தடியிலுள்ள நிழலில் நிலவுரலிலிட்டுக் குத்துகிருர்கள். ஆழ்ந்த கிணற்றிலிருந்து உவரி நீர் சிறிது முகந்து வந்து ஒருவாய் போன பானையில் அதைப் பெய்து முறிந்த அடுப்பில் ஏற்றி ஆக்கிய சோற்ருேடு உப்புக் கண்டத்தைச் சேர்த்துக் கொண்டு பிறர்க்கும் அளித்துத் தாமும் உண்ணுகின்ருர்கள் என்று பசியால் வாடிய மக்களைப் பற்றி வருணிக்கப்பட்டுள்ளது.

ஓரிடத்தில் காயவைத்திருக்கும் உணவுப் பொருளைத் தின்ன வரும் கோழியைப் பொற் குழையினுல் ஓட்டுகின்ருர்கள் என்று செல்வர்களைப் பற்றி வருணிக்கப்பட்டுள்ளது.

## 18. நாட்டுப்புறத்தில் வாழ்ந்த இடைக்குல மக்கள் செய்தியைப்பற்றி எழுதுக.

நாட்டுப்புற வாழ்க்கை நடத்தி வந்த இடைக்குல மகளொருத்தி, பொழுது விடிய ஒரு யாமம் இருக்கும்பொழுதே எழுந்து தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுத்தாள் ; தலையில் பூஞ்சுமட்டின் மேல் மோர்ப்பானை, அதற்குமேல் வெண்ணெய்ச் சட்டி இவற்ருேடு ஒரு நகர்ப்புறம் போகிருள். காதிலே குழை அசைகிறது. குறிய கூந்தலையுடைய இவள் மோர் விற்று நெல்லைப் பெறுகிருள். அந்த நெல்லெல்லாம் சுற்றத்தாரும் தானும் உண்பதற்கு ஆகின்றன. நெய்யை விற்றவள் அதன் மதிப்பை அப்படியே நகரமக்களிடையே நிறுத்தி வைத்து மீள்கிருள். நாளடைவில் சேர்ந்த அந்தத் தொகையைக் கொண்டு பாலெருமைகளும் நல்ல பசுக்களுமே வாங்கி வருகிருள் ; பொன் கட்டியாக்கவும் அவள் விரும்பவில்லை.

இவள் வீட்டிலுள்ள இடைக்குல மகன் சீழ்க்கை அடிக்கும் வாயை யுடையவன் ; செருப்புத் தழும்பேறின காலையுடையவன் ; பசுக்களை விரட்டுகின்ற தடியமைந்த கையினை யுடையவன் ஒழிந்த நேரங்களில் மரங்களை வெட்டி வருவதற்கு உதவும் கோடாரியை யுடையவன். காவடி சுமந்த தழும்பமைந்த தோளை

யுடையவன், அவன், பால் கறந்த கையைத் தலையிலே தடவித் தடவி ஒருவித சிறந்த மணம் அவன் தலையிலே வீசுகிறது. கொம்பிலும் கொடியிலும் பூத்த பல பூக்களாலான கதம்பத்தை அவன் தலையிலே சூடிக்கொண்டு வருகிறான். மாடுகளை மேய்த்து வீடு திரும்புகிறான். அவன் வீட்டில் பசுந்தினைச் சோறும் பாலும் கிடைக்கும்.

19. பெரும்பாணாற்றுப் படையில் ஒரு மறையவர் வீடு எவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது ?

மறையவர் வீட்டு வாசலிலே ஒரு பந்தலும் அப்பந்தர்க்காலில் ஒரு பசுங்கன்றும் கட்டப்பட்டுள்ளது. வீடு மெழுகப்பட்டுள்ளது. அந்த வீட்டில் கோழியோ நாயோ காணப்படாது. ஒரு கிளி மாத்திரம் கூண்டிலே காணப்படுகிறது. அது வேதம் ஒலிப்பது போன்ற ஒலி செய்கிறது. அந்த வீட்டுப் பெண் நல்ல வெண்ணெயில் மாதுளங்காயைப் பொறித்து மிளகுப் பொடி தூவி, கருவேப்பிலையைத் தாளிக்கும் மணம் மூக்கைத் துளைக்கிறது. அங்கு நல்ல பருப்புச்சோறும் பொரியலும் மாவடு ஊறுகாயும் கிடைக்கும் என்று மறையவர் வீடு வருணிக்கப்பட்டுள்ளது.

20. வேளாளர் வீடு பெரும்பாணாற்றுப் படையில் எவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது ?

வேளாளர் வீடு புதிய வைக்கோலால் வேயப்பட்டுள்ளது. சில பசுக்கன்றுகளைத் தாமணியில் சேர்த்துத் தறிகளில் கட்டியிருக்கிறார்கள். அவ்வீட்டில் கூடுகள் எனப்படுகின்ற, ஏணிக்கு எட்டாத உயரமுடைய சில நெற்குதிர்கள் காணப்படுகின்றன. முகட்டைத் திறந்து பழைய நெல் சொரியப்பட்டுள்ள கூடுகள் நிரம்பியிருக்கின்றன. அவ்வீட்டுச் சிறுவர் சிறுதேர் உருட்டிச் சோர்ந்து போய்ச் செவிலித் தாயரிடத்துப் பால் நிறைய அருந்திப் படுக்கையிலே துயில்கிறார்கள். அங்கு வெண்ணெல்லிலிருந்து எடுத்த அரிசியாலான இனிய சோற்றைப் பெட்டைக் கோழிப் பொறியலோடு பெறலாம் என்று வேளாளர் வீடு வருணிக்கப்பட்டுள்ளது.

## 11. பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புக.

1. சுந்தரவடிவேலு அவர்கட்கு எதிர்காலத்தில் அமையப் போகும் சமுதாயத்தில் நம்பிக்கை ஏற்படக் காரணம் என்ன ?

சுந்தரவடிவேலு அவர்கள் சத்தியமங்கலம் பள்ளிக்கு வந்த பொழுது தேசிய இராணுவப்படை அணி வகுத்து நின்றது. அப்படையில் பெண்களுடைய உதவிப்படையும் அணி வகுத்து, ஆண்மை பெற்று நின்றதைக் கண்டார். அப்பொழுது "ஏறு போல் நடையினராய்" வாழவேண்டும் என்று பாரதி கண்ட கனவு செயலானதைக் கண்டு பூரித்தார். அதனால் அவருக்கு எதிர்காலச் சமுதாயத்தில் நம்பிக்கை ஏற்பட்டது.

2. பெண்கள் எவ்வாறு வாழவேண்டும் என்று பாரதியார் கூறுகின்றார் ?

பெண்கள் நல்ல அறிவு பெற்று, நேரிய நெறிபெற்று நிமிர்ந்த நன்னடையும், நேர்கொண்ட பார்வையும் பெற்று ஆண்களுடன் சரிநிகர் சமானமாக வாழ வேண்டுமென்று பாரதியார் கூறுகின்றார்.

3. எத்தகைய போட்டி வேண்டும் ? அதனால் விளைவது யாது ?

சில சமயங்களில் போட்டியினால் பொறாமைக் காய்ச்சலும் அவதூறும் ஏற்படுவதுண்டு. அதுவிரும்பத் தகாத போட்டி. வளர்ச்சிக்குப் பயன்படும் நல்ல போட்டியே வேண்டற்பாலது. அதனால் உயர்வும், திறமையின் வளர்ச்சியும், முன்னேற்றமும் உண்டாகும்.

4. போட்டியால் ஆற்றல் வளரும் என்பதை ஆசிரியர் எவ்வாறு உறுதிப்படுத்துகிறார் ?

ஒரு விழாவில் ஒரு மாணவன் உயரத் தாண்டலில் ஒன்பது அடி நாலு அங்குலம் தாண்டினான். அவனுடன் பலரும் போட்டியிட்டனர். அவனும் ஊக்கத்துடன் போட்டியிட்டான். இறுதியில் ஒன்பதடி பத்து அங்குலந் தாண்டினான் எவரும் போட்டியிடவரவில்லையானால் அவன் இவ்வளவு உயரம் தாண்டியிருக்க முடியாது. மேலும் அடுத்த ஆண்டு 9 அடி 4 அங்குலம்—9 அடி 2 அங்குலமாகக் குறைந்து தேய்ந்தாலும் தேயும். போட்டி யிருந்ததால் அவன் அதிக உயரந் தாண்ட முடிந்தது. அதனால் போட்டியினால் மனிதனுடைய ஆற்றல்கள் வளருகின்றன என்று உறுதிப் படுத்துகின்றார்.

5. வெற்றி பெற்றவர்கட்கு ஆசிரியர் கூறும் அறிவுரை யாது ?

வெற்றி பெற்று விட்டோம் என்று மட்டும் ஏமாந்து இருந்து விடாதீர்கள். வெற்றி என்ற சொல்லிலே இடையிலிருக்கும் வல்லினமெய் போய்விட்டால் அது வெறியாக மாறி விடும். ஏமாந்து, தன்னடக்கமின்றி, நிதானத்தை இழந்துவிட்டால் மனிதன் வெறிகொண்டவனாகி விடுகிறான். அந்த வெறி தோல்வியையே உண்டாக்கும் என்று அறிவுரை கூறுகின்றார்.

6. மாணவர்கட்கு அடக்கம் வேண்டும் என்பதை ஆசிரியர் எவ்வாறு உதாரணங் காட்டி விளக்குகின்றார் ?

உங்கட்கு வெற்றி ஏற்பட ஏற்பட அமைதியும் அடக்கமும் வளரவேண்டும். நாற்று நடும்போது நெற்பயிர் நிமிர்ந்து நிற்க வேண்டும். அவ்வாறு வளரவில்லையானால் 'நல்ல வளர்ச்சியில்லை' என்றாகிவிடும். அது பால்கட்டிக் கதிர்விட்டு விளைந்த பிறகு தலை சாய்ந்திருக்கவேண்டும். நிறைய மணிபிடித்த கதிர்கள் அவ்வாறு தான் படிந்திருக்கும். படியவில்லையானால் 'பயனில்லை' என்றாகி விடும். அதைப் போலத்தான் நம் வாழ்வும். இளமையில் நிமிர்ந்து நின்று, அறிவு வளரவளர வெற்றி வரவர அடக்கம், அமைதி, தாழ்வு, பணிவு ஏற்படவேண்டும். இக்கருத்தைச் 'சொல்லரும்

....................காய்த்தவே' என்ற செய்யுள் நன்கு விளக்கும். அடக்கமில்லை யென்றால் அறிவு பெற்றும் பயனில்லை. செருக்கு வளர்ந்தால் அறியாமையும் தோல்வியுமே விளையும். 'அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை ஆரிருள் உய்த்து விடும்' என வள்ளுவரும் இதையே கூறுகின்றார். அதனால் அடக்கத்தைப் போற்றி வாழுங்கள் என்று மாணவர்கட்கு அடக்கம் வேண்டும் என்பதை விளக்குகின்றார்.

7. அரசியலார் கல்வி வளர்ச்சிக்குத் தரும் ஆதரவு யாது? அவர்கள் முயற்சி எப்போது பயனளிக்கும்?

தொடக்கப் பள்ளி இல்லாத ஊரே இனி இருக்காது என்று சொல்லும் வண்ணம் 500-க்கு மேற்பட்ட மக்கள் தொகையுள்ள ஊர்கள்தோறும் பள்ளிகள் நிறுவ ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. நாட்டுப்புறங்களில் 140 உயர்நிலைப் பள்ளிகள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. இவ்வாறு அரசினர் கல்வி வளர்ச்சிக்கு உதவி செய்கின்றனர்.

இவைகளைப் பயன்படுத்தி எல்லோரும் நல்ல கல்விபெற்று, ஆழ்ந்த கல்விபெற்று, முழுக் கல்வி பெற்று இந்நாட்டு மன்னர்களாக வளரவேண்டும். அப்போதுதான் அரசினரின் முயற்சி பயனளிக்கும்.

8. பாரதியார் பாரை உயர்த்திட என்ன செய்யவேண்டுமென்று கூறுகின்றார்?

வயிற்றுக்குச் சோறிடவேண்டும்—இங்கு
வாழும் மனிதருக்கெல்லாம்
பயிற்றிப் பலகல்வி தந்து—இந்தப்
பாரை உயர்த்திட வேண்டும்

என்று பாரதியார் கூறுகின்றார். அஃதாவது பள்ளிகளில் பல துறைக் கல்விதருவதுடன் வயிற்றுக் கவலையையும் போக்கவேண்டும். சோற்றுக் கவலை வந்துவிட்டால் எதையும் செய்யமுடியாது. ஆதலால் சோறிட்டுப் பல கல்வி தந்து பாரை உயர்த்துக என்று கூறுகின்றார்.

9. பலதுறைக் கல்வி எவை? அவற்றை எப்போது பயில வேண்டும்?

ஏட்டுப் படிப்பும் தொழிற் படிப்பும் பலதுறைக் கல்வியாம். அக்கல்வியை இளமையிலேதான் பயில வேண்டும். அப்படிச் செய்யத் தவறும் க்ல்வி யமைப்பு சிறந்த அமைப்பாகாது. 'உழுகிற காலத்தே ஊர் சுற்றி விட்டு, அறுவடைக் காலத்தில் அரிவாள் கொண்டு வந்தால் என்ன கிடைக்கும்?' என்ற பழமொழியை மனத்திற் கொண்டு பருவத்தே பயிர் செய்ய வேண்டும்.

10. மனதில் உறுதி வேண்டும் என்பதை ஆசிரியர் எங்ஙனம் கூறுகின்றார்? ஏன் உறுதி வேண்டும்?

ஒன்றை எண்ணுபவர்கள் மனம் திண்ணியராகப் பெற்றால் எண்ணியவற்றை எண்ணியபடி அடைவார்கள். அவ்வாறு எண்

ணிச் செயலாற்றும் உறுதி பெற்று, இடன் அறிந்து, உரிய அறிவை யும், காலத்தில் முயற்சியையும் செலுத்திஞல் உலகத்தையே பெறு வதாயினும் பெற்று விடலாம். 'ஞாலம் கருதினும் கை கூடும் காலம் கருதி இடத்தாற் செயின்' என்று வள்ளுவரும் கூறுகின் ஞர். அதஞல் உறுதி வேண்டுமென ஆசிரியர் கூறுகின்ருர்.

பள்ளிக்குழந்தைகள் எல்லாரும் எதிர்கால அரசராகவும் அரசி களாகவும் திகழவும், எல்லோரும் தங்கள் காலிலே நின்று செய லாற்றவும், அம்முறையிலே பயிற்றுவிக்கப் பெற்ருேருக்கும் மற்ருே ருக்கும் உறுதி வேண்டும்.

11. கல்வியிஞல் ஏற்படும் பயன்கள் யாவை ?

கல்வி கற்றவனிடம் வேற்றுமை தோன்ருது. இவன் கரியன்; இவன் வெள்ளையன் என்ற வேறுபாடு இருக்காது. இவன் தாழ்ந் தவன், இவன் உயர்ந்தவன் என்ற எண்ணமும் வராது. பிறர் வாழத் தான் வாழ்வான் தான் பெற்ற பொருளால் பிறரை வாழச் செய்வான். பிறர் துன்பங் கண்ட விடத்து அவர்கள் துன்பம் போக்கப் பாடுபடுவான். இத்தகைய நல்ல பண்புகள் கல்வியால் ஏற்படும்.

12. பொய்யா மொழி வற்புறுத்தும் நற்கருத்துக்கள் யாவை ?

கல்வி கற்ற ஒருவனுக்கு எந்த நாடும் எந்த ஊரும் தனதே யாகும்; பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புக; பிறிதொன்றனுடைய துன்பத்தைத் தன் துன்பமாகக் கருதி அதை நீக்க முயலாதவனு டைய அறிவிஞல் பயன் ஒன்றுமில்லை என்பன பொய்யா மொழி யின் நற்கருத்துக்களாகும்.

13. பசியால் விளையும் கொடுமைகள் யாவை ?

பசி வந்திடப் பத்தும் பறந்துபோகுமல்லவா? அதஞல் பாடம் ஏருது; கல்வியின் தரம் குறைந்து விடும். மேலும் அன்பும், நட்பும், உறவும் வளர்ந்து மகிழ வேண்டிய இளம் பிள்ளைகளின் உள்ளங்களில் பசியிஞல் வெறுப்புணர்ச்சியும், பொருமையுணர்வும் வளரும்.

14. நம் நாட்டு மக்கள் எத்தகைய இயல்புடையவர்கள் ?

நம் நாட்டு மக்கள் வருபவர்கட்கெல்லாம் வாரி வழங்கும் இயல்புடையவர். செல்வர்களேயன்றி ஏழை மக்களும் தம்மிடம் இருப்பதைப் பகிர்ந்துண்டு வாழும் இயல்பினர். உண்ணும் நேரத் தில் ஏழை ஒருவனின் குடிசையில் நுழைந்து விட்டால் பகிர்ந்துண் ணும் பண்பை இன்றும் காணலாம்.

15. பசிக் கொடுமையைப் போக்க என்ன செய்ய வேண் டும் ?

பசிக் கொடுமையைப் போக்கும் முயற்சி பள்ளிகளிலிருந்தே தொடங்க வேண்டும். செல்வர்கள் அதற்குப் பொருளுதவி செய்ய

வேண்டும். ஏழை எளியவர்களும் தம்மால் முடிந்ததை உதவ வேண்டும். இவ்வாறு வருவனவற்றைச் சிறிது சிறிதாகச் சேர்த்துப் பசிக் கொடுமை நீக்க முயல வேண்டும்.

16. தமிழர் நலம் பேணிக் கவிபாடும் கவிஞர் கூறுவது யாது ?

என் தமிழ் நாட்டில் எல்லோரும் கல்வி கற்றுப் பல கலைகளிலும் தேர்ச்சி பெற்று, வலிமையாலும் அன்பாலும் இமயமலை போல் புகழ் எய்தி இன்று மகிழ வேண்டும். அதை மற்றோர் சொல்லக் கேட்கும் நாள் எந்த நாளோ என்று கூறுகிறார்.

## 12. சோழ நாட்டுத் துறைகள்

1. காவிரி எங்கே பிறந்து எங்கே நடந்து எங்கே செல்கின்றது ?

காவிரியாறு குடகு மலையிலே பிறந்து, மைசூரிலே தவழ்ந்து, சோழ நாட்டிலே நடந்து, குணகடலிற் கலக்கின்றது.

2. காவிரி நடந்து செல்லும் அழகைச் சிலம்பு எவ்வாறு பாடுகிறது ?

உழவர் ஓதையும், மதகுகளில் பாயும் நீரின் ஓதையும், விழா வெடுப்போர் எழுப்பும் ஓதையும் சிறந்து விளங்கக் காவிரி நடந்து செல்கிறது என்று சிலம்பு பாடுகிறது.

3. காவிரிக் கரையில் ஈசனார்க்கு அமைந்த துறைகள் யாவை ?

தேவாரப் பாடல் பெற்ற பாலைத் துறையும், பராய்த்துறையும், கடம்பந்துறையும், குரங்காடு துறையும், மாந்துறையும், மயிலாடு துறையும் முதலிய துறைகள் காவிரிக்கரையில் ஈசனார்க்கு அமைந்த துறைகளாகும்.

4. மயிலாடு துறையில் காவிரி களிநடம் புரிவதை ஞான சம்பந்தர் எவ்வாறு பாடுகிறார் ?

அங்குக் காவிரி களிநடம் புரிவதைக் கண்ட ஞான சம்பந்தர் 'கந்தமலி சந்திெனாடுகாரகிலும் வாரிவரு காவிரி' என்று சந்தத் தமிழாற் பாடுகிறார்.

5. திருமால் திருவரங்கத்தில் பள்ளி கொண்டிருக்கும் கோலத்தைத் தொண்டரடிப் பொடியாழ்வார் எவ்வாறு பாடுகிறார் ?

கங்கையினும் புனிதமாகிய காவிரியின் நடுவிலே, பொங்கி வரும் அலைகள் பாயும் சோலையின் நடுவிலமைந்த அரங்கத்தில் எங்கள் தலைவனாகிய திருமால் பள்ளி கொண்டிருக்கும் காட்சியைக்

கண்ட பிறகு அவனை எங்ஙனம் மறந்து வாழ்வேன்? என்று தொண்டரடிப் பொடியாழ்வார் பாடுகிறார்.

**6. காவிரி கடலொடு கலக்குமிடத்தில் இருந்த துறைமுக நகரம் எது? அதன் முன்னைய நிலை என்ன?**

காவிரி கடலொடு கலக்குமிடத்தில் இருந்த துறைமுக நகரம் காவிரிப்பூம்பட்டினம் என்பதாகும். கடற்கரையில் உள்ள நகரத்தைப் பட்டினம் என்று கூறுவது தமிழ் வழக்கு. கரிகாலன் என்னும் திருமாவளவன் இந்நகரத்தைத் திருத்தியமைத்தான், பெருக்கினான், தலைநகரமாக்கினான். 'குணகடலின் கோமகள்' என்று பிறநாட்டவரும் புகழும்படி ஏற்றமும் தோற்றமும் அளித்தான். அதனால் வாணிகம் பெருகிச் செல்வஞ் செழித்தது. கடல் வழியாகவும் தரைவழியாகவும் பலநாட்டுப் பொருள்களும் இங்கு வந்து குவிந்த வண்ணமிருந்தன.

**7. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்த நாகரிகச் சின்னம் எது? அதன் பொருள் என்ன?**

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த நாகரிகச் சின்னம் 'கலங்கரை விளக்கம்' ஆகும். அதன் பொருள் கடலில் வரும் மரக்கலங்களைத் துறைமுகத்திற்கு அழைக்கும் விளக்கு என்பதாகும்.

**8. கடற்கரையிலிருந்த விளக்கிற்குத் தமிழர் இட்ட பெயர் யாது? அதன் பொருள் என்ன?**

இவ்வினாவிற்கு ஏழாம் வினாவிற்குரிய விடையை ஏற்றவாறு மாற்றியமைத்து விடையாக்கிக் கொள்க.

**9. காவிரிப்பூம்பட்டினத்தில் நடைபெற்ற வாணிகம் பற்றிச் சிலப்பதிகாரத்தில் அறியப்படுவது யாது?**

துறைமுகத்தில் நாடோறும் வந்திறங்கும் பொருள்கள் நகரத்து அங்காடிக்கு வந்து சேரும். அல்லும் பகலும் அங்கு வாணிகம் நடைபெறும். வாணிகம் நடைபெறும் அங்காடிகள் அல்லங்காடி என்றும் நாளங்காடி என்றும் இரு வகைப்படும் எனச் சிலம்பு கூறுகிறது. அங்காடி என்னும் சொல்லைத் தமிழர்களாகிய நாம் இன்று வழங்காமல் 'பசார்' என்ற பாரசீகச் சொல்லையும், 'மார்க்கெட்' என்ற ஆங்கிலச் சொல்லையும் வழங்கி வருகின்றோம்.

**10. காவிரிப்பூம்பட்டினத்தைப் புலவர்கள் எப்பெயரால் போற்றினர்? சேக்கிழார் எவ்வாறு போற்றுகிறார்?**

காவிரிப்பூம் பட்டினத்தைப் புலவர்கள் 'பூம்புகார்' என்று போற்றினர். காவிரி நீர் பாய்ந்து கடலையும் புனிதமாக்கும் பெருமை பொருந்திய தீர்த்தமாகும் நலம் சிறந்தது புகார் நகரம் என்று சேக்கிழார் புகழ்ந்து பாடுகிறார்.

**11. பூம்புகாரின் இன்றைய நிலை என்ன?**

புலவர் பாடும் புகழமைந்த பூம்புகார் இன்று சீரும் சிறப்பும் இழந்து ஒரு சிற்றூராக இருக்கின்றது. கொடுமைவாய்ந்த கருங் கடல் பொங்கி எழுந்து காவிரிப்பூம் பட்டினத்தை விழுங்கி விட்டது. 'விரிதிரை வந்து வியனகர் விழுங்க' என்று மணிமேகலை கூறுகிறது.

**12. சோழமண்டலக் கரையிலுள்ள மற்ருெரு துறைமுகம் எது? அதன் சிறப்பு என்ன?**

சோழமண்டலக் கரையில் மாமல்லபுரம் ஒரு பெரிய துறைமுக மாக விளங்கிற்று. பல்லவர்கள் காலத்தில் இது பெரிய துறைமுக மாக விளங்கியது. இதற்கு 'மல்லை' என்றும் 'மல்லையூர்' என்றும் பெயர்கள் வழங்கின. 'கலங்கள் இயங்கும் மல்லை' எனவும், 'கடல் மல்லை' எனவும் திருமங்கை ஆழ்வார் முதலிய சான்ருேர்களால் புகழப்பட்ட சிறப்பு வாய்ந்தது. கலங்கள் இயங்கும் மல்லை என்ப தால் இது சிறந்த துறைமுக நகரமாக இருந்ததென்று தெரிகிறது.

**13. மாமல்லை எந்தவகை நிலத்தைச் சேர்ந்தது?**

மணற்பாங்கான நெய்தல் நிலத்தில் குறிஞ்சிக்குரிய குன்றுகள் காணப்படுதலால் மல்லைமா நகரத்தை நெய்தலும் குறிஞ்சியும் கலந்த நிலம் என்று கவிஞர்கள் கூறுவார்கள்.

**14, மாமல்லபுரம் என்று பெயர் பெறக் காரணம் என்ன?**

மாமல்லன் என்ற பெயரையுடைய நரசிம்மவர்மன் என்ற பல்லவமன்னன் 1200 ஆண்டுகளுக்குமுன் இத்துறைமுகத்தைத் திருத்திஞன். சிற்பக்கலையில் ஆர்வங்கொண்ட இவன் கரையில் அமைந்த பாறைகளை அழகிய கற்கோயில்களாக்கிஞன். அவ னுடைய திருப்பணியால் கடல்மல்லை கவின் மல்லையாயிற்று. மல்லை யூர் என்ற பழம் பெயரும் மாறி மாமல்லபுரம் என்று பெயருண் டாயிற்று. இது நாளடைவில் மகாபலிபுரமாக மருவி, மகாவலி மன்னனேடு தொடர்பு படுத்தப்பட்டுப் புராணக் கதையும் கொண்டது.

**15. மாமல்லையில் விளங்கும் கல்லோவியங்களிற் சில வற்றை எழுதுக,**

ஒரு பாறையில், போர்க்கோலம் பூண்ட பராசக்தி, சங்கு சக் கரமேந்திச் சிங்கத்தின் மீது அமர்ந்து எருமைத் தலையுடைய அசு ரன் ஒருவனைத் தாக்கும் திறம் காணப்படுகிறது. மற்ருெரு பாறை யில் கண்ணன் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்துக் கோகுலத்தைக் காத்துநிற்கும் கோலம் காட்சி தருகிறது. இன்னு மொரு பாறையில் ஒரு காலை யூன்றி உச்சியிற் கைகூப்பித் தவம் புரியும் ஒரு தவசியின் வடிவம் செதுக்கப்பட்டுள்ளது. பஞ்சபாண் டவ ரதம் என்று பொதுமக்கள் பெயரிட்டுள்ள ஐந்து கற்கோவில் களும் அழகுற விளங்குகின்றன.

# சிறப்புப் பகுதி

## செய்யுள்

---

### 1. முற்காலச் செய்யுள்

இப்பகுதியில் சங்கத்து நூல்களாகிய நற்றிணை, அக நானூறு, திருமுருகாற்றுப்படை, மணிமேகலை என்னும் நான்கு நூல்களி லிருந்தும் நம்பாடப் பகுதிகள் எடுக்கப் பெற்றுள்ளன.

கடவுள் வாழ்த்து

#### அ. நற்றிணை

இஃது எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று. அகப்பொருளைப் பற்றிக் கூறும் நூல். இது நற்றிணை நானூறு என்றும் பெயர் பெறும். இதில் உள்ளபாடல்கள் பலகாலத்து வாழ்ந்த பல புலவர் களால் பாடப்பட்டதாகும். இந் நூலின் கடவுள் வாழ்த்தாக அமைந்த பாடலே இங்குப் பாடமாக வந்துளது. இக் கடவுள் வாழ்த்தின் ஆசிரியர் பாரதம்பாடிய பெருந் தேவனுர் என்பவ ராவர்.

ஆசிரியரைப்பற்றி:

இவர் தம் இயற் பெயர் பெருந்தேவனுர் என்பதாகும். இவர் பாரதக் கதையைத் தமிழில் பாடியமையால் பாரதம் பாடிய பெருந் தேவனுர் என்று சிறப்பிக்கப் பட்டார். இவர் நற்றிணை, ஐங்குறு நூறு, அகநானூறு, புறநானூறு முதலிய நூல்களிற் காணப்படும் கடவுள் வாழ்த்துச் செய்யுட்களைப் பாடியவர். இவர் சிவன், திருமால், முருகன் முதலிய கடவுளரைப் பாடியிருப்பதால் சமயப் பொதுமை உடையவர் என்று தெரிகிறது. இப்பாடல் திருமாலைக் குறிப்பதாகும்.

**மாநிலம்..............................திகிரியோனே**

சொற்பொருள்

தீது அற விளங்கிய - குற்றம் நீங்க விளங்கிய,
திகிரியோனே - சக்கரத்தை ஏந் திய திருமால் ஒருவனே,
மாநிலம் - இப்பெரிய உலகம்,
சே அடி ஆக - சிவந்த அடிகளாக வும்,
தூ நீர் - தூய நீரையுடைய,

வளை நரல் - சங்கு ஒலிக்கின்ற,
பௌவம் - கடலானது,
உடுக்கை ஆக - ஆடையாகவும்,
விசும்பு மெய் ஆக - வானம் உடம்பாகவும்,
திசை கை ஆக - திசைகள் கைகளாகவும்,
பசும் கதிர் மதியமொடு - குளிர்ந்த கதிர்களையுடைய சந்திரனொடு,
சுடர் கண்ணுக - ஞாயிறும் கண்களாகவும் கொண்டு,
இயன்ற எல்லாம் பயின்று - பொருந்திய எல்லா வுயிர்களிடத்தும் பொருந்தி,
அகத்து அடக்கிய - நிலம் முதலாகிய எல்லாப் பொருள்களையும் தன்னுள் அடக்கிய,
வேதம் முதல்வன் - வேதத்தால் கூறப்படும் முதற்கடவுள்,
என்ப - என்று ஆன்றோர் கூறுவர். (அதனால் யாமும் அவனையே கடவுளாகக் கொண்டு வணங்குவோம்.)

கருத்து

நிலம் காலாக, கடல் ஆடையாக, வானம் உடம்பாக திசைகள் கையாக, ஞாயிறும் திங்களும் கண்களாகக் கொண்டு, எல்லா உயிர்களிடத்தும் உறைந்து, நிலம் முதலிய எல்லாப் பொருளையும் தன்னுள் அடக்கியிருக்கின்ற வேதமுதல்வன் யாரென்றால் சக்கரமேந்தியிருக்கும் திருமாலேயாவான் என்று கூறுவர்.

விளக்கம்

நிலம், நீர், வான் என்னும் மூன்று பூதங்கள் மட்டும் கூறப்படினும் ஏனைய தீ, காற்று என்னும் பூதங்களாகவும் இறைவன் உள்ளான் என்று கொள்க.

ஊழி முடிவில் எல்லாம் அழிந்த பொழுதும் இறைவன் அழியாதிருந்து அவற்றையெல்லாம் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிறான் என்பதை 'அகத்து அடக்கிய' என்ற பகுதியால் குறிக்கின்றார்.

இலக்கணம்

மாநிலம்—உரிச்சொற்றொடர்
சேவடி—பண்புத்தொகை செம்மை+அடி. ஈறு போதல் என்ற விதிப்படி மை விகுதி கெட்டு, ஆதி நீடல் என்ற விதிப்படி முதல் நீண்டு, இனையவும் என்ற விதிப்படி ம் கெட்டு, வ் உடம்படு மெய்பெற்று முடிந்தது.
தூய நீர்—பண்புத்தொகை
நரல்பௌவம்—வினைத்தொகை
உடுக்கை—காரணப்பெயர்
மதியமொடு—ஒடு எண்ணுப் பொருளில் வந்தது

## ஆ. அகநானூறு

இதுவும் எட்டுத் தொகை நூல்களுள் ஒன்று. பல காலத்து வாழ்ந்த பல புலவர்களால் பாடப்பட்ட நானூறு அகவற் பாக்க

ளைக் கொண்டது. அகப் பொருளைப் பற்றிக் கூறும் நானூறு பாடல்களைக் கொண்ட நூல் எனப் பொருள்படும். அகப் பொருளாவது அகத்தே நிகழும் இன்பம். இந்நானூறு பாடல்களையும் தொகுத்தவர் மதுரை உப்பூரி குடிகிழான் மகனார் உருத்திரசன்மர் என்பராவர்.

இது களிற்றியானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக் கோவை என மூன்று பகுதிகளாக உள்ளது. 'ஆடமைக்குயின்ற' என்று தொடங்கும் பாடல் 'களிற்றியானை நிரை'யில் 82-ஆவது பாடலாகும். இப்பாடலைப் பாடியவர் கபிலர்.

### ஆசிரியரைப்பற்றி :

கபிலர் பாண்டிய நாட்டில் திருவாதவூரில் பிறந்தவர். கடைச் சங்கப் புலவருள் ஒருவர். பரணர், இடைக்காடர், ஔவையார் முதலிய புலவர்களிடம் பெருகிய நட்புப் பூண்டவர்.

இவர் சேரமான் செல்வக் கடுங்கோ ஆழியாதனைப் பாடியிருக்கிறார். வேள் பாரியின் உயிர்த் தோழர். அவன் அவைக்களப் புலவராகவும் இருந்திருக்கிறார். இவர் பாரியின் பறம்பு மலையில் பழகினவராதலால் குறிஞ்சித்திணை பாடுவதில் வல்லவராயினர்.

இவர் பத்துப் பாட்டுள் ஒன்றாகிய குறிஞ்சிப் பாட்டையும் இன்னா நாற்பது என்னும் நீதி நூலையும் பாடினார். இவர் பாடல்கள் பல ஏனைய நற்றிணை, குறுந்தொகை, பதிற்றுப் பத்து, புறநானூறு போன்ற நூல்களில் இடம் பெற்றுள்ளன. கபிலர் பாடியனவாகச் சில நூல்கள் பதினோராந் திருமுறையில் சேர்க்கப் பட்டுள்ளன.

ஆடமை...............................தோளேனே

### சொற்பொருள்

தோழி - தோழியே,
ஆடு அமை குயின்ற - அசைகின்ற மூங்கிலில் துளைக்கப் பட்ட,
அவிர் துளை மருங்கில் - விளங்குகின்ற துளையிடத்தே,
கோடை அவ்வளி - அழகிய மேற் காற்றினால் எழும் ஒலி,
குழல் இசை ஆக - வேய்ங்குழலின் இசையாகவும்,
பாடு இன் அருவி - ஒலியினிமையையுடைய அருவியின்,
பனி நீர் இன்னிசை - குளிர்ந்த இனிய ஓசை,
தோடு அமை முழவின்-தொகுதியாகிய முழவினுடைய,
துதை குரல் ஆக - நெருங்கிய இசையாகவும்,
கணம் கலை இகுக்கும் - கூட்டமாகிய கலைமான்கள் ஒலிக்கின்ற,
கடும் குரல் - கடிய குரலானது,
தூம்பொடு - பெருவங்கியத்தின் இசையாகவும், (அதனொடு)
மலை பூஞ்சாரல் வண்டு - மலைச் சாரலின் பூக்களிலுள்ள வண்டுகளின் ஒலி,

யாழ் ஆக - யாழின் இசையாகவும் ஆக,
இன் பல் இமிழ் இசை கேட்டு - இங்ஙனம் இனிய பலவாகிய ஒலிக்கும் இசைகளைக் கேட்டு,
கலி சிறந்து - ஆரவாரம் மிக்கு,
மந்தி நல் அவை - மந்திக் கூட்டங்கள்,
மருள்வன நோக்க - வியப்புற்றுக் காண,
கழைவளர் அடுக்கத்து - மூங்கில் வளர்கின்ற பக்க மலையில்,
இயலி ஆடும் மயில் - உலாவி ஆடும் மயில்கள்,
நனவுப் புகும் விறலியின் - களத்திற் புகுந்தாடும் விறலி போல,
தோன்றும் நாடன் - தோன்றுகின்ற நாட்டை யுடையவனாகிய,
மலர் தார் மார்பன் - மலர் மாலையை அணிந்த மார்பை யுடைய தலைவன்,
உருவ வல்வில் பற்றி — அழகிய வலிய வில்லினைக் கையிற் பற்றி,
அம்பு தெரிந்து - சிறந்த அம்பை ஆய்ந்து கொண்டு,
செரு செய்யானை - தன்னால் எய்யப் பெற்ற யானை,
செல் நெறி வினாஅய் - சென்ற வழியை வினவி,
புலர் குரல் ஏனல் - முதிர்ந்த கதிர்களையுடைய தினைப்புனத்தின்,
புழையுடை ஒரு சிறை - வாயிலில் ஒரு பக்கத்தே,
நின்றோன் கண்டோர் - நின்றவனைப் பார்த்தவர்கள்,
பலர் - பலராவர்,
அவருள் - அவர்களுக்குள்,
ஆர் இருள் கங்குல் - அரிய இருள் செறிந்த இரவிலே,
அணையொடு பொருந்தி - படுக்கையில் தங்கி,
நீர்வார் கண்ணொடு - நீர் சொரியும் கண்களுடன்,
நெகிழ்தோளேன் - மெலிந்த தோள்களை உடையேனாக,
ஓர்யான் ஆகுவது - யான் ஒருத்தி மட்டுமே ஆயது,
எவன் கொல் - யாது காரணம் ?

கருத்து

தோழி! இயற்கை எழில் நிரம்பிய நாட்டையுடைய மலர் மார்பன் தான் எய்த யானை சென்றவழியைத் தேடித் தினைப்புனத்து வாயிலில் ஒருபக்கம் வந்து நின்றான். அவனைப் பலரும் பார்த்தார்கள். அவருள் நான் மட்டும் இரவில் கண்துயிலாது கண்ணீர் வழிய, தோள் மெலியக் காரணம் என்ன? என்று தலைவி கூறுகிறாள்.

விளக்கம்

இப்பாடலின் திணை : குறிஞ்சி; துறை: தோழிக்குத் தலைவி அறத்தொடு நிற்றல்.

அறத்தொடு நிற்றலாவது: தலைவி ஒரு தலைவனிடம் காதல் கொண்டு களவொழுக்கம் ஒழுகி வருவதைத் தோழிக்கு அறத்தொடு மாறுபடாமல் குறிப்பாக உணர்த்துவது.

நின்றவனை எல்லோரும் பார்த்தார்கள். ஆனால் எனக்கு மட்டும் மெலிவுத் துயர் எப்படி வந்தது? என்று கேட்பதுபோல் கேட்டு, நானும் அவனைப்பார்த்தேன்; பார்த்துக் காதல் கொண்டேன்; அவன் நினைவால் மெலிகின்றேன் என்று தன் உள்ளக் கருத்தைக் குறிப்பால் புலப்படுத்துகிறாள்.

'நீ ஏன் அவனைப்பார்த்தாய்? பார்க்கலாமா?' என்று தோழி கேட்கலாமல்லவா? அதனால் தலைவி சாமர்த்தியமாக எல்லோரும் பார்த்தார்கள், நானும்பார்த்தேன் என்பாள்போல 'கண்டோர் பலர்' என்று முதலிலே கூறிவிடுகிறாள். இன்னொன்று, 'நானா பார்த்தேன் அவர்கள்தானே பார்த்தார்கள்' என்று தன் பிள்ளைமைக் குணத்தையும் வெளிப்படுத்துகிறாள்.

பார்த்த மற்றவர்களுக்கு இத்துயரம் வரக்கூடாதோ? எனக்கு மட்டுமா வரவேண்டும் என்று தன் மேற் குற்றமில்லாதவள் போல 'ஓர்யான் ஆகுவது எவன் கொல்' எனக் கேட்கிறாள். கண்ணில் நீர் வார்தலும் தோள் நெகிழ்தலும் கண் துயிலாமையும் காதல் கொண்டார்க்கு நிகழ்வனவாம்.

அவன் நாடு, கண்டார்க்கு இன்பந்தரும் இயல்பினது. எவ்வாறெனில், மூங்கிலின் துளையிலே மேல்காற்று மோதி எழுப்பிய ஒலி குழலோசையாகவும், அருவியொலி முழவொலியாகவும், கலைமான்களின் குரல் பெருவங்கியத்தின் இசையாகவும், வண்டொலி யாழிசையாகவும் ஒலிக்கின்ற இசையைக்கேட்டு மயில்கள் விறலியர் போல ஆடுகின்றன. அக்காட்சியைக் குரங்குகள் வியந்து நோக்கி மகிழ்கின்றன. இப்படி இன்பந்தரும் நாட்டையுடையன் நமக்குத் துன்பத்தை ஏன் கொடுத்தான் என்று வியப்படைகிறாள்.

அவனும் துன்பந்தரும் நோக்கத்திலா வந்தான்; இல்லை. அவன், தான் எய்த யானையைத் தேடிக்கொண்டு வழி நெடுக வந்தான். எப்படியோ இந்த நிலை ஏற்பட்டுவிட்டது என்று அவனிடத்துப் பழி வராமல் காத்துக்கொள்ளுகிறாள்.

'ஆடமைக்குயின்ற' என்று தொடங்கி அந்நாட்டின் இயற்கைக் காட்சியைக் கூறி, அந்நாடன், தான் எய்த யானையைத் தேடி வந்தான். அவனைப் பலரும் கண்டார்கள் என்று கூறித் தன்னிலைமையை விளக்க முயலுந்தலைவி 'வாழி தோழி' என்று வாழ்த்தி அவளைத் தன் வயப்படுத்த முயலுகிறாள். 'மலர்தார் மார்பன்' என்று கூறுவதினால் தன் காதற்குறிப்பையும் புலப்படுத்திவிடுகிறாள்.

இச்செய்யுள் 'வியப்பு' என்னும் மெய்ப்பாடு அமைந்ததாகும்.

### இலக்கணம்

அவிர்துளை—வினைத்தொகை.
பனிநீர்—பண்புத்தொகை.
துதைகுரல்—வினைத்தொகை.
வண்டியாழ்—வண்டு+யாழ்.
மருள்வன—முற்றெச்சம்.
விறலியில்—இல் ஒப்புப்பொருளில் வந்தது.
சென்னெறி—வினைத்தொகை. செல்+நெறி
வினைஅய்—இசை நிறையளபெடை.

புலர்குரல்—வினைத்தொகை.
நின்றோற்கண்டோர்—இரண்டாம் வேற்றுமைத்தொகை.
தில்—அசை நிலை.
தோழி—அண்மைவிளி.
ஓரியான்—ஓர்+யான். 'தன்னொழிமெய்ம் முன் யவ்வரின் இகரம் துன்னும்' என்ற விதிப்படி வந்தது.
கொல்—அசைநிலை.

## இ. திருமுருகாற்றுப்படை

### அருவி

ஆற்றுப்படை என்பது பரிசில் பெற்று வந்த ஒருவன் பெற விரும்பும் ஒருவனுக்கு வழிகளைக் கூறி அவனை ஆற்றுப் படுத்துவது. புலவரை ஆற்றுப் படுத்துவது புலவராற்றுப் படை எனப்படும். ஆனால் இங்கே முருகாற்றுப்படை என்பது முருகனை ஆற்றுப்படுத்துவது என்று பொருள் படாது முருகனிடம் மற்றொருவனை ஆற்றுப் படுத்துவது என்று பொருள்படும்.

வீடு பெறுதற்குத் தகுதியுடையான் ஒருவனை, வீடு பெற்றானொருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்துவது என்று பொருள் கொள்க.

இது பத்துப்பாட்டுள் ஒன்று. பத்துப் பாட்டு என்பது பத்துப் பெரும் பாட்டுக்களைக் கொண்ட ஒரு சங்க நூல். பலரால் பாடப் பட்டுத் தொகுக்கப் பட்டது. திருமுருகாற்றுப் படையைப் பாடியவர் நக்கீரர்.

ஆசிரியரைப்பற்றி :

நக்கீரர் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் என்று கூறப் பெறுவார். இவருடைய இயற்பெயர் கீரனார் என்பதாகும். 'திருமுருகாற்றுப் படையும்' 'நெடுநல் வாடையும்' இவர் இயற்றியவை. இவை தவிர நற்றிணை குறுந்தொகை, அகநானூறு முதலிய நூல்களிலும் இவருடைய பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

இவர் மதுரையைச் சேர்ந்தவர் என்பது பெயருக்கு முன்னுள்ள அடைமொழியால் விளங்கும். இவரைப் பற்றிப் பலவாறு கதைகள் கூறுவர். இக்கதைகட்குரிய நக்கீரரும் சங்கப் புலவராகிய நக்கீரரும் வேறு வேறு என்பர் ஆராய்ச்சியாளர். அக்கதைகளின் வாயிலாக இவர் தமிழ்மொழிப் பற்றும், அஞ்சாது வாதிடும் நெஞ்சுரமும், நுண்மாண் நுழை புலமும் உடையவர் என்பதை அறிகிறோம்.

## 1—22 வேறுபல்..........................கிழவோனே

### சொற்பொருள்

வேறு பல் துகிலின் நுடங்கி - வேறுபட்ட பலவாகிய துகிற் கொடிகளைப் போல அசைந்து,
அகில் சுமந்து—அகில் மரங்களைச் சுமந்து கொண்டு,
ஆரம் முழு முதல் உருட்டி - சந்தனமாகிய பெரிய மரத்தைத் தள்ளி,
வேரல் - சிறு மூங்கிலின்,
பூ உடை அலங்கு சினை- பூக்களை உடைய அசைகின்ற கிளைகள்,
புலம்ப வேர் கீண்டு- தனியாகும் படி வேரைப் பிளந்து,
விண் பொரு நெடுவரை - வானத்தைத் தொடுகின்ற நெடிய மலையிடத்தே,
பரிதியின் தொடுத்த - சூரிய மண்டலத்தைப் போல ஈக்கள் கட்டியுள்ள,
தண் கமழ் அலர் இறால் சிதைய- குளிர்ந்த மணம் வீசுகின்ற விரிந்த தேன்கூடு கெட,
நல் பல ஆசினி - நல்ல பல ஆசினிப்பலாவின்,
முது சுளை கலாவ - முற்றிய சுளைகள் தன்னிடத்தே கலக்க,
மீ மிசை நாகம் - மலையுச்சியிலுள்ள சுரபுன்னையின்,
நறு மலர் உதிர- மணமிக்க மலர்கள் உதிர,
யூகமொடு-கருங்குரங்குகளோடு,
மாமுகம் முசுக்கலை பனிப்ப - கரிய முகத்தையுடைய முசுக்கலைகளும் நடுங்க,
பூ நுதல் இரு பிடி - புள்ளிகள் பொருந்திய நெற்றியை உடைய பெரிய பெண் யானைகள்,
குளிர்ப்ப வீசி- குளிரும்படி வீசி,
பெரு களிறு முத்து உடை - பெரிய ஆண்யானைகளின் முத்துக்களை உடைய,
வான் கோடு தழீஇ - வெண்மையான தந்தங்களை உள்ளடக்கி,
நல் பொன் மணி நிறம் கிளர - நல்ல பொன்னும் மணியும் விளங்கும்படி,
தத்துற்று - மேலே கொண்டு குதித்து,
பொன் கொழியா - பொடியாக வுள்ள பொன்னைத் தெள்ளி,
வாழை முழு முதல் துமிய - வாழை மரத்தின் பெரிய அடிப்பாகம் துண்டாக,
தாழை இளநீர் விழுகுலை உதிர - தென்னையின் இளநீரையுடைய சிறந்த குலைகள் உதிரும்படியாக,
தாக்கி - அவ் விரண்டையும் மோதி,
கறி கொடி - மிளகுக் கொடிகளின்,
கருதுணர் சாய - கரிய கொத்துக்கள் சாய,
பொறி புற மட நடை மஞ்ஞை- பீலியையும் இளமை பொருந்திய நடையையும் உடைய மயில்களோடு,
கோழி வயம் பெடை - வலியையுடைய பெட்டைக் கோழிகளும்,
வெரீஇ பலவுடன் இரிய - அஞ்சிப் பலவும் ஒரு சேர ஓட,
கேழலொடு- ஆண்பன்றியுடனே,
வெளிற்றின் இரும்பனை புல் சாய் அன்ன - உள்ளீடில்லாத கரிய பனையின் புல்லிய சிறும்பைப் போன்ற,

குருஉ மயிர் யாக்கை - கருநிறம் பொருந்திய மயிரினையுடைய உடம்பையும்,
குடா அடி - வளைந்த அடியினையும் உடைய,
உளியம் - கரடி,
பெருகல் விடர் அளை செறிய - பெரிய கல் பிளந்த பிளவுகளிலே நுழைய,
கரும் கோடு - கரிய கொம்புகளை உடைய,
ஆமா நல் ஏறு சிலைப்ப - காட்டுப் பசுவின் காளைகள் முழங்க,
சேண் நின்று - மலையுச்சியிலிருந்து,
இழுமென இழிதரும் - இழுமென்னும் ஓசையுண்டாக, இறங்கி வரும்,
அருவி - அருவிகளை உடைய,
பழம் முதிர் சோலை - பழம் முற்றின சோலைகளையுடைய,
மலை கிழவோன் - மலைக்கு உரிமை உடையவன்.

நுடங்கிச் சுமந்து, உருட்டி, கீண்டு, சிதைய, கலாவ, உதிர, பனிப்ப, வீசி, தழீஇ, தத்துற்று, கொழியா, துமிய, உதிரத் தாக்கி, சாய, இரிய, செறிய, சிலைப்ப இழிதரும் அருவி எனமுடிக்க.

கருத்து

துகிற் கொடியைப்போல அசைந்து, அகில் சந்தனம் முதலிய மரங்களை உருட்டிக்கொண்டு, சிறு மூங்கிலின் வேரைப் பிளந்து, தேன்கூட்டைச் சிதைத்து, ஆசினிப் பலாச்சுளைகளைக் கவர்ந்து, சுரபுன்னை மலர்கள் உதிரும்படி, கருங்குரங்குகள் நடுங்க, பெண்யானைகள் குளிரும்படி வீசி, யானைத் தந்தங்களை வாரிக்கொண்டு, பொன்னும் மணியும் கொழித்து, வாழை முறியவும் இளநீர்க் குலைகள் உதிரவும் தாக்கி, மிளகுக் கொடிகள் சாய, மயிலும் கோழியும் அஞ்சியோட, ஆண் பன்றியும் கரடியும் குகைளில் நுழைய, காட்டுக் காளைகள் முழங்க மலையுச்சியிலிருந்து இறங்கி வரும் அருவிகளையுடைய பழமுதிர் சோலைக்கு உரியவன். (அம்முருகன்).

விளக்கம்

அருவிக் காட்சி உயிரோவியமாகப் படைக்கப்பட்டிருக்கிறது. அருவி வரும் வேகத்தில் மரங்கள் சாய்தலும், மலர்கள் உதிர்தலும், விலங்கினங்களும் பறவைகளும் அஞ்சி ஓடுதலும் நிழற் படத்தில் காண்பதுபோல் நம் கண்முன் தோன்றுகின்றன.

இலக்கணம்

துகிலின்—இன் ஒப்புப் பொருளில் வந்தது.
அலங்கு சினை—வினைத்தொகை.
வேர் கீண்டு—இரண்டாம் வேற்றுமைத் தொகை.
பரிதியின் தொடுத்த—இன் ஒப்புப்பொருள்.
மீமிசை—ஒரு பொருட் பன்மொழி. இதனை மீமிசைக்கிளவி என்பர்.
பொன்மணி—உம்மைத் தொகை.
கொழியா—செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் (கொழித்து)

தழீஇ, வெரீஇ—தழுவி, வெருவி என்னுஞ் சொற்கள் திரிந்து அளபெடுத்தமையால் **சொல்லிசை அளபெடைகள்.**
குரூஉமயிர்—**இன்னிசை யளபெடை.**

## ௩. மணிமேகலை

### ஆதிரை பிச்சையிட்ட காதை.

மணிமேகலை ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று. ஐம்பெருங் காப்பியங்களாவன: 1. மணிமேகலை, 2. சிலப்பதிகாரம், 3. சீவக சிந்தாமணி, 4. வளையாபதி, 5. குண்டலகேசி என்பனவாம். இவற்றுள் பின்னைய இரண்டும் முழுமையாகக் கிடைக்கவில்லை.

கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்த பெண் மணிமேகலை. அவளுடைய வரலாற்றைக் கூறும் நூலாதலின் மணிமேகலை என்னும் பெயர் பெற்றது. இதற்கு 'மணிமேகலை துறவு' என மற்றொரு பெயரும் உண்டு.

நூல் முழுதும் ஆசிரியப்பாவாலாகிய முப்பது காதைகளைக் கொண்டது.

இந் நூல் பண்டைய பழக்க வழக்கங்களையும் மதக் கொள்கைகளையும் கூறுகிறது. பௌத்த சமயக் கொள்கைகளே மிகுதியும் காணப்படும்.

இது சிலப்பதிகாரத்துடன் தொடர்புடைய காப்பியமாகும். மணிமேகலையின் ஆசிரியர் மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்.

#### ஆசிரியரைப்பற்றி:

சாத்தனார் என்பது இயற்பெயர். மதுரையில் அறுவகைக் கூலங்களையும் வைத்துவாணிகம் செய்து வந்தமையால் 'மதுரைக் கூலவாணிகன்' என்ற அடைமொழி வழங்கப்பட்டது. சீத்தலை என்னும் ஊரினர். அதனால் சீத்தலைச் சாத்தனார் என அழைக்கப்பட்டார். இவர் கடைச்சங்கப் புலவருள் ஒருவராகக் குறிப்பிடப்படுகின்றார்.

சேரன் செங்குட்டுவனுக்குக் கண்ணகியின் வரலாற்றைக் கூறியவர் இவரே. இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தை எழுதக் காரணராக இருந்தவரும் இவரே. இவரைத் 'தண்டமிழாசான்' எனவும் 'நன்னூற்புலவன்' எனவும் சிறப்பித்துக் கூறுவர் இளங்கோவடிகள்.

இவர் பாடியனவாக நற்றிணை, குறுந்தொகை அக நானூறு ஆகிய சங்க நூல்களுள் சில பாடல்கள் வந்துள்ளன.

இவருடைய சமயம் பௌத்தம், காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு.

### ஆதிரை பிச்சையிட்ட காதை

மணிமேகலை அமுதசுரபி என்னும் பிச்சைப் பாத்திரமேந்திச் செல்ல, முதன் முதலில் அப்பாத்திரத்தில் ஆதிரை என்னும் கற்புடையாள் பிச்சையிட்ட கதையைக் கூறும் பகுதி.

### பாடப் பகுதியின் கதைச் சுருக்கம்

காய சண்டிகை என்பாள் மணிமேகலையை நோக்கி, ஆதிரையின் கற்புத்திறனைக் கூறுகிறாள் : ஆதிரையின் கணவனாகிய சாதுவன் என்போன், மனைவியைப் பிரிந்து கணிகையைக் கூடிச் சூதினால் பொருள் இழந்து நிற்க, அக்கணிகை அவனிடம் பொருளின்மையால் இகழ்ந்து ஒதுக்கினள்.

அவன் மீட்டும் பொருள் தேட எண்ணி வணிகர்களுடன் சென்றான். செல்லும் வழியில் பெருங் காற்றினால் மரக்கலம் கடலுக்குள் மூழ்கியது. அப்பொழுது, ஒடிந்த மரத்துண்டொன்றைப் பற்றிக் கொண்டு அலைகளின் உதவியால் நாகர் மலைப்பக்கம் சென்று சேர்ந்தான்.

இவனைப்போல உயிர் பிழைத்தோர் சிலர் ஆதிரையிடம் சென்று 'உன் கணவன் கடலுக்குள் மூழ்கி யிறந்தான்'—என்றனர். அது கேட்ட ஆதிரை, சுடுகாட்டில் தீ வளர்த்து அதனுட் பாய, நெருப்பு அவளைத் தீண்டாது, சாந்தமும் கூந்தலும் மாலையும் அப்படியே இருக்க இலக்குமிபோலக் காட்சிதந்தாள்.

அவள் வருந்தி 'தீயும் தீண்டாத் தீவினையுடையேன் யாது செய்வேன்' என்றேங்க, ஆதிரையே உன் கணவன் நாகர் மலையில் உயிரோடிருக்கிறான்' என்று அசரீரி பிறந்தது.

## 1—2 ஈங்கிவள் ........................ உரைப்போள்

### சொற்பொருள்

விஞ்சையர் பூங்கொடி - வித்தியாதர மகளாகிய காயசண்டிகை,
மாதர்க்கு - மணிமேகலைக்கு,
ஈங்கு இவள் செய்திகேள் – ஆதிரையினுடைய செய்திகளையெல்லாம் கூறுவேன் கேட்பாயாக,
என - என்று சொல்லி,
புகுந்ததை - ஆதிரைக்கு நேர்ந்ததை,
உரைப்போள் - சொல்லுவாள்

### கருத்து

காயசண்டிகை ஆதிரைக்கு நேர்ந்த செய்திகளை மணிமேகலைக்கு எடுத்துக் கூறினாள்.

### விளக்கம்

அள்ள அள்ளக் குறையாத அமுதசுரபி என்னும் பாத்திரம் மணிமேகலைக்குக் கிட்டியது. அப்பாத்திரத்தில் முதன்முதலாக ஆதிரையிடம் பிச்சை வாங்கவேண்டும் என்று கூறிய காய சண்டிகை அவ்வாதிரையின் வரலாற்றைக் கூறத்தொடங்குகிறாள்.

காயசண்டிகை வித்தியாதரப் பெண். அவள் பொதியமலை யருகே ஓர் ஆற்றங்கரையில் பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை பழுக்கும் நாவற்பழமொன்றை மிதித்து விட்டாள். அதனை உண் பதற்காக வைத்திருந்த விருச்சிக முனிவன் சீற்றங்கொண்டு, வானத்திற்செல்லும் மந்திரத்தை இழக்கும்படி சபித்தனன். மேலும் 'யானைத் தீ' என்னும் பசிநோயால் துன்புறும்படியும் சாப மிட்டான்.

### இலக்கணம்

பூங்கொடி—உவமையாகுபெயர்.
மாதர்—குற்றுகரப்போலி (மாது—மாதர்)

## சாதுவன் பொருள் இழத்தல்

### 3—10. ஆதிரை..........................கோடலும்

### சொற்பொருள்

ஆயிழைகேளாய் - மணிமேகலையே கேட்பாயாக,
ஆதிரைகணவன் - ஆதிரையின் கணவனாகிய,
சாதுவன் என்போன் - சாதுவன் என்னும் பெயரினையுடையான்,
தகவுஇலன் ஆகி - நல்ல தகுதி இல்லாதவனாகி,
அணியிழைதன்னை - ஆதிரையை,
அகன்றனன் போகி - பிரிந்து சென்று,
கணிகை ஒருத்தி - பரத்தையொருத்தி,
கைத்து ஊண் நல்க – தீய ஒழுக்கத்தால் வந்த உணவை உண்பிக்க (உண்டு),
வட்டினும் சூதினும் - வட்டாடலிலும் சூதாடலிலும்,
வான் பொருள் வழங்கி - மிக்க பொருளைக் கொடுத்து,
கெட்டபொருளின் கிளை-கெட்ட பொருளின் பகுதிகளெல்லாம்,
கேடு உறுதலின் - அழிந்ததனால்,
பேணிய கணிகையும் -விரும்பிய அந்தப் பரத்தையும்,
பிறர் நலம் காட்டி - பிறருடைய செல்வ நலத்தைச் சுட்டிக் காண்பித்து,
காணம் இலிஎன – பொன்னில்லாதவன் என்றிகழ்ந்து,
கையுதிர்க் கோடலும் - அகற்றலும்.

### கருத்து

ஆதிரையின் கணவனாகிய சாதுவன் மனைவியைப் பிரிந்து பரத்தையொடு கூடி, சூதாடிப் பொருளனைத்தும் இழந்தான். செல்வ மிழந்தமையால் அவனைப் பரத்தை அகற்றிவிட்டாள்.

### விளக்கம்

விலைமகள் வீட்டுணவாதலின் அது 'கைத்தூண்' எனப்பட்டது. கைத்து ஊண்—கைத்து ஒதுக்கக்கூடிய உணவு. கையகத்து உணவு எனவும் பொருள் கொள்ளலாம்.

வட்டு என்பது உண்டை யுருட்டுதல். கணிகைக்கும் சூதிற்கும் வழங்கப் படுதலினுல் அது 'கெட்ட பொருள்' எனப்பட்டது.

பேணிய கணிகை— தன்னைப்பேணிய கணிகை என்றும் தன்னுல் பேணப்பட்ட கணிகையென்றும் கொள்ளலாம்.

செல்வ நலத்தை விரும்புவதொன்றே அவளியல்பாதலின் 'பிறர் நலங்காட்டி' என்ருர். கையுதிர்க்கோடல்—வாய் பேசாமலே கையை அசைத்துப் போகச் சொல்வது. இவனை அவள் ஒரு பொருளாக மதிக்கவில்லை என்பது கருத்து.

### இலக்கணம்

ஆயிழை, அணியிழை—இரண்டும் அன்மொழித் தொகைகள். ஆராய்ந்து செய்யப்பட்ட இழைகளை அணிந்த பெண்; அழகிய இழைகளை அணிந்த பெண் எனப் பொருள்படும்,

அகன்றனன் — முற்றெச்சம்.

## சாதுவன் சென்ற கப்பல் கவிழ்தல்

## 11-16 வங்கம்..............................ஆயினன்

### சொற்பொருள்

வங்கம் போகும் - கப்பலிற் செல்லும்,

வாணிகர் தம்முடன் - வணிகர்களுடனே,

தங்கா வேட்கையில் - பல விடத்தும் செல்ல வேண்டுமென்ற விருப்பத்தினுல்,

தானும் செல்வுழி- தானும் செல்லும் பொழுது,

நளி இரு முந்நீர்வளி - குளிர்ந்த பெரிய கடலில் அடித்த பெரிய காற்று,

கலன் வெளவ - மரக்கலத்தைக் கவிழ்க்க,

ஓடிமரம் பற்றி - பாய் மரத்தின் ஒடிந்த துண்டத்தைப் பற்றிக் கொண்டு,

ஊர்திரை உதைப்ப - ஊர்ந்து செல்லும் அலைகள் செலுத்த,

நக்கசாரணர் - உடையில்லாமல் சஞ்சரிப்பவராகிய,

நாகர் வாழ்மலைப் பக்கம்—நாகர்களுடைய மலையின் பக்கமாக,

சார்ந்து - அடைந்து,

அவர்பான்மையன் ஆயினன்- அவர்கள் தன்மையை உடையவன் ஆனுன்.

### கருத்து

சாதுவன் ஏனைய வணிகர்களுடன் கப்பலிற் செல்லும்போது காற்ருல் கலம் கவிழ, ஒடிந்த மரத்துண்டொன்றைப் பற்றி, அலை செலுத்த நாகர் மலைப்பக்கம் சேர்ந்தான்.

### விளக்கம்

அவன் பரத்தையால் புறக்கணிக்கப்பட்டவுடன், மனம் நொந்து, ஓரிடத்திலும் தங்க மனமில்லாமல் அலைய எண்ணிக் கப்பலில் செல்கின்ருன் என்பதைத் 'தங்கா வேட்கையின்' என்ருர்.

முந்நீர்—மூன்று நீர்மையை உடையது. ஆக்கல், காத்தல், அழித்தல் என்பவை அந்நீர்மை. ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்று நீர் என்னும் மூன்று நீரினையுடையது என்பர் சிலர்.

பாம்பு இலச்சினையைக் கொண்டமையால் இவர்கள் நாகர் எனப்பட்டனர் என்று கூறுகின்றனர். இவர்கள் ஆடையின்றித் திரிபவராதலின் நக்கசாரணர் எனப்பட்டனர். நக்நம் என்றால் நிருவாணம் என்று பொருள் என்பர்.

### இலக்கணம்

தங்கா—ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்
முந்நீர்—காரணப்பெயர்
ஓடி மரம், ஊர்திரை | வினைத்தொகைகள்

## ஆதிரை தீப்புகுதல்

### 17-28. நாவாய்............................புகுதலும்

### சொற்பொருள்

நாவாய் கேடு உற - மரக்கலம் சிதைய,
நன்மரம் பற்றி - ஒடிந்த மரத் துண்டைப் பற்றி,
போயினன் தன்னோடு - சென்ற சாதுவனோடு,
உயிர் உயப்போந்தார் - உயிர் பிழைக்கத் தப்பி வந்தவர்கள்,
இடையிருள் யாமத்து - இருளை யுடைய நடு யாமத்திலே,
எறி திரை பெரும் கடல் - வீசுகின்ற அலைகளையுடைய பெரிய கடலில்,
உடை கலம்பட்டு - உடைந்த கப்பலில் அகப்பட்டு,
ஆங்கு ஒழிந்தோர் தம்முடன் - அங்கே இறந்தவர்களுடன்,
சாதுவன் தானும் - சாதுவனும்,
சாவுற்றான் என - இறந்தான் என்று சொல்ல,
ஆதிரை நல்லாள்-ஆதிரையானவள்,
அது கேட்டு - அச்சொல்லைக் கேட்டு,
ஊரீரேயோ - ஊர் மக்களே,
ஈமம் - சுடுகாட்டில்,
ஒள் அழல் தாரீரோ - ஒளி பொருந்திய நெருப்பை மூட்டித் தருவீர்களோ,
எனச் சாற்றினள் கழறி - என்று சொல்லி,
சுடலைக் கானில் - சுடுகாட்டிலே
தொடு குழிப்படுத்து - குழி தோண்டி,
முடலை விறகில் - முறுக்குண்ட விறகில்,
முளி எரி பொத்தி - முற்றிய நெருப்பை மூட்டி,
மிக்க என் கணவன் - மேம்பட்ட என்னுடைய கணவன்,
வினைப்பயன் உய்ப்ப - தீவினைப் பயன் செலுத்த,
புக்குழி - அவன் புகுந்த இடத்தில்,
புகுவேன் - நானும் செல்வேன்,
என்று அவள் புகுதலும் - என்று கூறி ஆதிரை நெருப்பில் பாய்தலும்

### கருத்து

தப்பிப் பிழைத்து வந்த சிலர் ஆதிரையிடம் வந்து நின் கணவனும் இறந்தான் என்று கூற, ஆதிரை நெருப்பை வளர்த்து, தானும் இறக்கத் துணிந்து அந்த ஈமத்தீயிலே புகுந்தாள்.

### விளக்கம்

கலம் உடைந்தது 'இடையிருள்யாமம்' ஆதலாலும், அவன் தம்மோடு வரக் காணாமையாலும் 'சாதுவன் தானும் சாவுற்றான்' என்று கூறுகின்றனர்.

கணவன் இறந்தால் அவனுடன் தீப்பாய்ந்து இறப்பது கற்புடைய மாதர்க்கு இயல்பு.

ஒடிந்த மரமாயினும் உயிர் பிழைத்துத் தப்பிச் செல்ல உதவியாக இருந்தமையால் அது 'நன்மரம்' எனப்பட்டது.

கணவன் இறந்தான் எனக் கேள்விப்பட்டதும் உயிர்வாழ எண்ணாது உயிர் துறக்க எண்ணுகின்றாளாதலின் அவள் 'ஆதிரை நல்லாள்' எனப்பட்டாள்.

### இலக்கணம்

போயினன் — வினையாலணையும் பெயர்

உய — உய்ய என்பதன் இடைக்குறை

எறிதிரை, உடைகலம், தொடுகுழி — வினைத்தொகைகள்

ஊரீரேயோ, தாரீரோ — ஓகாரங்கள் இரக்கக் குறிப்பை உணர்த்தின.

சாற்றினன் — முற்றெச்சம்,

சுடலைக்கானில் — இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

## ஆதிரையைத் தீத்தீண்டாதொழிதல்

### 29—34. படித்துடன்..........................இருப்ப

### சொற்பொருள்

படுத்து உடன் வைத்த பாயல் பள்ளியும் - தான்படுத்து, அதனுடன் அடுக்கி வைத்த படுக்கையிடம்,

உடுத்த கூறையும் - உடுத்திக் கொண்டிருந்த ஆடையும்,

ஒள் எரி உறாஅது - ஒளி பொருந்திய நெருப்புப்படாமல்

ஆடிய சாந்தமும் - தடவிய சந்தனமும்

அசைந்த கூந்தலின் சூடிய மாலையும் - அசைகின்ற கூந்தலில் அணிந்த மாலையும்,

தொல் நிறம் வழாது - பழைய நிறம் மாறுபடாமல்,

விரை மலர் தாமரை - மணம் வீசும் தாமரை மலரில்,

ஒரு தனி இருந்த - ஒப்பற்று விளங்கியிருந்த,

திருவின் செய்யோள் போன்று - சிவந்த இலக்குமியைப் போல,

இனிது இருப்ப-தீதின்றி இருப்ப

### கருத்து

ஆதிரை படுத்த விறகுப் படுக்கையும், உடுத்த ஆடையும் நெருப்புப் படாமல், பூசிய சந்தனமும், தலை மாலையும் நிறம் கெடாமல் தாமரை மலரில் இருக்கும் இலக்குமி போல இருந்தாள்.

### விளக்கம்

விறகிலும் நெருப்புப் பற்றவில்லை; ஆடையிலும் பற்றவில்லை. அதனால் சந்தனமும், மாலையும் வாடாமல் அப்படியே இருந்தன. தாமரையை நெருப்புக்கும், இலக்குமியை ஆதிரைக்கும் ஒப்பாகக் கொள்க. "இனிது இருப்ப" என்பதனால் யாதொரு தீங்கின்றியும் இருந்தாள் என்க.

### இலக்கணம்

பாயல் பள்ளி— இருபெயரொட்டுப் பண்புத் தொகை.
உரூஅது—இசை நிறை அளபெடை.
தொன்னிறம்—பண்புத்தொகை. தொன்மை+நிறம்.

## அசரீரி பிறத்தல்

**35—40. தீயும்..............................சேர்ந்தனன்**

### சொற்பொருள்

தீயும் கொல்லா - நெருப்பாலும் கொல்லப்படாத,
தீவினையாட்டியேன் - தீவினை உடையவளாக இருக்கிறேன், (அதனால்)
யாது செய்கேன் - நான் யாது செய்வேன்,
என்று அவள் ஏங்கலும் - என்று கூறி ஆதிரை வருந்த,
ஆதிரை கேள் - ஆதிரையே! கேட்பாயாக,
உன் அரும் பெறல் கணவனை - பெறுதற்கரிய உன்னுடைய கணவனை,
ஊர் திரை கொண்டு உய்ப்ப - தவழும் அலைகள் கொண்டு செலுத்த,
போகி - சென்று,
நக்க சாரணர் - ஆடையின்றித் திரிபவராகிய,
நாகர் வாழ் மலைப்பக்கம்- நாகர்கள் வாழ்கின்ற மலையின் பக்கம்,
சேர்ந்தனன் - அடைந்தான் (என்று அசரீரி கூறியது)

### கருத்து

ஆதிரை "தீயும் தீண்டத் தகாத தீவினை உடையவளாக இருக்கின்றேனே; யான் யாது செய்வேன்" என்று வருந்த, அப்பொழுது அசரீரி தோன்றி "ஆதிரையே! உன்னுடைய கணவனை அலைகள் கொண்டு செலுத்த நாகர்கள் வாழ்கின்ற மலைப் பக்கத்திலே சென்றடைந்தான்" என்று கூறியது.

### விளக்கம்

சாதுவன் உயிரோடிருத்தலினாலும், ஆதிரை கற்புடையாளா தலாலும், நெருப்பு அவளை அணுகவில்லை. அதனால் வருந்த வேண்டா என்று அசரீரி கூறியது.

### இலக்கணம்

கொல்லா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
செய்கேன்—தன்மை ஒருமை வினைமுற்று. செய்+கு+ஏன்.
ஆதிரை—அண்மை விளி.
அரும்பெறல்—பெறல் அரும் என்பது முன் பின்னாக மாறி நின்றது.
ஆங்கு—அசைநிலை.
ஊர் திரை, வாழ் மலை—வினைத்தொகைகள்.
சேர்ந்தனன்—படர்க்கை ஆண்பால் வினைமுற்று. சேர்+த்+த்+அன்+அன்

# II. இடைக்காலச் செய்யுள்

## அ. கம்ப ராமாயணம்

### சுந்தர காண்டம்

### உருக்காட்டு படலம்

கம்பராமாயணம் பற்றிய குறிப்புக்கள் பொதுப்பகுதியில் தரப் பட்டுள்ளன. கண்டு கொள்க.

சுந்தர காண்டம்-அழகிய பகுதி. இஃது அநுமனுடைய பெருமையை நன்கு விளக்குவதாகி அழகியதாக இருத்தலால் இப்பெயர் பெற்றது என்பர். அநுமனுக்குச் சுந்தரன் என்று ஒரு பெயருண்மையால் அவன் செயலைக் கூறும் பாகம் என்றும் சொல்வர். சிறையிருந்த சீதையின் ஏற்றம் (கற்பின் அழகு) கூறுதலால் இப்பெயர் பெற்றது என்றும் சொல்லுவர். ஏனைய காண்டங்களினும் இக் காண்டத்துக் கதை நிகழ்ச்சி அழகியதாக இருத்தலினால் இப்பெயர் பெற்றது என்றும் சொல்வர்.

உருக்காட்டு படலம்—அநுமன் அசோக வனத்தில் சீதையின் அருகிற் சென்று தனது வடிவத்தைக் காட்டி இராமனது செய்தியைத் தெரிவித்துத் தனது பெரிய உருவத்தையும் காண்பித்த வரலாற்றைக் கூறும் பகுதி.

# 1. சீதை தன்னைத் தானே வெறுத்துக் கூறுதல்

**பொறையிருந்து..........................தீண்டுமோ**

### சொற்பொருள்

அறைஇரும் கழலவன் - ஒலிக்கின்ற பெரிய வீரக்கழல் அணிந்த இராமனை,
காணும் ஆசையால் - காண வேண்டுமென்ற விருப்பத்தினால்,
இருந்து பொறை ஆற்றி - நான் இங்கே இருந்து எல்லாத்துன்பங்களையும் பொறுத்துக் கொண்டு,
என் உயிரும் போற்றினேன் - என் உயிரையும் போகவிடாது காத்து வைத்திருந்தேன், (ஆனாலும்),
நிருதர் நீள் நகர் - அரக்கர்களுடைய பெரிய நகரில்,
நிறை இரும் பல் பகல்-நிறைந்த மிகப் பல நாளாக,
சிறை இருந்தேனை - சிறைப்பட்டிருந்த என்னை,
அப் புனிதன் - அத் தூயனாகிய இராமன்,
தீண்டுமோ - ஏற்றுக் கொள்வானோ?

### கருத்து

நான் துன்பங்களை யெல்லாம் பொறுத்துக் கொண்டு, உயிரையும் காத்து இராமனைக் காணவேண்டுமென்ற ஆசையால் இருந்தேனாயினும், அரக்கர் நகரில் பலகாலம் வாழ்ந்தேன் என்ற காரணத்தினால் அவ்விராமன் என்னை ஏற்றுக் கொள்வானோ?

### விளக்கம்

இரமனிடத்து உள்ள வேட்கை மிகுதியால் அயலானுடைய நகரில் துன்பத்தையெல்லாம் பொறுத்துக் கொண்டு, அவன் வந்து சிறைமீட்பான் என்று நம்பி உயிர் வாழ்கிறேன். ஆனால் அரக்கர்களிடையே நெடுங் காலம் வாழ்ந்ததனால் என்னை ஏற்றுக் கொள்வானோ என்று சீதை ஐயுறுகின்றாள். ஏனெனில் அவன் "புனிதன்" ஆதலினால்.

இராமன் இதுவரை வாராதிருந்தது அரக்கர்பாலுள்ள அச்சத்தினாலன்று. அரக்கரிடையே வாழும் என் குற்றத்தினாற் போலும் என்று எண்ணுகிறாள்.

### இலக்கணம்

கழலவற் காணும்—**இரண்டாம் வேற்றுமைத்தொகை.**
நீணகர்—**வினைத்தொகை:** (நீள்+நகர்)
**தீண்டும்—செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று.**
**தீண்டுமோ—ஓகாரம்—**எதிர்மறை ஓகாரம்.

## 2. உலகம் என்னை ஏற்குமோ?

**வஞ்சனை ............................ கொள்ளுமோ**

### சொற்பொருள்

வஞ்சனை மானின் பின் - மாய மானுக்குப் பின்னே,
மன்னைப் போக்கி - தலைவனாகிய இராமனை அனுப்பி,
என் மஞ்சனை - என் மைத்துனப் பிள்ளையாகிய இலக்குவனையும்,
வைது - கடுஞ் சொற் கூறி,
பின் வழிக் கொள்வாய் என - இராமன்சென்ற விடத்திற்குச் செல்வாய் என்று அவனை அனுப்பி விட்டு,
நஞ்சு அனையான் அகம் - விடம் போன்ற கொடிய இராவணனுடைய வீட்டில் வந்து சேர்ந்த,
நங்கை யான் - பெண்ணாகிய நான்,
உய்ஞ்சனென் இருத்தலும் - உயிரோடு இருத்தலையும்,
உலகம் கொள்ளுமோ - உலகம் ஒப்புக் கொள்ளுமோ?

### கருத்து

இராமனை மாயமானுக்குப் பின்னே அனுப்பி இலக்குவனையும் வைது அவனுக்குப் பின்னே அனுப்பி, இராவணனுடைய நகருக்குள் உயிர் வாழ்தலை உலகம் சரி என்று ஒப்புமோ?

### விளக்கம்

இராம இலக்குவர் வந்து தன்னை மீட்காதது அவர்கள் குற்றமன்று; குற்றம் என் மீதே உள்ளது என்று ஏங்குகிறாள். உலகம் ஒப்புக் கொள்ளாத உயிரை விட்டு விடுவதே தகும் என்று கருதுகிறாள். "வஞ்சனை மான்" என்றது முன்பு மாயமானாக வந்த மாரீசனைக் குறித்ததாகும். மைத்துனனை "மஞ்சன்" என்றது அன்பு காரணமாக வந்த மரபு வழுவமைதி. அல்லது இலக்குவன் சீதையைத் தாயாகக் கருதுவதால் கூறியதும் ஆம். மஞ்சனை வைத்து மாயமானாக வந்த மாரீசன் இராமனுடைய அம்பு பட்டு இறக்கும் பொழுது அபயக் குரல் எழுப்புகிறான். அக்குரலை இராமன் குரல் என்று கருதிய சீதை இலக்குவனையும் போகச் சொல்லுகிறாள். இலக்குவன் அஃது அரக்கர்களுடைய வஞ்சனையாக இருக்கும். இராமனுக்கு இடர்ஒன்றும் வாராது என்று தடுத்துரைக்க, சீதை அவனைப் பலவாறாகக் கடிந்துரைத்ததைக் குறிக்கும்.

இவ்வாறு பெண்ணுக்குரிய குணங்களுக்கு முற்றும் மாறுபட்ட தன்மையுடைய நானும் ஒரு பெண்ணோ? என்று கூறுவாள்போல 'நங்கை யான்' என்றாள்.

நஞ்சையுண்டவர் சாவது இயல்பு. ஆனால் நான் நஞ்சனையான் அகம் புகுந்தும் சாவாது இருக்கின்றேனே என்று நொந்து கொள்ளுகிறாள். இப்பாடலில் இரண்டாம் அடி முற்றுமோனையாக அமைந்துள்ளது.

### இலக்கணம்

மஞ்சன்—மைந்தன் என்பதன் மரூஉ.
உய்ஞ்சனென்—முற்றெச்சம். உய்ந்தனென் என்பது இவ்வாறு மருவி நின்றது. இது தன்மை ஒருமை வினைமுற்று.
உலகம்—இடவாகுபெயர்
கொள்ளுமோ—ஓ எதிர்மறை ஓகாரம்.

## 3. என் கற்பை எவ்வாறு விளக்குவேன்

**அற்புதன்..............................காட்டுகேன்**

### சொற்பொருள்

அற்புதன் - அற்புதனாகிய இராமன்,
வில்பணிகொண்டு - வில்லின் தொழிலைக் கொண்டு,
அரக்கர் தம் வருக்கம் - அரக்கர்களுடைய கூட்டம்,
ஆசற - அடியோடு கெடும்படி, (அவர்களைக் கொன்று)
அரும் சிறையின் மீட்டநாள் - கொடிய சிறையிலிருந்து என்னை விடுவித்த காலத்தில்,
இல் புக தக்கலை - வீட்டுக்குள் வரத் தகுதிஉடையாய் அல்லை,
என்னின் - என்று இராமன் என்னை நோக்கிக் கூறினால்,
யான் உடை கற்பினை - என்னுடைய கற்பு நிலைமையை,
எப்பரிசு இழைத்துக் காட்டுகேன்-எவ்விதம் மெய்ப்பித்துக் காட்டுவேன்,

### கருத்து

இராமன் அரக்கர்களைக் கொன்று என்னை விடுவித்த காலத்தில் "வீட்டிற்குள் நுழையும் தகுதி உனக்கில்லை" என்று கூறினால் என் கற்பு நிலையை எவ்வாறு மெய்ப்பித்துக் காட்டுவேன்.

### விளக்கம்

நெடுங்காலம் அரக்கர் நகரில் சீதை இருந்த காரணத்தால் கற்பில் ஐயுறுவானோ என்று அஞ்சுகிறாள். ஐயுற்றுத் தகுதியுடையவள் அல்லள் என்று விலக்கிவிட்டால் கற்பின் தூய்மையை எவ்வகையில் மெய்ப்பித்துக் காட்டவல்லேன் என்று ஏங்குகிறாள். மெய்ப்பிக்கச் சான்றில்லாமையால் உயிர்விடுதலே மேல் என்னும் முடிவுக்கு வருகிறாள்.

### இலக்கணம்

தக்கலை - எதிர்மறை முன்னிலை ஒருமை வினைமுற்று.
காட்டுகேன்—தன்மை ஒருமை எதிர்கால வினைமுற்று.
மீட்ட—காலவழுவமைதி.
விற்பணி—வில்+பணி.
மீட்ட—மீள்+ட்+அ மீள் - பகுதி, ட் - இறந்தகால இடைநிலை, அ - பெயரெச்ச விகுதி.

தக்கலே—தகு+அல்+ஐ. தகு—பகுதி, அல்—எதிர்மறை இடைநிலை, ஐ— முன்னிலை ஒருமை விகுதி.
காட்டுகேன்—காட்டு+கு+ஏன்.

## 4. சீதை உயிர்விடத் துணிதல்

**ஆதலான்....................................எய்தினள்**

### சொற்பொருள்

ஆதலான் - ஆதலினால்,
இறத்தலே - சாதலே,
அறத்தின் ஆறு - அறநெறியாகும்,
எனா - என்று கருதி,
சாதல் காப்பவரும் - நான் இறத்தலைத் தடுப்பவராகிய அரக்கரும்,
என் தவத்தினால் - எனது நல்வினைப்பயனால்,
சாம்பினார் - உறங்குகிறார்கள்,
ஈது அலாது இடமும் வேறு இல்லை - இதுவல்லாமல் தக்க சமயமும் வேறு கிடைக்காது,
என்று - என்று நினைந்து,
போது உலாம் - மலர்கள் நிறைந்து அசையப்பெற்ற,
ஒரு மாதவி பொதும்பர் - ஒரு குருக்கத்தி மரச்சோலையை,
எய்தினள் - (சீதை) சென்று சேர்ந்தாள்.

### கருத்து

இனி இறத்தலே நன்று என்று கருதிய சீதை, அரக்கர்கள் உறங்கும் நேரம் பார்த்து ஒரு மாதவிச் சோலைக்குள் நுழைந்தாள்.

### விளக்கம்

ஆதலான்—கற்புநிலையை இராமனுக்கு மெய்ப்பிக்க முடியாமையால், என்றபடி.

அரக்கியர் உறங்கிக்கொண்டிருந்தமையாலும், மரங்கள் அடர்ந்த சோலையாதலாலும் தூக்கிட்டுக் கொள்ள நினைந்த சீதை 'ஈதலாது இடமும் வேறு இல்லை' என்றாள்.

சீதையைச் சூழ்ந்து அவளுக்குக் காவலாக அரக்கியர் இருந்தமையால் உயிர்துறத்தலைத் தடுத்துவிடுவர். அதனால் 'சாதல் காப்பவரும்' என்றாள். உறங்காமல் காத்துக்கொண்டிருந்தவர்கள் இப்பொழுது கண்ணயர்ந்து விட்டனர். ஈது என் தவப்பயனே யாகும் என்றாள்.

### இலக்கணம்

தவத்தின் சாம்பினார்—மூன்றாம் வேற்றுமைத்தொகை.
உலாம்—உலாவும் என்னும் செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் 'உலாம்' என வந்தது. 'செய்யும் என்னும் எச்ச ஈற்றுயிர் சேறலும்' என்ற விதிப்படி முடிந்தது.
சாம்பினார்—சாம்பு+இன்+ஆர், சாம்பு—பகுதி, இன்—இறந்த கால இடைநிலை, ஆர்—பலர்பால் விகுதி.
எய்தினள்—எய்து+இன்+அள். இன்—இறந்தகால இடைநிலை.

# 5. அனுமன் தோன்றி, தான் யாரெனக் கூறுதல்

**கண்டனன்.............................தோன்றினன்**

### சொற்பொருள்

அனுமனும் – அனுமானும்,
கண்டனன் – (அங்குச் சென்ற சீதையைக்) கண்டு,
கருத்தும் எண்ணினன் - அவளுடைய எண்ணத்தையும் உய்த்துணர்ந்து,
துணுக்கம் கொண்டனன் – அச்சங் கொண்டு,
மெய்தீண்ட கூசுவான் – அவளுடைய திருமேனியைத் தொட்டு விலக்குதற்கு மனங் கூசி,
அண்டர் நாயகன்-தேவர்கட்குத் தலைவனாகிய இராமன்,
அருள் தூதன் யான் - அனுப்பியருளிய தூதுவன் நான்,
என - என்று கூறி,
தொண்டைவாய் மயிலினை - கொவ்வைப்பழம் போன்ற வாயையுடையவளான மயில் போன்ற சாயலையுடைய சீதையை,
தொழுது தோன்றினன் - தொழுதுகொண்டே எதிரில் தோன்றினன்.

### கருத்து

அனுமன் சீதையைக் கண்டு, அவள் கருத்தையுணர்ந்து, அஞ்சி, அவளைத் தொட்டுத் தடுக்கக் கூசி 'இராமதூதன் நான்' என்று சொல்லித் தொழுது கொண்டே அவள் முன் தோன்றினன்.

### விளக்கம்

சீதை தற்கொலைக்கு முயல்வதை அனுமன் அறிந்து கொண்டான்; உடனே நடுங்கி விட்டான். அவளைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்று துடிக்கிறான். ஆனால் அவளோ தலைவனுடைய மனைவி; இவனோ தூயவன்; எப்படி அவளுடைய உடம்பைத் தொட்டு நிறுத்துவது? பளிச்சென்று அவனுக்கு ஓர் எண்ணம் வருகிறது. இராமன் பெயரைக் கேட்டால் நின்று விடுவாள் என்றெண்ணி, 'அண்டர் நாயகன் அருள் தூதன் யான்' என்று கூறுகிறான். தொண்டை-கொவ்வைக் கனி.

### இலக்கணம்

எண்ணினன், கொண்டனன்—முற்றெச்சங்கள்
தொண்டைவாய்—உவமைத்தொகை
மயில்—உவமையாகு பெயர்

## 6. இதுவும் அது

**அடைந்தனென்........................நோக்கினேன்**

### சொற்பொருள்

மடந்தை - பெண்ணே (தாயே),
அடியனேன் - அடியவனாகிய நான்,
இராமன் ஆணையால் — இராமனுடைய ஏவலினால்,
அடைந்தனென் - இங்கு வந்து சேர்ந்தேன்,
உலகு அனைத்தையும் - எல்லா உலகங்களையும்,
குடைந்து - அரித்து,
நாடும் கொட்பினால் - தேடிப் பார்க்கவேண்டுமென்ற கோட்பாட்டினால்,
மிடைந்தவர்-ஆங்காங்கு நெருங்கிச் சென்ற வானர வீரர்கள்,
உலப்பு இலர் - எண்ணிலராவர், (அவருள் யான்)
தவத்தை மேவலால் - (முற்பிறப்பில்) நல்வினையைச் செய்திருந்தமையால்,
நின் சே அடி - உமது சிவந்த திருவடிகளை,
வந்து நோக்கினேன் - இங்கு வந்து கண்டு கொண்டேன்.

### கருத்து

தாயே! இராமன் ஆணையால் நான் இங்கு வந்துள்ளேன். உம்மைத்தேடிக் கண்டு பிடிக்க அவன் ஏவலால் சென்ற வானர வீரர் எண்ணிலர் ஆவர். அவருள் யானும் ஒருவன். யான் என் தவப் பயனால் உம்மை இங்கே கண்டு கொண்டேன்.

### விளக்கம்

குடைந்து தேடுதலாவது; வலை போட்டு அரித்துத் தேடுவது போல் தேடுதல். ஏனைய வானர வீரர்களால் கண்டு பிடிக்க முடியவில்லை. நான் கண்டு பிடித்து விட்டேன். அந்தப் பெருமை என்னைச் சார்ந்தது. அஃது என் தவப் பயனேயாகும் என்று கூறுகின்றான். தலைவன் ஏவலைத் தவறாது செய்து வெற்றி கொண்டமையால் பெருமை கொள்கின்றான் அனுமன்.

### இலக்கணம்

அடைந்தனென்—தன்மை ஒருமை வினைமுற்று. அடை+த்+த்+அன்+என். அடை—பகுதி, த்—சந்தி (நகரமானது விகாரம்) த்—இறந்த கால இடைநிலை, அன்—சாரியை, என்—தன்மை ஒருமை வினைமுற்று விகுதி.

கொட்பு—தொழிற்பெயர். கொள்+பு. கொள்—பகுதி, பு—தொழிற் பெயர் விகுதி.

மடந்தை—அண்மைவிளி.

சேவடி—பண்புத்தொகை. செம்மை+அடி.

நோக்கினேன்—நோக்கு+இன்+ஏன், இன்—இறந்த கால இடைநிலை.

# 7. இராமன் வராமைக்கு அனுமன் காரணம் கூறல்

**ஈண்டு நீ..................................உண்டோ**

### சொற்பொருள்

ஈண்டு நீ இருந்ததை - இங்கே நீவிர் இருப்பதை,
இடரின் வைகுறும் ஆண்தகை - (உன்னைப் பிரிந்த) துன்பத்திலிருக்கும் இராமன்,
அறிந்திலன் - அறிந்தானில்லை,
அதற்குக் காரணம் - அங்ஙனம் அறியான் என்பதற்குக் காரணம்,
வேண்டுமே - சொல்ல வேண்டுமோ ?
அரக்கர்தம் வருக்கம்—அரக்கருடைய கூட்டம்,
வேரொடு மாண்டில - அடியோடு அழிய வில்லை, (என்பதேயாகும்)
ஈது அலால் - இதுவேயல்லாமல்,
மாறு வேறு உண்டோ - மாறுக வேறு உளதோ ?

### கருத்து

இராமன் நீ இங்கிருப்பதை அறியான். ஆதலினாற்றான் உன்னை மீட்டுச் செல்ல வரவில்லை என்று அனுமன் கூறினான்.

### விளக்கம்

நீ இங்கிருப்பதை இராமன் அறிந்திருந்தால் இந்நேரம் அரக்கர்களை வேரோடு கொன்று குவித்திருக்க மாட்டானா? அவ்வரக்கர்கள் இன்னும் அழியாமல் இருப்பதனால் இராமன் நீயிருக்கும் இடத்தை அறிந்து கொள்ள வில்லை என்பது தெரிய வில்லையா ? இதைத் தவிர வேறு காரணம் ஒன்றுமில்லை என்கிறான்.

சீதை, இராமன் தன்னை மீட்க வாராமைக்குப் பல காரணங்களைத் தானே படைத்துக் கொண்டு வருந்தினாள் ; ஐயுற்றாள். அந்த ஐயத்தை இதனால் நீக்கினான்.

நீ எப்படி இராமனைப் பிரிந்து வருந்திக் கொண்டிருக்கிறாயோ அப்படியே இராமனும் உன் பிரிவால் வாடிக் கொண்டிருக்கிறான் என்பதை ' இடரின் வைகுறும் ' என்று கூறுகின்றான்.

இராமன் அரக்கரை வேரோடு அழிக்கும் ஆற்றல் கொண்டவன் என்பதை ' ஆண்டகை ' என்பதால் குறிப்பிக்கின்றான்.

### இலக்கணம்

**ஆண்டகை**—ஆண் + தகை.
**வேண்டுமே**—ஏகாரம் வினாப் பொருளில் வந்தது.

# 8. அனுமான் தன்னை ஐயுறவேண்டா எனல்

ஐயுறல்..........................................என்றான்

## சொற்பொருள்

நெய் உறு விளக்கு அனாய் - நெய் நிறைந்துள்ள விளக்குப் போன்ற ஒளி பொருந்திய திருமேனியுடையவளே,
ஐயுறல் - என்னைச் சந்தேகிக் காதே,
அடையாளம் உளது- (இராமன் தந்தனுப்பிய) அடையாளம் என்னிடம் உள்ளது,
ஆரியன் மெய் உற உணர்த்திய- பெரியோனாகிய இராமன் உண்மை விளங்கும்படி சொல்லியனுப்பிய,
உரையும் வேறு உள-அடையாள மொழிகளும் சில உள்ளன, (அவற்றைக் கொண்டு)
கை உறு நெல்லி அம்கனியின் - உள்ளங்கை நெல்லிக்கனி போல,
காண்டி - (ஐயமுற என்னை) உணர்வாயாக,
வேறு நினையல் என்றான் - வேறு வகையாக எண்ண வேண்டா என்று கூறினான்.

## கருத்து

இராமன் தந்தனுப்பிய அடையாளப் பொருளும், அடையாள மொழிகளும் என்பால் இருத்தலால் என்னை நீ ஐயுறல் வேண்டா என்று அனுமன் சீதையை நோக்கிக் கூறினான்.

## விளக்கம்

இராவணன் தான் இவ்வாறு வந்துள்ளானோ? என்று ஐயுறுவாள் சீதை என்பதறிந்து 'ஐயுறல், வேறு நினையல்' என்று கூறுகின்றான்.

'அடையாளம் உளது' என்றது இராமன் பெயர் பொறித்த மோதிரத்தை. உணர்த்திய உரையாவது, இராமன் காடு செல்லும் போது சீதை 'உடுத்த துகிலோடும் உயிர் உக்க உடலோடும் எடுத்த முனிவோடும்' அயல் நின்றது, நகரை விட்டு நீங்காமுன் அவள் 'கான் யாண்டையது' என வினவியது, சுமந்தரனிடம் 'கிள்ளையொடு பூவை'களை வளர்க்கும் விதத்தைத் தோழிகட்குச் சொல்லுமாறு சீதை சொல்லியனுப்பிய பிள்ளைமைத்தன்மை என்பனவாம்.

## இலக்கணம்

நினையல் ஐயுறல் என்பன—எதிர்மறை வியங்கோள் வினை முற்றுக்கள். ஐயுறு+அல்.
உரையும்——இறந்தது தழுவிய எச்சவும்மை.
கனியின்——இன்—ஒப்புப் பொருளில் வந்த ஐந்தாம் வேற்றுமை உருபு.

காண்டி—முன்னிலை ஒருமை வினைமுற்று. காண்+ட்+இ. காண்—பகுதி. ட்—எழுத்துப்பேறு, இ—முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதி.
ஆல்—அசை நிலை.
அனாய்—அன்னாய் என்பதின் இடைக்குறை.

## 9. அனுமனைக்கண்ட சீதை ஐயுற்றுத் தெளிதல்

என்றவன் .................................... என்னா

### சொற்பொருள்

என்று அவன் இறைஞ்ச - என்று இவ்வாறு கூறி அனுமான் வணங்க,
நோக்கி - சீதை அவனைப் பார்த்து,
இரக்கமும் முனிவும் எய்தி - கருணையையும் கோபத்தையும் ஒருங்கு அடைந்து,
நின்றவன் நிருதன் அல்லன் - எதிரில் நிற்பவன் அரக்கன் அல்லன்,
நெறி நின்று - நல்லொழுக்கத்தில் தவறாது நின்று,
பொறிகள் ஐந்தும் வென்றவன் - ஐம்பொறிகளையும் வெற்றி கொண்டவனாவான்,
அல்லன் ஆகில் - அவ்வாறில்லையென்றால்,
விண்ணவன் ஆகவேண்டும் - தேவனாக இருக்கக் கூடும், ( ஏனெனில் )
நன்று உணர்வு உரையன் - நல்லறிவைப் புலப்படுத்தும் சொற்களையுடையவனாக இருக்கின்றான்,
தூயன் - தூய மனமுடையவனாக இருக்கின்றான்,
நவை இலன் - குற்றமில்லாதவனாகவும் இருக்கின்றான்,
என்னா - என்றெண்ணி,

### கருத்து

அனுமன் தொழுது நிற்பதைக் கண்ட சீதை இவன் அரக்கன் அல்லன்; பொறிகளை வென்ற முனிவனாவன்; இல்லையானால் தேவனாக இருக்கவேண்டும். ஏனெனில் இவன் நன் மொழிகளையும் தூய மனத்தையும் குற்றமில்லாமையும் உடையவனாகக் காணப்படுகிறான் என்று எண்ணினாள்.

### விளக்கம்

அனுமான் இராமன் பெயரைச் சொன்னமையால் இரக்கமும், அவன் இராவணனோ என்று ஐயுற்றமையால் முனிவும் எய்தினாள் சீதை. நற்பண்புகள் உடையவனாகத் தோன்றுதலினால் 'நிருதன் அல்லன்' என முடிவு கட்டுகிறாள். அப்படியானால் அவன் யார்? ஒன்று முனிவனாக இருக்கவேண்டும். அல்லது தேவனாக இருக்க வேண்டும் என்றெண்ணுகிறாள்.

### இலக்கணம்

முனிவும் இரக்கமும்—எண்ணும்மை.
ஐந்தும்—முற்றும்மை.
உரையன்—குறிப்பு வினைமுற்று.
போலும்—ஒப்பில் போலி.

## 10. அரக்கனே............................உண்டோ

### சொற்பொருள்

அரக்கனே ஆக - இவன் அரக்கனாயினும் ஆகட்டும்,
வேறு ஓர் அமரனே ஆக - அன்றி ஒரு தேவனாயினும் ஆகட்டும்,
அன்றி—அல்லாமல்,
குரங்கு இனம் தலைவனேதான் ஆகுக - குரங்குக் கூட்டத்துக்குத் தலைவனாயினும் ஆகட்டும்,
கொடுமை ஆக - (இவனால் விளைவது) தீமையேயாயினும் ஆகட்டும்,
இரக்கமே ஆக - மனமிரங்கிச் செய்யும் நன்மையேயாயினும் ஆகட்டும்,
இங்கு வந்து - இங்கு என்னெதிரில் வந்து,
எம்பிரான் நாமம் சொல்லி- எனது தலைவனாகிய இராமன் பெயரைச் சொல்லி,
உணர்வை உருக்கினன் - என் அறிவை உருகச் செய்து,
உயிர் தந்தான் - போகிற உயிரைத் தடுத்துக் காத்தான்,
இதின் உதவி உண்டோ - இதைக் காட்டிலும் சிறந்த வேறோர் உதவி உளதோ?

### கருத்து

என்னெதிரில் நிற்பவன் அரக்கனாயினும் தேவனாயினும் அன்றிக் குரங்கினத் தலைவனாயினும் இவனால் வருவது நன்மையாயினும் தீமையாயினும் எவ்வாறாயினும் ஆகட்டும். இங்கு வந்து என் கணவன் பெயரைக் கூறி, என்னை உருக வைத்து என் உயிரையும் காத்தான். இதைவிடச் சிறந்த உதவி உலகில் வேறுளதோ என்று சீதை தன்னுள் எண்ணிக் கொண்டாள்.

### விளக்கம்

இச்செய்யுள் இராமனிடத்தில் சீதை கொண்டுள்ள பேரன்பைக் காட்டுகிறது. சீதை இங்கே, என்ன வந்தாலும் வரட்டும் என்று துணிந்து விட்டாள். ஏனெனில் அவன் செய்த உதவி அப்படிப்பட்டது.

உயிர் விடத் துணிந்த சமயத்தில் அனுமன் வந்து இராமன் பெயரைக் கூறி அவளுடைய உயிரைக் காத்தான். உயிருதவியைப் போன்ற உதவி யாதுளது? அதனால் அவ்வுதவியை நன்கு மதித்து 'இதனின் உதவி உண்டோ' என்று எண்ணுகிறாள். இவ்வுதவியைச் செய்தவன் யாராயிருந்தாலென்ன? என்று கருதுகிறாள்.

### இலக்கணம்

குரக்கினம்—வலித்தல் விகாரம் குரங்கு+இனம்.
உருக்கினன்—முற்றெச்சம்.
உண்டோ—ஓ எதிர்மறை ஓகாரம்.

## 11. எனநினைத்......................என்றாள்

### சொற்பொருள்

என நினைத்து - என்றிவ்வாறெல்லாம் எண்ணி,
எய்தநோக்கி - அனுமனை நன்றாகப் பார்த்து,
என் உள்ளம் இரங்கும் - என் மனம் இரங்குகிறது,
மனன் அகத்து கள்ளம் உடையராய - மனத்தில் கபடத்தை உடையவராகிய,
வஞ்சகர் மாற்றம் - வஞ்சகர்களுடைய சொற்களைப்போன்ற சொற்களை.
அல்லன் - உடையவனல்லன்,
நினைவு உடை சொற்கள் - நல்லெண்ணத்தையுடைய சொற்களுடன்,
கண் நீர் நிலம்புக - கண்ணீர் நிலத்திற் சிந்த,
புலம்பாநின்றான் - புலம்புகின்றான், (ஆதலால்)
வினவுதற்கு உரியன் - (யாரென நான்) வினவுதற்கு உரியவனாவான்,
என்னா - என்றெண்ணி,
வீர நீ யாவன் - வீரனே நீ யார்?
என்றாள் - என்று வினவினாள்.

### கருத்து

சீதை அனுமனை நன்கு நோக்கி, இவனைக் காணின் என் மனம் இரங்குகிறது; இவன் மொழி வஞ்சக மொழியாகத் தோற்றவில்லை; நல்லெண்ணத்துடன் கண்ணீர் சோர நின்று புலம்புகின்றான். ஆதலின் இவன் நம்மால் வினவுதற்குரியனே எனத் துணிந்து 'வீரனே! நீ யார்? என்று வினவுகின்றாள்.

### விளக்கம்

9, 10, 11 இம்மூன்றும் குளகச் செய்யுட்கள். குளகம் என்பது ஒரே செய்யுளில் கருத்து முடிவுறாமல் பல செய்யுட்களில் தொடர்ந்து வந்து முடிவது.

அனுமனுடைய சொற்களில் வஞ்சகம் இருப்பதாகப் புலப்படவில்லை: நல்லெண்ணத்தை வெளிப்படுத்துவனவாகவே விளங்குகின்றன. தோற்றமும் கருணை கொள்ளத்தக்கதாகவே காணப்படுகிறது. அதனால் இவனை வினவுவேன் எனத் துணிகின்றாள்.

### இலக்கணம்

புலம்பா நின்றான்—உடன்பாட்டுச் சொல். புலம்பு—பகுதி ஆநின்று—நிகழ்கால இடைநிலை, ஆன்—விகுதி.

## 12. அனுமன் இலங்கைக்கு வந்த வரலாற்றைக் கூறல்

**ஆயசொல்.......................................தீர்ந்தான்**

### சொற்பொருள்

ஆய சொல் - அந்தச் சொல்லை யும்,
அம் கை - அழகிய தனது கை களையும்,
தலைமேல் கொண்டவன் - தலை மேற் கொண்டவனாகி, (சீதை யை நோக்கி)
அன்னை - தாயே !
நின்னை தூயவன் பிரிந்த பின்பு - உன்னைத் தூயவனாகிய இராமன் பிரிந்த பிறகு,
தேடிய துணைவன் - தேடிப் பெற்ற நண்பனும்,
தொல்லை காய் கதிர் செல்வன் மைந்தன் - சுடுகிற கதிர்களை யுடைய பழமையான சூரிய னுடைய குமாரனும்,
கவி குலம் அவற்றுக்கு எல்லாம் நாயகன் — குரங்குக் கூட்டங் களுக்கெல்லாம் தலைவனும்,
நவையின் தீர்ந்தான் - குற்றத்தி னின்று நீங்கினவனும் ஆகிய,
சுக்கிரீவன் என்று உளன் - சுக்கி ரீவன் என்று பெயர் சொல்லப் பட்டு ஒருவன் உள்ளான்.

### கருத்து

சீதையின் சொல்லையும் தனது கைகளையும் தலைமேற்கொண்ட வனாகிய அநுமன் சீதையை நோக்கித் "தாயே! இராமன் உன்னைப் பிரிந்த பிறகு தேடிப் பெற்ற நண்பனும், சூரியன் மைந்தனும், குரங்கினத் தலைவனும், குற்றம் தீர்ந்தவனும் ஆகிய சுக்கிரீவன் என்பவன் ஒருவன் உள்ளான்" என்று கூறினான்.

### விளக்கம்

இதுமுதல் மூன்று கவிகள் ஒரு தொடர். சொல்லைத் தலைமேற் கொள்ளுவதாவது அதனை நன்கு மதிப்பது. கையைத் தலைமேற் கொள்ளுவதாவது தொழுதல். "கொண்ட அங்கையன்" என்பதை அம்கை கொண்டவன் என மாற்றிக் கூட்டுக. சுக்கிரீவன் சூரிய னுக்கு மைந்தன்; இராமனுக்கு நண்பன்; குரங்குகளுக்குத் தலை வன். அவன் குற்றமில்லாதவன். அவனிடம் அனுமன் பணி புரிந்தான் என்பதை அடுத்து வரும் பாடல்களில் கூறுகின்றான்.

"நவையில் தீர்ந்தான்" என்பது, இவனுக்காக இவன் உடன் பிறந்த வாலியை இராமன் கொன்றதை மனத்திற் கொண்டு கூறு வது போல் அமைந்துள்ளது. இவன் குற்றமில்லாதவனாக இருத் தலினாற்றான் குற்றமுடைய வாலியை இராமன் கொன்றான் என்ற குறிப்பை உணர்த்தி நிற்கின்றது.

### இலக்கணம்

அன்னை—அண்மை விளி
செல்வன் மைந்தன்—நான்காம் வேற்றுமைத்தொகை (செல்வ னுக்கு மைந்தன்)

## 13. மற்றவன்..............................தோளான்

### சொற்பொருள்

அவன் முன்னோன் — அச்சுக்கிரீவனுக்கு மூத்தவனாகிய வாலி,
அந்நாள் - அக்காலத்தில்,
இராவணன் வலி இற்று உக - இராவணனது வலிமை முழுதும் அழிந்து ஒழியும்படி,
தன் வாலின் கட்டி - தனது வாலினால் அவனைப் பிணித்து,
எட்டு திசையினும்-எட்டுத் திக்குகளிலும்,
எழுந்து பாய்ந்த - தாவிச் சென்ற,
வெற்றியன் - வெற்றியை உடையவன்,
தேவர் வேண்ட - தேவர்கள் வேண்டிக் கொண்டதால்,
வேலையை - திருப்பாற் கடலை,
விலங்கல் மத்தில் - மந்தர மலையாகிய மத்திலே,
சுற்றிய நாகம் தேய - கடை கயிறாகச் சுற்றிய வாசுகி என்னும் பாம்பு உடம்பு தேயும்படியும்,
அமுது எழ - அமுதம் தோன்றும்படியும்,
கடைந்த தோளான் — கடைந்த தோள் வலிமையை யுடையவன்.

### கருத்து

சுக்கிரீவனுக்கு மூத்தவனாகிய வாலி என்பவன் இராவணனைத் தன் வாலினால் கட்டி இழுத்த வீரமுடையவன். தேவர்கட்காக பாற்கடலில் அமுதம் கடைந்தெடுக்க உதவியவன்.

### விளக்கம்

வாலி ஒரு பெண் குரங்கின் வாலைக் கண்டு காதல் கொண்ட இந்திரனுக்கு அந்த வாலிடத்தில் பிறந்தவனாதலின் இப்பெயர் பெற்றான்.

இராவணன் ஒரு காலத்தில் வாலியோடு போர் செய்யும் பொருட்டுச் சென்றான். அப்பொழுது வாலி இராவணனை தன் வாலினால் கட்டி வான வெளியில் கடல்களைக் கடந்து சென்று, இறுதியாக அவனைக் கீழே உதறிவிட்டான் என்பது கதை.

பாற்கடல் கடைந்தது—தேவர்களும் அசுரர்களும் ஒருங்கு கூடி அமுதத்தைப் பெறும் பொருட்டு மந்தர மலையை மத்தாக நாட்டி வாசுகி என்னும் பாம்பை கடை கயிறாகப் பூட்டி பாற்கடலைக் கடைய முயன்றனர். அப்போது இருதிறத்தாரும் கடையும் வலிமையின்றி நின்றனர். அவ்வளவில் அங்கு வந்த வாலியைத் தேவர்கள் வேண்டிக்கொள்ள அவன் அவ்விரு திறத்தாரையும் விலக்கி விட்டு ஒருவனாகவே நின்று அப்பாம்பின் தலையையும் வாலையும் பிடித்து இழுத்துக் கடைய அமுதம் எழுந்தது என்பது கதை.

### இலக்கணம்

வெற்றியன்—குறிப்பு வினைமுற்று.
விலங்கல் மத்து—இருபெயரொட்டுப் பண்புத்தொகை
மற்றவன்—மற்று—அசைநிலை.

## 14. அன்னவன் தன்னை..................என்பேன்

### சொற்பொருள்

அன்னவன் தன்னை - அப்படிப் பட்ட வாலியை,
உம் கோன் - உமது நாயகனாகிய இராமன்,
அம்பு ஒன்றால் - ஓர் அம்பினால்,
ஆவி வாங்கி-உயிரைக் கவர்ந்து,
பின்னவற்கு அரசு நல்கி - அவன் தம்பியாகிய சுக்கிரீவனுக்கு அரசாட்சியைக் கொடுத்து,
துணை என பிடித்தான்-(உன்னைத் தேடுவதற்கு அவனை) துணையாகக் கொண்டான்,
நங்கள் மன்னவன் தனக்கு - எங்கள் அரசனான சுக்ரீவனுக்கு,
நாயேன் - நாய் போலக் கடைப் பட்ட நான்,
மந்திரத்து உள்ளேன் - ஆலோசனைச் சபையில் ஒருவனாக உள்ளேன்,
வானின் நல் நெடும் காலின் மைந்தன்- வானத்தில் உலவும் நல்ல வாயு தேவனுக்கு மகனாவேன்,
நாமமும் - எனது பெயரும்,
அநுமன் என்பேன் - அநுமன் என்று சொல்லப் படுவேன்.

### கருத்து

வாலியைக் கொன்று, அவன் தம்பியாகிய சுக்கிரீவனுக்கு நாட்டைக் கொடுத்து அவனையே துணையாகக் கொண்டான் இராமன். அச் சுக்கிரீவனுடைய ஆலோசனைச் சபையில் உள்ள நான் வாயுதேவன் மகனாவேன்; அநுமன் என்ற பெயரையுடையேன் என்று அநுமன் கூறினான்.

### விளக்கம்

அநுமன் சொல்லின் செல்வன் ஆதலின் " நீ யார் " என வினவிய சீதைக்குத் தன் வரலாறு முழுமையும் சுருக்கி விடையாகக் கூறி விடுகிறான். இராவணனை அழித்துத் தன்னை மீட்கும் ஆற்றல் இராமனுக்கு உண்டோ இல்லையோ என்னும் ஐயம் சீதைக்கு நிகழலாம். அவ்வாறு நிகழாதவாறு வாலியைச் சிறப்பித்துக் கூறி " அன்னவன் தன்னை அம்பொன்றால் ஆவி வாங்கினவன் " இராமன் என்று கூறுகின்றான்.

சுக்கிரீவன் தான் சீதையைத் தேடிக் கண்டு பிடிக்கத் தக்க துணை என அறிந்து நட்புக் கொண்டான் என்பதை "பிடித்தான்" என்ற சொல்லால் உணர்த்துகிறான்.

வாலியைக் கொல்ல இராமன் பல அம்புகளைப் பயன்படுத்த வில்லை; ஒரே அம்பைப் பயன்படுத்தினான் என அவன் வீரந் தோன்ற "அம்பு ஒன்றால்" எனக் கூறினான். கால்—காற்று; அஃதாவது வாயுதேவன்.

### இலக்கணம்

நல்கி—இறந்த கால வினையெச்சம். (நல்கு+இ)
பின்னவற்கு—பின்னவன்+கு.
நன்னெடும்—நல்+நெடும்.
நெடுங்கால்—பண்புத்தொகை.

## 15. இராமன் ஏவலால் வந்தேன் எனல்

**புன் தொழில்......................சிதைவதாமோ**

### சொற்பொருள்

புல் தொழில் அரக்கன் - இழி தொழிலையுடைய இராவணன்,
கொண்டு போந்த நாள் - உன்னை எடுத்துச் சென்ற காலத்து,
தூசில் பொதிந்து - ஆடையில் முடிந்து,
குன்றின் எம் மருங்கின் இட்ட - மலையில் எங்கள் பக்கத்திலே போட்ட,
அணிகலம் குறியினால் - ஆபரணங்களின் குறிப்பினால் (அவற்றை நான் எடுத்துக் காட்டிய அடையாளத்தினால்)
வென்றியான் - வெற்றியையுடைய இராமன்,
அடியன் தன்னை - அடியேனாகிய என்னை,
வேறு கொண்டு இருந்து - தனியே அழைத்து வேறிடத்திலிருந்து,
கூறி - சில சொற்களைச் சொல்லி,
தென்திசை சேறி என்றான் - தெற்குத் திக்கை நோக்கிச் செல்வாய் என எனக்குக் கட்டளையிட்டான்,
அவன் அருள் - அவனது கருணை,
சிதைவது ஆமோ - பழுது படுமோ?

### கருத்து

இராவணன் உன்னைத் தூக்கிச் சென்ற பொழுது, அணிகளை ஆடையில் முடிந்து எங்கள் மலையிற் போட்டாய். அவைகளை எடுத்துக் காட்டி நான் சொன்ன அடையாளத்தினால் என்னைத் தனியே அழைத்துச் சில சொற்களைச் சொல்லி நீ தெற்குத் திசை நோக்கிச் செல் என இராமன் கட்டளையிட்டான். அவன் கருணை பொய்க்காது, உன்னை இங்குக் கண்டு கொண்டேன் என்று அநுமன் கூறுகிறான்.

### விளக்கம்

சீதையை இராவணன் தூக்கிச் செல்லும் பொழுது தன் அணிகலன்களை எல்லாம் கழற்றி ஒரு துணியில் முடிந்து சுக்கிரீவன் மலைப் பக்கத்தில் போட்டுச் சென்றாள். அவற்றை எடுத்த அநுமன் இராமனிடம் தந்து அவனுடைய மனத்துக்குத் தேறுதலை உண்டாக்கினான். அதனால் இராமன் அநுமன் மீது தனி நம்பிக்கை வைத்திருந்தான். ஆதலின் அநுமன் தன்னை வேறு கொண்டிருந்து கூறினான். அப்பொழுது கூறியன அடையாள வார்த்தைகளாம்.

### இலக்கணம்

புன்றொழில்—பண்புத் தொகை. (புன்மை+தொழில்).
தென்றிசை—இருபெயரொட்டுப் பண்புத் தொகை. தெற்கு+திசை.
சேறி—ஏவல் ஒருமை வினைமுற்று. செல்+த்+இ. செல்—பகுதி, பகுதியின் முதல் நீண்டது. த்—எழுத்துப் பேறு, இ-விகுதி.
சிதைவதாமோ—ஓ-எதிர்மறை.

## 16. இராமனைப் பற்றி அநுமன் கூறல்

**கொற்றவன்...............................மன்றே**

### சொற்பொருள்

அன்ன - தாயே,
கொற்றவற்கு - இராமனுக்கு,
ஆண்டு - அந்நாளில்,
காட்டி கொடுத்த போது -(நான் நீ கீழே போட்ட நகைகளை) காண்பித்து அவனிடம் கொடுத்தபொழுது,
அடுத்த தன்மை - அவனுக்கு நேர்ந்த நிலைமை,
பெற்றியின் உணர்தல் பாற்றே- நான் சொல்லும் வகையினால் அறியத் தக்கதோ (நேரில் கண்டால்தான் உணரமுடியும்),
உயிர் நிலை - அவன் உயிர் நிற்பதற்குக் காரணம்,
பிறிதும் உண்டோ - வேறொன்றும் உளதோ (அந் நகைகளே காரணம்),
நீ அன்று - நீ அந்நாளில்,
இழித்து நீத்த - கழற்றி எறிந்த,
மற்றை நல் அணிகள் - மற்றைய சிறந்த அந் நகைகளே,
உன் மங்கலம் - உனது மங்கல நாணை,
இற்றை நாள் அளவும் - இன்று வரையிலும்,
காத்த - காப்பாற்றின.

### கருத்து

தாயே, நீ எறிந்த நகைகளை இராமன் கையில் கொடுத்தபோது அவன் உற்றநிலை சொற்களால் சொல்ல முடியாது. அவன் உயிர் நிற்பதற்குக் காரணம் அந்நகைகளேயாம். இன்றுவரை உன் மங்கல நாணை அந்நகைகளே காத்தன.

### விளக்கம்

தன் வரலாற்றைக் கூறிவந்த அநுமன் இடையே இராமன் செய்தியைக் கூறியது ஏனெனில், இராமன் தன்மீது மிக்க அன்புடையவன் என அறிந்து சீதை மனம் தேறியிருத்தற் பொருட்டும், தான் இராமனுக்கு அந்தரங்கமானவன் எனச் சீதைக்கு உணர்த்துதற் பொருட்டும் ஆம்.

அந்நகைகளைக் கண்டதாற்றான் இராமன் உன்னைப் பிரிந்து இத்தனை நாளாகியும் உயிர் வைத்திருக்கிறான்; காணாவிடில் அன்றே

உயிரிழந்திருப்பான் என்பதாம். உனக்கு மங்கல நாணைக் கொடுத்தது மற்றை அணிகளே என்கிறான். இராமன் இறந்துபடுவன் என்ற அமங்கலச் சொல்லைச் சொல்லக் கூசி "உன் மங்கலம் காத்த" என வேறு வகையாகக் கூறுகிறான். அவன் சொல்லின் செல்வனல்லவா?

இலக்கணம்

இற்றை—இன்று என்பது இற்றை என மருவி நின்றது.
அன்னா—அன்னை என்பதன் விளி.
காண்—அசைநிலை.
காத்த—அன் சாரியை பெறாத அஃறிணைப் பன்மை வினைமுற்று.
மன்னோ—மன், ஓ, இரண்டும் அசைநிலைகள்.
காத்த—கா+த்+த்+அ; கா—பகுதி, த்—சந்தி, த்—இறந்த கால இடைநிலை; அ—பலவின்பால் விகுதி.

## 17. அநுமன் மோதிரத்தைக் காட்டுதல்

**மீட்டுமுரை........................................ கண்டாள்**

சொற்பொருள்

மீட்டு உரை வேண்டுவன இல்லை என - மீண்டும் மீண்டும் இனிச் சொல்ல வேண்டுவன இல்லை என்றும்,
மெய் பேர் தீட்டியது - என் உண்மைப் பெயர் எழுதப்பட்டுள்ளதும்,
தீட்ட அரிய செய்கையது - செய்தற்கரிய வேலைத் திறமுடையதும் ஆகிய,
இது - இம்மோதிரத்தை,
செவ்வே நீட்டு - நேராகக் கையில் கொடு,
என - என்றும் சொல்லி,
நேர்ந்தனன் - இராமன் இம் மோதிரத்தைக் கொடுத்தான்,
எனா - என்று சொல்லி,
நெடிய கையால்-அநுமன் தனது நீண்ட கைகளால்,
ஓர் ஆழி காட்டினன் - ஒப்பற்ற மோதிரத்தைக் காண்பித்தான்,
அது வாள் நுதலி கண்டாள் - அதனை ஒளி பொருந்திய நெற்றியையுடைய சீதை பார்த்தாள்.

கருத்து

"இனிச் சொல்ல வேண்டுவதில்லை; என் பெயர் பொறித்த மோதிரத்தை அவள் கையிற் கொடு", என்று இம்மோதிரத்தை இராமன் கொடுத்தான் என்று கூறி அநுமன் மோதிரத்தைக் காட்ட அதனைச் சீதை கண்டாள்.

விளக்கம்

பல அடையாள மொழிகளைக் கூறுவானேன் மோதிரம் சிறந்த அடையாளமாயிற்றே; அதை எடுத்துக் காட்டுவோம் என்று கருதி அநுமன் இராமன் கொடுத்த மோதிரத்தைச் சீதைக்குக் காட்டுகிறான். இரண்டாம் அடியில் முற்று மோனை அமைந்துள்ளது.

**இலக்கணம்**

தீட்டரிய—தீட்ட+அரிய; அகரம் தொகுத்தல் விகாரம்.
நீட்டிதென—நீட்டு+இது+என.
வாணுதலி—வாள்+நுதலி.

## 18. மோதிரத்தைக் கண்ட சீதை மகிழ்தல்

**இறந்தவர்........................................செய்கை**

**சொற்பொருள்**

நல் நுதலி இச்செய்கை - அழகிய நெற்றியையுடைய சீதையின் (மோதிரத்தைப் பெற்றதனு லாகிய) இம்மகிழ்ச்சியை,
இறந்தவர் - (நல்லன செய்யா மல்) காலங் கடந்தவர்கள்,
பிறந்த பயன் - பிறவிப் பயனை,
எய்தினர் கொல் என்கோ - பெற்ற மகிழ்ச்சிக்கு ஒப்பாகும் என்று சொல்வேனே,
மறந்தவர் - ஒன்றை மறந்துவிட் டவர்,
அறிந்து - மீண்டும் நினைவுண் டாகி,
உணர்வு வந்தனர் கொல் என்கோ - அவ்வறிவு வந்து கூடப் பெற்றவரின் மகிழ்ச் சிக்கு ஒப்பாகும் என்று சொல் வேனே,
துறந்த உயிர் - நீங்கிய உயிர்,
வந்து — திரும்ப வந்து,
இடை தொடர்ந்தது கொல் என்கோ - உடம்பில் சேர்ந்த தனுலான மகிழ்ச்சிக்கு ஒப்பா கும் என்று சொல்வேனே,
திறம் திரிவது என்னே கொல் - சீதையின் மகிழ்ச்சித் திறனைத் தெரிந்து சொல்வது எவ்வாறு.

**கருத்து**

மோதிரத்தைக் கண்ட சீதையின் மகிழ்ச்சியை, இறந்தவர் பிறந்த பயனை அடைந்ததால் உண்டாகும் மகிழ்ச்சிக்கு ஒப்பாகச் சொல்வேனு, அல்லது மறந்தவர் மீண்டும் அந்நினைவு வரப்பெற்ற மையால் பெறும் மகிழ்ச்சிக்கு ஒப்பாகச் சொல்வேனு அல்லது பிரிந்த உயிர் திரும்ப வந்து சேர்ந்ததால் உண்டாகும் மகிழ்ச்சிக்கு ஒப்பாகச் சொல்வேனு, எவ்வாறு சொல்வேன் என்று கவி கூறு கிருர்.

**விளக்கம்**

பிறந்த பயனின்றி வீணே காலங் கழித்தவர் பிறந்த பயன் பெற்றது போலவும், மறந்தவர் மீண்டும் மறந்த அரிய பொருள் நினைவிற்கு வரப் பெற்றது போலவும், இறந்த உயிர் மீண்டும் உடம் பில் வந்து சேரப் பெற்றது போலவும் சீதை இராமனது மோதிரத் தைப் பெற்று மகிழ்ந்தாள் என்பதாம்

இப்பாடல் கவிக் கூற்ருக அமைந்தது.

**இலக்கணம்**

கொல்—அசைநிலை.
என்கு—தன்மை ஒருமை வினைமுற்று. என்+கு.

## 19. இதுவும் அது

**இழந்தமணி........................................ஒத்தாள்**

### சொற்பொருள்

இழந்த மணி - தான் இழந்த மாணிக்கத்தை,
புற்று அரவு - புற்றிலுள்ள பாம்பு,
எதிர்ந்தது எனல் ஆனாள் - மீளவும் பெற்றதைப் போல் ஆனாள்,
இழந்தன பழம் தனம் - இழந்தனவாகிய பழைய செல்வங்களை,
படைத்தவரை ஒத்தாள் - மீண்டும் பெற்றவரைப் போன்றாள்,
குழந்தையை உயிர்த்த மலடிக்கு- குழந்தையைப் பெற்றெடுத்த மலடிக்கு,
உவமை கொண்டாள் - ஒப்பானாள்,
உழந்து - கண்ணில்லாமல் வருந்திப் (பின்பு),
விழி பெற்றது ஓர் உயிர் பொறையும் - கண்ணைப் பெற்றதாகிய உடம்புடையாரையும்,
ஒத்தாள்-போன்றாள்.

### கருத்து

சீதை, இழந்த மணியைப் பெற்ற நாகம் போலவும், இழந்த செல்வத்தை மீண்டும் பெற்றவரைப் போலவும், குழந்தையைப் பெற்ற மலடி போலவும், குருடராயிருந்து மீண்டும் விழி பெற்றோரைப் போலவும் மகிழ்ந்தாள்.

### விளக்கம்

மலடி—பிள்ளைப் பேறு இல்லாதவள். உயிர்ப் பொறை—உயிரைப் பொறுத்துக் கொண்டிருப்பது, அஃதாவது தாங்கிக் கொண்டிருக்கும் உடம்பு. இச்செய்யுள் உவமையணி.

### இலக்கணம்

பழந்தனம்—பண்புத்தொகை.
இழந்தன—வினையாலணையும்பெயர்.
உயிர்ப்பொறை—ஆகுபெயர். (உடலை உடையோரைக் குறித்தமையால்)
உழந்து—உழ+த்+த்+உ.

## 20. இதுவும் அது

**இருந்து பசி........................................மணி ஆழி**

### சொற்பொருள்

மணி ஆழி - அழகிய அம்மோதிரம் (சீதைக்கு),
பசியால் இறந்து இடர் உழந்தவர்கள் - பசியினால் துன்பப் பட்டுக் கொண்டிருந்தவர்கள்,

எய்தும் - பெற்ற,
அருந்தும் அமுது ஆகியது -உண்ணுதற்கு ஏற்ற உணவைப் போன்றது,
அறத்தவரை அண்முகம் - இல்லற ஒழுக்கத்தாரை வந்தடைந்த,
விருந்தும் எனல் ஆகியது- விருந்தினரைப் போன்றது என்றும் சொல்லும்படியாக இருந்தது,
வீயும் உயிர் - இறக்கும் நிலையில் உள்ள உயிர்,
மீளும் மருந்தும் எனல் ஆகியது- மீளுதற்குக் காரணமாகிய மருந்தாகிய சஞ்சீவியையும் ஒத்தது என்னும்படியாகிற்று,
வாழி - அம்மோதிரம் வாழ்வதாக,

கருத்து

சீதைக்கு அம்மோதிரம் பசித்தோர்க்குக் கிடைத்த உணவு போலவும் இல்லறத்தாறை அடைந்த விருந்தினரைப் போலவும் உயிரை மீட்கும் சஞ்சீவியைப் போலவும் ஆகியது.

விளக்கம்

அறத்தவர்—இங்கே இல்லறத்தாரைக் குறிக்கும் விருந்தினரை ஓம்புதல் இல்லறத்தார்க்குரிய கடமையாகும். " இருந்தோம்பி இல் வாழ்வதெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு " என்பது குறள்.

# ஆ. வில்லி பாரதம்

## பதினேழாம் போர்ச் சருக்கம்

வில்லிபுத்தூரார் என்பவரால் செய்யப்பட்ட பாரதம் எனப் பொருள்படும், பரதனுடைய மரபில் வந்தவர்களின் வரலாற்றைக் கூறும் நூல் பாரதம் எனப்படும். தமிழ் மொழியில் பாரதக் கதையைக் கூறும் நூல்கள் பலவுள்ளன. அவற்றினின்றும் வேறு பிரித்துணர வில்லிபாரதம் எனவும் வில்லிபுத்தூரார் பாரதம் எனவும் இஃது அழைக்கப்படுகிறது.

இதற்கு முதல் நூல் வியாச முனிவர் என்பவரால் வடமொழியில் பாடப்பட்டுள்ள மகாபாரதம் என்று கூறுவர். வில்லிபுத்தூரார் பாரதம் பத்துப் பருவங்களைக் கொண்டது. அவையாவன 1. ஆதி பருவம், 2. சபா பருவம், 3. ஆரணிய பருவம், 4. விராட பருவம், 5. உத்தியோக பருவம், 6. வீட்டும பருவம், 7. துரோண பருவம், 8. கன்ன பருவம், 9. சல்லிய பருவம், 10. சௌப்திக பருவம்.

நம் பாடப்பகுதியாகிய பதினேழாம் போர்ச்சருக்கம் எட்டாவது பருவமாகிய கன்னபருவத்தில் வருவதாகும். கன்ன பருவமாவது கன்னன் படைத்தலைவனாகி நின்று போர்புரிந்த வரலாற்றைக் கூறும் பாகம். பதினேழாம் நாள் பாண்டவர்க்கும்

துரியோதனாதியர்க்கும் நடந்த போர் நிகழ்ச்சிகளைக் கூறும் பகுதி பதினேழாம் போர்ச்சருக்கம் எனப்படும். பருவம்—பெரும் பிரிவு; சருக்கம்—சிறு பிரிவு.

### ஆசிரியரைப்பற்றி :

பெயர் : வில்லிபுத்தூராழ்வார்.
ஊர் : நடுநாட்டிலுள்ள சனியூர்.
தந்தை : வீரராகவாச்சாரியார்.
காலம் : கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டு என்பர்.
ஆதரித்தவன் : வரபதி ஆட்கொண்டான்.

### பாடப்பகுதியின் கதைச் சுருக்கம்

போர்க்களத்தில் அருச்சுனன் எய்த அம்புபட்டுக் கன்னன் உடம்பெல்லாம் குருதிசோர உருக்குலைந்து நிற்கின்றான். அப்பொழுதும் அவன் கைகள் அம்பெய்த வண்ணமாக இருக்கின்றன. இதைக்கண்ட கண்ணன் அருச்சுனனைப் போரை நிறுத்தும்படி கூறிவிட்டு ஒரு மறையவன் வடிவங் கொண்டு கன்னனிடம் சென்றான்.

சென்று அவனை நோக்கி ‘ நீ வேண்டுவார்க்கு வேண்டுவதை ஈவாய் என்றறிந்து உன்பால் வந்தேன். என் வறுமையைப் போக்க நீ ஒன்று எனக்களிப்பாய்’ என்றான். அதற்குக் கன்னன் ‘ உனக்கு வேண்டுவதைக் கேள் ’ என்றான். அதற்கு மறையவன் ‘ உன் புண்ணியம் அனைத்தையும் எனக்குக் கொடு ’ என்றான். அவ்வாறே கொள்க ’ எனச்சொன்னான் கன்னன். மறையவன் ‘ நீர் வார்த்துத் தருக’ என்று கூற, கன்னன் தன்னுடலிற்பட்டுள்ள அம்பைப் பிடுங்க, வழியும் இரத்தத்தால் தாரை வார்த்தான்.

பெற்ற வேதியன் ‘ உனக்கு வேண்டும் வரங்களைக் கேள்; தருகிறேன் ’ என்றான். ஏழேழ் பிறப்பிலும் இல்லை என்னாது ஈயும் மனத்தை எனக்குக் கொடுத்தருள்வாயாக’ என்று கன்னன் வரம் வேண்ட, ‘ எத்தனை பிறவி எடுத்தாலும் ஈகையும் செல்வமும் பெறுவாயாக; இறுதியில் முத்தியும் பெறுவாய் ’ என வரம் அளித்தான் வேதியன். பிறகு வேதியன் வடிவம் மாறித் திருமால் உருவில் காட்சிதரக் கன்னன்கண்டு களித்துப் பலவாறு புகழ்ந்து பாராட்டினான். பிறகு கண்ணன், ‘ கவசகுண்டலம் வாங்கச்செய்ததும், குந்தியை அனுப்பியதும் முதலான செயல்களெல்லாம் நின் பொருட்டு நான் செய்தனவே ’ என்று கூறிச் சென்றான்.

## 1. கண்ணன் வேதியனாகிக் கன்னனையடைதல்

**அத்தவெற்பு..............................அடைந்தான்**

### சொற்பொருள்

அத்தவெற்பு - அத்தமன கிரி, இரண்டு விற்கிடை - இரண்டு வில்லின் அளவு தூரம் உளது என்னும்படி,

ஆதபன் போய்-ஞாயிறுசென்று, சாய்தல் கண்டருளி - மேற்றிசையில் சாய்வதைப் பார்த்து,

முத்தருக்கு எல்லாம் மூலமாய் - முத்தி பெறுவோருக்கெல்லாம் ஆதி காரணனாய்,
வேதம் முதல் கொழுந்து ஆகிய- வேதமுதலில் தோன்றி வளரும் கொழுந்தாகிய,
முதல்வன் - தலைவனாகிய கண்ணன்,
சித்திரம் சிலை கை - வேலைப்பாடமைந்த வில்லேந்திய கையையுடைய,
விசயனை-அருச்சுனனை, (நோக்கி)
நீ செரு ஒழிக என - நீபோர் தவிர்ப்பாயாக என்று கூறி,
தேர்மிசை நிறுத்தி - தேரின் மேல் அவனை இருக்கச் செய்துவிட்டு,
மெய்தவம் படிவம் - உண்மையான தவவேடத்தைக் கொண்ட,
வேதியன் ஆகி - வேதியன்போல் உருவங்கொண்டு,
வெயிலவன் புதல்வனை - சூரியன் மகனாகிய கன்னனை,
அடைந்தான் - சென்று சேர்ந்தான்.

### கருத்து

கதிரவன் மறையும் பொழுது, கண்ணன் அருச்சுனனைப் போரை நிறுத்தும்படி கூறி, அவனைத் தேரிலேயே இருக்கச்செய்துவிட்டு வேதியன் வடிவந்தாங்கிக் கன்னனிடம் சென்று சேர்ந்தான்.

### விளக்கம்

சூரியனுக்கும் அது மறையும் மலைக்கும் இரண்டு விற்கிடை தூரமே உள்ளது ; அஃதாவது சூரியன் மறையும் நிலையில் இருக்கிறது என்பது கருத்து.

போர்க்களத்தில் கண்ணன் அருச்சுனனுக்குத் தேரோட்டுபவனாக வந்திருக்கிறான். அத்தேரிலேயே அருச்சுனனை நிறுத்திவிட்டு இவன் கன்னனிடம் செல்கிறான். கன்னன் சூரியனுக்குக் குந்திதேவியிடம் பிறந்தவன். அதனால் ' வெயிலவன் புதல்வன் ' எனப்பட்டான்'

கண்ணன் கன்னனிடம் இரத்தற்பொருட்டுச் செல்கின்றானதலின் வேதியனாகிச் செல்கின்றான்.

### இலக்கணம்

சிலைக்கை—இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
ஒழிகென—ஒழிக+என. அகரம் தொகுத்தல் விகாரம்.
வெயிலவன்—காரணப்பெயர். வெயிலைச் செய்பவன்.

## 2. வேதியன் கன்னனிடம் இரத்தல்

**தூண்டிய......................................தோன்றால்**

### சொற்பொருள்

தூண்டிய கவனம் - தூண்டிச் செலுத்துதலால் விரைந்த நடையையுடைய,
துரகதம் தட தேர் - குதிரைகள் பூட்டப்பட்ட பெரிய தேரினையுடைய,

சுடர் தர - சுதிரவன் அருள் செய்ய,
தோன்றிய தோன்றல் - பிறந்த கன்னனே,
தாண்டிய தரங்கம் - தாவித் தாவி வரும் அலைகளையுடைய,
கரும் கடல் உடுத்த - கரிய கடலாற் சூழப்பட்ட,
தரணியில் - இவ்வுலகில்,
தளர்ந்தவர் தமக்கு - வறுமையால் துன்பப்பட்டவர்களுக்கு,
நீ வேண்டிய தருதி எனக் கேட்டேன் - நீ வேண்டிய பொருளெல்லாம் தருகின்றாய் என்று கேள்விப்பட்டேன்,
மேருவின் இடை தவம் பூண்டேன் - நான் மேருமலையில் தவம் செய்பவன் ஆவேன்,
ஈண்டிய வறுமை - நிறைந்த வறுமையினால்,
பெரும்துயர் உழந்தேன் - மிக்க துன்பம் அடைந்தேன், (ஆதலினால் எனக்கு)
இயைந்தது ஒன்று - (வறுமை தீரும்படியாகப்) பொருந்திய ஒன்றை,
இக்கணத்து அளிப்பாய் - இப்பொழுதே கொடுப்பாயாக.

கருத்து

'சூரியன் புதல்வனாகிய கன்னனே! உலகத்து மக்கள் துன்புறும்போது அவர்கள் வேண்டியதெல்லாம் கொடுக்கின்றாய் என்று கேள்விப்பட்டு உன்பால் வந்தேன். நான் மேருமலையில் தவம் செய்பவன்; வறுமையால் துன்பப்படுகின்றேன்; அதனால் இப்பொழுது நீ எனக்கு வேண்டியதொன்றைக் கொடுக்கவேண்டும்' என்று வேதியனாக வந்தவன் இரக்கின்றான்.

விளக்கம்

இரப்போர் ஈவோரை நோக்கி அவர்தம் கொடைக்குணத்தை முதலிற் புகழ்ந்து கூறிப் பின்னர், தாம் வேண்டுவதைக் கேட்டல் உலகத்தியல்பு. அவ்வியல்பை ஒட்டி வேதியனும் 'தளர்ந்தவர் தமக்கு வேண்டிய தருதி நீ எனக் கேட்டேன்' என்று கூறுகிறான். இவ்வாறு உலகத்தார் சொல்லக் கேட்டேனாதலின் எனக்கும் நீ தருவாய், மறுக்கமாட்டாய் என்னுங் குறிப்பை உணர்த்துகிறது 'தருதி நீ எனக் கேட்டேன்' என்னும் பகுதி.

கொடுப்பதில் நீ உன் கருத்துப்படி கொடுப்பதில்லையாம்; இரந்தவர்கள் எதை வேண்டுகிறார்களோ அதனை நீ மறாது அவர்கள் கருத்துப்படி கொடுக்கின்றாயாம் என்பது தோன்ற 'வேண்டிய தருதி' எனப்பட்டது.

'தவம் பூண்டேன்' என்பதால் வேதியன் பெறுவதற்கு அருகதை யுடையவன் என்பதும் 'வறுமையுழந்தேன்' என்பதால் கன்னன் உதவுதற்குரிய சமயமிது என்பதும் பெறப்படுகின்றது.

கொடுக்கவேண்டிய பொருள் மிகப் பெரிதோ என மலைத்து விடாதே, கொடுத்தற் கெளியதுதான் என்பது தோன்ற 'இயைந்த தொன்று' என்கிறான். கொடுப்பதையும் நாளை, மறு நாள் என்று சொல்லாதே இப்பொழுதே கொடு என்பான் 'இக்கணத் தளிப்பாய்' என்கிறான்.

வேண்டிய பொருள் இன்னது எனக் கூறுமல், அவனிடம் ஒப்பு தல் வாங்கும் வகையில் சுற்றி வளைத்துக் கூறுகிறுன்.

'தளர்ந்தவர் தமக்கு வேண்டிய தருதி நீ எனக் கேட்டேன்' என்பது, எனக்கும் கேட்பதை இல்லை யென்ருது தருவாய் என்னுங் கருத்தை உட்கொண்டிருப்பதால் கருத்துடை யடை கொளியணி எனப்படும்.

கருத்துடை யடை கொளியணியாவது, ஓர் அடை கொளி யைக் கூறும்பொழுது வேருெரு கருத்தையும் அதனுள் அடக்கிக் கூறுவது. அடை கொளி - அடை மொழியைக் கொண்ட பெயர்.

இலக்கணம்

தருதி—ஏவல் வினைமுற்று.
தடந்தேர்—உரிச்சொற்ருெடர்.
சுடர்—ஆகுபெயர்.
தோன்ருல்—தோன்றல் என்பதன் விளி.

## 3. வேதியன் வேண்டியது இதுவெனல்

**என்றுகொண்................................மகிழ்ந்தான்**

சொற்பொருள்

என்று கொண்டு அந்த அந்தணன் - என்றிவ்வாறு அவ் வேதியன்,
உரைப்ப - சொல்ல,
வென்றிகொள் விசயன் - வெற்றி கொள்ளுதற்குரிய அருச்சுன னுடைய,
விசய வெங் கணையால் - கொடிய வெற்றிக் கணையினுல்,
மெய் தளர்ந்து - உடல் சோர்ந்து,
இரதமேல் விழுவோன் - தேர் மேற் சாய்ந்தவனுகிய கன்னன்,
இரு செவிக்கு அமுது எனக் கேட்டு - இரு செவியிலும் பாயும் அமுதம் என்னும்படி (அச்சொல்லைக்) கேட்டு,
நன்று என நகைத்து - நல்லது என்று கூறி மகிழ்ந்து,
தரத்தகு பொருள் - நான் உனக்குக் கொடுக்கத் தக்க பொருள், (இதுவென),
நீ நவில்க என - நீ சொல்வாயாக என்று வினவ,
நான் மறையவனும் - நால் வேதம் வல்ல வேதியனும், (கன்னனை நோக்கி)
ஒன்றியபடி நின் புண்ணியம் அனைத்தும் - அப்படியே உன்னுடைய புண்ணியமெல்லாவற்றையும்,
உதவுக என்றலும் - கொடுப்பாயாக என்றவுடன்,
உளம் மகிழ்ந்தான் - (கன்னன்) மனமகிழ்ந்தான்.

கருத்து

அருச்சுனன் எய்த அம்பினுல் தளர்ந்து தேரின்மேல் வீழ்ந்து கிடக்கும் கன்னன் அவ்வேதியன் கூறியதைக் கேட்டதும் மகிழ்ந்து

'உனக்கு வேண்டியது யாது?' எனக் கேட்க, வேதியன் 'உன் புண்ணியமனைத்தும் வேண்டும்' என்றான். அதனைக் கேட்ட கன்னன் மனமகிழ்ந்தான்.

### விளக்கம்

வேதியன் வேண்டியது தன்னிடம் இருத்தலினாலே 'உள மகிழ்ந்தான்' என்றார்.

தளர்ந்த நிலையிலும் தன்பால் ஒருவர் இரக்கவும் தான் கொடுக்கவும் நேர்ந்தது கண்டு 'செவிக்கு அமுதென'க் கேட்டு நகைத்தான்; ஈத்துவக்கும் இன்பம் அறிந்தவனாதலின்.

### இலக்கணம்

விழுவோன்—விழுவான் என்பதிலுள்ள ஆ, ஓவாயிற்று.
பொருணீ—பொருள் + நீ.
நவில்கென—அகரம் தொகுத்தல் விகாரம். நவில்க + என.
நான்மறை—இரு பெயரொட்டுப் பண்புத்தொகை.
உதவுகென்றலும்—உதவுக + என்றலும். அகரம் தொகுத்தல் விகாரம்.

## 4. கன்னன் புண்ணியம் அனைத்தும் ஈதல்

**ஆவியோ..................................பெரிதோ**

### சொற்பொருள்

ஆவியோ - உயிரோ,
நிலையில் கலங்கியது - தன்னிலையினின்றும் தடுமாறுகிறது, (அவ்வுயிர்)
யாக்கை அகத்ததோ - என்னுடலினுள் இருக்கின்றதோ? (அன்றி)
புறத்ததோ - வெளியில் வந்து விட்டதோ?,
அறியேன் - ஒன்றும் அறிய முடியவில்லை,
பாவியேன் - பாவியாகிய நான்,
வேண்டும் பொருள் எலாம் - வேண்டுவார் வேண்டிய பொருள்களை எல்லாம்,
நயக்கும் பக்குவம் தன்னில் — விரும்பிக்கொடுக்கின்ற நாளில்,
வந்திலை - நீ வந்தாயல்லை, (வந்திருந்தால் எவ்வளவோ பெறலாமே),
யான் செய் புண்ணியம் அனைத்தும் - நான் செய்த புண்ணியங்கள் எல்லாவற்றையும்,
ஒவிலாது - குறைவின்றி,
உதவினேன் - கொடுத்தேன்,
நீ கொள்க — நீ ஏற்றுக்கொள்க,
உனக்கு - தவ வடிவமுடைய வேதியனாகிய உனக்கு,
பூவில் வாழ் அயனும் - தாமரை மலரில் வாழ்கின்ற நான்முகனும்,
நிகர் அலன் என்றால் - ஒப்பாக மாட்டான் என்றால்,
புண்ணியம் இதனினும் பெரிதோ - நான் செய்த புண்ணியம் இதைவிடப் பெரியதா? (என்றான்)

### கருத்து

என்னுயிர் நிலை தடுமாறிக் கொண்டிருக்கிறது ; அஃது உடலில் இருக்கிறதா? வெளிப் போந்து விட்டதா? என்பதே தெரிய வில்லை. வேண்டும் பொருளெல்லாம் வழங்கும் நாளில் நீ வந்திலையே! என் புண்ணியமெல்லாம் கொடுத்தேன் ; கொள்க. அயனும் உனக்கு ஒப்பாகான் என்றால் புண்ணியம் அதைவிடப் பெரிதா? என்று கன்னன் கூறினான்.

### விளக்கம்

கன்னன் அம்பு பட்டுத் தளர்ந்த நிலையில்—உயிர் ஊசலாடிக் கொண்டிருக்கும் நிலையில் மயங்கித் தேரிற் சாய்ந்து கிடந்தானாதலால் 'அகத்ததோ புறத்ததோ அறியேன்' என்றான்.

உயிர் பிரியும் நிலையில் வந்து கேட்கின்றானே வேதியன் ; இப்பொழுது என்ன கொடுக்க முடியும்? முன்பு வந்திருந்தால் எவ்வளவோ பொருள் கொடுத்திருக்கலாம். அப்பொழுது அவன் வந்து கேட்டு மிகுந்த பொருள்கள் கொடுக்கும் பேறு கிடைக்கவில்லையே என்று வருந்தித் தன்னைப் 'பாவியேன்' என்று கூறிக்கொள்ளுகிறான்.

எல்லாப் புண்ணியங்களையும் கொடுத்துவிட்டேன் என்பான் 'ஒவிலாது' என்று கூறுகிறான்.

உனக்கு அயனும் நிகராகமாட்டான். அவ்வளவு உயர்ந்தவன் நீ. அத்தகைய உனக்குக் கொடுக்கும்படியான நிலை வாய்த்ததே, அதுவே பெரிய செயலாகும். அப்படியிருக்க அதைவிடப் பெரியதா என்ன புண்ணியம்? ஆகவே உனக்குக் கொடுப்பதுதான் எனக்குப் பெரிது. ஆதலால் கொடுக்கின்றேன் ; கொள்க என்று கன்னன் கூறினான்.

### இலக்கணம்

கலங்கிய தியாக்கை—குற்றியலிகரம். கலங்கியது+யாக்கை.

வந்திலை—முன்னிலை எதிர்மறை வினைமுற்று.

வா+த்+த்+இல்+ஐ. வா—பகுதி, த்—சந்தி, விகாரப்பட்டது, த்—இறந்தகால இடைநிலை, இல்—எதிர்மறை இடைநிலை, ஐ—முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதி.

## 5. கன்னன் புண்ணியத்தைத் தாரை வார்த்தல்

**என்னமுன் ..................................கவர்ந்தோன்**

### சொற்பொருள்

என்ன முன்மொழிந்து - என்று முதலில் கூறி,

கரம் குவித்து இறைஞ்ச - (கன்னன்) கைகுவித்து வணங்க,

முன்னம் - முன்னொரு காலத்தில்,

ஓர் அவுணன் செங்கை நீர் ஏற்று - மாவலி என்னும் அர

சன் சிவந்த தனது கையால்
வார்த்த நீரைப் பெற்று,
மூவுலகமும் உடன் கவர்ந்
தோன் - மூன்று உலகங்களை
யும் கவர்ந்தவனாகிய திருமால்,
(வேதியன்)
இறைஞ்சலர்க்கு - பகைவர்க்கு,
எழிலி ஏறு அனையான் - இடி
யேறு போன்றவனாகிய,
கன்னனை உவகைக் கருத்தினால் -
கன்னனை மகிழ்ச்சிக் குறிப்
போடு,
நோக்கி - பார்த்து,
கைப் புனலுடன் தருக என்ன -
கையின்கண் நீரால் தாரை
வார்த்துக் கொடு என்று
சொல்ல,
அன்னவன் - அந்தக் கன்னன்,
இதயத்து அம்பின் வாய் அம்
பால் - மார்பில் தைத்த அம்
பின் நுனியின் நீரால் (இரத்
தத்தால் தாரை வார்த்து),
அளித்தலும் - கொடுக்கவும்,
அம் கையால் ஏற்றான் - தனது
உள்ளங் கையில் (வேதியன்)
பெற்றுக்கொண்டான்.

### கருத்து

கன்னன் வணங்கி நிற்க வேதியன் மகிழ்ந்து நீர் வார்த்துக் கொடு என்று கேட்டான். அப்பொழுது கன்னன் தன் மார்பில் தைத்த அம்பு நுனியின் நீரால் வார்த்துக் கொடுக்க அவ்வேதியன் பெற்றுக் கொண்டான்.

### விளக்கம்

எழிலி ஏறு—இடியேறு. ஒருவர் மற்றவருக்கு ஒரு பொருளைத் தானமாகக் கொடுக்கும் பொழுது தாரைவார்த்துக் கொடுப்பது இயல்பு. அவ்வாறு செய்தால் அப்பொருள் பெறுபவனுக்கு உரிமையாகிவிடும் அக்காலத்து உரிமைச் சாசனம்.

போர்க்களத்தில் தேரில் சாய்ந்து கிடக்கும் கன்னன் நீருக்கு எங்குச் செல்வான்? தன் மார்பில் தைத்திருந்த அம்பைப் பிடுங்கினான். இரத்தம் பீறிட்டு வந்தது. அதையே நீராக வார்த்துக் கொடுத்தான். அவன் கொடைப் பண்புடன் அவனுடைய வீரத்தையும் காட்டுகிறது இச் செயல். அம்பு—நீர்; இங்கே இரத்தம் எனப் பொருள் படுகிறது.

கன்னன் தாரைவார்த்துக் கொடுக்க வாங்கினவன் யார்? முன்னமே வாங்கி வாங்கிப் பழக்கப்பட்டவன்; அதுவும் தாரை வார்த்துக் கொடுக்க வாங்கிப் பழக்கப்பட்டவன். ஈவிரக்கம் இன்றி வாங்கிப் பழக்கப்பட்டவன்; அஃதாவது 'கவர்ந்தவன்.' மூன்றடி மண் வேண்டுமென்று கேட்டு, மூன்றுலகமும் கவர்ந்தவன் அவன். அத்தகைய வஞ்சகன் இப்பொழுதும் கன்னன் இந்த நிலையில் இருக்கும் பொழுது, தாரைவார்த்துக்கொடுக்கச் சொல்லி வாங்குகிறான் என்று அவனுடைய 'கபடநாடகத்தை' வஞ்சப் புகழ்ச்சிபோல இறுதியடியால் குறிக்கின்ற நயம் இன்புறத் தக்கது. கவர்ந்தோன் என்பது கருத்துடையடைகொளி.

திருமால் வாமனாக வந்து மாவலியிடம் தனது காலால் மூன்றடி நிலம் வேண்ட அவனும் தருகிறேன் என்று நீர்வார்த்துக் கொடுத்தான். பெற்றதும் வாமனன் திருவிக்கிரமாவதாரம் எடுத்

துப் பூமியை ஓரடியாலும் வானத்தை ஓரடியாலும் அளந்து மூன்ருமடிக்கு இடமின்மையால் மாவலியின் தலையில் கால்வைத்து அழுத்திய கதை யாவரும் அறிவர்.

### இலக்கணம்

அங்கை—அகம்+கை. அகம் என்னும் சொல்லின் முன்னர் செவி, கை என்ற சொற்கள் வந்தால் இடையிலுள்ள 'க' கெட்டுவிடும்.

மூவுலகமும்—உம்மை முற்றும்மை.

## 6. கன்னன் வேதியனிடம் வரம் வேண்டல்

**மல்லலந்தொடை................................என்ருன்**

### சொற்பொருள்

முனிவன் மகிழ்ந்து - கன்னனிடம் (புண்ணியத்தைப் பெற்ற) வேதியன் உள் மகிழ்ந்து,

மல்லல் அம் தொடையல் நிருபனை - வளப்பமிக்க அழகிய மாலையையுடைய அரசனாகிய கன்னனை (நோக்கி),

நீ வேண்டிய வரங்கள் - உனக்கு வேண்டிய வரங்களை,

சொல்லுக - கேட்பாயாக,

உனக்குத் தருதும் - உனக்குக் கொடுப்போம்,

என்று உரைப்ப - என்று கூற,

சூரன் மா மதலையும் சொல்வான் - சூரியனுடைய மகனாகிய சிறந்த கன்னனும் கூறுவான்,

அல்லல் வெம்வினையால் - துன்பந் தரும் கொடிய தீவினையினுல்,

இன்னம் உற்பவம் உண்டாயினும் - மீண்டும் பிறவி உண்டாஞலும்,

ஏழேழு பிறப்பும் - எழுவகைப் பட்ட பிறவியிலும்,

இல்லை என்று இரப்போர்க்கு - இல்லையென்று சொல்லி என்னிடம் வந்து இரப்பவர்கட்கு,

இல்லை என்று உரையா இதயம் - இல்லையென்று சொல்லாத மனத்தை,

நீ அளித்தருள் என்ருன் - நீ எனக்குக் கொடுத்தருள்வாயாக என்ருன்.

### கருத்து

வேதியன் கன்னனை நோக்கி 'உனக்கு வேண்டிய வரத்தைக் கேள். கொடுக்கின்றேன்' என்ருன். அதற்குக் கன்னன் 'இல்லையென்று என்பால் யார் வந்து கேட்டாலும் இல்லை என்று சொல்லாத இதயத்தை எனக்குக் கொடுத்தருள்' என்று கேட்டான்.

### விளக்கம்

கன்னன், கொடுத்துப்பழகிய குணம் உடையவனுதலாலும் அதிலே பேரின்பங் காண்பவனுதலாலும் 'இல்லையென் றிரப்போர்க்கு இல்லை என்றுரையா இதயம் எழு பிறப்பிலும் வேண்டு

மென்று கேட்கிறான். 'இலமென்னும் எவ்வம் உரையாமை ஈதல் குலனுடையான் கண்ணே உள' என்னும் குறட்பா இங்கு நினைவு கூரத்தக்கது.

### இலக்கணம்

தருதும்—தனித்தன்மைப் பன்மை வினைமுற்று.
தா+தும். தும்—தன்மைப் பன்மை விகுதி.
வெவ்வினை—பண்புத்தொகை. வெம்மை+வினை.
உரையா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

## 7. வேதியன் வரமளித்தல்

**மைத்துனன்..................................மூர்த்தி**

### சொற்பொருள்

மைத்துனன் - தனக்கு மைத்துன முறைபூண்ட கன்னன்,
உரைத்த வாய்மை கேட்டு - சொன்ன வாய் மொழியைக் கேட்டு,
ஐயன் - தலைவனாகிய கண்ணன் (வேதியன்),
மனமலர் உகந்து - மனமாகிய மலர் விரும்பி,
உகந்தவினை - (இல்லை என்னாத வரத்தை) விரும்பிக் கேட்ட வினை,
கை தலம் மரலால்- கைகளாகிய மலர்களால்,
மார்பு உற தழுவி - மார்போடு அணைத்துத் தழுவிக்கொண்டு,
கண்மலர் கருணை நீர் ஆட்டி - கண்களாகிய மலர்களிலிருந்து வரும் அருள் வெள்ளத்தால் நனைத்து,
மூவரும் ஒருவனும் மூர்த்தி - மும்மூர்த்திகளும் தான் ஒருவனேயாக நிற்கின்ற மூர்த்தியாகிய திருமால், (அவனை நோக்கி)
எத்தனை பிறவி எடுக்கினும் - நீ எவ்வளவு பிறவி எடுத்தாலும்,
அவற்றுள் - அப் பிறவிகளிலெல்லாம்,
ஈகையும் செல்வமும் எய்தி - கொடையும் கொடுப்பதற்குரிய செல்வமும் அடைந்து,
முடிவில் - இறுதியில்,
முத்தியும் பெறுதி - வீடு பேறும் அடைவாய்,
என்று உரைத்தான் - என்று கூறினான்.

### கருத்து

கன்னன் கேட்ட வரத்தைக் கேட்டதும் கண்ணன் மகிழ்ந்து, அவனைத் தழுவி, மகிழ்ச்சிக் கண்ணீர் சிந்தி, நீ எத்தனை பிறவி எடுப்பினும் அப்பிறவியெல்லாம் ஈகையும் செல்வமும் பெற்று இறுதியில் வீடு பேறும் அடைவாய் என்று கூறினான்.

### விளக்கம்

கண்ணனுக்குக் குந்தி அத்தை முறை பூண்டவள். அதனால் அவள் மகன் கன்னன் இவனுக்கு மைத்துன முறையாகிறான்.

கன்னன் இந்த நிலையிலும் 'இல்லை என்னாத இதயம் வேண்டும்' என்று கேட்டவுடன் அவன் பேருள்ளத்தை நினைந்து கண்ணன் மனமலர் உகந்து, கைம்மலரால் தழுவி, கண்மலரால் நீர் சிந்துகின்றான்.

அவன் கேட்டது ஈகை மட்டுமே. இவன் கொடுத்தவை, ஈகையும் அதற்குக் கருவியாகிய செல்வமும் அவ்வீகையாற் பெறும் வீடுபேறும் என்பவையாகும்.

இவனே படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிற்கும் உரிய அயன், மால், அரன் என்னும் முத்தேவராகவும் உள்ளான் என்பதை புணர்த்த 'மூவரும் ஒருவனும் மூர்த்தி' என்றார்.

### இலக்கணம்

மனமலர், கைம்மலர், கண்மலர்—என்பன உருவகங்கள்.
முத்தியும்—உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை.
பெறுதி—முன்னிலை ஒருமை வினைமுற்று.

## 8. வேதியன் திருமாலாய்க் காட்சியளித்தல்

**போற்றிய..................................துளவோன்**

### சொற்பொருள்

முடிவும் தோற்றமும் - அந்தமும் ஆதியும்,
இலாத பைந்துளவோன்-இல்லாதவனாகிய பசிய திருத்துழாய் அணிந்த திருமால்,
போற்றிய கன்னன் கண்டு - தன்னால் போற்றப்பட்ட கன்னன் பார்த்து,
கண் களிப்ப - கண்கள் களிகொள்ளுமாறு,
புணரி மொண்டு எழுந்த - கடல் நீரை முகந்துகொண்டு மேலெழுந்த,
கார் முகிலை மாற்றிய - கரிய மேகத்தையும் தோற்கடித்த,
வடிவும் - கருநிறம் பொருந்திய மேனியும்,
பஞ்ச ஆயுதமும் வயங்க - ஐந்து ஆயுதங்களும் பொருந்தி விளங்குகின்ற,
கைத் தலங்களும் ஆகி-கைகளும் உடையவனாகி,
கூற்று உறழ் கராவின் - கூற்றுவனை நிகர்த்த முதலையின்,
வாயில் நின்று அழைத்த - வாயில் அகப்பட்டுக்கொண்டு நின்று கூவி யழைத்த,
குஞ்சர ராசன் முன் - கஜேந்திரன் என்னும் யானைக்கு முன்னே,
அன்று தோன்றியபடியே -(அதனைக் காக்கும் பொருட்டு) அன்று தோன்றியவாறே,
தோற்றினான் - காட்சியளித்தான்.

### கருத்து

கண்ணன் கன்னன் கண்டு மகிழுமாறு நீலமேனியும் பஞ்சாயுதமும் தாங்கிய கைகளும் உடையவனாகிக் கஜேந்திரனுக்குக் காட்சியளித்த வடிவிலே காட்சியளித்தான்.

### விளக்கம்

கடலில் நீர் முகந்து செல்லும் மேகம் கருநிறமுடையதாக இருக்கும். அதையும் தோற்கடிக்கக்கூடிய அவ்வளவு கரிய மேனியுடையவன்.

பஞ்சாயுதம் - சங்கு, சக்கரம், வில், வாள், கதை என்பன.

கஜேந்திரன் என்னும் யானை நாடோறும் தாமரை மலரினால் அருச்சித்து வழிபட்டு வந்தது. வழக்கம்போல் ஒருநாள் மலர் பறிக்கக் குளத்தினுள் இறங்கியது. அங்கேயிருந்த முதலையொன்று யானையின் காலைப்பற்றிக் கொண்டது. அப்பொழுது யானை 'ஆதிமூலமே' என்று கூவி அலறியது. அக்குரல் கேட்ட திருமால் விரைந்து வந்து சக்கராயுதத்தால் முதலையைத் துணித்து யானையைக் காத்தனர் என்பது கதை.

யானையின் உயிருக்கு யமன்போல் இருந்தமைபற்றி முதலை ' கூற்றுறழ்கரா ' எனப்பட்டது.

துளவு - துளசி. திருமாலுக்கு உகந்தது இது.

### இலக்கணம்

கார்முகில்—பண்புத்தொகை.
இலாத—இடைக்குறை.

## 9. திருமாலைக்கண்ட கன்னன் மகிழ்ச்சி

**அமரரானவரும்..........................மகிழ்ந்தான்**

### சொற்பொருள்

அமரர் ஆனவரும் - தேவரானவர்களும்,
அமரயோனிகளும் - தேவப்பிறவியையுடைய ஏனையோரும்,
அமரருக்கு அதிபன் ஆனவனும்- தேவர் தலைவனாகிய இந்திரனும்,
கமலநான்முகனும்- தாமரையில் இருக்கும் அயனும்,
முனிவரும் - முனிவர்களும்,
கண்டு கனக நாள்மலர் கொடு - பார்த்துப் பொன்மலர் கொண்டு,
பணிந்தார் - வணங்கினார்கள்,
சமரம் மா முனையில் - பெரிய போர்க்களத்தில்,
தனஞ்சயன் கணையால் - அருச்சுனனுடைய அம்பினால்,
சாய்ந்து உயிர் வீடவும் - என்னுயிர் அழியவும்,
செங்கண் அமல நாரணனை-செந்தாமரைக் கண்ணனாகிய குற்றமற்ற திருமாலை,
காணவும் - கண்டுகளிக்கவும்,
பெற்றேன் என்று - பேறு பெற்றேன் என்று கூறி,
தன் அகம் மிக மகிழ்ந்தான் - (கன்னன்) தன் மனத்தினுள்ளே மகிழ்ந்தான்.

### கருத்து

தேவர்களும், இந்திரனும், நான்முகனும், முனிவரும் பொன் மலர் தூவிப் பணிந்தார்கள். கன்னன் 'நான் அருச்சுனனால் மாளவும் திருமாலைக் காணவும் பெற்றேனே' என்று தனக்குள் மகிழ்ந்தான்.

### இலக்கணம்

கொடு—கொண்டு என்பதன் இடைக்குறை.
சமரம்—சமர்+அம். அம்—சாரியை.
மாமுனை—உரிச்சொற்றொடர்.

## 10. கன்னன் புகழ்ந்து கூறல்

அருந்தழல்..................................பெற்றேனே

### சொற்பொருள்

அரும் தழல் மாமகம் புரிந்தும் - செய்தற்கரிய நெருப்பினையுடைய பெரிய யாகங்கள் செய்தும்,
கடவுள் கங்கை ஆதியாம் - தெய்வத்தன்மை பொருந்திய கங்கை முதலான,
புனல்படிந்தும் - நீர்த் துறைகளில் மூழ்கியும்,
அனில யோகத்து - இருந்தும் அனிலயோகம் முதலான யோகங்கள் செய்தும்,
அணிமலர்தூவி பூசைநேர்ந்தும்- அழகிய மலர்களைத் தூவிப் பூசனை செய்தும்,
எங்கும் ஆகிய உன்னை - எங்கும் பரவி நிறைந்துள்ள உன்னை,
இதயத்துள்ளே திருந்த நிலை பெறக் கண்டும் - மனத்தினுள்ளே தெளிவாக நிலைபெற்றிருத்தலை அறிந்தும்,
போகம் எல்லாம் சிறுகி - இன்பமெல்லாங் குறைந்து,
அனைத்துஉயிர்க்கும் - எல்லாவுயிர்களாலும்,
செய்ய ஒண்ணு - செய்ய முடியாத,
பெரும் தவங்கள் மிகப்பயின்றும் - பெரிய தவங்களை மிகுதியாகச் செய்தும்,
பெறுதற்கு எட்டாப் பெரும் பயன் - பெறமுடியாத பெரிய பயனை,
நின் திருவருளால் பெறப்பெற்றேன் - உன்னுடைய பேரருளால் அடையும்படியான ஒரு நிலையை நான் அடைந்தேன் (என்றான்).

### கருத்து

எங்கும் நிறைந்த உன்னைத் தவம் செய்தும், வேள்வி செய்தும், புண்ணியத் துறைகள் ஆடியும், யோகஞ் செய்தும், மலரிட்டுப் பூசித்தும் காணப்பெறுமல் இருக்கின்றனர். அத்தகைய உன்னை நான் எளிதாகக் காணும் பேற்றைப் பெற்றேன் என்று கன்னன் கூறினன்.

### விளக்கம்

எங்கும் நிறைந்து மனத்தினுள்ளே இறைவன் இருத்தலை அறிந்தும் பிறரால் செய்தற்கரிய தவம் முதலியன செய்து அவனைக் காண முயல்கின்றனரே என்ற குறிப்பை 'இதயத்துள்ளே திருந்த நிலைபெறக் கண்டும்' என்னும் பகுதி காட்டுகிறது.

அனிலயோகம்—காற்றிலே மிதக்கும் யோகம். அனிலம்—காற்று. யோகம்—நீரிலே நடத்தல், நெருப்பிலே இருத்தல், காற்றிலே மிதத்தல் எனப் பல வகைப்படும்.

தவம் முதலான அரியன செய்தும் காணமுடியாத பெரிய பயனை நான் எளிதிற் பெற்றேனே எனப் பெருமிதங் கொள்கின்றான் கன்னன்.

### இலக்கணம்

ஒண்ணு, எட்டா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள்.

## 11. இதுவும் அது

**நீலநெடுங்.............................கண்ணுற்றேனே**

### சொற்பொருள்

நீல நெடுங்கிரியும் - நீல நிறம் பொருந்திய பெரிய மலையும்,
மழை முகிலும் - மழையைப் பெய்கின்ற கார் மேகமும்,
பவ்வம் நெடுநீரும் - பெரிய கடலின் நீரும்,
காயாவும் - காயாம் பூவும்,
நிகர்க்கும் இந்த கோலமும் - ஒப்பாகும் இந்த அழகிய கரிய திருக்கோலமும்,
வெம் கதை - கொடிய கதாயுதமும்,
வாள் - வாளாயுதமும்,
அம் சங்கு - அழகிய சங்கும்,
நேமி - சக்கரமும்,
கோதண்டம் - வில்லும்,
எனும் - என்று சொல்லப்படுகின்ற,
படையும் - பஞ்சாயுதங்களும்,
குழைந்த வாசம் மாலை - மணம் மிகுந்த மாலையாகிய,
நறும் துழாய் மார்பும் — நல்ல திருத்துழாய் அணிந்த மார்பும்,
திரண்ட தோளும் - திரண்டு நீண்ட தோள்களும்,
மணிக் கழுத்தும் - அழகிய கழுத்தும்,
செவ்விதழும் - சிறந்த வாயும்,
வாரிசாதக் காலை மலர் என - தாமரை மலர்போல,
மலர்ந்த முகமும் - மலர்ச்சியாகவுள்ள முகமும்,
சோதி கதிர் முடியும் - ஒளிக் கதிர் வீசும் திரு முடியும்,
இம்மையிலே கண்ணுற்றேன் - இப் பிறவியிலேயே கண்டு கொண்டேன்.

### கருத்து

கரிய திருமேனியும் பஞ்சாயுதங்களும் திருத் துழாயும் திரண்ட தோளும் கழுத்தும் செவ்வாயும் முகத் தாமரையும் திரு முடியும் இம்மையிலேயே நான் காணப் பெற்றேன் என்று கன்னன் மகிழ்ந் தான்.

### விளக்கம்

மழை முகில் - மழை பெய்யும் மேகம். அதுதான் கருமை மிகுந்து காணப்படும். காயா - நீல நிறம் பொருந்திய காயாம் பூ. வாரிசாதம் - தாமரை. வாரி - நீரில், சாதம் — பிறப்பது.

### இலக்கணம்

செவ்விதழ்—பண்புத்தொகை. செம்மை+இதழ்.
கண்ணுற்றேன்—கண்ணுறு+ஏன். கண்ணுறு—பகுதி, ஏன்— தன்மை ஒருமை வினைமுற்று விகுதி. பகுதி இரட்டித்து இறந்தகாலம் காட்டிற்று.

## 12. இதுவும் அது

**தருமன் மகன்............................வாழ்ந்தவாறே**

### சொற்பொருள்

மருது இடை முன் தவழ்ந்தருளும் — முன்பு மருத மரங்களுக்கிடையே உரலுடன் தவழ்ந்து சென்ற,
செம் கண் மாலே - சிவந்த கண்களையுடைய திருமாலே,
தருமன் மகன் முதலான - எமதருமன் மகனாகிய தருமன் முதலாகவுள்ள,
அரிய காதல் தம்பியரோடு - அருமையான அன்புக்குரிய தம்பிமார்களுடன்,
அமர் மலைந்து - போர் செய்து,
தறுகண் ஆண்மை - அஞ்சாமையும் ஆண்மையும் பொருந்திய,
செருவில் — போரில்,
எனது உயிர் அனைய தோழற்காக - எனது உயிர் போன்ற நண்பனாகிய துரியோதனன் பொருட்டு,
செஞ்சோற்றுக் கடன் கழித்தேன் - செஞ்சோற்றுக் கடனை முடித்துவிட்டேன்,
தேவர் கோவுக்கு - தேவர் தலைவனான இந்திரனுக்கு,
உரை பெறு நல் கவசமும் குண்டலமும் - புகழுக்குரிய நல்ல கவசத்தையும் குண்டலத்தையும்,
ஈந்தேன் — கொடுத்தேன்,
உற்ற பெரும் நல்வினை பேறு - நான் பெற்றிருந்த பெரிய நல்வினைப் பயன்களை எல்லாம்,
உனக்கே தந்தேன் - உனக்கே கொடுத்துவிட்டேன்,
மா தவத்தால் - முற்பிறப்பில் செய்த பெரிய தவத்தினால்,
ஒரு தமியன் - தனியனாகிய நான்,
வாழ்ந்தவாறு — வாழ்ந்த விதந்தான் என்னே !

## கருத்து

திருமாலே! என் உயிர் போன்ற தோழன் பொருட்டுத் தம்பியரோடு பொருது செஞ்சோற்றுக் கடன் முடித்தேன்; இந்திரனுக்குக் கவச குண்டலங்களைக் கொடுத்தேன். உனக்கு என் புண்ணியமெல்லாம் கொடுத்தேன். இவ்வளவு அரிய செயல்களைச் செய்து வாழ்ந்தது என் மாதவமேயாகும். இதனை என்னென்று சொல்வேன் எனக் கன்னன் இறும்பூது எய்துகிறான்.

## விளக்கம்

செஞ்சோற்றுக் கடன் — துரியோதனன் கன்னனை இன்னான் என அறியாதிருந்தும் தன்னைச் சோறூட்டி வளர்த்து நண்பனாகக் கொண்டு அங்க நாட்டுக்கு மன்னனாக்கினான். அவ்வாறு சோறூட்டி வளர்த்தமைக்கு நன்றியுணர்வைக் காட்டவேண்டுவது கன்னனுடைய கடமையாகும். அக்கடமை யுணர்வு தவறாது, பாண்டவர் தன் தம்பியர் என்றறிந்திருந்தும் தன் தோழன் பொருட்டாக அவரொடு பொருது செஞ்சோற்றுக் கடனைக் கழித்துக் கொண்டான்.

கன்னனோடு உடன்பிறந்த கவச குண்டலங்களை அவன் அணிந்திருந்தால் பகைவர் எவருமே அவனை வெல்ல முடியாது. இதை யுணர்ந்திருந்த கண்ணன் இந்திரனை அனுப்பித் தந்திரமாக அவற்றைப் பெற்று வருமாறு செய்தான்.

செஞ்சோற்றுக் கடன் கழித்தலும், உயிர் காக்கும் கவச குண்டலங்களைக் கொடுத்தலும், புண்ணியம் ஈதலும் பிறரால் செய்ய முடியாதவை; மேலும் பெற்றவர்களோ இந்திரனும் திருமாலும் ஆவர். அதனால் தன் வாழ்வை வியக்கின்றான்.

கண்ணன் குழந்தைப் பருவத்தில் செய்த குறும்புச் செயல்களைத் தாங்க முடியாமல் யசோதை உரலில் கட்டிப் போட்டாள். குபேரன் மைந்தராகிய நளகூபரன், மணிக்கிரீவன் என்னும் இருவரும் நாரதருடைய சாபத்தால் இரு மரங்களாகி அங்கு நின்றனர். கண்ணன் உரலையும் இழுத்துக்கொண்டு தவழ்ந்து சென்று மருத மரங்களுக்கிடையில் நுழைந்தான். உரல் மரங்களுக்கிடையில் சிக்கிக்கொண்டது. கண்ணன் உரலை வலியோடு இழுக்கவே மரமிரண்டும் முறிந்துவிடுகின்றன. அவ்விருவரும் சாபம் நீங்கப் பெற்று உண்மை உருவம் பெற்றுச் சென்றனர் என்பது கதை.

## இலக்கணம்

தறுகண் ஆண்மை - உம்மைத்தொகை.
கவசமும் குண்டலமும்—எண்ணும்மை.
ஈந்தேன்—தன்மை ஒருமை வினைமுற்று.

ஈ+த்+த்+ஏன். ஈ—பகுதி, த்—சந்தி, நகரமானது விகாரம், த்—இறந்தகால இடைநிலை, ஏன்—தன்மை ஒருமை வினைமுற்று விகுதி.

## 13. இதுவும் அது

**வான்பெற்ற நதி..............................பெற்றுரே**

### சொற்பொருள்

வான்பெற்ற நதி கமழ் – வான நதியாகிய கங்கை மணம் கமழ்கின்ற,
தாள் வணங்கப் பெற்றேன் – திருவடிகளை வணங்கும் பேறு பெற்றேன்,
மதி பெற்ற திருவுளத்தால் – அறிவு நிறைந்த உன் மனத்தாலே,
மதிக்கப் பெற்றேன் – மதிக்கும் படியான நற்பேறும் பெற்றேன்,
தேன் பெற்ற துழாய் அலங்கல் – தேன் நிறைந்த திருத் துழாய் மாலையும்,
களபம் – சந்தனக் குழம்பும் (பொருந்திய),
மார்பும் திருப்புயமும் – மார்பையும் அழகிய தோள்களையும்,
தைவந்து - தடவி,
தீண்டப் பெற்றேன் - தொடுகின்ற பேறும் பெற்றேன்,
ஊன் பெற்ற பகழியினால் - ஊன் பொருந்திய அம்பினால்,
அழிந்து வீழ்ந்தும் - உடலெல்லாம் சிதைந்து வீழ்ந்துங்கூட,
உணர்வுடன் - நல்லுணர்வோடு,
நின் திருநாமம் உரைக்கப் பெற்றேன் - உன்னுடைய திருப்பெயரைச் சொல்லும் நிலையைப் பெற்றேன்,
யான் பெற்ற பெருந் தவப்பேறு- யான் அடைந்த பெரிய தவப் பயனை,
என்னை அன்றி - என்னைத் தவிர,
இரு நிலத்தில் பிறந்தோரில்- பெரிய உலகத்தில் பிறந்தவர்களுக்குள்,
யார் பெற்றார் – எவர் பெற்றுள்ளார்? (ஒருவரும் இல்லை).

### கருத்து

உன்னுடைய திருவடிகளை வணங்கப் பெற்றேன்; உன்னால் நன்கு மதிக்கப்பட்டேன்; உன் மார்பையும் தோள்களையும் தொட்டுணர்ந்தேன்; அம்பு பட்டுத் தளர்ந்து வீழ்ந்தும் உன் திருப்பெயரை ஓதப் பெற்றேன்! இத்தகைய பெரும் பேற்றை என்னைத்தவிர இவ்வுலகில் யார் பெற்றுள்ளார்? என்று கன்னன் கூறினான்.

### விளக்கம்

முன்பு ஒரு சமயம் திருமால் திருவிக்கிரமாவதாரம் எடுத்து நிலத்தை ஓரடியாலும் வானத்தை ஓரடியாலும் அளக்கும்போது வானத்தை நோக்கிச் சென்ற திருவடியைச் சிவபெருமான் நீர் வார்த்து மலர் தூவி வழிபட்டார். அந்நீரே கங்கையாகப் பூமியில் பாய்ந்தது என்பர். அக்கதையை உட்கொண்டு 'வான் பெற்ற நதி கமழ்தாள்' எனப்பட்டது.

முன்பு கன்னன் இல்லை என்றதை இதயம் வேண்டும் என்று கூறலும் கண்ணன் அவனைக் 'கைத்தல மலரால் மார்புறத் தழுவி'னான். அதனால் 'மார்பும் திருப்புயமும் தீண்டப்பெற்றேன்' என்று கூறுகிறான்.

### இலக்கணம்

கமழ்தாள்—வினைத்தொகை.
அலங்கல் களபம்—உம்மைத்தொகை.
இருநிலம்—உரிச்சொற்றொடர்.

## 14. முன்னிகழ்ச்சிகளுக்கெல்லாம் நானே காரணம் எனக் கண்ணன் மொழிதல்

**என்று மகிழ்.......................உணர்வித்தேனும்**

### சொற்பொருள்

என்று மகிழ்வுற வணங்கும்-என்று கூறி மகிழ்ச்சிகொண்டு வணங்கும்,
எல்லி மைந்தன் - சூரியன் மகனாகிய கன்னன்,
இன்புற-இன்பம் எய்த,
வண்புறவினில் - வளம் பொருந்திய முல்லை நிலத்தில்,
ஆன்நிரையின் பின்போய் - பசுக் கூட்டங்களுக்குப் பின்சென்று,
கன்று கொடு விளவு எறிந்த-கன்றைக் குச்சியாகக் கொண்டு விளா மரத்தில் எறிந்த,
கண்ணன் தானும்-கண்ணன்,
கன்னனுக்குக் கட்டுரைப்பான் - கன்னனுக்குச் சில செய்திகள் சொல்லத் தொடங்கினான்,
கடவுள் நாதன் - தேவர் தலைவனாகிய இந்திரன்,
அன்று உனது கவசமும் குண்டலமும்-முன்பு உன்னுடைய கவச குண்டலங்களை,
வாங்க அழைத்தேனும் - வாங்குவதற்காக அவனை அழைத்தவனும்,
குந்தியைக் கொண்டு - குந்தியை அனுப்பி,
அரவவாளி - பாம்புக் கணையை, (அருச்சுனன்மேல்)
ஒன்று ஒழிய - ஒரு தடவை எய்வது தவிர,
தொடாத வரம் - மறுமுறை தொடுக்காத வரத்தை,
கொள்வித்தேனும் - பெறும்படி செய்தவனும்,
முன் பவத்தின் உண்மை - முன் பிறவியின் உண்மையை,
உனக்கு உணர்வித்தேனும்-உனக்கு உணர்த்தும்படி செய்தவனும்,

### கருத்து

வணங்கிய கன்னன் மகிழும்படி கண்ணன் கூறுகின்றான்: உனது கவச குண்டலங்களை வாங்கும்படி இந்திரனை அனுப்பியதும் குந்தியை அனுப்பிப் பாம்புக் கணையை அருச்சுனன்மேல் ஒரு தடவைக்குமேல் எய்யக்கூடாது என வரம்பெறச் செய்ததும் உன் பிறப்பை உனக்கு உணர்த்தச் சொன்னதும் (நான்தான் என்றான்).

### விளக்கம்

கருத்து அடுத்து வரும் பாடலில் முடியும். கம்சன் ஏவலால் அசுரர் இருவர் கண்ணனைக் கொல்ல விளா மரமாகவும் கன்றாகவும்

உருமாறி நின்றனர். இதை அறிந்த கண்ணன் அந்தக் கன்றையே பற்றி விளா மரத்தில் வீசி எறிந்து இருவரையும் கொன்றான் என்பர்.

கண்ணன் ஏவலால் குந்தி கன்னனிடம் சென்று அவனுடைய பிறப்பையும் எடுத்துக் கூறி, அருச்சுனன்மேல் 'நாகாஸ்திரத்தை' ஒரு முறைக்குமேல் எய்யக்கூடாதென்றும், ஏனைய பாண்டவர்களைப் போரில் கொல்லக்கூடாதென்றும் அவனிடம் இரண்டு வரங்களைப் பெற்று வந்தாள்.

இலக்கணம்

ஆனிரை—ஆன்+நிரை.
கொடு—கொண்டு என்பதன் இடைக்குறை.
கடவுணாதன்—கடவுள்+நாதன்.
அரவவாளி—இருபெயரொட்டுப் பண்புத் தொகை.

## 15. இதுவும் அது

தக்ககன்றன்......................................வாங்குமாலே

சொற்பொருள்

மெய்க் கருணை நின் பொருட்டால் - கருணையுள்ளம் படைத்த உன் பொருட்டாகவே,
தக்ககன் தன் மகவு ஆன - தக்கன் என்னும் பாம்பின் குட்டியாகிய,
உரகம் வாளி - பாம்புக் கணையானது,
தனஞ்சயனை சதியாமல் - அருச்சுனனைக் கொல்லாதவாறு,
சாய்வித்தேனும் - (அவனிருந்த தேரைச்) சிறிது சாய்த்து ஒதுக்கியவனும்,
யானே என்று-நான்தான் என்று கூறி,
எக்கடலும் எக்கிரியும் — எல்லாக் கடலும் எல்லா மலைகளும்,
எல்லா மண்ணும்-எல்லாவுலகங்களும்,
இமையோரும் மானுடரும் - தேவர்களும் மனிதர்களும் (ஆகிய),
எல்லாம் ஆகி - எல்லாமாக நின்று,
மைக்கண் இளம் கோவியர்-அஞ்சன மை தடவிய கண்களையுடைய இளமையான ஆயர் குல மகளிர்தம்,
நுண் துகிலும் - நுண்மையான ஆடைகளையும்,
நாணும்-நாணத்தையும்,
வரி வளையும் - வரிகளையுடைய வளையல்களையும்,
மட நெஞ்சும் - இளமைத் தன்மையுடைய நெஞ்சங்களையும்,
வாங்கும் மால் - கவர்ந்த கண்ணன்,
மீண்டும் போய் - திரும்பவும் சென்று,
விசயற்கு-அருச்சுனனுக்கு,
தேர் வலவன் ஆனான்-தேர்ப்பாகனாகி அமர்ந்தான்.

### கருத்து

உன் பொருட்டால் நீ எய்த பாம்புக் கணை அருச்சுனன்மேற் படாதவாறு செய்தவனும் நான்தான் என்று கூறி, எல்லாமாகி நிற்கும் கண்ணன் மறுபடியும் அருச்சுனன் தேர்ப்பாகனைச் சென்று அமர்ந்தான்.

### விளக்கம்

ஒரு சமயம் அருச்சுனனிடம் அக்கினிதேவன் அந்தணன் வடிவில் வந்து தனக்கு உணவளிக்குமாறு வேண்டினான். அருச்சுனன் தருவதாகக் கூறலும், அக்கினி தேவன் தன் உண்மை உருவைக்காட்டி எனக்கு வேண்டிய உணவு இந்திரனுக்குச் சொந்தமான காண்டவ வனமேயாகும் என்றான். அருச்சுனன் அதனை உண்ணுமாறு கூறினான். அக்கினி வனமுழுதும் பற்றி உண்ணத் தொடங்கியதைக் கண்ட இந்திரன் சீறி மழைபொழிந்து அணைக்க முற்பட்டான். அருச்சுனன் அம்பினாலே கூடம் ஒன்று அமைத்து நனையாமல் பார்த்துக் கொண்டான். அப்பொழுது அந்த வனத்திலிருந்த தக்கன் என்னும் பாம்பின் மனைவி தன்குட்டியை வாயில் கவ்விக் கொண்டு தப்பியோட முனைந்தது. அருச்சுனன் அதுகண்டு அம்பெய்து அதனை நெருப்பில் வீழ்த்தினான். அசுவசேனன் என்னும் பெயருடைய அந்தக் குட்டிமட்டும் தப்பிவந்து, அருச்சுனன்மேல் பெரும்பகை கொண்டு, அம்பாகமாறிக் கன்னனிடம் புகுந்தது என்பர்.

அக்கணையைக் கன்னன் அருச்சுனன்மீது கழுத்துக்குக் குறி வைத்து எய்தபோது தேர்ப்பாகனை இருந்த கண்ணன் தேரைப் பூமியில் சிறிது அழுந்தச் செய்தான். அம்பு அருச்சுனன்மேற்படாமல் அவன் தலைக்குமேலே போய்விட்டது.

கோவியர் துகிலும் நாணும் வளையும் நெஞ்சும் வாங்கியது கண்ணன் ஆயர்பாடியில் ஆயர்குல மங்கையரிடம் செய்த காதல் விளையாட்டு.

### இலக்கணம்

உரகவாளி—இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
மட நெஞ்சு—உரிச்சொற்றொடர்.

# இ. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்

## ஊமை தமிழறிந்த திருவிளையாடல்

திருவிளையாடல் என்பது சிவபெருமான் மதுரையம் பதியில் செய்தருளிய திருவிளையாடல்களைக் கூறும் நூல். இத்திருவிளையாடல்களைக் கூறும் நூல் இரண்டுள. ஒன்று பரஞ்சோதி முனிவர்

திருவிளையாடற் புராணம்; மற்றொன்று திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம். இங்குப்பாடமாக வந்துள்ளது திருவால வாயுடையார் திருவிளையாடற் புராணமாகும்.

இதனை இயற்றிய ஆசிரியர் செல்லிநகர்ப் பெரும் பற்றப் புலி யூர் நம்பி என்பவராவர். இந்நூல் பழைய திருவிளையாடல் எனவும் வேம்பத்தூரார் திருவிளையாடல் எனவும் வழங்கும்.

### ஆசிரியரைப் பற்றி :

இந்நூலாசிரியராகிய பெரும் பற்றப் புலியூர் நம்பி பாண்டிய நாட்டிலுள்ள செல்லி நகரில் பிறந்தவர். இவர் பெயர் தில்லை நம்பி எனவும் வழங்கும். இந்நூல் இயற்றக் காரணமாக இருந்த பாண்டியன் ஒருவன் இவருக்குப் பல்லக்கு முதலிய விருதுகளையும், மணிமாலைகளையும் கொடுத்தான் என்பர். இவருடைய ஞானா சிரியர் விநயகர் என்பவர் ஆவர்.

### பாடப்பகுதியின் சுருக்கம்

ஒரு சமயம் இறையனாருடைய அகப் பொருள் சூத்திரங்களுக்கு சங்கப்புலவர் பலரும் உரை எழுதித் தத்தம் உரையே சிறந்த தெனக் கூறித் தம்முள் மாறுபட்டனர். பின்னர் அவர்கள் ஒன்று கூடி இறைவன் திருமுன்பு நம் உரையனைத்தையும் சொல்வோம். அவன் எதை நல்லதென்று சொல்கிறானோ அதையே நாமும் ஏற் போம் என்று முடிவு செய்து கோவிலுக்குச் சென்று முறையிட் டனர். அப்போது இறைவன் "ஊமனும், பாலனும், உப்பூர்குடி கிழான் மகனும் ஆகிய உருத்திர சன்மன் என்பவன் ஒருவன் உளான் அவனிடம் சென்று கேளுங்கள் என்று ஆணையிட்டனன்.

புலவர்கள் ஊமையாக உள்ளவன் எவ்வாறு சொல்ல வல்லான் என ஐயுற்றனர். அதையறிந்த இறைவன் "நீங்கள் உங்கள் உரை யைப்படிக்குங் காலத்தில், சிறந்த உரையைக் கேட்டால் அவனுக்கு உடல் புளகம் எய்தும்; கண்ணீர் சிந்தும். அதுகொண்டு துணிந்து கொள்க என்றனன்.

பிறகு புலவர்கள் இறைவன் ஆணைப்படி உருத்திர சன்மனை அழைத்து வந்து சிங்காதனத்து இருத்தி வணங்கித் தம் உரைகளை உரைத்தார். அப்பொழுது நக்கீரன், கபிலன் பரணன் என்னும் இம்மூவருடைய உரையைக் கேட்ட அந்த ஊமைப்பிள்ளை மெய்ம் மயிர் சிலிர்த்து, கண்ணீர் சோர இருந்தது. அது கண்ட புலவர் வியந்தனர். பிறகு அவ்வூமைப் பிள்ளை மயில் மீதேறும் அறுமுகப் பெருமானைக் காட்சி தந்து மறைந்தருளியது.

ஊமைப்பிள்ளை தமிழறிவு நிறைந்ததாய்ப் புலவர்கள் தம் உரைகளையும் கேட்டறிந்து எது சிறந்தது என்று ஆய்ந்து காணும் அறிவுடையதாய் விளங்கிய பகுதியைக் கூறும் பகுதி ஊமை தமிழ றிந்த திருவிளையாடலாகும்.

# 1. புலவர்கள் குழப்பம்

**அறிபவன்..................................மாறுபட்டே**

### சொற்பொருள்

அறிபவன் - எல்லாம் அறிந்தவனும்,
எங்கும் உளான் - எங்கும் நிறைந்திருப்பவனும்,
ஆலவாய் அமுத வாக்கன் - திருவாலவாயில் எழுந்தருளிய அமுதவாயனும் ஆகிய,
இறைவன் - சொக்கநாதன்,
முன்னம் சொன்ன - முன்பு பாடியருளிய,
இரும் பொருள் சூத்திரத்திற்கு - மிகுந்த பொருள் நிரம்பிய அகப்பொருள் சூத்திரத்திற்கு,
ஓர் காலம் - ஒரு காலத்தில்,
மறு அறு கவிதைச் சான்றோர் - குற்றமற்ற கவி வல்ல சான்றோர்கள்,
உறும் உரை எழுதி - பொருந்திய உரைகளை எழுதி,
தத்தம் உரையினை வியந்து - தங்கள் தங்கள் உரையே சிறப்புடைத்து என்று புகழ்ந்து கூறி,
மாறுபட்டு மலைந்தனர் - பகைமை கொண்டு தம்முள் பொருதனர்.

### கருத்து

இறையனார் அகப் பொருள் சூத்திரத்திற்கு உரை கண்ட சான்றோர்கள் தத்தம் உரையே சிறந்ததென வாதிடலாயினர்.

### விளக்கம்

ஆலவாய் என்பது மதுரைக்குரிய பெயர்களுள் ஒன்று. மதுரைக் கோயிலின் பெயர் என்றும் கூறுவர். சொக்கநாதப் பெருமானை ஆலவாய் அமுதன் என்றும் ஆலவாய் அமுதவாயான் என்றும் கூறுவர்.

இறையவன் இரும்பொருள் சூத்திரம்: முன்பொரு சமயம் பாண்டிய நாட்டில் பஞ்சம் மிக அரசன் புலவர்களை எல்லாம் வேண்டிய இடங்கட்குச் செல்லுமாறு கூறினன். பஞ்சம் தீர்ந்த பிறகு ஏவலாளரை அனுப்பிப் புலவர்களை எல்லாம் அழைத்து வரப் பணித்தனன். எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் வல்ல புலவர்களே வரலாயினர். பொருள் இலக்கணம் வல்லார் ஒருவரையும் காணப்பெற்றிலன். பொருள் இலக்கணம் பெறாத பாண்டியன் மனம் நைந்து வருந்த அதை அறிந்த இறைவன் அறுபது அகப்பொருள் சூத்திரங்களை எழுதிப் பீடத்தின் கீழ் இட்டனன். அங்கு அலகிடும் பார்ப்பான் ஒருவன் கண்டெடுத்துப் பாண்டியன் கையில் கொடுத்தனன் என்பர். இறைவனால் செய்யப்பட்டதாதலின் அஃது இறையனார் அகப் பொருள் எனப்பட்டது.

### இலக்கணம்

தத்தம்—தம்+தம்.
மலைந்தனர்—மலை+த்+த்+அன்+அர். மலை—பகுதி, த்—சந்தி, இது நகரமானது விகாரம், த்—இறந்த கால இடை நிலை, அன்—சாரியை, அர்—பலர் பால் விகுதி.

## 2. புலவர்கள் முடிபு

**சொல்லும்........................பொருந்தினால்**

### சொற்பொருள்

சொல்லும் நம் உரை அனைத்தும் - நம்மாற் சொல்லப்பட்ட உரை முழுவதையும்,
நன்னூல் எல்லாம் - நல்ல நூல்களெல்லாம்,
சோர்வு அறவல்லவன் - கசடறக் கற்றவனாகிய இறைவனுடைய,
திருமுன் சொன்னால் - முன்னிலையில் உரைத்தால்,
அவன் மகிழ்ந்து - அவன் கேட்டு இன்புற்று,
இவற்றுள் தேர்ந்து - இவ்வுரைகளுக்குள் ஆராய்ந்து,
நல்லது என்று உரைத்தது ஒன்றை - சிறந்தது என்று கூறிய ஓர் உரையை,
மற்றைப் புல்லிய உரையை விட்டு - ஏனைய புன்மையான உரைகளைக் கைவிடுத்து,
நயந்திடக் கடவம் - நாமும் விரும்பி ஏற்றுக்கொள்வோம்,
என்று அனைவரும் பொருந்தினார் - என்று கூறிப் புலவர்கள் ஒன்று கூடி முடிவு செய்தனர்.

### கருத்து

மாறுபட்ட புலவர்கள் ஒன்று சேர்ந்தது "நம் உரை அனைத்தையும் இறைவன் திரு முன்பு சொல்வோம். அவனும் எதைச் சிறந்ததென்று கூறுகின்றானோ அதையே நாமும் கொள்வோம்" என்று முடிவு செய்து கொண்டு சென்றனர்.

### விளக்கம்

சான்றோர்கள் தம் உரையை ஆய்ந்து முடிவு கூறுவது நூல் வல்லார்க்கு இயல்வதாகும். அதனால் இறைவனை நன்னூல் எல்லாம் வல்லவன் என்றார்.

### இலக்கணம்

கடவம்—உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று. கடம்+அம்.
ஆல்—அசைநிலை.

## 3. சான்றோர் இறைவனை வேண்டல்

### ஆங்குயர்..................................உரைத்தார்

சொற்பொருள்

ஆங்கு உயர் ஆலயத்துள் சென்று - அங்கே உயர்ந்த கோவிலுக்குள் சென்று,
அஞ்சலி செய்து - இறைவனை வணங்கி,
பூ கமலம் தாள் ஏத்தி - தாமரை மலர்போன்ற திருவடிகளைத் துதித்து,
புலவ கேள் - புலவர் தலைவனே! எம் முறையீட்டைக் கேட்டருள்வாயாக,
இவற்றுள் உரை நல்லது ஒன்றை- இவ்வுரைகளிலே நல்லதாகிய ஒருரையை,
ஆராய்ந்து எமக்கு ஈங்கு அருளுதி- ஆராய்ந்து பார்த்து எங்களுக்கு இப்பொழுது கொடுத்தருள்க,
என்று யாரும் - என்று எல்லோரும்,
ஓங்க முன் தாம் உரைத்த உரை - சிறப்பாகத் தாம் கண்ட உரைகளை,
உரையால் உரைத்தார் - விரித்துரைத்தார்கள்.

கருத்து

புலவர்கள் இறைவனை வணங்கிப் புலவரே! எம் உரையுள் எது சிறந்தது என்பதை ஆராய்ந்து எமக்குக் கூறியருள்வாயாக என்று கூறித் தத்தமது உரைகளை விரித்துரைத்தார்கள்.

இலக்கணம்

கமலத்தாள்—உவமைத்தொகை.
புலவ—விளி.
அருளுதி—ஏவல் ஒருமை வினைமுற்று.
என்றியாரும்—என்று+யாரும். ' உக்குறள்.........யவ்வரின் இய்யாம்;

## 4. இறைவன் திருவாய் மலர்தல்

### தென்தமிழ்...................................ஆகும்

சொற்பொருள்

சேர்ந்து இயல்வாணர் நீர் - ஒன்று கூடி வந்துள்ள புலவர்களாகிய நீங்கள்,
இன்று நவின்றது - இப்பொழுது உரைத்த உரைகள் அனைத்தும்,
நன்று - நல்லனவே (ஆயினும்),
இவ்வூர் - இந்த ஊரிலே,
தென் தமிழ்ப் புலவன் ஆகி—அழகிய தமிழில் புலமையுடைய வணிகி,

நம்முடைப் பத்தன் ஆகி - நம்மிடம் அன்பு பூண்டவனுகி,
ஒன்றிய- பொருந்தி வாழ்கின்ற,
வணிகன்- வாணிகனுகிய,
உப்பூர் கிழார் - உப்பூரி குடிகிழார் என்பவருடைய,
மகன் - மகனெருவன்,
ஊமன் பாலன்- ஊமையன் இளையன்,
தன் திறம் உரைப்பின் - அவன் தன்மையை (யாரென) ச் சொன்னுல்,
வென்றி சரவண குகனே ஆகும்- வெற்றி பொருந்திய சரவணப் பொய்கையில் தோன்றிய ஆறுமுகனேயாவான்.

### கருத்து

புலவர்களே! நீங்கள் உரைத்த உரைகள் நன்றே. ஆயினும் நம் குமாரனுகிய குமரன் அவதாரமாக உப்பூரி குடிகிழாருக்கு மகனுகப் பிறந்துளான். அவன் ஊமை, இளம் பருவத்தன். (அவனிடம் சென்று முடிவு தெரிந்து கொள்க என்று இறைவன் கூறியருளினுன்).

### விளக்கம்

வந்த புலவர்கள் மனம் சோர்ந்துவிடக் கூடாதல்லவா? அதனுல் 'நீவிர் நவின்றது நன்று' என்று இறைவன் கூறுகிறுர், எல்லாவற்றிலும் சிறந்தது எது என்று அறியவேண்டுமானுல் உப்பூருக்குச் செல்லுங்கள் என்று கூறுகிறுர்.

உப்பூர்—பரமக்குடிக்கு அருகில் உள்ள ஊராகும். அவ்வூரில் அறுமுகன் ஒரு சாபத்தால் ஊமைப் பிள்ளையாக அவதரித்தான் என்று கூறுவர்.

### இலக்கணம்

இயல் வாணர்—அண்மை விளி.
இவ்வூர்—இ+ஊர்.

## 5. இதுவும் அது

**உவமையின்..................................போற்றி**

### சொற்பொருள்

உவமை இல் ஞானி - (அவன்) ஒப்பில்லாத பேரறிஞன்,
நாமம் உருத்திரசன்மன் என்போன்-உருத்திரசன்மன் என்னும்பெயருடையவன் ஆவன்,
தவை இலா உரை அனைத்தும் - குற்றமில்லாத உங்கள் உரை முழுவதையும்,
அவன் தன் முன் - அவன் முன்னிலையில்,
அவையிடை நவின்றுல் - சபையிலே சொன்னுல்,
ஒன்றைக் கைக்கொண்டானேல்- அவற்றுள் ஒருரையை ஏற்றுக் கொள்வானேயானுல்,
அஃது உரை - அது சிறந்த உரையாகும்,

ஐயம் இல்லை - சந்தேகமில்லை,
கவல் உற வேண்டா - கவலைப் பட வேண்டா,
என்ன கண்டவர் - என்று சொல்லக்கேட்ட புலவர்கள்,
தொண்டில் போற்றி - முறைப்படி பணிந்து வாழ்த்தி;

கருத்து

அவன் பெயர் உருத்திரசன்மன் என்பதாகும்; அவன் பேரறிவுடையன்; அவனிடம் சென்று உரைத்தால் சிறந்த உரையைத் தேர்ந்தெடுப்பான். அதுவே சிறந்த உரையாகும். ஐயமின்றி, கவலையின்றிச் செல்க எனப் பணித்தனன் இறைவன்.

விளக்கம்

உருத்திரசன்மன் ஊமனாயிற்றே; பாலன் ஆயிற்றே! அவன் உரைமுடிவுகாண வல்லனோ என ஐயமும் கவலையும் தோன்றுவதியல்பு. அவை தோன்ற வேண்டா என்பான் 'உவமையில் ஞானி' எனவும் 'ஐயம் இல்லை' எனவும் கூறினன்.

இலக்கணம்

இலா——ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

## 6. புலவர்கள் ஐயத்தை மீட்டும் நீக்குதல்

**தோன்று நாள்................................அன்றே**

சொற்பொருள்

தோன்றும் நாள் தொடங்கி - பிறந்த நாள் தொட்டு,
ஊமன் - ஊமையாக இருக்கும் அவன்,
சொல்தர வலனோ - பேசும் ஆற்றல் உடையவனாக இருப்பனோ?
என்ன - என்றுபுலவர்கள் வினவ, (இறைவன் புலவர்களை நோக்கி),
ஏன்ற செந்தமிழ் தேர்- சிறப்புப் பொருந்திய செந்தமிழை ஆராயும்,
செட்டிக்கு - வணிகனாகிய அவ்வூமனுக்கு,
யாதொரு செய்யுள் கேட்டால்- எந்த உரையைக் கேட்கும் பொழுது,
புளகம் தோன்றிய மெய்யும் - மயிர்ச்சிலிர்ப்புத் தோன்றிய உடலும்,
துளிபடு கண்ணும்-நீர் துளிக்கும் கண்களும்,
உண்டோ-உண்டாகுமோ,
ஆன்ற அச் செய்யுள் - பொருள் பொதிந்த அந்த உரையே,
செய்யுள் - சிறந்த உரையாகும்
அல்லது செய்யுள் அன்று - அவ்வாறு மெய்சிலிர்த்தலும் கண்ணீர் வார்தலும் உண்டாக்காதவை சிறந்த உரையாக மாட்டா (என்றான்).

கருத்து

'பிறந்த நாள்முதல் ஊமையாக இருக்கும் ஒருவன் பேசவல்லனோ?' என்று புலவர்கள் வினவ, அதற்கு இறைவன் 'அவன் உரை

யைக் கேட்டுக்கொண்டிருக்கும் பொழுது எந்த உரைக்குக் கண்ணீர் வார்த்து, மெய்ம்மயிர் சிலிர்க்க இருக்கின்றானோ அதுவே சிறந்த உரை. ஏனையன சிறந்த உரையாகா' என்றான்.

### விளக்கம்

உரையும் செய்யுள் என்று வழங்கப் பெறுவதுண்டு. வணிகன் மகனாதலின் செட்டி எனப்பட்டான். முருகனையும் செட்டி எனச் சொல்வதுண்டு.

### இலக்கணம்

சொற்றர—சொல்+தர.
வலனே—வல்லனே என்பதன் இடைக்குறை.
தமிழ் தேர்—இரண்டாம் வேற்றுமைத் தொகை.
செட்டிக்கியாதொரு—செட்டிக்கு+யாதொரு.
அன்றே—ஏ—அசை நிலை.

## 7. புலவர் உடன்பட்டு மீளல்

ஒருவரும்..........................................என்றார்

### சொற்பொருள்

ஒருவரும் இகல வேண்டா-உங்களுள் ஒருவருமே மாறுபட வேண்டா,
ஒத்து-அனைவரும் ஒன்றுபட்டு,
நம் இடத்து இருத்தி-நம்முடைய மண்டபத்திலேயிருத்தி,
வரன் உறக்கேண்மின்-மேன்மையுறக்கேளுங்கள்,
என்று மறைந்திட-என்று இறைவன் சொல்லி மறைய, (புலவர்கள்),
மலைதல் விட்டு-(எமது சிறந்தது எமது சிறந்தது) என்று போரிடுவதை விடுத்து,
இங்கு-இப்பொழுது,
இருவரும் அறியா எந்தை-பிரமன், திருமால் என்னும் இருவராலும் அறிய முடியாத எமது தந்தையாகிய சிவபெருமான்,
நம்போல் இலங்கிட வந்து-நம்மைப்போலவே விளங்கும்படி வந்து,
பரிவொடும் பகரப் பெற்றேம்-அன்போடும் சொல்லப் பெற்றோம்,
பகர்ந்ததே செய்வம்-இறைவன் உரைத்தபடியே நாம் செய்வோம்,
என்றார்-என்றுமுடிவு செய்தார்கள்.

### கருத்து

புலவர்களே! ஒருவரும் பகைகொள்ளாதீர். அவனை அழைத்து வந்து நம் சங்கமண்டபத்தில் அமர்த்திப் பணிவுடன் கேளுங்கள் என்று இறைவன் கூற, அதுகேட்ட புலவர்கள் அவன் அன்புடன் நம்மைப்போல வந்து, கூறியருளினபடியே செய்வோம் என முடிவு செய்தனர்.

### விளக்கம்

இருவரும் அறியா என்றது, திருமாலும் அயனும் போட்டியிட்டுக்கொண்டு முறையே பன்றியாகவும் அன்னமாகவும் வடிவெடுத்துச் சிவனுடைய அடியையும் முடியையும் கண்டு பிடிக்கச் சென்றனர். அவர்களால் காணமுடியவில்லை என்னுங் கதையைக் குறிக்கும்.

அவ்வளவு அரியனான சிவன் நம்மைப் பொறுத்த அளவில் எளியனாகி வந்து நம்மிடம் அன்பு கொண்டு சொல்லினான். ஆதலினால் அவன் சொல்லியவாறு செய்வோம் என்றனர்.

### இலக்கணம்

கேண்மின்—ஏவற்பன்மை வினைமுற்று. கேள்+மின். மின்—ஏவற் பன்மை விகுதி.

இருவரும்—உம்மை—உயர்வு சிறப்பும்மை.

அறியா—ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம்.

எந்தை—எம்+தந்தை—மரூஉமொழி.

பெற்றேம், செய்வம்—தன்மைப் பன்மை வினை முற்றுக்கள். பெறு+ஏம்; செய்+வ்+அம்.

## 8. ஊமைப்பிள்ளைமுன் உரை உரைத்தல்

பத்தியில்.......................................ஓங்க

### சொற்பொருள்

பத்தியொடு போந்து - (புலவர்கள்) பயபக்தியுடன் சென்று,
சித்திசேர் மூங்கை தன்னை - தெய்வஅருள் பொருந்திய ஊமைப்பிள்ளையை,
தெய்வப்பா அறிமண்டபத்து - தெய்வத்தன்மை பொருந்திய சங்கமண்டபத்துக்கு,
சிறப்பொடும் அழைத்து - மிக்க சிறப்புடன் அழைத்து வந்து,
சுத்தம் ஆர் சிங்கத்தவிசின் ஏற்றி - தூய்மையான சிம்மாதனத்தில் அமரச்செய்து,
தூபம் தீபம்ஆதி நல்கி - தூபங்களும் தீபங்களும் முதலியன காட்டி,
ஒத்து - ஒன்றுபட்டு,
முன் தாம்உரைத்த-முன்பு தாம் கண்ட,
உரைஎலாம் - உரைகளை யெல்லாம்,
ஓங்க உரைத்தார் - சிறப்பாக எடுத்துச் சொன்னார்கள்.

### கருத்து

இறைவன் ஆணைப்படி அவ்வூமைப் பிள்ளையை அழைத்துவந்து ஆசனத்திருத்தி, தூப தீபம் காட்டித்தமதுஉரைகளைப் புலவர்கள் படித்தனர்.

### விளக்கம்

தெய்வப்பாவறி மண்டபம்—சிறந்த பாடல்களை ஆராய்ந்து காணும் மண்டபம்; அஃதாவது சங்கமண்டபம்.

இறைவன் ஆணையிட்ட சிறப்பு நோக்கிப் பத்தியுடன் சென்று அழைத்துவந்து தீபதூபங் காட்டுகின்றனர்.

தூபம்—சாம்பராணி முதலிய புகை. இறைவனுக்குத் தூப தீபங் காட்டுவதியல்பு. அறுமுகன் அவதாரமாதலின் இவனுக்குங் காட்டுகின்றனர் எனவுங் கொள்ளலாம்.

### இலக்கணம்

தூபதீபம்—உம்மைத்தொகை.
எலாம்—எல்லாம் என்பதன் இடைக்குறை.

## 9. ஊமைப்பிள்ளை மெய்ம்மயிர் சிலிர்த்தல்

**வளமுறு.................................கொண்டார்**

### சொற்பொருள்

வளம்உறு கீரன் - புலமை வளம் நிரம்பப் பெற்ற நக்கீரன்,
தரைபுகழ் கபிலன் - இவ்வுலகத்தாரால் புகழப்படுகின்ற கபிலன்.
மாசுஅறு பரணன் – குற்றமற்ற பரணன், (என்னும்)
இம்மூவர் - இம் மூன்று புலவர்களுடைய,
தளர்வுஅறும் உரையை - குறைபாடில்லாத உரைகளை,
மூங்கை கேட்டலும் - ஊமைப் பிள்ளை கேட்டவுடன்,
துணிவரும் பெருவிருப்பு எய்தி- தணியாத பேரார்வம் அடைந்து,
புளகிதமெய்யும்-மயிர் சிலிர்த்த உடம்பும்,
துளிபடு கண்ணும் - நீர்வாரும் கண்ணும்,
பொருந்தல் கண்டு - அடைந்ததைப் பார்த்து,
யாரும் அதிசயித்து-எல்லோரும் வியந்து,
உளம்வரும் பொருள் -உள்ளத்திலிருந்து வெளிப்பட்டு வந்த மெய்ப்பொருள்கள்,
இப்பொருள்கள் தாம் - இவ்வுரைகளேயாம்,
என்று - என்றுகூறி.
ஒப்பு அரும் அப்பொருள் - ஒப்பில்லாத அவ்வுரைகளை,
கொண்டார் - சிறந்த உரைகள் என ஏற்றுக்கொண்டனர்.

### கருத்து

நக்கீரன், கபிலன், பரணன், என்னும் இம்மூவர் உரையையுங் கேட்டபொழுது அம் மூங்கைப்பிள்ளை கண்ணீர் சொரிந்து, மெய்ம் மயிர் சிலிர்க்க, அனைவரும் வியந்து அவ்வுரைகளே உரைகள் என ஏற்றுக்கொண்டனர்.

# 10. முருகன் காட்சி

## தலமிசை.........................................நீங்கி

### சொற்பொருள்

தலம் மிசை எங்கும் - உலகம் எங்கும்,
விரிந்து இயல் சொக்கன்-பரந்து விளங்குகின்ற சொக்கலிங்கப் பெருமானுடைய,
தகைமையை மிகமிக வாழ்த்தி- அருள் திறத்தைப் பெரிதும் போற்றி,
அலகு இலா ஊழி- அளவில்லாத நெடுங்காலம்,
இருந்தனர் - புலவர்கள் வாழ்ந் திருந்தனர்,
இருந்த - ஊமைப் பிள்ளையாக வந்திருந்த,
அரும்தமிழ் செட்டியாம் செட்டி- அரிய தமிழ் வல்ல வணிகனு கிய முருகன்,
இலகிய மயில்மீது - விளங்கு கின்ற மயிலின்மேல்,
அறு முகத்தோடும் - ஆறு முகங் களோடும்,
இனிய பன்னிரு கரத்தோடும் - அழகிய பன்னிரண்டு கை களோடும்,
புலவர் கண்டு இறைஞ்ச - புல வர்கள் அனைவரும் கண்டு வணங்க,
அருளினல் விளங்கி - அருளுடன் தோன்றி,
சாபமும் நீங்கி போயினுன் - சாபமும் விலகப் பெற்றுச் சென்ருன்.

### கருத்து

இறையவன் திருவருளை வாழ்த்திப் புலவர்கள் நெடுங்காலம் வாழ்ந்தனர். ஊமையாக வந்த முருகன் சாபம் நீங்கி ஆறுமுகமும் பன்னிருகையும் ஆகிக் காட்சி கொடுத்து மறைந்தருளினன்.

### இலக்கணம்

இலா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
போயினன்—போ+இன்+ஆன். போ-பகுதி, இன்-இறந்தகால இடைநிலை, ஆன்—ஆண்பால் விகுதி.

# III. தற்காலச் செய்யுள்

## அ. சுகவாரி

'அரும்பொனே' என்று தொடங்கும் இப்பாடல் 'தாயுமான வர் பாடல்' என்னும் நூலில் வருவதாகும். இது 'சுகவாரி' என்னும் தலைப்பில் ஏழாம் பாடலாகும். தாயுமானவர் பாடல்கள் எளிமையும் இனிமையும் பொதுநோக்கும் அமைந்தவை. பக்திச் சுவை நிறைந்தவை.

**ஆசிரியரைப்பற்றி:**

பெயர் : தாயுமானவர்.

ஊர் : திருமறைக்காடு (வேதாரணியம்) பிறந்தது திருச்சிராப்பள்ளியில்.

தந்தை : கேடிலியப்ப பிள்ளை.

தாய் : கஜவல்லியம்மை.

மனைவி : மட்டுவார் குழலி.

சமயம் : சைவம். ஆயினும் பொதுநோக்குடையவர்.

காலம் : பதினெட்டாம் நூற்றாண்டு.

குலம் : சைவ வேளாளர் குலம்.

ஞானாசிரியர் : மௌனகுரு சுவாமிகள்.

தாயுமானவர் என்பது திரிசிரபுரம் எனப்படும் திருச்சிராப்பள்ளியில் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானுக்குரிய பெயராகும்; அவரருளால் தோன்றினமையால் இப்பாடலின் ஆசிரியர் தாயுமானவர் என்னும் பெயரைப் பெற்றார். இவர் விசயரகுநாத சொக்கலிங்க நாயக்கரிடம் கணக்கராகப் பணி புரிந்தார். இவர் மனம் இத்தொழில் புரிய விரும்பாமையால் அத்தொழிலிலிருந்து விலகி, மௌனகுரு என்னும் பெரியாரிடம் ஞானோபதேசம் பெற்றுத் துறவற நெறியை மேற்கொண்டனர். உயர்ந்த பாடல்கள் பலவற்றைப் பாடி இறுதியில் இராமநாதபுரத்தை அடுத்துள்ள இலட்சுமிபுரத்தில் அடங்கினர் என்று கூறுவர்.

**அரும்பொனே..............................சுகவாரியே**

**சொற்பொருள்**

சுத்த நிர்க்குணம் ஆன - தூய்மையானவனும் எவ்வகைக் குணமில்லாதவனும் ஆகிய,

பர தெய்வமே - மேலான கடவுளே,

பரம் சோதியே - மேன்மையான சோதி வடிவானவனே,

சுகவாரியே-இன்பக்கடல் போன்றவனே, (நான் உன்னை)

அரும்பொனே - பெறுதற்கரிய பொன் போன்றவனே,

மணியே - மாணிக்கமே,

என் அன்பே - என் அன்பானவனே,

என் அன்பான அறிவே - என் அன்புக்குரிய அறிவு வடிவமானவனே,

என் அறிவில் ஊறும் - என் அறிவிலிருந்து ஊறிவரும்,

ஆனந்த வெள்ளமே - இன்பப் பெருக்கே,

என்று என்று பாடினேன் -என்று பலமுறை சொல்லிப் பாடினேன்,

நாடி நாடி ஆடினேன் - உன்னை விரும்பி விரும்பி ஆடினேன்,

விரும்பியே கூவினேன் - விரும்பி உன்னைக் கூவி அழைத்தேன்,

உலறினேன் - நீ வாராமையால் கோபித்தேன்,

அலறினேன் - மீண்டுங் கதறினேன்,

மெய் சிலிர்த்து-உடல் சிலிர்த்து,

இருகை கூப்பி - இரண்டு கைகளையும் தலைமேற் குவித்து,
விண்மாரி என - வான மழை போல,
என் இரு கண் மாரி பெய்ய - என்னுடைய இரண்டு கண்களும் நீரைப் பொழிய,
வேசற்று - செயலற்று,
அயர்ந்தேன் - தளர்ந்தேன்,
யான் இரும்பு நேர் நெஞ்சகம் - நான் இரும்பு போன்ற நெஞ்சத்தையுடைய,
கள்வன் ஆனாலும் - வஞ்சகனாக இருப்பினும்,
உனை இடைவிட்டு நின்றது உண்டோ - உன்னை நினையாமல் இடையீடுபட்டதுண்டோ?,
என்றுநீ - என்றைக்கு நீ இருந்தாயோ,
அன்று நான் - அன்றே நானும்,
உன் அடிமை அல்லவோ - உன்னுடைய அடியவன் அல்லவா?
யாதேனும் அறியா - ஒன்றுமே அறியாத,
வெறும் துரும்பனேன் என்னினும்-பயனற்ற துரும்பு போன்றவனாயினும்,
கைவிடுதல் நீதியோ – என்னைக் கை விட்டுவிடுவது நியாயமோ ?,
தொண்டரொடு கூட்டு - நின் அடியவருடன் என்னையும் ஒருவனாகச் சேர்த்தருள்,

## கருத்து

சுகவாரியே ; நின்னைப் பொன்னே மணியே அன்பே அறிவே அறிவில் ஊறும் இன்பப் பெருக்கே என்று பலகாற் கூறிப் பாடினேன் ஆடினேன். கூவியழைத்தேன். நீ வராமையால் சினந்தேன். பிறகு கதறினேன். உடல் சிலிர்த்துக் கை குவித்துக் கண்ணீர் சோரச் செயலற்றுத் தளர்ந்தேன். நான் இரும்பு போன்றவன் னெஞ்சனாக இருப்பினும் உன்னை நினையாத நாளுண்டோ? அன்றிருந்து உன்னடிமைதானே நான். சிறு துரும்பு போன்றவனாக நான் இருப்பினும் என்னைக் கைவிடலாமோ ? உன்னடியவரோடு என்னையும் சேர்த்தருள்.

## விளக்கம்

பாடினேன்; ஆடினேன்; கூவினேன்; உலறினேன். இவ்வளவும் செய்தமையால் 'வேசற்று அயர்ந்தேன்' என்று கூறுகிறார்.

வன்னெஞ்சனாயினும் நான் உன் அடிமை; என்றும் உன் நினைவே உடையேன். பயன்படாத் துரும்புபோல நானிருக்கலாம்; ஆனாலும் என்னைக் கைவிடுதல் நீதியில்லை. அடியவரோடு சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று வேண்டிக்கொள்கிறார்.

பாடலும் ஆடலும் மெய்யடியார்தம் இயல்பு. அடியவர் இறைவன்முன் தம்மை இகழ்ந்து கூறிக்கொள்ளுதற்கேற்ப 'இரும்பு நேர் நெஞ்சகக் கள்வன்' என்றும் 'வெறுந் துரும்பனேன்' என்றும் கூறிக்கொள்கின்றார்.

### இலக்கணம்

பொனே—பொன்னே என்பதன் இடைக்குறை.
என்றென்று, நாடிநாடி—அடுக்குத் தொடர்கள்.
உண்டோ, நீதியோ—ஓகாரங்கள் எதிர்மறை ஓகாரங்கள்.
சுகவாரி—இருபெயரொட்டுப் பண்புத் தொகை.
அறியா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
கண்டாய்—அசைநிலை.

# ஆ. திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ்

இது, திருவிரிஞ்சை என்னும் ஊரில் எழுந்தருளியிருக்கும் முருகன்மீது பாடப்பட்ட பிள்ளைத்தமிழ் நூல் எனப் பொருள் படும். பிள்ளைத்தமிழின் இலக்கணம் பொதுப் பகுதியில் கண்டு கொள்க.

திருவிரிஞ்சை என்பது தொண்டை நாட்டில், பாலாற்றங் கரையில் உள்ள ஒரு ஊர்.

### ஆசிரியரைப்பற்றி

இந்நூலை இயற்றியவர் மார்க்கசகாய தேவர் என்பவராவர். இது திருவிரிஞ்சையில் உள்ள இறைவன் பெயராகும். அப் பெயரையே இவரும் பூண்டுள்ளார். இவர் சமயப்பற்றும் மொழிப் பற்றும் மிக்குடையவர் என்பதும் திருமுருகாற்றுப்படை, திருப் புகழ் முதலிய நூல்களில் நல்லன்பு கொண்டவர் என்பதும் இவர்தம் பாடல்களாற் புலனுகின்றன. இதில் வரும் பாடல்கள் சிந்தை கவரும் சந்தச்சுவை நிரம்பியன.

இப்பிள்ளைத்தமிழ் நூலிலுள்ள முத்தப்பருவம், வருகைப் பருவம், அம்புலிப் பருவம், சிறுபறைப் பருவம், சிறுதேர்ப் பருவம் என்னும் ஐந்து பருவங்களிலிருந்தும் ஐந்து பாடல்கள் பாடமாக வந்துள்ளன.

### முத்தப்பருவம்

குழந்தையைத் தமக்கு முத்தம் தருமாறு தாய் தந்தை வேண்டுதலைக் கூறும் பருவம். இது பதினோராம் மாதத்தில் நிகழ்வது.

தீரக்கவி.......................................அருளே

### சொற்பொருள்

தீரம் கவி பாய-தீரமுடைய குரங்குகள் தாவுதலினுல்,
பல தென்னம்பழம்-முற்றிய பல தேங்காய்கள்,
மடுவில் திரளாய் விழ-குளத்தில் தொகுதியாய் வீழ (அதனுல்),
நெடு வாளை - பெரிய வாளை மீன்கள்,

எதிர்நாடி-எதிர்த்து,
சினத்தோடு-கோபத்துடன்,
பாரப் புயல் தாவி - நீர் சுமந்த மேகத்திலே தாவி,
திகழ் பலவை பொருது - விளங்கும் பலாப் பழத்தில் மோதி, (அதனால்)
உதிரும் பலவின் சுளையுடன் வரும்-உதிர்கின்ற பலாச் சுளைகளுடன் வருகின்ற,
பாலி திருநாடா - பாலாற்றங் கரையிலுள்ள அழகிய நாட்டையுடையவனே,
வீரம் பசுமயிலாகர புரி - மயூர கிரியிலே,
மேவிய வரதா—எழுந்தருளும் வரதனே,
விண்ணோர்தொழும்-தேவர்களாலும் வணங்கப்படுகின்ற,
இறைவா-தலைவனே,
சதுர் வேதப் பொருள் கமழும் - நான்கு வேதங்களின் பொருள்களும் கமழுகின்ற,
மூரல் திருவாயால்-புன்மூரல் பூக்கும் அழகிய வாயினால்,
ஒரு முத்தம்தனை அருள்-ஒரு முத்தந் தருவாயாக,
முருகாஅரி மருகா-முருகனே திருமால் மருகனே,
ஒரு முத்தம்தனை அருள்-ஒரு முத்தம் தருவாயாக.

### கருத்து

குரங்குகள் தாவுதலினால் முதிர்ந்த தேங்காய்கள் அருகிலிருக்கும் குளங்களில் விழுகின்றன. குளங்களிலுள்ள வாளை மீன்கள் கோபங்கொண்டு எதிர்த்து மேக மண்டலம் வரை தாவிப் பலாப் பழங்களிலே மோதுதலினால் பலாச்சுளைகள் உதிர்கின்றன. அங்ஙனம் உதிர்கின்ற சுளைகளோடு வருகின்ற பாலாற்றங்கரையிலே உள்ள நாடனே! மயூரகிரி வேலனே! தேவர் தேவா! வேதப் பொருளின் மணங்கமழும் உன் வாயால் ஒரு முத்தந்தா. முருகனே! மாலின் மருகனே! ஒரு முத்தந்தா.

### விளக்கம்

பாலாற்றங்கரையின் இயற்கை வளம் இப்பாடலிற் கூறப்படுகிறது. வீரப்பசு மயிலாகரபுரி—மயூரகிரி (மயில்மலை) வீரமும் பசுமையும் மயிலுக்குரிய அடைமொழிகள். அரிமருகா—திருமாலுக்கு மருமகன் முறை பூண்டவன் முருகன். பாலி—பாலாறு.

### இலக்கணம்

சதுர்வேதம்—இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
அருள்—ஆய்விகுதி குறைந்து நின்ற ஏவலொருமை வினைமுற்று.

## வருகைப் பருவம்

குழந்தையைத் தம்பால் நடந்து வருமாறு பெற்றோர் வேண்டுதலைக் கூறும் பருவம். இது பதின்மூன்றாம் மாதத்தில் நிகழ்வது.

**கண்ணால்..............................வருகவே**

**சொற்பொருள்**

கண்ணால் உனது திருவடியைக் கண்டு — இரு கண்களாலும் உனது திருவடிகளைப் பார்த்து,
ஆதரவுபெருகி - அன்பு மிகுந்து,
இருகையால் தொழுது- இரண்டு கைகளாலும் வணங்கி,
காலால் உன் திருக்கோயில் வலம்செய்து - இரு கால்களால் உன் கோவிலை வலமாக வந்து,
உனதுபுகழ் - உன்னுடைய புகழை,
பண்ணால் புகழ்ந்து — பாடலால் புகழ்ந்து,
உருகி கண்ணீர் பாயா எனையும்- மனமுருகிக் கண்ணீர் சிந்தாத அடியேனையும்,
தாயாக - தாய்போல,
பரிந்துவளர்க்கும் - அன்புகாட்டி வளர்க்கின்ற,
பெரும் கருணைபடைத்து - பேரருள் கொண்டு,
விரிஞ்சைப் பதி வாழும் - திருவிரிஞ்சை என்னும் ஊரில் வாழ்கின்ற,
அண்ணால் வருக - அண்ணலே வருக,
உலகம் முழுது ஆண்டாய் வருக- உலக முழுதும் ஆள்பவனே வருக,
கதி தரும் எம் ஐயா வருக -அன்பர்கட்கெல்லாம் நல்ல கதியைக் கொடுத்தருளும் எம் தலைவனே வருக,
ஆறுமுக அப்பா வருக - ஆறு முகங்களையுடைய தந்தையே வருக,
விளங்கு கதிர் வண்ணா வருக - ஒளி பொருந்திய ஞாயிறு போன்றவனே வருக,
மயில் ஏறும் மன்னா வருக - மயிலேறும் பெருமானே வருக,
அடியார்கள் வாழ்வே வருக-அடியவர்க்கு வாழ்வளிப்பவனே வருக,
தெய்வ சிகாமணியே - தெய்வங்கட்கெல்லாம் முடிமணி போன்றவனே,
வருக வருகவே - வருவாய் வருவாய்.

**கருத்து**

கண்களால் திருவடிகளைக் கண்டு அன்பு கொண்டு கைகளால் தொழுது, கால்களால் கோவிலை வலம் வந்து, புகழ்பாடி, உருகிக் கண்ணீர் மல்காத என்னையும், பரிந்து வளர்க்கும் கருணை கொண்ட தாய் போலக் காத்தவனே! அண்ணலே! ஆண்டவனே! ஐயா! அப்பா! கதிர் வண்ணனே! அரசே! வாழ்வே! வருக வருக.

**விளக்கம்**

கண்ணால் திருவடி காண்டலும், கையால் தொழுதலும், காலால் கோவிலை வலம் வருதலும், பண்ணால் அவன் புகழ் பாடலும், மனம் உருகுதலும், கண் நீர் சொரிதலும் அவ்வப் பொறிகளின் கடமைகளாம். அக் கடமைகள் ஒன்றுஞ் செய்யாத என்னையும் ஆட்கொண்டாய் என முருகன் திருவருளை வியக்கின்றார்.

தாய்தான் எத்தகைய பிள்ளையாய் இருப்பினும் அன்பு கொண்டுபேணும் கருணையுடையவளாவாள். அவளைப் போலவே முருகனும் கருணை படைத்தவன் என்பதைத் ' தாயாக ' என்ற சொல்லாற் குறிக்கின்றார்.

கதிர் வண்ணன்—' உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு பலர் புகழ் ஞாயிறு ' போன்றவன் முருகன் என்பதாகும்.

### இலக்கணம்

பாயா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
எனையும்—உம்மை இழிவு சிறப்பும்மை.
அண்ணால்—அண்ணல் என்பதன் விளி.

## அம்புலிப்பருவம்

வானத்து வெண்ணிலவைக் குழந்தையுடன் விளையாடுதற்கு செவிலித்தாயர் முதலியோர் அழைப்பதைக் கூறும் பருவம். இது பதினைந்தாவது மாதத்தில் நிகழ்வது.

### இஞ்சி சூழ்..............................வருகவே

### சொற்பொருள்

மஞ்சம் ஆர் வயல் - மேகம் பொருந்திய வயல்களையுடைய,
விரிஞ்சை அம் பதி அமர்ந்த- அழகிய திரு விரிஞ்சையில் எழுந்தருளிய,
ஆறுமுகம் உடைய வேள் - ஆறு முகங்களையுடைய முருகன்,
அம்புலீ வருக என்றனன் - அம்புலியே! ஆட வா என்று உன்னை அழைத்தனன் (அதனால்),
அம்புலீ - நிலவே,
கடுகி வருக வருக - விரைந்து நீ வருவாய், வருவாய், (வந்தால்),
இஞ்சி சூழ் அருணை அன்பன்- மதில் சூழ்ந்த திருவண்ணாமலையில் முருகன் அருள்பெற்ற அருணகிரிநாதன்,
இயம்பு பாடல்களை அறியலாம்- மொழிந்தருளிய திருப்புகழை நீ அறிந்து கொள்ளலாம்,
எங்கள் கீரன் மொழியும் - எங்களுடைய நக்கீரன் பாடிய,
பசுந்தமிழ் எனும் சொல் - திருமுருகாற்றுப்படை என்று சொல்லப்படுகின்ற சொல்லின்,
வேத நிலை தெரியலாம் - மறையின் பொருளை நீ தெரிந்து கொள்ளலாம்,
விஞ்சு சூரர்களை - வீரம் மிகுந்த அசுரர்களை,
வென்றிடும் திறல் - வெற்றி கொண்ட திறத்தை,
விளம்பு காதைகளை - சொல்லுகின்ற கந்தபுராணம் முதலியவற்றை,
வினவலாம் - கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்,
வெந்த பூதியை அணிந்த - திருநீற்றை அணிந்த,
தொண்டர்கள் விரும்ப - அடியவர்கள் விரும்பும்படி.

கவிதை புகலலாம் - பாடல் சொல்லலாம்,
வஞ்சம் ஓட வரு - வஞ்சனைகள் ஓடும்படியாக வந்த,
தண்டை அம் கழல் வணங்கலாம் - தண்டையணிந்த அழகிய திருவடிகளை வணங்கலாம்,
உலகை வலமதா வந்து சூழ்வதிலும் - நீ உலகத்தை வலமாக வந்து சூழ்வதைக் காட்டிலும்,
இன்று இவன்தனை - இப்பொழுது இந்த முருகனை,
வலம் செய்தே - வலமாக வந்தே,
பிறவி ஒழியலாம் - பிறவிப் பிணியை அகற்றலாம்.

### கருத்து

திருவிரிஞ்சை முருகன் "நிலவே நீ ஆடவா" என்று உன்னை அழைக்கின்றான். ஆதலால் நீ விரைந்து வா. நீ அவனோடு ஆட வந்தால் அருணகிரி நாதரின் திருப்புகழை அறிந்து கொள்ளலாம். நக்கீரன் மொழிந்த திருமுருகாற்றுப்படையைத் தெரிந்து கொள்ளலாம்; கந்தபுராணம் முதலிய நூல்களைத் தெரிந்து கொள்ளலாம்; சிவனடியார் விரும்பும் வண்ணம் கவிதை பாடலாம்; முருகன் திருவடிகளை வணங்கலாம்; அவனை வலமாக வந்து பிறவிப் பிணியையும் ஒழித்து விடலாம்.

### விளக்கம்

அம்புலிப் பருவத்தில் நிலவைக் குழந்தையோடு விளையாட அழைக்கும் பொழுது சாமம், பேதம், தானம், தண்டம் என்னும் நால்வகை உபாயங்களாலும் அழைப்பதாகப் பாடுவது மரபு. அம் முறையில் இந்தப் பாடல் தானம் என்னும் உபாயத்தால் அழைத்ததாகும். முருகனிடம் ஆட வந்தால் இன்ன இன்ன நன்மைகளைப் பெறலாம். அதனால் ஆடவா என்றழைப்பதால் தானம் என்னும் உபாயமாயிற்று.

திருமுருகாற்றுப் படை சங்கத்து நூலாதலாலும், வீடுபேறு அடையும் பொருட்டு முருகனிடத்து ஆற்றுப்படுத்துதலாலும் அதனைப் "பசுந்தமிழ்" என்றும், "வேத நிலை" என்றும் கூறினார்.

வஞ்சமாவது காமம், வெகுளி, மயக்கம், ஆணவம், மாயை, முதலியன.

"நிலவே! நீ உலகத்தை வலமாகச் சூழ்ந்து சூழ்ந்து வருகின்றாயே, என்ன பயனைக் கண்டாய்?" என்று அதன் பேதைமையைச் சுட்டிக் காட்டி. "நீ முருகன் ஒருவனை மட்டும் வலமாகச் சுற்றி வந்தால் பிறவி நோயையே அகற்றி விடலாமே," என்று கூறுகின்றான்.

இவ்வளவு நன்மைகள் உனக்கு வருகின்றன; அவனும் விரும்பி அழைக்கின்றான், அதனால் ஓடோடி வா என்று அழைக்கின்றான்.

### இலக்கணம்

வலமதா—வலமது+ஆக; க—தொகுத்தல் விகாரம்.
கழல்—தானியாகு பெயர்.
மஞ்சம்—(மேகம்) மஞ்சு+அம்; அம்—சாரியை.
அம்புலீ—விளிப் பெயர்.

## சிறுபறைப் பருவம்

சிறுபறையை முழக்கி ஒலி யெழுப்புமாறு வேண்டுவதைக் கூறும் பருவம். இது பத்தொன்பதாம் மாதத்தில் நிகழ்வது.

**சந்தியினும்............................முழக்கியருளே**

### சொற்பொருள்

சந்தியினும் மந்தியினும்-சூரியன் தோன்றும்பொழுதும், மறையும்பொழுதும்,
உள்ளும் புறம்பினும் - வீட்டின் உட்புறத்திலும், வெளிப்புறத்திலும்,
சாகா வரம் பெற்று - இறவாத வரத்தைப் பெற்று,
மூது அண்டம் முழுதும் - பழமையான இவ்வுலகம் முழுவதும்,
தனது பெயர் நிறுவும் - தனது பெயரை நிலை நிறுத்திய,
இரணியன் தன்னை - இரணியன் என்பவனை,
நரசிங்க வடிவாய் வந்து - மனித உடலும், சிங்க முகமும் கொண்டு தோன்றி,
மணி வாசல் படிக்கிடை-அழகிய வாசற்படியின் நடுவில்,
கிடத்தி - போட்டு,
மணி மார்பு - அழகிய மார்பை,
ஒளி உகிரினால் கீண்டு - ஒளி பொருந்திய கூரிய நகத்தினால் பிளந்து,
மணி குடல் பிடுங்கி - குடலைப் பிடுங்கி,
உதிரம் தனை அருந்திய-இரத்தத்தைக் குடித்த,
மா மேக வண்ணன் மருகா — கரு மேகத்தைப் போன்ற நிறத்தையுடைய திருமாலின் மருகனே,
அந்தணர் உரைத்தருளும்-அந்தணர்கள் ஓதுகின்ற,
ஆகமம், முழக்கமும்—வேதாகமங்களின் முழக்கமும்,
அமுதம் எனும் மொழி வனிதைமார்—அமுதமென்று சொல்லத்தக்க மொழிகளைப் பேசுகின்ற மாதர்களுடைய,
ஆடலின் முழக்கமும்-ஆடல்களினால் எழும் முழக்கங்களும்,
பாடலின் முழக்கமும் - இசைப் பாடல்களின் முழக்கங்களும்,
அடியார்கள் ஓதியருளும்—அடியவர்கள் ஓதுகின்ற,
செந்தமிழ் முழக்கமும் - செந்தமிழ்ப்பாடல்களின் முழக்கங்களும், (சேர்ந்து)
முழங்கு - முழங்குகின்ற,
கரன் ஊராளி-கரனூர் என்னும் ஊரை உடையவனே,
சிறுபறை முழக்கியருள் - சிறுபறையைக் கொட்டி முழக்குவாயாக,
திருமழலை மொழியில் - அழகிய மழலைச் சொல்லில்,
பல பல மறை முழக்கும் முனி - பற்பல வேதங்களை முழக்குகின்ற முனிவனே,
சிறுபறை முழக்கியருள்—,

### கருத்து

காலையிலும், மாலையிலும் வீட்டின் உள்ளும், வெளியும், இறவா வரம் பெற்று உலக முழுதும் தன் ஆட்சி செலுத்திய இரணியனை நரசிங்க வடிவாகி மார்பைப் பிளந்த திருமாலின் மருமகனே!

வேதாகம ஒலியும், மகளிர் ஆடல், பாடல் ஒலியும், அடியார்களுடைய செந்தமிழ் ஒலியும் சேர்ந்து முழங்குகின்ற கரனூரில் இருக்கும் முருகனே! சிறுபறை முழக்கு. வேதம் வல்ல முனியே! சிறுபறை முழக்கு.

### விளக்கம்

இரணியன் தான் பகலிலும் இரவிலும், அகத்தும், புறத்தும், மனிதராலும், தேவராலும், விலங்காலும், படைக் கருவிகளாலும் சாவா வரம் பெற்றிருந்த பெருவீரன். திருமால் மீது வெறுப்புக் கொண்டவன். தன் பெயரையே உலகம் சொல்ல வேண்டும் என ஆணை பிறப்பித்தவன். இவன் மகன் பிரகலாதன் தந்தை பெயரைக் கூருது திருமால் பெயரையே சொல்லி வந்தான். இரணியன் குலப் பகைவன் பெயரைச் சொல்லுதல் கூடாது எனப் பலமுறை தடுத்தனன். சிறுவன் கேட்கவில்லை. இரணியன் கோபங்கொண்டு "நீ வணங்கும் அவன் எங்கே இருக்கிறான்?" என்று கேட்க, தூணிலும் உள்ளான், துரும்பிலும் உள்ளான் என்று விடை கூறினன். உடனே அருகிலிருந்த தூணை இரணியன் எட்டி உதைக்க, அத் தூணிலிருந்து நரசிங்க வடிவாய்த் தோன்றி அவனை வாசற்படியிற் கிடத்தி, நகத்தினால் மார்பைப் பிளந்து கொன்றனன் என்பது கதை.

அடியார்கள் ஓதும் செந்தமிழ் முழக்கம் :—தேவார திருவாசகம் முதலிய திருமுறைகளின் ஒலி.

கரன் ஊர் : இது திருவிரிஞ்சை என்னும் ஊருக்குரிய ஒரு பெயர். கழுதை முகமுள்ள அசுரன் ஒருவன் இங்கு வந்து பூசித்து கழுதை முகம் நீங்கப்பெற்றான். அதனால் இத்தலம் கரனூர், கரபுரி என்றழைக்கப்படுவதாயிற்று.

### இலக்கணம்

சாகா—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
மூதண்டம்—பண்புத் தொகை; முதுமை+அண்டம்.
பல பல—அடுக்குத் தொடர்.

## சிறு தேர்ப் பருவம்

சிறு தேரை உருட்டி விளையாடும்படி வேண்டிக் கொள்வதைக் கூறும் பருவம். இஃது இருபத்தொன்றாம் மாதத்தில் நிகழ்வது.

**ஓராயிரம்..............................உருட்டியருளே**

### சொற்பொருள்

ஓர் ஆயிரம் பேரை — ஆயிரம் மனிதர்களை,
வருடத்தில் ஒரு நாளில்—ஆண்டுக்கு ஒரு முறை,
உண்கின்ற-உட்கொள்ளுகின்ற,
கற்கி முகி - குதிரை முகமுடைய பூதம்,

ஒன்று குறையாகி இடும் அன்று-அவ்வாயிரத்தில் ஒன்று குறைபட்ட பொழுது,
நக்கீரர் வர-நக்கீரர் அவ்வழியே வர,
ஓடிப் பிடித்து - ஓடிச் சென்று பற்றி,
அவரையும் - மற்றவர்களோடு அவரையும்,
காராய குன்றத்து அடைத்து - கரிய மலைக் குகையிலே அடைத்து வைத்து விட்டு,
உரிய நியதிகடன் துறைமுடிக்க-நாடோறும் செய்தற்குரிய கடன் வகைகளைச் செய்வதற்காக,
அகல-(அப்பூதம்) செல்ல,
அவர் கருதி முருகாறு உரைத்தருள - நக்கீரர் உன்னை நினைந்து திருமுருகாற்றுப் படையைப் பாடியருள,
நீலம்கலாபம் மயில்ஏறி அணுகி-நீலநிறம் பொருந்திய தோகை மயில் மீதேறி வந்து,
பேர் ஆன குன்றம் திறந்து - பெரிய மலைக் குகையைத் திறந்து,
இவுளி முகியைப் பிளந்து - குதிரைமுகப் பூதத்தைக்கொன்று,
நக்கீரர் தமையும்-நக்கீரரை விடுவித்து (அவருக்கு),
பெரிய வேல் கொண்டு புனல் கண்டு-பெரிய வேலால் நீருண்டாக்கிக் கொடுக்க,
சுனைமூழ்கி-அச்சுனையிலே நீராடி,
பிரான் முகலி நதியின் மேவ-சிவபெருமானுடைய பொன் முகலி ஆற்றிலும் நீராட,
சீராய திருவருள் புரிந்த-சிறந்த திருவருளைச் செய்தருளிய,
கரனூர் ஆளி-கரனூர் என்னும் ஊரையுடைய முருகனே,
சிறுதேர் உருட்டியருள்-சிறுதேர் உருட்டியருள்வாயாக;
செய செய என அமரர் தொழ-தேவர்கள் செய, செய என்று கூறி வணங்க,
அசுரர் முடி சிதறும் முனி-அசுரர்களுடைய முடிகள் சிதறும் படியாக அவர்களைக் கொன்று குவித்த முனிவனே,
சிறுதேர் உருட்டியருள்-,

## கருத்து

ஆண்டுக்கொரு முறை ஆயிரம்பேரைத் தின்னும் குதிரை முகமுடைய பூதமொன்று 999பேரை பிடித்து மலைக்குகையில் அடைத்து வைத்திருந்தது. இன்னும் ஒருவர் குறையாயிருக்கையில் நக்கீரர் அகப்பட, அவரையும் பிடித்து அடைத்துவிட்டு நாட் கடன் முடிக்கச் சென்றது. அப்பொழுது, உன்னை நினைந்து திருமுருகாற்றுப் படையைப் பாட, மயிலேறி வந்து பூதத்தைக் கொன்று நக்கீரரை விடுவித்து அருள் செய்த கரனூராளியே! சிறு தேர் உருட்டியருள். தேவர்கள் வெற்றியொலி எழுப்ப அசுரர்களைக் கொன்று குவித்த முருகனே! சிறுதேர் உருட்டியருள்.

## விளக்கம்

நக்கீரரை விடுவித்த கதை; நக்கீரர், காளத்தி மலைச்சாரலில் ஒரு குளக்கரையில் மரத்தின் நிழலில் சிவபூசை செய்து கொண்டிருக்க, அம்மரத்திலிருந்து ஓர் இலை பாதி நீரிலும் பாதி கரையிலும் ஆக விழ, நீரில்விழுந்த பாதி மீனாகவும் தரையில்விழுந்த பாதி பற

வையாகவும் மாறி ஒன்றையொன்றிழுக்க அதனைக் கண்ட நக்கீரர் சிவ வழிபாட்டில் வழுவி வியந்து நின்றார். அப்பொழுது ஆண்டுக்கொரு நாள் ஆயிரம் பேரை யுண்ணும் பூதம் 999 பேரைப் பிடித்து அடைத்து வைத்து விட்டு இன்னும் ஒருவருக்காக எதிர் பார்த்துக் கொண்டிருக்கையில் இவரைக் கண்டு பிடித்துக் குகையில் அடைத்துவிட்டு நீராடச் சென்றது. அப்பொழுது நக்கீரர் திருமுருகாற்றுப் படையைப் பாட முருகன் வந்து பூதத்தைக் கொன்று அவரை விடுவித்துப் பொன் முகலியாற்றில் நீராடச் செய்து பின் மறைந்தனர் என்பது.

கற்கி முகி—கற்கியின் முகத்தையுடையது; கற்கி—குதிரை: குதிரை முகமுடைய பூதம். முருகாறு—திருமுருகாற்றுப்படை. மூகலி—பொன் முகலியாறு. இது திருக்காளத்தியிலுள்ளது.

### இலக்கணம்

செய செய—அடுக்குத் தொடர்

செய செயென—செய+என. என்பதிலுள்ள அகரம் செய்யுள் விகாரத்தால் தொக்கது.

தொகுத்தல் விகாரம்

## இ. திருவருட்பா

திரு+அருள்+பா. இறைவன் திருவருளால் பாடப்பட்ட பாடல் என்றும் இறைவன் திருவருளைப் பெறப்பாடிய பாடல் என்றும் பொருள்படும். அருள் நிரம்பிய பாடல் எனவும் கொள்ளலாம். இதனைப் பாடியவர் இராமலிங்க அடிகளார்.

### ஆசிரியரைப்பற்றி

பெயர்: இராமலிங்க அடிகளார்.
ஊர்: மருதூர் (சிதம்பரத்திற்கு அருகில் உள்ளது)
தந்தை: இராமையாபிள்ளை.
தாய்; சின்னம்மை.
சமயம்: சமரச சன்மார்க்கம்.
காலம்: தோற்றம்: கி.பி. 1823. மறைவு 1873.
பிற நூல்கள்: மனுமுறை கண்ட வாசகம், சன்மார்க்க விண்ணப்பங்கள்.

இளம் வயதிலேயே பெற்றோரை இழந்த இவர் சென்னையில் தம் தமையனாருடன் தங்கியிருந்தார். பின்பு துறவறத்தை மேற்கொண்டு சிதம்பரத்தில் பலகாலம் தங்கி, இறுதியில் வடலூரில் சத்திய தருமச்சாலை, ஞானசபை இவற்றை நிறுவினார். இவர் தம் பாடல்கள் இனியவை: கேட்போரை உருக வைக்கும் தன்மை வாய்ந்தவை; சாதி சமய பிணக்குகளை அறுத்துச் சமரச மனப்பான்மையை ஊட்டுபவை; அருட்பெருஞ்சோதி தனிப் பெருங் கருணையைப் புகழ்பவை. இவரை வள்ளலார் எனவும் அழைப்பர்.

## தனித்தனி..............................அணிந்தருளே

இது திருவருட்பாவில் ஆறாந் திருமுறையில் அருள் விளக்க மாலை என்னும் பகுதியில் பதினேழாம் பாடலாகும்.

### சொற் பொருள்

முக்கனி - மா, பலா, வாழை என்னும் மூன்று பழங்களையும்,
தனித்தனி பிழிந்து - தனித் தனியாகச் சாறெடுத்து,
வடித்து - வடிகட்டி,
ஒன்றா கூட்டி-பின்னர் அவற்றை ஒன்றாகச் சேர்த்து,
சர்க்கரையும் கற்கண்டின்பொடியும் - சர்க்கரையும் கற்கண்டின் தூளும்,
மிக கலந்து - மிகுதியாகக் கலந்து
தனித்த நறும் தேன் பெய்து- சிறந்த மணமுள்ள தேனை வார்த்து,
பசு பாலும் - பசுவின் பாலையும்,
தெங்கின் தனி பாலும் - தேங்காய்ப் பாலையும்,
சேர்த்து - அதில் கூட்டி,
ஒரு தீம் பருப்பு இடியும் விரவி - ஒப்பற்ற இனிய பருப்பின் பொடியும் கலந்து,
இனித்த நறு நெய் அளைந்து - இனிய நல்ல நெய்யைக் கலந்து (காய்ச்சி)
இளம் சூட்டின் இறக்கி எடுத்த- இளஞ் சூட்டோடு அதை இறக்கி எடுத்த,
சுவை கட்டியினும்-சுவை மிகுந்த கட்டியைக் காட்டிலும்,
இனித்திடும் தெள் அமுதே - இனிக்கின்ற தெளிந்த அமுதம் போன்றவனே,
அனித்தம் அற - அழிவற,
திரு பொதுவில்-அழகிய பொன்னம்பலத்தில்,
விளங்கும் நடத்து அரசே-விளங்குகின்ற நடராசனே,
அடி மலர்க்கு - நின் திருவடித் தாமரைக்கு,
என் சொல் அணியாம் - என்னுடைய பாடல் வரிசைகளாகிய,
அலங்கல் - மாலையை,
அணிந்து அருள் - சூடியருள்வாயாக.

### கருத்து

முக்கனியின் சாறு, சர்க்கரை, கற்கண்டுப் பொடி, தேன், பசுவின் பால், தேங்காய்ப் பால், பருப்பின் பொடி, நெய் இவற்றையெல்லாம் ஒன்று கூட்டிக் காய்ச்சி இளஞ்சூட்டில் இறக்கி எடுத்த சுவைக்கட்டியைக் காட்டிலும் இனிமையான அமுதம் போன்றவனே! அம்பலத்தில் ஆடும் அரசே! என் பாமாலையை உன் திருவடிக்குச் சூட்டுகின்றேன்; அதனை ஏற்றருள்வாயாக.

### விளக்கம்

இறைவன் இனியன் என்று கூற வந்தவர், இனிய சுவை மிகுந்த பொருள்களையெல்லாம் ஒன்று கூட்டிக் காய்ச்சி எடுத்தால் எப்படியிருக்குமோ அவ்வளவு சுவையானவன்; சொல்லப்போனால் அதைக் காட்டிலும் இனிமையானவன் என்று கூறுகின்றார். அவனே தெள்ளமுதம்' பிறகு இனிமைக்குக் கேட்கவா வேண்டும்?

உணவுப் பொருள்கள் மிகுந்த சூடாக இருப்பினும் ஆறிவிடினும் சுவையாகத் தோன்ருது. இளஞ்சூடாக இருந்தால் சுவையாக இருக்கும். அதனுல் 'இளஞ்சூட்டின் இறக்கி' என்ருர்.

உன் திருவடிகட்கு எல்லோரும் பூமாலை சூட்டுவர். நான் பாமாலை சூட்டுகிறேன். அதையும் ஏற்றுக்கொள்ள வேண்டுமென வேண்டுகிருர்.

பொதுவில் — தில்லையம்பலம், அனித்தம் — நித்தம் என்பதன் மறுதலைச் சொல்.

### இலக்கணம்

தனித்தனி — அடுக்குத் தொடர்,
முக்கனி — பண்புத் தொகை. மூன்று + கனி
ஒன்ருே — ஒன்ருக என்பதிலுள்ள க-தொக்கது. இது தொகுத்தல் விகாரம்
பசும்பால் — ஆரும் வேற்றுமைத் தொகை (மரூஉ)
பொதுவில் — பொது + இல்,
அடிமலர் — உருவகம்
சொல் — கருவியாகு பெயர். சொல்லாலாகிய பாடல் எனப் பொருள்படும்.
அலங்கல் — காரணப் பெயர். (அசைதலையுடையது)

## 2. பார்த்தாலும்..........................ஏற்றருளே

இப்பாடலும் மேற் குறித்த பகுதியிலுள்ள இருபத்தாரும் பாடலாகும்.

### சொற் பொருள்

பார்த்தாலும் - எட்டி நின்று கண்டாலும்,
நினைத்தாலும் - உள்ளத்தால் எண்ணினுலும்,
படித்தாலும் - வாயாற் படித்தாலும்,
படிக்கப் பக்கம் நின்று கேட்டாலும் — பிறர் படிக்க அருகிலிருந்து செவியாற் கேட்டாலும்,
பரிந்து உள் உணர்ந்தாலும் - விரும்பி உள்ளத்துள்ளே உணர்ந்தாலும்,
ஈர்த்தாலும் - கையால் தொட்டு இழுத்தாலும்,
பிடித்தாலும் - பற்றினுலும்,
கட்டி அணைத்தாலும் - இறுகக் கட்டி மார்போடு அணைத்தாலும்,
இத்தனைக்கும் தித்திக்கும் - இவ்வளவுக்கும் தித்திக்கின்ற,
இனித்த சுவை கரும்பே - இனிமையான சுவை பொருந்திய கரும்பு போன்றவனே,
வேர்த்து ஆவிமயங்காது - புழுங்கி, புகை மூட்டம் கலக்காமல்,
கனிந்த நறும் கனியே - இயல்பாகக் கனிந்துள்ள கனிபோன்றவனே,
மெய்ம்மை அறிவு ஆனந்தம் — உண்மை, அறிவு, இன்பம் என்னும் இம்மூன்றையும்,
விளக்கும் அருள் அமுதே-விளங்கச்செய்கின்ற அருள் நிறைந்த அமுதம் போன்றவனே,
அன்பர் எலாம் - அடியவர்கள் அனைவரும்,

தீர்த்தா என்று தொழ — (உன்னைப்) புனிதனே என்று துதித்துப் போற்ற,
பொதுவில் நடிக்கும் - பொன்னம்பலத்தில் நடனமாடுகின்ற,
தெய்வ நடத்து அரசே - நடராசத் தெய்வமே,
என் சிறு மொழி - என்னுடைய சிறிய மொழிகளையும், (பாடல்களையும்)
ஏற்று அருள் - ஏற்றுக் கொண்டருள்வாயாக.

### கருத்து

பார்ப்பினும், நினைப்பினும், படிப்பினும், கேட்பினும், உணரினும், ஈர்ப்பினும், பிடிப்பினும், அணைப்பினும், யாது செய்யினும் இனிக்கும் கரும்பே! இயல்பிற்கனிந்த கனியே! அமுதே! அரசே! என் சிறு மொழியையும் ஏற்றருள்க.

### விளக்கம்

எவ்வகையால் அணுகினும் இறைவன் இனியனாக இருப்பவன் என்பதைப் "பார்த்தாலும்......................தித்திக்கும்" என்று கூறுகிறார். படித்தலாவது அவன் பெயரைப் பலகாற் சொல்லுதல்.

காய்களைப் பழுக்க வைப்போர் அவற்றைக் காற்றுப் புகாத இடத்தில் வைத்துப் புழுங்கச் செய்து புகை மூட்டம் போடுவர். இரண்டொரு நாளில் அவை கனியும். இறைவனாகிய இந்தக் கனி அவ்வாறு செய்யாமலேயே தன்னியல்பாற் கனிந்தது என்பார் 'வேர்த்து ஆவி மயங்காது கனிந்த' என்றார். இதற்கு வேறுமொரு பொருளும் கொள்ளலாம். நான் 'மனம் புழுங்கி உயிர் கலங்காமல் இருக்கக் கனிந்துள்ள கனி' என்பது அது.

'மெய்ம்மை அறிவானந்தம் விளக்கும்' என்பது 'சச்சிதானந்தம்' என்னும் இறைவன் திருப்பெயரைக் குறிக்கும். தீர்த்தன்—புனிதமானவன். என் சிறு மொழியும் என்பதிலுள்ள உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது.

### இலக்கணம்

எலாம்—இடைக்குறை.
சிறு மொழி—சிறுமொழியும் என்பதிலுள்ள உம்மை தொக்கது செய்யுள் விகாரம்.

# சிறப்புச் செய்யுள் வினாவிடை

## முற்காலச் செய்யுள்

---

### அ. நற்றிணை

**1. வேதமுதல்வன் யார்? அவன் எத்தகைய இயல்புடையவன்?**

வேதமுதல்வன் சக்கரமேந்திய திருமாலேயாகும். அவன் நிலம் காலாகவும், கடல் ஆடையாகவும், வானம் உடம்பாகவும், திசைகள் கைகளாகவும், ஞாயிறும் திங்களும் கண்களாகவும் கொண்டு, எல்லாவுயிர்களிடத்தும் உறைந்து, நிலம் முதலிய எல்லாப் பொருள்களையும் தன்னுள்ளே அடக்கிக் கொண்டிருக்கிறான்.

**2. இலக்கணக்குறிப்பு வரைக.**

மாநிலம் சேவடி—உரிச்சொற்றொடர்.
மலைநரல்பௌவம்—வினைத்தொகை.
மதியமொடு—ஒடு எண்ணுப் பொருளில் வந்தது.

**3. உறுப்பிலக்கணந் தருக.**

சேவடி—செம்மை+அடி. ஈறுபோதல் என்ற விதிப்படிமை விகுதிகெட்டு செம் என நின்று, ஆதிநீடல் என்ற விதிப்படி முதல் நீண்டு சேம் என்றாகி, இனையவும் என்ற விதிப்படி ம் கெட்டுச் சே என்று நின்று சே+அடி சேவடி என்றாயிற்று.

### ஆ. அகநானூறு

**1. தலைவன் நாடு எத்தகைய இயற்கை எழிலை உடையது?**

தலைவனுடைய நாட்டில், மூங்கிலின் துளையிலே மேல் காற்று மோதி எழுப்பிய ஒலி குழலோசையாகவும், அருவியொலி முழவொலியாகவும், கலைமான்களின் குரல் பெருவங்கியத்தின் இசையாகவும், வண்டொலி யாழிசையாகவும் ஒலிக்கின்ற இசையைக் கேட்டு மயில்கள் விறலியர்போல ஆடுகின்றன. அக்காட்சியைக் குரங்குகள் வியந்து நோக்கி மகிழ்கின்றன.

**2. கபிலர் பாடலில் இயற்கைக் காட்சி எவ்வாறு வருணிக்கப்படுகிறது ?**

இதற்கு முதல் வினாவிற்குரிய விடையையே விடையாகக் கொள்க.

**3. தலைவிகண்ட தலைவன் எவ்வாறு வந்து நின்றான் ?**

அழகிய வலிய வில்லைக் கையிற்பற்றி, அம்புகளைத் தெரிந்தெடுத்துத் தன்னால் எய்யப்பட்ட யானை சென்ற வழியை வினாவிக் கொண்டு, தினைப்புனத்தின் ஒரு பக்கத்தில் மலர்தார் மார்பனாகிய தலைவன் வந்து நின்றான்.

**4. மலர்தார் மார்பனைக் கண்ட தலைவியின் நிலை என்ன? ஏன் அந்நிலை யடைந்தாள் ?**

மலர்தார் மார்ப்பனைப்பலரும் கண்டார்கள். ஆயினும் தலைவி மட்டும் இரவிலே படுக்கையிற் கிடந்து, நீர் வார்கின்ற கண்களையுடையவளாகித் துயிலாது, தோள்கள் மெலியப் பெற்றாள்.

அவள் அவன்மேற் காதல்கொண்டமையால் இந்நிலையை அடைந்தாள்.

**5. இலக்கணக் குறிப்புத் தருக.**

மருள்வன நோக்க—முற்றெச்சம்.
அவிர்துளை மருங்கில்—வினைத்தொகை.
வண்டியாழாக—குற்றியலிகரம்.
சென்னெறி வினாஅய்—இசை நிறையளபெடை.
நின்றோன்றோற் கண்டோர்—இரண்டாம் வேற்றுமைத்தொகை.
பலர்தில்வாழி—அசைநிலை.
எவன்கொல்—அசைநிலை.

**6. பிரித்தெழுதுக.**

வண்டியாழ்—வண்டு+யாழ்.
ஓரியான்—ஓர்+யான். 'தன்னொழிமெய்ம்முன் யவ்வரின் இகரம் துன்னும்' என்ற விதிப்படி இகரம் பெற்று வந்தது.

## இ. திருமுருகாற்றுப்படை

**1. திருமுருகாற்றுப்படை—பெயர்க்காரணந்தருக**

வீடுபேறு அடைதற்குரிய ஒருவனை, வீடுபெற்ற ஒருவன் முருகனிடத்து ஆற்றுப் படுத்துவதால் அஃதாவது வழிகூறி அனுப்புவதால் இது திருமுருகாற்றுப்படை என்று பெயர் பெற்றது.

**2. பழமுதிர் சோலையின் அருவிகள் திருமுருகாற்றுப் படையில் எவ்வாறு வருணிக்கப்படுகின்றன?**

பழமுதிர் சோலையிலுள்ள அருவிகள் துகிற் கொடியைப்போல அசைந்து, அகில் சந்தனம் முதலிய மரங்களை உருட்டிக்கொண்டு,

சிறு மூங்கிலின் வேரைப் பிளந்து, தேன் கூட்டைச் சிதைத்து, ஆசினிப் பலாச் சுளைகளைக் கவர்ந்து. சுரபுன்னை மலர்கள் உதிரும்படி கருங்குரங்குகள் நடுங்க, பெண்யானைகள் குளிரும்படி வீசி, யானைத் தந்தங்களை வாரிக்கொண்டு, பொன்னும் மணியும் கொழித்து, வாழை முறியவும் இளநீர்க்குலைகள் உதிரவும் தாக்கி, மிளகுக் கொடிகள் சாய, மயிலும் கோழியும் அஞ்சியோட, ஆண்பன்றியும் கரடியும் குகைகளில் நுழைய, காட்டுக்காளைகள் முழங்க மலையுச்சியிலிருந்து இறங்கிவரும் என்று திருமுருகாற்றுப்படையில் வருணிக்கப்பட்டுள்ளது.

3, இலக்கணக் குறிப்பு வரைக.

அலங்குசினை புலம்ப—வினைத்தொகை.

மீமிசை நாகநறுமலர்—ஒருபொருட் பன்மொழி. மீமிசைக் கிளவி என்றும் சொல்வர்.

பொன் கொழியா—செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

குரூஉ மயிர்—இன்னிசையள பெடை.

# ஈ. மணிமேகலை

## ஆதிரை பிச்சையிட்ட காதை

1, விஞ்சையர் பூங்கொடி யார்? அவள் வரலாறென்ன?

விஞ்சையர் பூங்கொடி காயசண்டிகை என்னும் வித்தியாதர மகளாவாள்.

அவள் பொதிய மலையருகில் ஓர் ஆற்றங்கரையில் பன்னிரண்டு ஆண்டுக்கு ஒருமுறை பழுக்கும் நாவற் பழமொன்றை மிதித்து விட்டாள். அது விருச்சிகமுனிவன் உண்பதற்காக வைக்கப்பட்டிருந்தது. அவள் மிதித்து விட்டதை அறிந்த முனிவன் சீற்றங்கொண்டு வானத்திற்செல்லும் மந்திரத்தை மறக்கும்படி சபித்தனன். மேலும் 'யானைத்தீ' என்னும் பசிநோயால் துன்புறும் படியும் சாபமிட்டான். பின்பு மணிமேகலை வைத்திருந்த அமுத சுரபியின் உதவியால் அந்நோய் நீங்கிச் சென்றாள்.

2. சாதுவன் பொருள்களை யெல்லாம் இழக்கக் காரணம் என்ன?

ஆதிரையின் கணவனாகிய சாதுவன் என்பவன் தன் மனைவியைப் பிரிந்து, பரத்தை ஒருத்தியைக் கூடி வாழ்ந்து, வட்டாடியும் சூதாடியும் பொருள்களை யெல்லாம் இழந்தான்.

3. பரத்தை சாதுவனை அகற்றிவிடக் காரணம் என்ன?

சாதுவன் வட்டாடுதலினாலும் சூதாடுதலினாலும் பொருளை யெல்லாம் இழந்தான். கைப்பொருள் அனைத்தையும் இழந்தகார

ணத்தால், பிறருடைய செல்வ நலத்தைக் காட்டி, இவன் பொரு ளில்லாதவன் என்று அவனை அகற்றி விட்டாள்.

**4. சாதுவன் நாகர் வாழ் மலைப்பக்கம் சாரக் காரண மென்ன?**

பொருளிழந்த சாதுவன், வாணிகத்தின் பொருட்டுக் கப்பலிற் செல்லும் வணிகர்களுடன் கப்பலிற் சென்றான். கப்பல் திடீரெனக் கடலில் மூழ்கியது. அப்போது ஒடிந்த மரத்துண்டொன்றைப் பற்றிக்கொண்டு, அலைகள் உந்திச் செலுத்துதலினால் அவன் நாகர் வாழ்மலைப்பக்கம் சார்ந்தனன்.

**5. ஆதிரை தீப்புகக் காரணம் என்ன?**

வணிகர் சென்ற கப்பல் கேடுற்றதால் ஒடிந்த மரத்துண்டு களைப்பற்றிக் கரைசேர்ந்த வணிகர்களிற் சிலர் ஆதிரையிடம் 'மரக் கலம் உடைந்ததால் கடலுள் மூழ்கியிறந்தவர்களுடன் உன் கணவ னும் இறந்து போயினன்' என்று கூறினர். அது கேட்ட ஆதிரை வருந்தி 'ஊர்மக்களே! எனக்கு ஒள்ளழல் ஈமம் தருவீராக' என்று கூறிச் சுடுகாட்டில் குழி தோண்டி, விறகடுக்கி, எரிமூட்டி, 'என் கணவன் புக்குழிப்புகுவேனாக' என்று சொல்லித் தீப்புகுந்தனள்.

**6. ஆதிரை தீப் புகுந்தவுடன் எவ்வாறு தோற்றமளித் தாள்?**

ஆதிரை தீயிற் புகுதலும், அவள் படுத்த விறகுப் படுக்கையும், உடுத்தியிருந்த ஆடையும், நெருப்புப் பற்றவில்லை. பூசிய சந்தன மும், கூந்தலிற் சூடிய மலரும் பழையநிறம் கெடாமல், செந்தா மரை மலரில் இருந்த இலக்குமிபோலக் காட்சியளித்தாள்.

**7. விரைமலர்த் தாமரை ஒரு தனியிருந்த திருவின் செய்யோள் போல இருந்தவள் யார்? உவமையை உவமேயத்துடன் பொருத்திக் காட்டுக.**

அடுக்கிய விறகில் பற்றிய நெருப்பிடையிருந்த ஆதிரை தாம ரைமலரில் இருந்த திருவைப்போல விளங்கினாள்.

கொழுந்து விட்டெரியும் நெருப்பு மலர்ந்த செந்தாமரையை நிகர்க்கும் எரியின்மேல் அழகும் செந்நிறமும் கொண்டு அமர்ந் திருந்த ஆதிரை சிவந்த தாமரையில் இருக்கும் திருமகளை நிகர்ப்பாள்.

**8. தீயால் தீண்டப் பெறாது 'யாது செய்கேன்?' என ஏங்கிய ஆதிரைக்கு அசரீரி என்ன கூறியது?**

தீயும் கொல்லாத தீவினையாட்டியாகிய நான் இனி யாது செய் கேன்? என ஆதிரை ஏங்கலும், அசரீரி தோன்றி, 'ஆதிரையே! உன் பெறுதற்கரிய கணவனை அலையானது கொண்டு செலுத்தச் சென்று நக்க சாரணர் வாழ்கின்ற மலைப்பக்கஞ் சேர்ந்து உயிருடன் இருக்கின்றான் என்று கூறியது.

9. **இலக்கணக் குறிப்பு வரைக.**

விஞ்சையர் பூங்கொடி—உவமையாகு பெயர்.
மாதர்க்கு—குற்றியலுகரப் போலி.
ஆயிழை கேளாய்—வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.
அணியிழை தன்னை—பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.
அகன்றனன் போகி—முற்றெச்சம்.
தங்கா வேட்கை—ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
ஒடி மரம் பற்றி—வினைத்தொகை.
போயினன் தன்னொடு—வினையாலணையும் பெயர்.
தொடுகுழிப் படுத்து—வினைத்தொகை.
வைத்த பாயற்பள்ளி—இருபெயரொட்டுப் பண்புத் தொகை.
உருஅ தாடிய—இசை நிறையளபெடை.
யாது செய்கேன்—தன்மை ஒருமை வினைமுற்று.
ஆதிரை கேள்—அண்மை விளி.
அரும்பெறற் கணவன்—பெறலரும் என்பது முன்பின்னாக மாறி நின்றது.

10. **உறுப்பிலக்கணந் தருக.**

போயினன்—போ+இன்+அன். போ—பகுதி, இன்—இறந்த கால இடை நிலை, அன்—ஆண்பால் படர்க்கை வினைமுற்று விகுதி.
செய்கேன்—செய்+கு+ஏன். செய்—பகுதி, கு—தன்மை ஒருமை விகுதி, ஏன் விகுதிமேல் விகுதி.
சேர்ந்தனன்—சேர்+த்+ந்+த்+அன்+அன். சேர்—பகுதி, த்—சந்தி, நகரமாகத் திரிந்தது விகாரம், த்—இறந்தகால இடைநிலை, அன்—சாரியை, அன்—ஆண்பால் படர்க்கை வினைமுற்று விகுதி.

# II. இடைக்காலச் செய்யுள்

## அ. சுந்தரகாண்டம்

### உருக்காட்டு படலம்

1. **சுந்தர காண்டம் என்று பெயர் பெறக் காரணம் என்ன ?**

இதற்கு விடை, உரைப் பகுதியில் நூலைப் பற்றிய குறிப்பில் கண்டு கொள்க.

1. அசோக வனத்தில் சீதை தன்னைத்தானே வெறுத்துக் கூறிக் கொண்டவை யாவை?

நான் துன்பங்களையெல்லாம் பொறுத்துக் கொண்டு, உயிரையும் காத்து, இராமனைக் காணவேண்டுமென்ற விருப்பத்தால் இருந்தேனாயினும், அரக்கர் நகரில் பலகாலம் வாழ்ந்தேன் என்ற காரணத்தால் அவ்விராமன் என்னை ஏற்றுக் கொள்வானோ?

இராமனை மாயமானுக்குப் பின்னே அனுப்பி விட்டு இலக்குவனையும் திட்டி அவனுக்குப் பின்னே போகச் செய்து, இராவணனுடைய நகருக்குள் உயிர் வாழ்தலை உலகம் சரி என்று ஒப்புமோ?

இராமன் அரக்கர்களைக் கொன்று, என்னை விடுவித்த காலத்தில் 'வீட்டிற்குள் நுழையும் தகுதி உனக்கில்லை' என்று கூறினால் எனது கற்பு நிலையை எவ்வாறு மெய்பித்துக் காட்டுவேன்? என்று சீதை பலவாறு கூறிப் புலம்பினாள்.

2. மஞ்சனை வைது பின் வழிக் கொள்ளச் செய்த நிகழ்ச்சி யாது?

மாரீசன் மாயமானாக வந்தபொழுது, சீதை அம்மானைப் பிடித்துத் தர வேண்டுகிறாள். இராமன் மானின் பின்னே சென்றும் அதைப் பிடிக்க முடியாமல் அம்பெய்கிறான். மானாக வந்த மாரீசன் ஓமே சாயும் பொழுது அபயக்குரல் கொடுக்கிறான். அக்குரலை இராமன் குரலென்று கருதி இலக்குவனைச் சென்று பார்க்கும்படி ஏவினாள். அவன் இஃது அரக்கருடைய மாயமாக இருக்கும் என்று கூறினான். அதனால் சீதை அவனைப் பலவாறாக வைது, போகச் சொன்னாள்.

3. தன்னையே வெறுத்துக் கூறிய சீதை இறுதியில் எம் முடிவுக்கு வந்தாள்?

இராமன் என்னை 'வீட்டிற்குள் நுழையும் தகுதி உனக்கில்லை' என்று கூறி விட்டால், என் கற்பை எவ்வாறு மெய்ப்பித்துக் காட்டுவேன்? என்று பலவாறு ஏங்கிய சீதை இறுதியில், இனி இறத்தலே அறமாகும்; எனக்கு காவலாக உள்ளவரும் நான் செய்த தவத்தினால் உறங்குகின்றார்கள். இதுதான் சரியான சமயமும் இடமுமாகும் என்று கருதி, ஒரு மாதவி சோலைக்குள் புகுந்தாள்.

4. அனுமன் சீதையிடம் தன்னை எவ்வாறு அறிமுகம் செய்து கொள்கின்றான்?

அனுமன், தற்கொலை செய்து கொள்ளத் துணிந்த சீதையைக் கண்டு, நடுங்கி, அவளைக் கையால் தொடக் கூசி தேவர்கட்குத் தலைவனாகிய இராமனுடைய தூதுவன் நான் என்று தொழுது நின்று, அத்தலைவனுடைய ஏவலால் உன்னை எங்குந் தேடிப் புறப்பட்டவர் பலர். அவருள் நான் செய்த தவந்தால் உன்னைக் கண்டு கொண்டேன் என்று அனுமன், தன்னை இன்னவன் என்று அறிமுகஞ் செய்து கொண்டான்.

**5. இராமன் சீதையிடம் வாராமைக்குக் காரணமாக அனுமன் கூறியது யாது?**

துன்பத்தில் மூழ்கிக் கொண்டிருக்கும் இராமன் நீ இங்கிருப்பதை அறியான். அதனால்தான் அவன் வரவில்லை. இதற்குக் காரணம் வேறு வேண்டுமோ? அரக்கர்கள் இன்னும் சாகாமல் இருக்கிறார்களே; அது போதாதா? நீ இங்கு இருப்பதை அவன் அறிந்திருந்தால் அரக்கர்களை இந்நேரம் கொன்று குவித்திருக்க மாட்டானா? என்று காரணம் கூறுகிறான்.

**6. சீதை ஐயுறாமல் இருக்க அனுமன் கூறிய சான்றுகள் யாவை?**

அன்னையே! நீ என்னைப்பற்றி ஐயுற வேண்டா. தலைவனாகிய இராமன் தந்தனுப்பிய அடையாளமாகிய கணையாழி இருக்கின்றது. மேலும் அவன் கூறியனுப்பிய அடையாள மொழிகளும் உள. அதனால் தவறாக நீ கருதவேண்டா என்று அனுமன் கூறினான்.

**7. இராமன் அனுமனிடம் கூறியனுப்பிய அடையாள மொழிகள் யாவை?**

இராமன் கூறியனுப்பிய அடையாள மொழிகளாவன: இராமன் காடு செல்லும்போது சீதை, உடுத்த துகிலோடும், உயிர் உக்க உடலோடும், எடுத்த முனிவோடும் பக்கத்தில் வந்து நின்றதும், இராமன் நகரை விட்டு நீங்கா முன்பே அவள் 'கான் யாண்டையது' என வினவியதும், சுமந்தரனிடம் 'கிள்ளையொடு பூவைகளை வளர்க்கும் விதத்தைத் தோழிகட்குச் சொல்லுமாறு சீதை சொல்லியனுப்பிய பிள்ளைமைத் தன்மையும் ஆகும்'.

**8. சீதை அனுமனை எவ்வாறு தெளிந்தாள்? தெளிந்து என்ன கேட்டாள்?**

இவன் நல்வழியில் நின்று ஐம்பொறிகளையும் வென்றவனாவான். அல்லது தேவனாக இருக்கவேண்டும். ஏனெனில் நல்லுணர்வும், தூய உள்ளமும், குற்றமின்மையும் உடையவனாக இருக்கின்றான். ஆதலால் இவன் அரக்கன் அல்லன். இவன் அரக்கனாயினும் சரி, தேவனாயினும் சரி, அல்லது குரங்கினத் தலைவனாயினும் சரி, அல்லது இவனால் விளைவது கொடுமையேயாயினும் நன்மையேயாயினும் சரி; இங்கு என் தலைவன் பெயரைச் சொல்லி என் உணர்வை உருக்கிவிட்டான்; என்னையும் சாவாமற் காத்தான். இதைவிடச் சிறந்த உதவி யாதுளது? இவனிடம் என் உள்ளம் இரக்கம் காட்டுகிறது. மேலும் கள்ளமில்லாச் சொற்களையுடையவனாகவும், கண்ணீர் வார்ந்து புலம்புகின்ற சொற்களையுடையவனாகவும் காணப்படுகின்றான். அதனால் இவன் நம்மால் வினவுதற்குரியனே எனத் தெரிந்து வீர! நீ யாவன்? என வினவுகின்றாள்.

9. நின்றவன் நிருதன் அல்லன் என்று சீதை எங்ஙனம் தெளிந்தாள்?

10. அனுமன் என்ன உதவி செய்ததாகச் சீதை கூறுகிருள்?

11. இவன் வினவுதற்குரியன் என்று சீதை ஏன் துணிந்தாள்? துணிந்து விஞவியது யாது?

இம்மூன்று விஞக்கட்கும், எட்டாம் விஞவிற்குரிய விடையையே பிரித்து எழுதிக்கொள்க.

12. நீ யாவன் என வினவியதற்கு அனுமன் கூறிய விடை யாது?

அன்னேயே! இராமன் உன்னேப் பிரிந்தபின்பு தேடிப்பெற்ற நண்பனும் கதிரவன் மைந்தனும் கவிக்குல நாயகனும் ஆகிய சுக்கிரீவன் என்பவன் ஒருவன் உளான். அவன் எவ்விதக் குற்றமும் அற்றவன். அவனுக்கு முன்ஞேன் ஒருவன் வாலி என்னும் பெயருடையான் உளன். அவ்வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்கு அரசு நல்கி அவனே நண்பனுகக் கொண்டான். அந்தச் சுக்கிரீவனுடைய ஆலோசனேச் சபையில் ஒருவனுக நான் இருக்கின்றேன்; வாயுதேவனுடைய மகன்; பெயர் அனுமான். உன் நாயகனுகிய இராமன் ஏவலால் உன்னேத் தேடி வந்து இங்குக் கண்டேன் என்று அனுமன் கூறினுன்.

13. வாலி யார்? அவன் எப்படிப்பட்ட வலிமையுடையவன்?

வாலி சுக்கிரீவன் உடன் பிறந்தோன். இராவணனேயே தன் வாலினுல் கட்டியிழுத்து, அவனுடைய வலிமை கெடுமாறு, எல்லாத் திசைகளிலும் பாய்ந்து சென்று, துன்பப்படுத்திய வெற்றியுடையவன். தேவர்கள் வேண்டிக்கொள்ளத் திருப்பாற்கடலில் மந்தர மலேயாகிய மத்தில் சுற்றிய வாசுகி என்னும் பாம்பைத் தானெருவனே நின்று இழுத்துக் கடைந்தவன்.

14. அனுமன் தான் இலங்கைக்கு வந்ததற்கு என்ன காரணம் கூறினுன்?

தாயே! உன்னேப் புன்தொழில் அரக்கன் தூக்கிச் சென்ற நாளிலே நீ ஆடையிலே முடித்து எங்கள் மலேமேல் போட்டுச் சென்ற அணிகலன்களே இராமனிடம் காட்டினேன். அதனுல் அவன் அடியனுகிய என்னேத் தனியே அழைத்து 'நீ தென்றிசைக்குச் சென்று சீதையைத் தேடி வா' என்று பணித்தான். அவன் ஆணேயை மேற்கொண்டு உன்னேத் தேடி இலங்கைக்கு வந்தேன் என்று அனுமன் தான் இலங்கைக்கு வந்ததைக் கூறினுன்.

**15. இராமன் இன்னும் உயிர் தாங்கிக்கொண்டிருப்பதற்குக் காரணமாக அனுமன் என்ன கூறுகின்றான் ?**

அன்னையே! நீ ஆடையில் முடித்துப்போட்ட அணிகலன்களைக் காட்டியபொழுது இராமன் அடைந்த நிலை நான் சொல்லும் வகையினாலே அறியத்தக்கதோ? அவன் உயிர் இன்னும் நிலைத்து நிற்பதற்கு வேறு காரணமும் உளதோ? அந்நகைகளே காரணம். நீ அன்று கழற்றி யெறிந்த அணிகலன்களே உன்னுடைய மங்கல நாணைக் காத்தன என்று அனுமன், இராமனுடைய உயிர் நிலைத்து நிற்பதற்குக் காரணம் கூறுகிறான்.

**16. சீதையின் மங்கல நாணைக் காத்தவை எவை என்று அனுமன் கூறுகின்றான் ?**

இதற்குப் பதினைந்தாம் வினவின் விடையையே விடையாகக் கொள்க.

**17. அனுமன் எதனை அடையாளமாகச் சீதைக்குக் காட்டினான் ?**

இராமனுடைய பெயர் பொறித்ததும், செய்தற்கரிய வேலைப்பாடு அமைந்ததும் ஆகிய கணையாழியைக் காட்டு என்று சொல்லி இதனை இராமன் கொடுத்தான் எனச் சொல்லி அக்கணையாழியை அனுமன் அடையாளமாகக் காட்டினான்.

**18. கணையாழியைக் கண்ட சீதையின் மகிழ்ச்சியைக் கம்பர் எவ்வாறு கழறுகின்றார் ?**

கணையாழியைக் கண்ட சீதையின் மகிழ்ச்சிக்கு, இறந்துபோனவர்கள் தம் பிறவிப்பயனை அடைந்தால் உண்டாகும் மகிழ்ச்சியை ஒப்பிடுவேனோ ? அல்லது ஒன்றை மறந்துபோனவர்கள் மீண்டும் அந்நினைவு வரப்பெற்றமையால் அடையும் மகிழ்ச்சியை ஒப்பிடுவேனோ ? அல்லது பிரிந்த உயிர் திரும்ப வந்து சேர்ந்ததால் உண்டாகும் மகிழ்ச்சியை ஒப்பிடுவேனோ ? எவ்வாறு சொல்வேன் ? என்று கம்பர் கழறுகிறார்.

**19. மோதிரத்தைக்கண்ட சீதை யார் யாரை யொத்தாள் ?**

மோதிரத்தைக் கண்ட சீதை, இழந்த மணியைப் பெற்ற நாகத்தையும், இழந்த செல்வத்தை மீண்டும் பெற்றவரையும், குழந்தைப் பேறடைந்த மலடியையும், குருடராயிருந்து மீண்டும் விழிபெற்றோரையும் ஒத்தாள்.

**20. அனுமன் கொண்டுவந்து கொடுத்த கணையாழி சீதைக்கு எவ்வெவற்றைப் போல ஆகியது ?**

சீதைக்கு அம்மோதிரம் பசித்தோர்க்குக் கிடைத்த உணவு போலவும், இல்லறத்தாரை அடைந்த விருந்துபோலவும், உயிரை மீட்கும் சஞ்சீவி போலவும் ஆகியது.

21. இடஞ்சுட்டுக ;

(அ) அண்டர் நாயகன் அருட்டூதன் யான்.

(ஆ) நெய்யுறு விளக்கனுய் நினையல் வேறு.

(இ) வீர நீ யாவன்.

(ஈ) இறந்தவர் பிறந்தபயன் எய்தினர்கொல் என்கோ.

'அண்டர்நாயகன் அருட்டூதன் யான்' இஃது அனுமன் கூற்று. சீதையைப் பார்த்துச் சொல்லியது. சீதை மனம் வருந்தி அசோக வனத்தில் தற்கொலை செய்துகொள்ள முயன்றபோது அதனைக் கண்ட அனுமன் அவளுடைய மெய்தீண்டக் கூசி 'அண்டர்நாயகன் அருள் தூதன் யான்' என்ருன்.

'நெய்யுறு விளக்கனுய் நினையல் வேறு' இஃது அனுமன் கூறியது ; சீதையை நோக்கிக் கூறியது ; திடீரென அனுமனைக் கண்ட சீதை இஃது இராவணன் சூழ்ச்சியோ என ஐயுறுவதை அறிந்து 'நெய்யுறு விளக்கனுய் நினையல் வேறு' என அனுமன் கூறினுன்.

'வீர நீ யாவன்' இது சீதை கூறியது ; அனுமனை நோக்கிக் கூறியது. அனுமனுடைய தோற்றம் செயல்களைக்கண்ட சீதை ஐயம் நீங்கி, இவன் வினவுதற்குரியவன் எனத் தெளிந்து 'வீர நீ யாவன் ?' எனக் கேட்டாள்.

'இறந்தவர் பிறந்தபயன் எய்தினர்கொல் என்கோ' இது கவி கூறியது. கணையாழியைக் கண்ட சீதையின் மகிழ்ச்சியைக் கூற வந்த கம்பர் எதை உவமையாகச் சொல்வது என்று 'இறந்தவர் பிறந்தபயன் எய்தினர் கொல் என்கோ' என்று கூறுகின்ருர்.

22. இலக்கணக் குறிப்பு வரைக.

கழலவற்காணும் ஆசையால்—இரண்டாம் வேற்றுமைத் தொகை.

மஞ்சனை வைது—மரூஉ மொழி.

உய்ஞ்சனென் இருத்தலும்—முற்றெச்சம். மரூஉமொழி.

உலகம் கொள்ளுமோ—இடவாகுபெயர்.

இற்புகத் தக்கலை—எதிர்மறை முன்னிலை ஒருமை வினைமுற்று.

சிறையின்மீட்ட —காலவழுவமைதி.

இழைத்துக் காட்டுகேன்—தன்மை ஒருமை எதிர்கால வினை முற்று.

போதுலாம் மாதவி—செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம், உலாவும் என்பது உலாம் என வந்தது.

தொண்டைவாய்மயில்—உவமைத்தொகை.

தொண்டைவாய் மயில்—உவமையாகுபெயர்.

விளக்கனுய் நினையல்—எதிர்மறை வியங்கோள் வினைமுற்று.

கனியிற்காண்டி—முன்னிலை ஒருமை வினைமுற்று.

ஐந்தும்வென்றவன்—முற்றும்மை.

தவையிலன்போலும்—ஒப்பில் போலி.

காய்கதிர்ச் செல்வன்மைந்தன் —நான்காம் வேற்றுமைத் தொகை.

**விலங்கல்மத்தில்** சுற்றிய—இருபெயரொட்டுப் பண்புத் தொகை.
தென்றிசை **சேறி**—ஏவல் ஒருமை வினைமுற்று.
இற்றை நாளளவும் **அன்ன**—அன்ன என்பதன் விளி.
மங்கலம் **காத்த**—அன்சாரியை பெருது வந்த அஃறிணைப் பன்மை வினைமுற்று.

23. பிரித்தெழுதுக.
நீணகர்—நீள்+நகர்.
ஆண்டகை—ஆண்+தகை.
குரக்கினம்—குரங்கு+இனம்.
பின்னவற்கு—பின்னவன்+கு.
நன்னெடும்—நல்+நெடும்.
நீட்டிதென—நீட்டு+இது+என.
வாணுதலி—வாள்+நுதலி.
சேவடி—செம்மை+அடி.

24. உறுப்பிலக்கணந் தருக.
தக்கலை—தகு+அல்+ஐ. தகு—பகுதி, அல்—எதிர் மறை இடைநிலை, ஐ—முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதி.
காட்டுகேன்—காட்டு+கு+ஏன். காட்டு—பகுதி, கு—தன்மை ஒருமை வினைமுற்று விகுதி, ஏன்—விகுதி மேல் விகுதி.
சாம்பினர்—சாம்பு+இன்+ஆர். சாம்பு—பகுதி, இன்—இறந்த கால இடைநிலை, ஆர்—பலர் பால் படர்க்கை வினைமுற்று விகுதி.
அடைந்தனென்—அடை+த் (ந்)+த்+அன்+என். அடை—பகுதி, த்—சந்தி, நகரமானது விகாரம், த்—இறந்தகால இடைநிலை, அன்—சாரியை, என்—தன்மை ஒருமை வினைமுற்று விகுதி.
நினையல்—நினை+அல், நினை—பகுதி, அல்—எதிர்மறை வியங்கோள் வினைமுற்று விகுதி.
காண்டி—காண்+ட்+இ. காண்—பகுதி, ட்—எழுத்துப் பேறு, இ—முன்னிலை வினைமுற்று விகுதி.
புலம்பா நின்றான்—புலம்பு+ஆ நின்று+ஆன். புலம்பு—பகுதி, ஆ நின்று—நிகழ் கால இடைநிலை, ஆன்—ஆண் பால் படர்க்கை ஒருமை வினைமுற்று விகுதி.
சேறி—செல்+த்+இ. செல்—பகுதி, (இது விகாரப்பட்டு நின்றது) த்—எழுத்துப்பேறு, இ—ஏவல் ஒருமை வினைமுற்று விகுதி.
காத்த—கா+த்+த்+அ கா—பகுதி, த்—சந்தி, த்—இறந்த கால இடைநிலை, அ—அஃறிணைப் பன்மை வினைமுற்று விகுதி.
என்கு—என்+கு. என்—பகுதி, கு—தன்மை ஒருமை எதிர் கால வினைமுற்று விகுதி.

# ஆ. வில்லி பாரதம்

## பதினேழாம் போர்ச் சருக்கம்

**1. கண்ணன் எந்த வடிவங்கொண்டு கன்னனிடம் சென்றான்? சென்று அவனிடம் எவ்வாறு இரந்தான்?**

கண்ணன் வேதியன் வடிவங்கொண்டு கன்னனிடம் சென்று, 'கன்னனே! நீ இவ்வுலகில் துயர்ப்படுகின்றவர்களுக்கு வேண்டிய பொருள்களைத் தருகின்றாய் என்று கேள்விப்பட்டேன். நான் மேரு மலையில் தவம் செய்தவன்; பெரிய வறுமைத் துயரால் வாடுகிறேன். நீ இப்பொழுது எனக்கு ஒன்று தரவேண்டும்' என்றான். அது கேட்ட கன்னன் 'நான் தரத்தக்க பொருள் யாது? சொல்' என்று கேட்க வேதியனாகவந்த கண்ணன் 'உன் புண்ணியம், அனைத்தையும் தரவேண்டும்' என்றிரந்தான்.

**2. புண்ணியம் அனைத்தும் உதவுக எனக் கேட்ட வேதியனுக்கு கன்னன் என்ன கூறினான்?**

ஐயனே! என் உயிரோ நிலை கலங்கி யிருக்கிறது. உயிர் உடலில் இருக்கிறதோ வெளியில் இருக்கிறதோ என்று அறியவும் முடியவில்லை. நான் வேண்டுவார் வேண்டும் பொருளெல்லாம் தருகின்ற நாளில் நீ வரவில்லையே. இருப்பினும் இப்பொழுது புண்ணியம் அனைத்தும் உனக்குக் கொடுத்தேன். நீ பெற்றுக் கொள்க. அயனும் உனக்கு நிகராக மாட்டான் என்றால் உனக்குக் கொடுப்பதைவிட என் புண்ணியம் எனக்குப் பெரிதா? என்று வேதியனிடம் கன்னன் கூறினான்.

**3. கண்ணன் கன்னனிடம் புண்ணியத்தை எவ்வாறு பெற்றான்?**

கன்னன் புண்ணியம் அனைத்தும் ஈந்தேன் என்றவுடன் வேதியன் மனம் மகிழ்ந்து, 'நீர் வார்த்துத் தருக' என்றான். போர்க்களத்தில் அம்பு பட்டுக் கிடக்கும் கன்னன் தன் மார்பில் தைத்துள்ள அம்பைப் பிடுங்கி அங்கிருந்து வரும் செந்நீரால் வார்த்துக் கொடுக்க வேதியனாகி வந்த கண்ணன் பெற்றான்.

**4. முன்னமோர் அவுணன் செங்கை நீர் ஏற்று மூவுலகும் உடன் கவர்ந்த கதை யாது?**

இதற்கு விடை உரைப் பகுதியிற் கண்டு கொள்க.

**5. கன்னன் கண்ணனிடம் என்ன வரம் வேண்டினான்? அதற்குக் கண்ணன் கூறியதென்ன?**

வேதியனாகி வந்தவன் கன்னனை நோக்கி உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள், தருகிறேன் என்றான். கன்னன், முனிவனே

வெவ்வினையால் நான் பிறவி எடுத்தால் பிறவிதோறும், என்பால் வந்து இல்லை என்றிரப்போர்க்கு நான் இல்லை என்று சொல்லாத இதயத்தை நீ எனக்கு அளிப்பாயாக என்று வேண்டினன். அதற்கு அவ்வேதியன் அவனைத் தழுவி நின்று, நீ எத்தனை பிறவி எடுத்தாலும் அப் பிறவியிலெல்லாம் ஈகையும் செல்வமும் எய்தி, முத்தியும் பெறுவாயாக என்று உரைத்தான்.

**6. வேதியன் கன்னனுக்கு வரமளித்த பிறகு அவன் முன்பு எவ்வாறு தோன்றிக் காட்சியளித்தான்?**

கன்னன் கண்டு கண் களிக்குமாறு, கார் மேகத்தைக் காட்டிலும் கரிய திருமேனியும் பஞ்சாயுதம் விளங்கும் கைகளையும் உடையவனாகி, முதலை வாயில் அகப்பட்ட கஜேந்திரன் என்ற யானையைக் காப்பதற்காக வந்த திருக்கோலத்துடன் காட்சியளித்தான்.

**7. கன்னனுக்குத் திருமால் காட்சியளித்தவுடன் யார் யார் பணிந்தார்கள்? கன்னன் என்ன கூறி மகிழ்ந்தான்?**

திருமால் காட்சியளித்தவுடன் தேவர்களும், ஏனைய தேவப் பிறவியுடையவர்களும் தேவர் தலைவனாகிய இந்திரனும், அயனும், முனிவர்களும் கண்டு மலர் தூவிப் பணிந்தார்கள். கன்னன், 'போர்க்களத்தில் அருச்சுனனுடைய அம்புபட்டு இறக்கவும், நாராயணனைக் காணவும் பெற்றேன்' என்று கூறி மகிழ்ந்தான்.

**8. திருமாலைக் கண்ட கன்னன் அகமிக மகிழ்ந்து கூறியனவற்றைச் சுருக்கி வரைக.**

வேள்வி புரிந்தும், கங்கை முதலிய புனலாடியும், யோகங்கள் செய்தும், மலர் தூவிப் பூசித்தும், போகமெல்லாம் சுருக்கிக் கடுந் தவம் புரிந்தும் பெறமுடியாத பெரும் பேற்றை நான் உன்னருளால் பெற்றேன்.

மலை, மழை முகில், கடல்நீர், காயம்பூ இவற்றையொத்த திருமேனியும், கதை, வாள், சங்கு, சக்கரம், வில் என்னும் ஐம்படையும், துளசிமாலையணிந்த மார்பும், தோளும், மணிக் கழுத்தும், செவ்விதழும், தாமரை முகமும், சோதி முடியும் ஆகிய இவற்றை இப்பிறப்பிலேயே நான் கண்டு கொண்டேன்.

தருமன் முதலான என் தம்பிமாருடன் போர் புரிந்து, என் தோழனுக்காகச் செஞ்சோற்றுக் கடன் கழித்தேன். இந்திரனுக்குக் கவசகுண்டலமீந்தேன். புண்ணியங்களை உனக்குக் கொடுத்தேன். ஆதலால் நான் மாதவஞ் செய்தவனாவேன்.

கங்கையைத் தோற்றுவித்த உன் திருவடியை வணங்கப் பெற்றேன். உன்னால் மதிக்கப்பட்டேன், உன் மார்பும் தோளும் தீண்டப் பெற்றேன். அம்பு பட்டு வீழ்ந்தும் உணர்வுடன் உன் திருப் பெயரைச் சொல்லப் பெற்றேன். இவ்வாறு யான் பெற்ற பேற்றைப்போல வேறு யார் பெற்றார்கள்? என்று கன்னன் கூறினன்.

**9. கன்னன் மகிழ்ந்து கூறிய பிறகு கண்ணன் கூறியவை யாவை ?**

அன்று கவசகுண்டலம் வாங்க இந்திரனை அனுப்பியதும், குந்தியை அனுப்பி அருச்சுனன் மேல் பாம்புக் கணையை ஒரு முறைக்கு மேல் எய்யக்கூடாதென வரம் பெறச் செய்ததும், உன் பிறப்பைப் பற்றி உன்னிடம் கூறச் செய்ததும், நீ எய்த அரவக்கணை அருச்சுனன் மேற்படாதவாறு தேரை யழுத்தியதும், என் செயலே யாகும் என்று கண்ணன் கூறினான்.

**10. இடஞ்சுட்டி விளக்குக.**

(அ) செரு நீ ஒழிகென.

(ஆ) புண்ணியம் இதனினும் பெரிதோ?

(இ) பெறுதற் கெட்டாப் பெரும்பயன் பெற்றேன்.

**'செரு நீ ஒழிகென'**—இது கண்ணன் கூறியது. அருச்சுனனை நோக்கிக் கூறியது. கதிரவன் மறையும் மாலைப்பொழுதில், அருச்சுனனுடைய அம்பு பட்டுக் கன்னன் தேரிற் சாய்ந்தவுடன், அவனிடம் சென்று புண்ணியம் அனைத்தும் வாங்குவதற்காகக் கண்ணன் அருச்சுனனை நோக்கிச் 'செரு நீ ஒழிகென'ச் சொல்லிவிட்டு வேதியன் வடிவம் கொண்டு சென்றான்.

**'புண்ணியம் இதனினும் பெரிதோ'** இது கன்னன் கூறியது. வேதியனாகி வந்த கண்ணனை நோக்கிக் கூறியது. அவ்வேதியன் 'உன் புண்ணியம் அனைத்தும் தா' எனக் கேட்டபொழுது 'உனக்குப் பிரமனும் ஒப்பாக மாட்டான் என்றால், புண்ணியம் இதனினும் பெரிதோ' என்று கன்னன் கூறினான்.

**'பெறுதற் கெட்டாப் பெரும்பயன் பெற்றேன்'** இது கன்னன் கூறியது. திருமாலை நோக்கிக் கூறியது. திருமால் தன் சுய உருவத்தைக் காட்டியபொழுது கன்னன் மகிழ்ந்து 'பெறுதற் கெட்டாப் பெரும்பயன் பெற்றேன்' என்று கூறினான்.

**11. இலக்கணக் குறிப்பு வரைக.**

சுடர் தரத் தோன்றிய—ஆகுபெயர்.
பக்குவந்தன்னில் **வந்திலை**—முன்னிலை எதிர்மறை வினைமுற்று.
மூவுலகும் **கவர்ந்தோன்**—வினையாலணையும் பெயர்.
உனக்குத் **தருதும்**—தனித்தன்மைப் பன்மை வினைமுற்று.
**உரையா இதயம்**—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
முத்தியும் பெறுதி—இறந்தது தழுவிய எச்சவும்மை.
முத்தியும் **பெறுதி**—முன்னிலை ஒருமை வினைமுற்று.
மலர் **கொடு**—இடைக்குறை.
**அரவ வாளி**—இரு பெயரொட்டுப் பண்புத்தொகை.

**12. பிரித்தெழுதுக.**

பொருணீ—பொருள் + நீ.
கலங்கிய தியாக்கை—கலங்கியது + யாக்கை.

அங்கை—அகம்+கை.
வெவ்வினை—வெம்மை+வினை.
ஆனிரை—ஆன்+நிரை.
கடவுணாதன்—கடவுள்+நாதன்.

13. உறுப்பிலக்கணந் தருக.

தருதும்—தா+தும். தா—பகுதி (விகாரப்பட்டது). தும்—தன்மைப் பன்மை வினைமுற்று விகுதி.
கண்ணுற்றேன்—கண்ணுறு+ஏன். கண்ணுறு—பகுதி, ஏன்—தன்மை ஒருமை வினைமுற்று விகுதி. பகுதி இரட்டித்து இறந்த காலங் காட்டிற்று.
ஈந்தேன்—ஈ+த்(ந்)+த்+ஏன். ஈ—பகுதி, த்—சந்தி, நகரமானது விகாரம், த்—இறந்தகால இடைநிலை, ஏன்—தன்மை ஒருமை வினைமுற்று விகுதி.

# இ. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்

## ஊமை தமிழறிந்த திருவிளையாடல்

1. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்—பெயர்க் காரணம் வரைக.

இதற்கு விடை உரைக் குறிப்பிற் கண்டு கொள்க.

2. சங்கப் புலவர்கள் ஏன் மாறுபட்டனர்? பின் என்ன முடிவுக்கு வந்தனர்?

இறையனார் அகப் பொருட் சூத்திரத்திற்கு உரை கண்ட சான்றோர்கள் தத்தம் உரையே சிறந்ததென வாதிட்டு மாறுபட்டனர். பிறகு புலவர்கள் ஒன்று சேர்ந்து 'நம் உரையனைத்தையும் இறைவன் திருமுன்பு சொல்வோம். அவன் எதைச் சிறந்த உரை என்று சொல்கின்றானோ அதையே நாமும் கொள்வோம்' என்று முடிவு செய்து, இறைவனிடம் சென்று, 'இறைவனே! எம் உரையுள் எது சிறந்தது என்பதை எமக்குக் கூறியருள்வாயாக' என்று வேண்டினர்.

3. சிறந்த உரை எது எனக்கூறியருள வேண்டும் என்று வேண்டிய புலவர்க்கு இறைவன் யாது கூறினன்?

புலவர்களே! நீங்கள் உரைத்த உரைகள் அனைத்தும் நன்றே. ஆயினும் நம் குமாரனாகிய குமரன், உப்பூரிகுடி கிழாருக்கு மகனாக அவதரித்துள்ளான்; அவன் ஊமை; இளம் பருவத்தன்; அவன் பெயர் உருத்திரசன்மன்; பேரறிவுடையன். அவனிடம் சென்று

உரைத்தால் சிறந்த உரையைத் தேர்ந்தெடுப்பான். அதுவே சிறந்த உரையாகும். கவலையின்றி, ஐயமின்றி அவனிடம் செல்க என இறைவன் கூறியருளினுன்.

4. இறைவன் உருத்திரசன்மனிடம் செல்க என்றவுடன் புலவர்கள் வினவியதென்ன? அதற்கு இறைவன் கூறிய மறுமொழி யாது?

உருத்திரசன்மன் பிறந்த நாள் முதல் ஊமையாயிற்றே; அவன் எவ்வாறு உரை முடிவு காணவல்லான்? என்று புலவர்கள் கேட்டனர். அதற்கு இறைவன் 'அவன் உரையைக் கேட்டுக் கொண்டிருக்கும் பொழுது எந்த உரைக்குக் கண்ணீர் வார்ந்து, மெய்ம்மயிர் சிலிர்க்க இருக்கின்ருனே அதுவே சிறந்த உரை; ஏனையன சிறந்த உரையாக மாட்டா.' புலவர்களே! ஒருவரும் பகை கொள்ளாதீர். ஒன்று கூடி அவனை அழைத்து வந்து, நம் சங்க மண்டபத்தில் அமர்த்திப் பணிவுடன் கேளுங்கள் என்று மறுமொழி கூறினுன்.

5. ஊமனைப் புலவர்கள் எவ்வாறு உபசரித்தனர்? எவ்வெவர் உரைகள் சிறந்தன என்று தேர்ந்தெடுக்கப் பட்டன?

இறைவன் ஆணைப்படி அவ்வூமனை அழைத்து வந்து, சங்க மண்டபத்தில் சிம்மாசனத்தில் அமர்த்தித் தூபதீபங் காட்டித் தம் உரைகளைப் புலவர்கள் படித்தார்கள். அப்பொழுது ஊமை, கீரன், கபிலன், பரணன் என்னும் மூவருடைய உரைகளைக் கேட்டுப் புளக மெய்திக் கண்ணீர் சொரிந்தான். அம்மூவருடைய உரைகளும் சிறந்தன எனத் தேர்ந்தெடுத்தனர்.

6. இலக்கணக் குறிப்புத் தருக.

நயந்திடக் கடவம்—உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினை முற்று.
கமலத்தாள் ஏத்தி—உவமைத் தொகை.
வரனுறக் கேண்மின்—ஏவற் பன்மை வினைமுற்று.
அறியா எந்தை—மரூஉ மொழி.
தூபதீபம்—உம்மைத் தொகை.

7. பிரித்தெழுதுக.

தத்தம்—தம்+தம்.
என்றியாரும்—என்று+யாரும்.
சொற்றர—சொல்+தர.
செட்டிக்கியாதொரு—செட்டிக்கு+யாதொரு.

8. உறுப்பிலக்கணந் தருக.

மலைந்தனர்—மலை+த் (ந்)+த்+அன்+அர். மலை—பகுதி, த்—சந்தி, நகரமானது விகாரம், த்—இறந்தகால இடைநிலை, அன்—சாரியை, அர்—பலர் பால் வினைமுற்று விகுதி.

பெற்றேம்—பெறு+ஏம். பெறு—பகுதி, ஏம்—தன்மைப் பன்மை வினைமுற்று விகுதி. பகுதி இரட்டித்து இறந்த காலங் காட்டிற்று.

போயினன்—போ+இன்+ஆன். போ—பகுதி, இன்—இறந்த கால இடைநிலை, ஆன்—ஆண்பால் படர்க்கை வினை முற்று விகுதி.

# III. தற்காலச் செய்யுள்

## அ. சுகவாரி

**1. தாயுமானவர் தாம் எவ்வாறு செயலற்று அயர்ந்த தாகக் கூறுகிறார்?**

பொன்னே, மணியே, அன்பே, அறிவே, அறிவில் ஊறும் ஆனந்த வெள்ளமே என்று பல முறை பாடினேன், ஆடினேன், நாடிநாடிக் கூவியழைத்தேன், நீ வாராமையால் சினந்தேன், பிறகு மீண்டும் அலறினேன், உடல் சிலிர்த்துக் கைகூப்பி மழை போலக் கண்ணீர்சிந்திச் செயலற்று நான் அயர்ந்து நின்றேன் என்று தாயுமானவர் கூறுகின்றார்.

**2. தம்மைக் கைவிடுதல் கூடாது என்பதற்குத் தாயுமான வர் எவ்வாறு காரணம் கூறுகிறார்?**

நான் இரும்பு போன்ற வலிய நெஞ்சையுடைய கள்வனாக இருந்தாலும் உன்னை நினையாமல் இடையீடு பட்டதுண்டோ? என்று நீ இருந்தாயோ அன்றே நானும் உன் அடியவனல்லவோ? ஒன்றுமேயறியாத துரும்பு போன்ற எளியனாயினும் என்னைக் கை விடுதல் நீதியோ? என்னையும் உன் அடியவருடன் சேர்த்துக் கொள் என்று கூறுகின்றார்.

**3. தாயுமானவர் இறைவனிடம் எவ்வாறு முறையிடு கின்றார்? என்ன வேண்டுகிறார்?**

இதற்கு முதலிரண்டு விடையையும் சேர்த்துத் தொகுத்து எழுதிக் கொள்க.

**4. இலக்கணக் குறிப்புத் தருக.**

நாடிநாடி—அடுக்குத் தொடர்.
சோதியே சுகவாரி—இருபெயரொட்டுப் பண்புத் தொகை.
கூட்டு கண்டாய்—முன்னிலையசை.

## ஆ. திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ்

**1. பிள்ளைத் தமிழின் இலக்கணம் யாது?**

விடை பொதுப் பகுதியில் 'திருச்செந்தூர்வளம்' உரைக் குறிப்பிற் கண்டு கொள்க.

**2. பாலித்திரு நாட்டின் வளம் திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழில் எவ்வாறு கூறப்பட்டுள்ளது?**

குரங்குகள் தாவுதலினால், முதிர்ந்த தேங்காய்கள் உதிர்ந்து அருகில் இருக்கும் குளங்களில் விழுகின்றன. குளங்களிலுள்ள வாளைமீன்கள் கோபங் கொண்டு எதிர்த்து, மேகமண்டலம்வரை தாவிப் பலாப் பழங்களிலே மோதுதலினால் சுளைகள் உதிர்கின்றன. உதிர்கின்ற அந்தச் சுளைகளோடு ஓடிவரும் பாலாற்றங்கரையிலுள்ள திருநாடு என்று பாலித்திரு நாட்டின் வளம் கூறப்படுகிறது.

**3. திரு விரிஞ்சை முருகன் எவ்வாறு தம்மை வளர்ப்பதாக ஆசிரியர் கூறுகிறார்?**

கண்களினாலே திருவடியைக் கண்டு, அன்பு கொண்டு கைகளாலே தொழுது, கால்களினாலே திருக் கோவிலை வலமாக வந்து, புகழைப்பாடி, மனமுருகி, கண்ணீர் மல்காத என்னையும் தாய் போலப் பரிந்து வளர்க்கும் அண்ணலே என்று ஆசிரியர் கூறுகின்றார்.

**4. அம்புலி ஆறுமுகனுடன் விளையாட வந்தால் என்னென்ன பெறலாமென ஆசிரியர் கூறுகிறார்?**

அம்புலி ஆறுமுகனுடன் ஆடவந்தால் அருணகிரியாரின் திருப்புகழை யறியலாம்; நக்கீரன் மொழிந்த திருமுரு காற்றுப்படையைத் தெரிந்து கொள்ளலாம்; கந்த புராணம் முதலிய நூல்களைத் தெரிந்து கொள்ளலாம்; சிவனடியார் விரும்பும் கவிதை பாடலாம்; முருகன் திருவடியை வணங்கப் பெறலாம்; அவனை வலமாக வந்து பிறவிப் பிணியையும் ஒழித்து விடலாம் என்று ஆசிரியர் கூறுகின்றார்.

**5. இப்பாடலில் என்ன உபாயம் அமைந்துள்ளது?**

ஆடவந்தால் இன்ன இன்ன நன்மையைப்பெறலாம் என்று கூறுவதால் இது சாம, பேத, தான, தண்டம் என்னும் நால்வகை உபாயத்துள் தானம் என்னும் உபாயம் ஆகும்.

**6. முருகன் மாமனாகிய மாமேக வண்ணன் செயல் சிறுபறைப் பருவத்தில் எவ்வாறு கூறப்பட்டுள்ளது?**

காலையிலும், மாலையிலும், பகலிலும், இரவிலும் வீட்டின் உள்ளும், புறமும் சாகாவரம் பெற்று மூவுலகும் தன்னாட்சி

செலுத்தி வந்த இரணியனை நரசிங்க வடிவமாகிவந்து, அவனை வாசற்படியிலே கிடத்தி, மார்பைப் பிளந்து, நகத்தால் குடலைப் பிடுங்கி, இரத்தத்தைக் குடித்த மாமேக வண்ணன் என்று சிறு பறைப் பருவத்திற் கூறப்பட்டுள்ளது.

7. கரனூரில் (திருவிரிஞ்சையில்) என்னென்ன முழக்கங்கள் கேட்கின்றன?

அந்தணர் முழக்கும் ஆகம ஒலி, அரிவையர்தம் ஆடலின் முழக்கம், பாடலின் முழக்கம், அடியவர்கள் ஓதும் செந்தமிழின் முழக்கமும் கரனூரில் முழங்குகின்றன.

8, நக்கீரர் திரு முருகாற்றுப்படை பாடக் காரணம் என்ன? முருகன் எவ்வாறு அருள்புரிந்தான்?

ஆண்டுக் கொருமுறை ஆயிரம் பேரைத் தின்னும் குதிரை முகப் பூதமொன்று 999 பேரைப் பிடித்து மலைக்குகையில் அடைத்து வைத்து விட்டு, இன்னும் ஒருவர் குறையாக இருக்கையில் நக்கீரர் அகப்பட அவரையும் பிடித்து அடைத்து விட்டு நாட்கடன் முடிக்கச் சென்றது. அப்போது முருகனை நினைந்து திரு முருகாற்றுப் படை பாடினார். முருகன் மயிலேறி வந்து பூதத்தைக் கொன்று, நக்கீரரை விடுவித்து, சுனையிலே முழுகி எழுந்து, பொன்முகலியாற்றில் நீராடச் செய்தான்.

9. இலக்கணக் குறிப்பு வரைக.

சதுர்வேதப் பொருள்—இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
பாயா எனையும்—ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
அண்ணல் வருக—விளிப் பெயர்.
கழல் வணங்கலாம்—தானியாகு பெயர்.
மூதண்ட முழுதும்—பண்புத்தொகை.
மறை பலபல—அடுக்குத் தொடர்.
செயசெய—அடுக்குத் தொடர்.

## இ. திருவருட்பா

1. இறைவன் எவ்வாறு இனித்திடுவான் என்பதை இராமலிங்கர் எங்ஙனம் பாடுகின்றார்?

முக்கனியின் சாறு, சர்க்கரை, கற்கண்டுப் பொடி, தேன், பசுவின்பால், தேங்காய்ப்பால், பருப்பின் பொடி, நெய் இவற்றையெல்லாம் ஒன்று கூட்டிக் காய்ச்சி இளஞ்சூட்டில் இறக்கி எடுத்த சுவைக் கட்டியைக் காட்டிலும் இனிமையான அமுதம் போன்றவன் இறைவன் என்று இராமலிங்கர் கூறுகின்றார்.

2. இராமலிங்கர் கூறும் இனித்த சுவைக் கரும்பு எத்தகைய இயல்புடையது ?

இராமலிங்கர் கூறும் கரும்பு பார்த்தாலும், நினைத்தாலும், படித்தாலும், படிக்கக் கேட்டாலும், உணர்ந்தாலும், ஈர்த்தாலும், பிடித்தாலும், அணைத்தாலும் யாது செய்யினும் இனிக்கின்ற சுவைக் கரும்பு.

3. இலக்கணக் குறிப்பு வரைக.

ஒன்றாகக் கூட்டி—தொகுத்தல் விகாரம்.
தனித் தனி—அடுக்குத் தொடர்.
முக்கனி பிழிந்து—பண்புத் தொகை.
அடிமலர்—உருவகம்.
அலங்கல் அணிந்தருள்—காரணப் பெயர்.

# சிறப்பு உரைநடை வினாவிடை

## 1. ஒப்புரவறிதல்

1. ஒப்புரவு என்னும் சொல்லுக்குரிய பொருள்கள் யாவை ? பரிமேலழகர் கூறும் பொருள் யாது ?

ஒப்புரவு என்னுஞ் சொல்லுக்கு உபகாரம், ஒற்றுமை, சமாதானம் முதலிய பல பொருள்கள் உண்டு. பரிமேலழகர் ஒப்புரவறிதல் என்பதற்கு உலக நடையினை அறிந்து செய்தல் என்று பொருள் கூறுகின்றார்.

2. உலகநடை என்பதற்கு உயர்ந்தோர் ஒழுகிய நெறியில் ஒழுகுவது என்று பொருள் கொள்வது பொருந்துமா ? ஏன் ?

உலக நடை என்னுஞ் சொல்லுக்கு உயர்ந்தோர் ஒழுகிய நெறியில் ஒழுகுவது என்று பொருள் கொள்வோமெனில் (1) ஒப்புரவதிகாரத்தில் வரும் குறட் பாக்களில் ஒன்றேனும் அவ்வொழுக்கத்தைக் குறிக்கவில்லை. (2) மேலும் உயர்ந்தோர் ஒழுகிய நெறியில் ஒழுகுவதை ஒழுக்கம் உடைமை என்னும் அதிகாரத்தில் ' உலகத்தோடொட்ட ஒழுகல் பலகற்றும், கல்லார் அறிவிலாதார் ' என்ற குறட்பாவில் விளக்குகின்றார். (3) இக்குறளுரையில் பரிமேலழகரும் ' உலகத்தோடு பொருந்த ஒழுகலாவது—உயர்ந்தோர் பலரும் ஒழுகிய ஆற்றான் ஒழுகுதல் ' என்று பொருள் கூறினர். ஆதலால் உலகநடை என்னுஞ் சொல்லுக்கு இவ்வாறு பொருள் கொள்வது பொருந்தாது.

**3. உலக நடை என்பதற்கு வள்ளுவர் கருத்துப்படி என்ன பொருள் கொள்ள வேண்டும்? ஏன் அவ்வாறு கொள்ளவேண்டும் ?**

உலக நடை என்னுந் தொடருக்கு உலகத்தின் நடைபேறு என்று பொருள் கொள்ளுதலே வள்ளுவர் திருவுள்ளத்துக்கு ஏற்ற தாகும். ஏனெனில் ஒப்புரவறிதல் அதிகாரத்தில் வரும் ஒவ்வொரு குறட்பாவும் மக்கட் சமுதாய வாழ்க்கைக்கு இன்றியமையாத உலக உபகாரங்களை அறிந்து செய்தல் என்பதையே விளக்கி நிற்கிறது. அதனால் உலகத்தின் நடைபேறு என்று பொருள் கொள்வதே பொருந்தும்.

**4. ஜன சமூக வாழ்க்கையாவது யாது?**

ஜன சமூக வாழ்க்கையாவது :— தனியரசு புரியும் முடியரசன் முதல் தாழ்வுற்ற குடியானவன் ஈறுகவும். முற்றத் துறந்த முனிவன் முதல் பற்றே மிக்க உலகாயதன் ஈறுகவும் உள்ள உலகத்து மக்களெல்லாம் ஒருவர்க்கொருவர் செய்யும் உதவியாலே வாழ்ந்து வரும் நிலையாகும்.

**5. ஜனசமூக வாழ்க்கையின் வளர்ச்சிக்குரிய உபகாரங்கள் யாவை?**

மக்கட் சமூக வாழ்க்கையின் வளர்ச்சிக்குத் துணையாவன :—

ஊருணி, ஆதுல் சாலை, கல்விச் சாலை, மருத்துவ விடுதி முதலியன தோற்றுவித்தலும் மக்கட் சமூகத்தின் அறிவையும் செல்வத்தையும் பெருக்குதற்குரிய வழியைத் தேடுவதும் நாட்டு வளர்ச்சிக்கு இடையூறுனவற்றை விலக்க முயலுவதும் முதலானவை மக்கட் சமூக வாழ்க்கையின் வளர்ச்சிக்குத் துணை நிற்பனவையாகும்.

**6. உலகநடை என்னும் தொடருக்குப் பொருள் உயர்ந்தோர் ஒழுக்கம் அன்று, உலகநடை பேறுதான் பொருள் என்பதை ஆசிரியர் எவ்வாறு உறுதிப் படுத்துகிறுர்?**

பரிமேலழகர், 'கண்ணோட்டத்துள்ள துலகியல்' என்னுங் குறளில், உலகியல்—என்பதற்கு உலக நடை என்று பொருள் கூறி, உலக நடையாவது—ஒப்புறவு செய்தல், புரந்தரல், பிழைத்தன பொறுத்தல் முதலியன என்று விரித்துரைப்பதால் உயர்ந்தோர் ஒழுக்கம் என்னும் பொருளில் உலக நடை என்னுந் தொடரை வழங்காது, உலகத்தின் நடைபேறு என்னும் பொருள்படவே வழங்குகிறுர். மேலும் சிவஞான முனிவர் தருக்க சங்கிரக தீபிகையில் உலக நடையை ஆன்றோ ரொழுக்கத்தினின்று வேறுக வைத்து வழங்குகின்றுர். ஆதலினுல் இத்தொடருக்கு உலக நடைபேறு என்றுதான் பொருள் கொள்ள வேண்டும் என ஆசிரியர் உறுதிப் படுத்துகிறுர்.

## 7. ஒப்புரவிற்கும் ஈகைக்கும் உள்ள வேறுபாடு யாது?

உலக வளர்ச்சிக்குரிய ஒப்புரவு, அதனைச் செய்வானும் அடங்க எல்லோர்க்குமே இம்மையிலே பயனளிப்பது; ஈகை இம்மையில் பயனளிக்காது மறுமையில் பயனளிப்பது. பரிமேலழகரும் ஈகை என்னும் அதிகாரத்தின் முன்னுரையில் 'ஈகை, மறுமைநோக்கிய தாகலின், இம்மை நோக்கிய ஒப்புரவறிதலின் பின் வைக்கப்பட்டது' என்று பொருள் கூறுவர்.

## 8. 'கைம்மாறு வேண்டா' என்னுங் குறட்பாவில் ஒப்புரவு எவ்வாறு கூறப்பட்டுள்ளது? அவ்வாறு கூறக் காரணமென்ன?

இக்குறளில், மேகங்கள் நீரை உதவுதல் கைம்மாறு கருதிய தில்லையாதல்போல அம்மேகங்களைப் போன்றவர்கள் செய்யும் ஒப்புரவுகளும் கைம்மாறு கருதுவன அல்ல என்று கூறப்பட்டுள்ளது. ஒப்புரவு, 'கடப்பாடு' என்னுஞ் சொல்லாற் குறிக்கப்படுகிறது. மக்கட்சமூக வாழ்க்கைக்கு இன்றியமையாத பரோபகாரத்தை ஒவ்வொருவரும் கொண்டொழுகினாலன்றி, அவ்வாழ்க்கை நடைபெறாதாதலால் இக்குறளில் ஒப்புரவைக் 'கடப்பாடு' என வள்ளுவர் வழங்கியிருக்கிறார்.

## 9. வள்ளுவர் யாரைச் செத்தவன் என்று குறிக்கின்றார்? இக்குறளில் ஒப்புரவை ஒத்தது எனக் கூறக் காரணம் என்ன?

உலக வாழ்விற்குரிய ஒப்புரவைக் கடைப்பிடியாது தனி நின்று வாழக் கருதுபவனை வள்ளுவர் செத்தவன் என்று குறிக்கின்றார்.

உலக நடைபேறு எல்லாரும் மனமொத்து நடத்தலால் நிகழ்வதுபற்றி, ஒப்புரவை 'ஒத்தது' என வள்ளுவர் குறிக்கின்றார்.

## 10. ஜன சமூக வாழ்விற்குரிய பொது நன்மையே தெய்வப் புலவர் கருதிய ஒப்புரவு என்பது எதனால் தெளிவாகிறது?

வள்ளுவர் ஒப்புரவாளனுடைய செல்வத்திற்கு ஊருணி, பயன் மரம் மருந்து மரம் என்னும் மூன்றையும் உவமையாகக் கூறுகின்றார். ஊருணியும், பயன் மரமும், மருந்து மரமும் யாவர்க்கும் எக்காலத்தும் எளிதில் உபயோகப்படுதல் போல ஒப்புரவாளன் செல்வமும் பயன்படும். ஆதலால் வள்ளுவர் கூறிய ஒப்புரவு ஜன சமூக வாழ்விற்குரிய பொது நன்மையே என்பது தெளிவாகிறது. 'ஊருணி நீர் நிறைந்தற்றே' என்னும் குறளில் 'உலகவாம் பேரறிவாளன் திரு' என்னுந் தொடரும் இக்கருத்தையே வலியுறுத்துகின்றது.

11. ஒப்புரவு செல்வத்தான் மட்டுமின்றிப் பிறவற்ருனும் ஆதல் உண்டா? சான்று கொண்டு நிறுவுக.

ஒப்புரவு செல்வத்தான் மட்டுமன்றி, மனம், மொழி, மெய் களாலும் செய்யப்படும். 'இடனில் பருவத்தும்' என்ற குறளில் 'செல்வமில்லாமை ஒன்று காரணமாக ஒப்புரவு இழக்கப்படுவ தன்று; அதனைச் செலும் வழி பலவாம்; அவ்வழிகளை யறிந்து செய்ய வல்ல இயற்கை யறிவுடையார், அஃதொன்றில்லாமை பற்றி, ஒப்புரவு செய்யத் தளரமாட்டார்' என்னும் கருத்தை வெளிப்படுத்துகின்ருர் வள்ளுவர்.

மற்ருெரு குறளில் 'செய்யத் தக்கனவற்றைச் செய்யாமல் இருப்பதுதான் நயனுடையானுடைய வறுமை எனப்படும்' என்ற கருத்தைக் கூறுகின்ருர். ஆதலினுல் ஒப்புரவு செல்வத்தான் மட்டு மின்றி மனம், மொழி, மெய்களாலும் செய்யப்படும் என்பது புலனுகின்றது.

12. ஒப்புரவினுல் கேடு வருமெனின் என்ன செய்ய வேண்டுமென்று வள்ளுவர் கூறுகின்ருர்? அவ்வாறு கூறக் காரணமென்ன?

ஒப்புரவினுல் ஒருவனுக்குக் கேடு வரும் என்று சொல்வார் உள ராஞல், அந்தக் கேட்டை அவன் தன்னை விற்ருயினும் பெற்றுக் கொள்ளுக என்று வள்ளுவர் கூறுகின்ருர். மேலும் வள்ளுவர், அவனுடைய கேட்டை உலகம் கெடுவாகக் கருதாது என்றும் கூறு கிருர். இவன் ஒருவன் கெட்டாலும் அதனுல் விளையும் பலன் உல கம் முழுதும் சார்ந்து இன்புறுத்துவதால் தன்னை விற்ருயினும் அக் கேட்டினைப் பெறுக என்று கூறுகின்ருர்.

13. புறநானூறு இவ்வுலகம் நடைபெறுவதற்கு என்ன காரணம் கூறுகிறது? இக்கருத்தைக் கூறும் குறள் எது?

சான்ருேர், அமிழ்தம் கிடைத்தாலும் தனித்து உண்ணமாட் டார்; வெறுப்பில்லாதவர்; சோம்பியிரார்; உயிரைக் கொடுத்தும் புகழ் பெறுவர்; உலகம் முழுதும் கிடைப்பினும் பழியைக் கொள் ளார்; அயர்வு இல்லாதவர்; தமக்கென வாழார்; பிறர்க்கென முயலுவர். இத்தகைய சான்ருேர் இருப்பதினுலே உலகம் நடை பெறுகிறது என்று புறநானூறு கூறுகிறது.

இக்கருத்தைக் கூறும் குறள் 'பண்புடையார்ப் பட்டுண்டு உல கம் அஃது இன்றேல், மண்புக்கு மாய்வது மன்' என்பதாகும்.

14. திருக்குறளில் ஒப்புரவுக்குப் பிறகு ஈகையை வைத் துக் கூறக் காரணம் என்ன?

ஒப்புரவு பொதுவாக எல்லார்க்கும் பயனளித்தலால் அது முன் னர்க் கூறப்பட்டது. வறியார்க்கே பயன்படுதலால் ஈகை பின்னர்க் கூறப்பட்டது.

# 2. தமிழகம்

1. சிலப்பதிகாரத்தால் பண்டைத் தமிழ் நாட்டைப் பற்றி அறிவன யாவை?

பண்டைக் காலத்தில் தென் திசையில் குமரியாறு, பஃறுளி யாறு என்னும் இரண்டு பேராறுகள் பாய்ந்தன என்றும் அந்நிலப் பரப்பில், ஏழ்தெங்க நாடு, ஏழ் மதுரை நாடு, ஏழ் முன்பாலை நாடு, ஏழ் பின்பாலை நாடு, ஏழ் குன்ற நாடு, ஏழ் குணகரை நாடு, ஏழ் குரும்பனை நாடு என நாற்பத்தொன்பது நாடுகள் இருந்தன என்றும், அவை கடல் கோளால் அழிந்தன என்றும் சிலப்பதிகார உரை யால் தெரிகின்றது.

2. இறையனார் களவியல் உரையால் பாண்டிய நாட்டைப் பற்றி அறிவன யாவை?

பாண்டிய நாட்டைச் சேர்ந்த அப்பெரு நிலப்பரப்பின் தலை நகரம் தென் மதுரை. அந்நகரம் கடல் கோளால் அழிந்த பின்பு கபாடபுரம், பாண்டியர் கோநகர் ஆயிற்று. அங்கு இருந்த தமிழ்ச் சங்கத்தில், தொல்காப்பியம் அரங்கேறியது. பின்பு கபாடபுரம் கடலால் அழிந்தமையின், இன்றுள்ள மதுரை பாண்டியர் தலைநகர மாயிற்று. இச்செய்திகளை இறையனார் களவியல் உரையால் அறி கின்றோம்.

3. சங்க காலத் தமிழகத்தின் எல்லை பிரிவு முதலியன வற்றை எழுதுக.

சங்க நூல்களில் தமிழகத்தின் வடவெல்லை வேங்கடமலை என்று குறிக்கப்பட்டுள்ளது. தெற்கெல்லை குமரிமுனை என்றும், கிழக்கெல்லையும் மேற்கெல்லையும் கடல் என்றும் கூறப்பட்டுள்ளன. இந்நான்கு எல்லைகட்கு உட்பட்ட தமிழகத்தில் தொண்டை நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு, கொங்கு நாடு, சேர நாடு என்பன அமைந்திருந்தன. இவற்றுள் சேர, சோழ, பாண்டிய நாடுகளை முடி மன்னரும், பிற நாடுகளைக் குறுநில மன்னரும் ஆண்டு வந்த னர். இவரன்றி, ஆங்காங்குக் குறுநில மன்னர் பலர், பேரரசர் ஆட் சிக்கு உட்பட்டும் உட்படாமலும் இருந்து வந்தனர்.

4. தொண்டை நாடு எது? அதனுள் அடங்கும் மாவட் டங்கள் எவை? இந்நாட்டைப் பற்றிய செய்திகள் யாவை?

வட வேங்கடம் முதல் தென் பெண்ணையாறு வரை உள்ள நிலப்பகுதி தொண்டை நாடு எனப்பட்டது. இந்நிலப் பரப்பில் நெல்லூர் மாவட்டத்தின் தென் பகுதி, சித்தூர், வட ஆர்க்காடு, செங்கற்பட்டு மாவட்டங்கள், தென் ஆர்க்காடு மாவட்டத்தின் வட பகுதி என்பன அடங்கும். திருப்பதி மலைத் தொடரும், கிழக்

குத் தொடர்ச்சி மலையும் தொண்டை நாட்டில் மலை வளத்தினை உண்டாக்கின. சங்க காலத்தில் இந்நாட்டின் பெரும் பகுதி காடாகவே இருந்ததென்றும் இதனை முதன் முதல் கைப்பற்றிய கரிகாற் சோழன், காடு கெடுத்து நாடாக்கினான் என்றும் தமிழ் நூல்கள் கூறுகின்றன.

5. சோழ நாடு எது ? எவ்வெவ் மாவட்டங்கள் இதில் அடங்கும் ? இதற்கு வேறு பெயர் யாது ?

தில்லைக்கு வடக்கேயுள்ள வெள்ளாற்றுக்கும் தஞ்சை மாவட்டத்துத் தென்கோடியிலுள்ள வெள்ளாற்றுக்கும் இடைப்பட்ட நிலப் பகுதி, சோழநாடு எனப் பெயர் பெற்றது. இது தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி மாவட்டங்களையும், தென்ஆர்க்காடு மாவட்டத்தின் தென் பகுதியையும் கொண்ட நிலப்பகுதியாகும். மலை வளம் அற்ற இப் பகுதியில் காவிரியும், அதன் கிளையாறுகளும் பாய்ந்து இந் நாட்டை வளப்படுத்தி யுள்ளன. இவ் வளத்தால் இந்நாடு முழுவதிலும் பசுமையான வயல்களும், சோலைகளும், தோட்டங்களும் நிறைந்துள்ளன. பொன் கொழித்துவரும் காவிரி பாயப் பெற்ற காரணத்தால், இந்நாடு ‘பொன்னி நாடு’ என்று பெயர் பெற்றது.

6. வளவர் எனப்படுபவர் யாவர் ? அப் பெயர் பெறக் காரணம் என்ன ?

சோழநாட்டைச் சோழர் என்னும் அரசமரபினர் ஆண்டு வந்தனர்; நாட்டை மேலும் மேலும் வளப்படுத்திய காரணத்தால், இவர்கள் வளவர் எனப் பெயர் பெற்றனர். சோழ வேந்தருட் சிறந்தவன் கரிகாற் பெருவளத்தான் என்பவன்.

7. சிலப்பதிகாரத்தாலும் பட்டினப்பாலையாலும் சோழ நாட்டின் தலைநகரங்களைப் பற்றி என்ன அறியலாம் ?

சோழ நாட்டின் தலைநகரம் உறையூராகும். பின்பு சிலப்பதிகாரக் காலத்தில், காவிரிப்பூம்பட்டினம் தலை நகரமாகவும், துறைமுக நகராகவும் விளங்கியது. அந்நகரம் கி. பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளில், கடல் வாணிகத்தில் சிறந்திருந்தது என்பதைச் சிலப்பதிகாரத்தாலும், பட்டினப் பாலையாலும் அறியலாம்.

8. பாண்டிய நாடு எது ? அதைப்பற்றிய குறிப்புக்கள் யாவை ? சாணக்கியர் பொருள் நூல் பாண்டிய நாட்டைப் பற்றி என்ன கூறுகின்றது ?

இன்றுள்ள மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களும், நாஞ்சில் நாடும் சேர்ந்த நிலப்பகுதியே சங்ககாலப் பாண்டிய நாடாகும். இந்நாட்டில் மலைவளமும் உண்டு. வையையாறும் தாமிரவருணி யாரும் இந்நாட்டை ஓரளவு வளப்படுத்தி

யுள்ளன. இதன் கோநகரம் மதுரை. துறைமுகநகரம் கொற்கை. கொற்கைத் துறையில் எடுக்கப்பட்ட முத்துக்கள் உரோம பெரு நாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. கி.மு. நான்காம் நூற்றண்டில், பாண்டியநாட்டு மெல்லிய ஆடைகள், மௌரியப் பெருநாட்டிற்கு மிகுதியாக அனுப்பப்பட்டன என்று சாணக்கியர் பொருள் நூல் கூறுகின்றது.

9. பாண்டியர் தமிழை எவ்வாறு வளப்படுத்தினர்? தமிழில் அவர்கள் எத்தகைய ஆற்றல் பெற்றிருந்தனர்?

பாண்டியர், சேரசோழரைப் போலத் தம்மை நாடிவந்த புலவர்களை ஆதரித்த அளவில் நின்றாரல்லர். மேலும், மதுரையில் நக்கீரர் முதலிய புலவர் பெருமக்களைக் கூட்டித் தமிழ் ஆராய்ந்தனர்; தமிழ் வளர்ச்சியில் கண்ணுங் கருத்துமாக இருந்தனர்; இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழிலும் வல்ல புலவர் பெருமக்களைப் போற்றித் தமிழை வளப்படுத்தினர்; தாமும் கவி பாடும் ஆற்றல் பெற்றிருந்தனர். பாண்டிமா தேவியரும் செய்யுளியற்றும் தன்மை பெற்றிருந்தனர். தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனும், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனும் பாண்டியருட் சிறந்தவராவர்.

10. கொங்குநாடு எது? இப்பெயர் பெறக் காரணங்கள் என்ன?

கொங்குநாடு மலைவளம் செறிந்த சேலம், கோயம்புத்தூர், நீலகிரி மாவட்டங்களைக் கொண்டது. பொன் மிகுதியாகக் கிடைத்து வந்த காரணத்தால், இந்நாடு 'கொங்கு நாடு' எனப் பெயர் பெற்றது என்று ஒருசார் அறிஞர் கூறுகின்றனர். மலைகளில் தேன் மிகுதியாகக் கிடைத்தலின் இப்பெயர் பெற்றது என்பது பிறிதொரு சார் அறிஞர் கருத்தாகும்.

11. கொங்கு நாட்டில் எவ்வெப் பகுதிகள் எந்த எந்த அரசர்களால் ஆளப்பட்டு வந்தன?

கொங்கு நாட்டில் இன்றுள்ள உடுமலைப் பேட்டைப் பகுதி சங்க காலத்தில் 'முதிரமலை நாடு' எனப்பட்டது. அந்நாட்டைக் குமணனும் அவன் முன்னோரும், பின்னோரும் ஆண்டு வந்தனர். இன்றுள்ள தர்மபுரியும், அதனைச் சூழவுள்ள நிலப்பகுதியும் அதியமான்கள் என்ற சிற்றரசர் ஆட்சியில் இருந்து வந்தன. அந்நாட்டின் தலைநகரம் தகடூர் என்பதாகும். கொல்லிமலைப் பகுதியை வல்வில் ஓரியும், அவன் முன்னோரும், பின்னோரும் ஆண்டு வந்தனர். இங்ஙனம் கொங்கு நாடு, சிற்றரசர் பலர் ஆட்சியில் அமைந்திருந்தது. சிலகாலங்களில் இந்நாடு சேரர் ஆட்சிக்கும் உட்பட்டது. அங்ஙனம் உட்பட்டிருந்த காலத்தில் கொங்கு நாட்டுக் கருவூர், கொங்கு மண்டலத் தலைநகரமாக விளக்க முற்றிருந்தது.

**12. எந்த நிலப்பகுதி சேர நாடாக விளங்கியது? அதன் வளம் யாது? அந்நாட்டின் தலைநகரமும் துறைமுக நகரமும் யாவை?**

இன்று கேரள இராச்சியமாக உள்ள நிலப் பகுதியே சேர நாடாக விளங்கியது. வானளாவிய மலைகளும், மாபெருங் காடுகளும் சேர நாட்டை அணி செய்தன. காடுகளில் சந்தனம், அகில், கருங்காலி முதலிய மரங்கள் அடர்ந்து வளர்ந்தன. ஆயிரக்கணக்கான யானைகள் அக் காடுகளில் வாழ்ந்து வந்தன. இந்த யானைகளின் தந்தமும் சேரநாட்டுச் செல்வப் பொருளாகிய மிளகும், தேக்கு முதலிய மரவகைகளும், மயிற்பீலிகளும், சந்தனம், ஏலம் முதலிய மணப்பொருள்களும் சேர நாட்டிலிருந்து வெளி நாடுகளுக்கு ஏற்றுமதியாயின.

சேர நாட்டுத் தலைநகரம், பேரியாற்றங்கரையில் அமைந்திருந்த வஞ்சி மாநகரம் என்பது. இதற்கும் கருவூர் என மற்றொரு பெயர் அக்காலத்தில் வழங்கி வந்தது. தொண்டி, முசிறி என்பன சேரநாட்டுத் துறைமுக நகரங்களாக இருந்தன.

**13. சேரநாட்டை ஆண்டவர்கள் யார்? அவர் செய்த வீரச் செயல் யாது? பதிற்றுப்பத்து முதலிய நூல்களால் அறியப்படும் செய்தி யாது?**

சேர நாட்டைச் சேரர் என்ற அரச மரபினர் பன்னெடுங்காலமாக ஆண்டு வந்தனர். சேரநாட்டுப் பொருள்களை ஏற்றிச் சென்ற கப்பல்களையும், அயல்நாடுகளிலிருந்து பொருள்களை இறக்குமதி செய்ய வந்த கப்பல்களையும் வழிமறித்துக் கொள்ளையிட்டு வந்த கடற் கொள்ளைக்காரரைச் சேரவேந்தர் அழித்தனர். சேரமன்னர், தங்கள் நாட்டுக் கடல் வாணிகத்தை வளமுற வளர்த்துச் சேர நாட்டைச் செல்வம் கொழிக்கும் திருநாடாகச் செய்தனர். சோழ பாண்டியரைப் போலவே சேர வேந்தரும் பைந்தமிழைப் பாங்குற வளர்த்தனர் என்பதைப் பதிற்றுப்பத்தாலும், பிற நூல்களாலும் நன்கறியலாம்.

**14. பழங்காலத்தில் எந்தெந்தக் குறுநிலங்களை எந்தெந்தக் குறுநில மன்னர்கள் ஆண்டு வந்தனர்?**

தொண்டை நாட்டில் திருக்கோவலூரும் அதனைச் சூழ்ந்த பகுதியும் மலையமானாடு என வழங்கப்பெற்றது. மலையமான் குடியினராகிய குறுநில மன்னர்கள், இந்நாட்டை ஆண்டு வந்தனர். மலையமானாட்டின் தென்பகுதி, பிற்காலத்தில் திருமுனைப்பாடி நாடு எனப் பெயர் பெற்றதென்று தெரிகிறது. தொண்டை நாட்டில் வேங்கடமலையையும், அதனைச் சூழ்ந்த பகுதியையும் 'புல்லி' என்ற கள்வர் தலைமகன் ஆண்டு வந்தான். இப்போது திண்டிவனம்

என்று சொல்லப்படும் ஊரும், அதனைச் சூழ்ந்த பகுதியும் ஓய்மா நாடு எனப் பெயர் பெற்றன. அந்நாட்டை நல்லியற்கோடன் என்பவன் ஆண்டு வந்தான். பாண்டிய நாட்டில், பழனி மலைப் பகுதியைப் பேகன் புரந்து வந்தான். பறம்பு மலையும், அதன் சுற்றுப் பகுதியையும் பாரி பாதுகாத்து வந்தான். இவர்களைப் போல ஆங்காங்குச் சிற்றரசர் பலர் இருந்து வந்தனர்.

15. சங்க காலத் தமிழகம் மொழி, வாழ்வு முதலிய துறைகளில் வளமுற்று விளங்கக் காரணமென்ன?

சங்க காலத்தில் தமிழகத்தை ஆண்ட பெருமக்கள் தமிழ் நாட்டையே சேர்ந்தவர்; தமிழகத்திலேயே பிறந்து வளர்ந்தவர். தாமும் தமிழராக இருந்து, தம்மால் ஆளப்பட்டவரும் தமிழராக இருந்த காரணத்தால், தமது மொழியும் நாட்டு மொழியுமாகிய தமிழைத் தம் உயிர்போலக் கருதினர்; அம்மொழியில் வல்ல புலவரையும், பாணரையும், கூத்தரையும் பேணிப் பாதுகாத்தனர். அவர்கள் வாயிலாக முத்தமிழையும் வளப்படுத்தினர். பாணரால் இசைக் கலையும், கூத்தரால் நாடகக் கலையும் நன்முறையில் வளர்ச்சி பெற்றன. இயற்றமிழ் நூல்கள் மிகுதியாகத் தோன்றின. தமிழக வேந்தர், தம் குடிகளின் நல்வாழ்வு ஒன்றிலேயே கருத்துக் கொண்டவராகச் செங்கோல் வழுவாது ஆட்சி புரிந்தனர். இதன் பயனாய்த் தமிழர் வாழ்வு, எல்லாத் துறைகளிலும் வளமுற்று விளங்கியது.

# 3. மணிமேகலை

1. மணிமேகலை என்பாள் யார்?

இன்றைக்கு ஆயிரத்து எண்ணூறு யாண்டுகளுக்குமுன், சோழ நாட்டின் தலைநகராக விளங்கிய காவிரிப்பூம்பட்டினத்தில், பெருங்குடி வணிகர் மரபில் தோன்றிய கோவலன் என்பான், அரசவையில் ஆடல் பாடல்களில் திறமை பெற்று அரங்கேறிய நாடகக் கணிகையாகிய மாதவி யென்பாளைக் காதலித்து, அவளுடனுறைந்தொழுகினனாக, அவனுக்கு அவள் வயிற்றில் பிறந்தவளே மணிமேகலை யென்னும் பெண்மணி.

2. மணிமேகலை ஏன் துறவு பூண்டாள்?

மணிமேகலை மங்கைப் பருவம் எய்தியிருக்கு நாளில், தன் அருமைத் தந்தையாகிய கோவலனும், பெற்றதாயினும் உற்றதாயாக மேற்கொண்ட கண்ணகியும் படாத துன்பங்களுக்கு ஆளாகி, இவ்வுலக வாழ்க்கையை நீத்த செய்தி கேட்டுத் திடுக்கிட்டு, இவ்வுலக இன்பத்திற் பற்றற்று ஒழுகத் தலைப்பட்டாள்.

3. மணிமேகலையைத் தகாத ஒழுக்கத்திற்கு ஆளாக்க நினைந்த சித்திராபதி மாதவிக்குக் கூறியனுப்பிய செய்தி யாது?

மணிமேகலையைத் தகாத ஒழுக்கத்திற்கு ஆளாக்க முயன்ற இவள் அன்னையின் தாயாகிய சித்திராபதி என்பாள், 'பாண்மகன் பட்டுழிப் படூஉம் பான்மையில், யாழினம் போலு மியல் பினம்' என்றும் 'நறுந்தா துண்டு நயனில் காலை, வறும்பூத்துறக்கும் வண்டு போல்குவம்' என்றும் தங்குல ஒழுக்கத்திற்கு ஏற்ப நினைத்து ஒரு தோழி மூலமாக இச்செய்தியை மாதவிக்குத் தெரிவித்தனள்.

4. மணிமேகலை உவவனம் செல்லக் காரணம் என்ன? அவளுக்கு அங்கு நிகழ்ந்தது என்ன ?

இரு முதுகுரவரையும் இழந்தமையால் மணிமேகலைக்கு நேர்ந்த துன்பத்தை ஆற்றுதற் பொருட்டுச் சுமதியென்னும் தோழி, 'உபவனம்' என்னும் ஒரு பூஞ்சோலைக்கு அவளை அழைத்துச் சென்றாள். இவள் கட்டழகின் மாண்பைக் கேட்ட அந்நகரத்து அரச குமாரனாகிய உதயகுமரன் என்பான், காமபரவசனாய் அவ் வுபவனத்திற் சென்று பளிக் கரையுட் புகுந்திருக்கும் மணிமேகலையைப் பற்றி, பலவாறு பாராட்டிச் சுதமதியால் தெருட்டப் பட்டுத் திரும்பினான்.

5. மணிமேகலா தெய்வம் மணிமேகலையை மணிபல்லவத் தீவிற்குத் தூக்கி வரக் காரணம் என்ன?

உவவனத்தில் உதயகுமரனைக் கண்ட மணிமேகலைக்குச் சிறிதளவு அவன்பால் உள்ளம் சென்றது.

அவள் உள்ளம் சிறிது காதலித்ததற்குக் காரணம், பண்டைப் பிறப்புக்களில் இவ்விருவரும் கணவனும் மனைவியுமாக வாழ்ந்து வந்த தொடர்பென்று ஆசிரியர் கூறுகின்றார். காமத்தீச் சிறிதாகப் பற்றினும் பெரிதாகி வெதுப்பும் ஆதலின், அத்தொடர்பினின்றும் ஒழித்தற்கு மணிமேகலையை அவள் குலதெய்வமாகிய மணிமேகலா தெய்வம் யாரும் அறியாதபடி எடுத்து, இலங்கையிலுள்ள மணிபல்லவம் என்னுந் தீவிற்குக் கொண்டு வந்து புத்தபீடிகையைத் தரிசிக்கச் செய்தது.

6. மணிமேகலையின் அன்னதானம் யார் யாருக்குப் பயன் பட்டது? அதற்குக் காரணம் என்ன? எங்கிருந்து அன்னதானம் செய்தாள்?

செல்வ முடையார்க்குப் பல்வகைச்சுவை நிரம்பிய உணவுகளைப் படைத்தல் அறமாகாதெனவும், அஃது ஆரவார நீர்மையேயாமெனவும் உணர்ந்தமையால், அம்முறை கைவிடப்பட்டுக் குருடர், முடவர், செவிடர், ஆதரவில்லோர், நோய்த் துன்பமுடை

யோர் ஆகிய எளிய மக்களுக்கே இவளறம் பயன் படுவதாயிற்று. இவ்வன்னதானமாகிய அறம் புரிதற்கு ஏற்ற இடமாகக் காவிரிப் பூம்பட்டினத்திலுள்ள 'உலக அறவி' என்னும் ஊரம்பலத்தைத் தெரிந்தடைந்தனள்.

7. உதயகுமரன் தந்தை மணிமேகலையைச் சிறைப்படுத்தக் காரணமென்ன?

உதயகுமரன் தன்மேற் காதலுடையவனாய் உலக அறவிக்கு வருதலையறிந்து அவனால் இடையூறு நேரவுங்கூடுமென்று எண்ணிக் காயசண்டிகை என்னும் வித்தியாதரப் பெண்ணின் உருவத்தை மேற்கொண்டு, தன் அறச் செயலைப் புரிவாளாயினள். அவ்வமயம், காயசண்டிகையின் கணவனாகிய காஞ்சனன் என்பான், தன் மனைவியைக் காதலித்ததாகத் தவறுபட நினைந்து உதயகுமரனை வாளாலெறிந்து கொன்றான். இச்செயலை அறிந்த உதயகுமரன் தந்தையாகிய அரசன், தன் மகன் கொலைப்பட்டது குறித்துச் சின முடையவனாய் மணிமேகலையைச் சிறைப் படுத்தினான்.

8. இராசமாதேவி மணிமேகலைக்கு என்னென்ன இடையூறுகள் செய்தனள்?

அரசன் மனைவியாகிய இராசமாதேவி என்பாள், மணிமேகலைக்கு நலஞ் செய்வதாக வெளிக்காட்டித் துன்புறுத்தும் நினைவுடையளாய் அவளைச் சிறையினின்றும் விடுவித்து, மயக்கும் மருந்தை உணவிற் கலந்து ஊட்டியும், புழுக்கறையில் அடைத்தும், காமுகன் ஒருவனை விடுத்துப் பழியுண்டாக்க முயன்றும் பலவாறு கொடுமை செய்தனள்.

9. காட்சியளவை ஒன்றனையே கடைப்பிடித்தொழுகும் பூதவாதிக்கும் மணிமேகலைக்கும் நடந்த உரையாடல் என்ன?

ஒரு சமயம், காட்சியளவை ஒன்றனையே கடைப்பிடித்து அநுமானப் பிரமாணத்தை ஏற்றுக் கொள்ளாத பூதவாதியை நோக்கி அம்மையார், நின் தந்தை தாயார் யாவரென, அன்னாரை அவன் காட்டினானாக. "காட்சியளவை யொன்றனையே கடைப் பிடிக்கும் நினக்கு இவர் எப்படித் தந்தை தாயார் ஆவர்; காட்சியில் வைத்து எவ்வாறு காண முடியும்?" என வினவ, அவன் கலக்கமுற்று, மருட்சிக்கு ஆளாயினான். இங்ஙனம் தந்தை தாயாரை விட்டொழிக்க மனம் வாராத அந்நிலையில், மணிமேகலை

"தந்தை தாயாரை அனுமானத் தாலலது
இந்த ஞாலத் தெவ்வகை யறிவாய்"

என்று தேற்றுவாளாயினள்.

10. மணிமேகலை வாழ்க்கையில் குறட் கருத்தமைந்த ஒரு பகுதியை வரைக.

இராசமாதேவி, சிறையில் மணிமேகலைக்குப் பலப்பல துயரங்களைக் கொடுத்தாள். மணிமேகலை தானறிந்த மந்திரவன்மையால் தப்பித்து நலமுடன் இருந்தாள். இதனையறிந்த இராசமாதேவி பொருத்தருளுமாறு வேண்டினாள். அப்பொழுது அவளுடைய மனத்துயரை மாற்ற மணிமேகலை நல்ல அறிவுரைகளைக் கூறித் தேற்றி நல்வழிப்படுத்தினாள். இந்நிகழ்ச்சி 'இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயஞ் செய்துவிடல்' என்ற குறட் கருத்தைக் கொண்டதாக இருக்கின்றது.

## 4. கடல் கடந்த தென் இந்திய நாகரிகம்

1. தென்னிந்திய நாகரிகம் பரவியிருந்த கீழை நாடுகள் எவை?

தொலை கிழக்கில் பர்மா, மலேயா, சுமத்திரா, ஜாவா, போர்னியோ, சையாம், பூனும், காம்பூஜா, சம்பா முதலான நாடுகளில் தென் இந்திய நாகரிகம் பரவியிருந்தது.

2. பர்மாவில் தென்னிந்திய நாகரிகம் பரவியிருந்ததற்குச் சான்றென்ன?

பர்மாவில் உள்ள ஒரு கூட்டத்தாரின் பெயரிலிருந்து தென் இந்தியத் தொடர்புபற்றி ஒரு சான்று கிடைக்கக் கூடுமெனத் தெரிகிறது. 'மாண்' எனப்படும் ஒரு பர்மா கூட்டத்தார் 'தலேங்' எனவும் அழைக்கப்பட்டு வந்தனர். இது தென்னிந்தியாவிலுள்ள தெலிங்கானாவின் நினைவாய்த் தோன்றியிருக்கலாமென்பது ஒரு கருத்து. ஆகவே, ஒருவேளை தெலிங்கானா நாட்டிலிருந்து சில மக்கள் பர்மாவிற்குச் சென்றிருக்கலாமென ஒரு சாரார் கருதுகின்றனர். கீழைப்பர்மாவில் தாட்டன் என்ற ஓர் ஊரை அமைத்தவர் தெலிங்கர் என்பவரென ஒருசெவி வழிச் செய்தியும் வழங்குகின்றது.

3. தென்னிந்திய நாகரிகம் பர்மாவில் பரவியிருந்தமையைக் கல்வெட்டுச் சான்றுகள் கொண்டு நிறுவுக.

கி.பி. ஐந்தாவது அல்லது ஆறாவது நூற்றாண்டைச் சார்ந்த இரு தங்க ஏடுகளை மாண்கூண் என்ற சிற்றூரில் கண்டு பிடித்திருக்கின்றனர். அவ்விரண்டு தாம்பாளங்களிலும் தென்னிந்திய எழுத்தில் சில சொற்கள் பொறிக்கப்பட்டுள்ளன. மேலும், மற்றொரு சிற்றூரிலுள்ள பௌத்த நினைவுக்குறிக் கல்வெட்டு ஒன்றில் பழைய தெலுங்குக் கன்னட எழுத்தில் பொறிக்கப் பெற்ற கல்வெட்டின் ஒரு வரி தென்படுகிறது. இதில் காணப்படும் எழுத்து வடிவம்

தென்னிந்திய மன்னர்களாகிய பல்லவர் கதம்பர் முதலியோரது கல்வெட்டுக்களில் உள்ளதை ஒத்திருப்பது உற்று நோக்குதற் குரியது. இக்கல்வெட்டில் குறிப்பிட்டிருக்கும் ஸ்ரீ பிரபுவர்மன் என்பவர் பெரும்பாலும் அந்நாட்டை ஆண்டு வந்த 'மன்' என்ற அரசராக இருந்திருக்கலாம். 'வர்மன்' என்ற சிறப்புப் பெயர் இந்தியப் பெயரென்பது திண்ணம். அது மன்னர்க்குரிய பட்டப் பெயர். மேலும், பிணப்பாதுகாப்பிற்குப் பயன்படுத்திய தாழிகள் மீது செதுக்கப்பட்டுள்ள வரிகளில் ஆர்யவிக்கிரமா, ஹரிவிக்கிரமா, சிம்ஹவிக்கிரமா என்ற சமஸ்கிருதமும் பாலியும் கலந்த பெயர்கள் காண்கின்றோம். பர்மா நாட்டில் விக்கிரமா அல்லது வர்மா என்று எந்த மன்னன் பெயரின் பின்னும் சேர்த்துக்கொள்ளும் வழக்கம் இருந்ததாகத் தெரியவில்லை. மாண் மொழியில் இந்தியச் சொற்கள் பலவற்றைக் கடன் வாங்கிச் சேர்த்துக் கொண்டதை எளிதில் உணரலாம். இதனால் தென்னிந்திய நாகரிகம் பர்மாவில் பரவியிருந்தமையை அறியலாம்

## 4. பர்மாவில் தென்னிந்திய நாகரிகம் பரவியிருந்தமையைக் கோவிற் சான்றுகொண்டு கூறுக.

பர்மாவிலுள்ள திருக்கோயில்களைத் தக்காணத்திலுள்ள சிற்பிகளே கட்டியிருக்க வேண்டுமெனச் சிற்பநூல் வல்லார் ஸ்காட் என்பவர் கருதுகின்றார். கோயில்களின் அமைப்புமட்டுமேயன்றி அவற்றிலுள்ள சிலைகளும், அவற்றின்தோற்றமும் பாவனைகளும் தனிப்பட்ட தென்னிந்திய முறையை ஒட்டியனவென்று அவர் தெளிவாகக் கூறுகின்றார். பாகன் என்ற ஊரில் தமிழ் எழுத்தில் பொறித்துள்ள கல்வெட்டொன்று கண்டு பிடிக்கப் பட்டது. அதிலிருந்து நானாதேசி வணிகர் கட்டிவைத்த திருமால் கோவில் ஒன்று இருந்தது என்றும், அவ்வூரில் தமிழர் சிலர் குடியேறி யிருந்தனர் என்றும் தெரிகிறது. அதே கோவிலுக்கு 13-ஆம் நூற்றாண்டில் கேரளத்தைச் சேர்ந்த வணிகர் ஒருவர் நன்கொடை அளித்துள்ள செயல் தென்னிந்திய மக்களுக்கு அவ்விடத்தோடு நெருங்கிய தொடர்பு இருந்ததென்ற கருத்தை வலியுறுத்துகிறது. இதனால் தென் இந்தியாவிற்கும் பர்மாவிற்கும் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் துவக்கத்திலேனும் அதற்கு முன்னரேனும் பல வகைத் தொடர்புகள் இருந்து வந்தன என்பதை நன்குணரலாம்.

## 5. தென்னிந்தியர் மலேயா நாட்டிலும் நெடுங்காலத்திற்கு முன்பே குடியேறி யிருந்தனர் என்பதற்கு எவ்வெக் கல்வெட்டுகளைக் காட்டலாம்?

தென் இந்தியர் மலேயா நாட்டிலும் நெடுங்காலத்திற்கு முன்பே குடியேறியிருந்தனர் என்பதற்கு எடுத்துக்காட்டாகக் குவால ஸெலின்ஸிங் என்னும் கிராமத்தில் கி.பி. ஆறாவது நூற்றாண்டையக் கல்வெட்டு, கெடாரமெனு மிடத்திலுள்ள கி.பி. நான்காம் நூற்றாண்டைச் சேர்ந்த இரு கல்வெட்டுகள்

யிகோறில் கி.பி. 775-ல் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டு ஆகிய வற்றைக் குறிப்பிடலாம்.

6. வியோங்ஸ்நாவிலுள்ள கோவிலில் காணும் உருவச் சிலைகளில் குறிப்பிடத்தக்க இரு உருவங்கள் எவை? அவை எம்முறையைப் பின்பற்றினவாகக் காணப் படுகின்றன ?

ஒன்று, நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியுள்ள திருமாலின் வடிவமும், மற்றொன்று வைரவமூர்த்தியாக விளங்கியுள்ள சிவ பெருமானின் வடிவமும் ஆகும். இவ்விரு உருவச் சிலைகளின் முக உறுப்புக்களும் முகத்தின் தோற்றமும் தவிர, மற்றெல்லா அமைப்புக்களும் தென் இந்திய முறையைப் பின்பற்றினதாகவே காணப்படுகின்றன.

7. லாஜோங்கீரா என்பவர் தாகூப்பாவில் உள்ள உருவச் சிலையைப்பற்றி என்ன கூறுகிறார்?

தாகூப்பாவிலுள்ள சில உருவச்சிலைகளைப்பற்றி லாஜோங்கீரா எனும் நிபுணர் பல மடிப்புகளுடைய ஆடைகளும், எண்ணிறந்த அணிகலன்களும், உடலின் ஒசிந்த இயற்கை வளைவும் திராவிட நாட்டுப் படிமங்களை ஒத்திருக்கின்றன என்று அவர் தெளிவாக விளக்குகிறார்.

8. மலேயாவில் தென்னிந்திய முறைக் கட்டிடக் கலை செல்வாக்குப் பெற்றிருந்தது எதனால் அறியப்படு கிறது ?

கடாரத்தில் கிடைத்த புதை பொருட்களில் ஒரு பழைய சிவன் கோயிலின் எஞ்சிய பகுதிகளும் கண்டு பிடித்துள்ளனர். இக்கோவிலின் கட்டிடக் கலைமுறை பல்லவர் பின்பற்றியிருந்ததை ஒத்ததெனத் தொல்பொருள் நிபுணர் குவாரிட்ச் வெல்ஸ் என்பார் கருதுகின்றார். அதன் அண்மையில் காணப்படும் மற்றொரு கோவி லின் கூரை மாமல்லபுரத்து ரதங்களின் கூரைகளைப்போல் அமைந் திருக்கின்றது. இதனால் கட்டிடக் கலையிலும் அங்குத் தென்னிந்திய முறை செல்வாக்குப் பெற்றதை அறியலாம்.

9. தாகூபாவில் கிடைத்த கல்வெட்டினால் அறியப்படும் செய்திகள் யாவை ?

'அவனி நாரணம்' என்ற ஏரி ஒன்று அமைக்கப்பெற்ற விவரம் அக்கல்வெட்டுக் கூறுகின்றது. மூன்றாம் நந்திவர்மன் (கி. பி. 826-50) பெயரால் நாங்கூர் தலைவர் ஒருவர் அதை அமைத்த தாகக் கூறப்பெற்றுள்ளது. இந்தக் கல்வெட்டினால் ஆங்கு உயர் நிலையிலிருந்த வாணிகக் குழுக்களைப்பற்றிய செய்தி ஒன்றும் அறி கின்றோம். அந்த ஊரில் தங்கியிருந்த 'மணிக்கிராமத்தாரின்' அதாவது, வணிகரின் பொறுப்பிலேதான் அந்த ஏரியின் பாது

காப்பு ஒப்படைக்கப் பெற்றிருந்ததென்பது அக்கல்வெட்டு வாயிலாக நாம் அறியக் கிடக்கும் செய்தி.

10. மலேயாவில் ஒவ்வொரு துறையிலும் நம் நாகரிகம் பரவியிருந்ததை எவ்வாறு அறியலாம்?

மலேயா மொழியில் வளங்கும் பல சொற்கள் தூய தமிழ்ச் சொற்கள் என்பது வெள்ளிடைமலை. மலாயா என்ற சொல்லே மலை என்ற தமிழ்ச் சொல்லிலிருந்து தோன்றியது. தவிர இலை, மணம் புரிதல், உறிதிமொழி, இணை, வண்ணான் முதலியவற்றைக் குறிப்பிடும் மலேயாச் சொற்கள் தமிழின்பாற் கடன் பெற்ற சொற்கள் என்பது திண்ணம். இதனால் மலேயாவின் ஒவ்வொரு துறையிலும் நம் நாகரிகம் பரவியிருந்தது என்பதை அறியலாம்.

11. சுமத்திராவில் தென்னிந்தியத் தொடர்பைக் காட்டுவன எவை?

சுமத்திராவில் வாழும் ஸிம்பிறிங் என்ற கூட்டத்தார் சிலரிடையே இன்றும் வழக்கிலிருக்கும் 'சோழிய' - 'பாண்டிய' - 'மெலியாள' - 'பெலவி' (பல்லவ) - 'தெகங்' (தெக்காணம்) முதலான பெயர்கள் தென்னிந்தியத் தொடர்பைத் துலக்கிக் காட்டுகின்றன.

## 5. தமிழும் தமிழரும்

1. தமிழ், பிறமொழியாளரால் இகழப்படுவதற்குச் சோமசுந்தர பாரதியார் கூறும் காரணங்கள் யாவை?

தமிழ் மக்களே தம் தாய்மொழியை ஒரு பொருளாகக் கருதாமல் புறக்கணிக்கின்றனர். ஊக்கமும், செல்வமும், தம்மைத் தாமே மதிக்கும் பண்பும் இல்லாத தமிழ்ப் பெரியவர் பலர் தமது இழிவைத் தமிழுக்கு ஏற்றி, அதற்கு அழிவைத் தேடுகின்றனர். பௌதிகம், அரசியல் முதலிய கலைகளைத் தமிழில் பெறமுடியாதென்று பேசுகின்றனர். தமிழை வளர்ப்பது இந்தியா ஒரு நாடென்ற உணர்வும், ஒற்றுமை உணர்விற்கும் தடையாகும் என்று சாற்றுகின்றனர். முயன்று அறிய வேண்டுவனவற்றை அறியாமல் இருக்கின்றனர். அதனால் தமிழ் பிறமொழியினரால் இகழப்படுகிறது எனச் சோமசுந்தர பாரதியார் கூறுகிறார்.

2. இந்திய நாட்டு மக்கள் ஒரு மொழியாலேயே ஒன்றாகிவிட முடியுமா? ஆசிரியர் இதனை எவ்வாறு விளக்குகின்றார்?

ஐக்கிய நாட்டில் பல மொழி பேசுவோர் உளர்; கானடாவில் ஆங்கில மொழியும் பறங்கி மொழியும் பேசப்படுகின்றன சீனத்திலும் அன்று முதல் இன்றுவரை பல மொழிகள் பயிலப்படுகின்றன.

இத்தகைய பெரிய நாடுகளில் வாழ்வோரெல்லாம் பலமொழி பயின்று ஒற்றுமையுடன் வாழ்கின்றனர். அதனால் ஒரே நாடு அல்லது ஒரே அரசு என்ற உணர்வுக்குத் தமிழின் வளர்ச்சி தடையாக இராது. அதனால் ஒரு மொழியிலேயே இந்திய நாட்டு மக்கள் ஒன்றுவர் என்று கூறுவது பொருத்தமற்றது என்று ஆசிரியர் விளக்குகின்றார்.

**3. மொழியைவளர்க்கும் முறையில் பிறமொழியாளர்க்கும் தமிழர்க்கும் உள்ள வேறுபாடென்ன?**

பல கலைகளும் செழித்துள்ள மொழிகளாகிய ஆங்கிலம், செருமானியம், பறங்கி என்பன முன்னர் இலக்கண இலக்கியம் இல்லாத பிள்ளைப் பருவ மொழியாக நிலவின. பின்னர் புதுமையை விரும்பிய அம்மொழியினர் தத்தமது மொழிகளிலேயே புதுக் கலைகளைப் புகுத்தி நன்மை பெற்றனர். தங்கள் மொழியைக் குறைத்துக்கூறி இழிவைத் தேடிக் கொள்ளவில்லை.

நம் தமிழோ மிகமிகப் பழமை வாய்ந்தது. இலக்கண இலக்கியங்கள் நிரம்பப் பெற்றது. புதிய கலைகள் தோன்றுதற்குரிய வளம் படைத்தது. இதனை உணராத மக்கள் புதிய கலைகள் தோன்றுதற்குரியதன்று தமிழ் மொழி என்று குறைத்துக் கூறிப் பழியைப் பெறுகின்றனர். இதுவே பிறமொழியாளர்க்கும் தமிழர்க்கும் உள்ள வேறுபாடு.

**4. தாய்மொழி வளம் பெறுவது ஏன் இன்றியமையாதது?**

அறிவு வளம், அறநூற் பயிற்சி, நல்ல இல்லற வாழ்வு, அரசியல் தெளிவு முதலியவற்றைப் பெறுவதற்கு மொழிவளமே காரணமாகும். அதிலும் தாய்மொழி வளமே இன்றியமையாததாகும். வளம் பெறாத சிறிய மொழியாக இருந்தாலும் தாய்மொழிதான், கூரிய அறிவு, நூலாக்கும் திறமை முதலியனவற்றை வளர்ந்தோங்கச் செய்யும். ஆதலால் தாய்மொழி வளம் பெறுவதே வேண்டப்படுவதாகும்.

## 6. ஆராய்ச்சியின் கடமை

**1. பொதுமக்கள் இலக்கியங்களை எவ்வாறு நோக்குகின்றார்கள்?**

பொது மக்கள் இலக்கியங்களைக் காணும் முறையில் அவர்கள் வியக்கும் பொருள்களே முன் வரிசையில் நிற்கின்றன. அவர்கள் பழகியறிந்த பொருள்களே சிறந்து காணப்படுகின்றன. மிகச் சிறந்தவை தவிர ஏனையன அவர்கட்குப் புலனாவதில்லை. இலக்கியங்களின் முன்னணியில் காணப்படுபவை சிறப்பில்லன ஆயினும் அவர்கட்குச் சிறந்து தோன்றும்; பின்னணியில் மறைந்து நிற்பன சிறந்தனவாயினும் சிறப்பின்றியும் தோன்றும்.

## 2. இலக்கிய ஆய்வாளன் இலக்கியங்களை எவ்வாறு காண்கின்றான்?

இலக்கிய ஆய்வாளன் இலக்கியங்களின் மூலமாகப் பழங் காலத்தை ஆய்ந்து கண்டு கலைஞனையும் கவிதைகளையும் புதிய முறையில் ஆராய்கின்றான். இலக்கியங்களின் மேல் வரிசையிலும் ஆழத்திலும் புதைந்து கிடக்கும் உண்மை இயல்புகளையும், பாத் திரங்கள், செய்திகள் இவற்றின் தொடர்புகளையும் ஆய்ந்து வெளிப்படுத்துகின்றான். தனது ஆய்வு வன்மையால் தொலைக் காட்சிகளையும் அணிமைக் காட்சியாக்கிக் காட்டுவான்.

## 3. இலக்கிய ஆய்வாளரிடம் காணப்படும் குறைகள் யாவை?

இவர்களிற் பெரும்பான்மையினர், தமக்கு முன் வந்த புகழ் மிக்க ஆராய்ச்சியாளர் சிலர் வெளியிட்ட கருத்துக்களையே கிளிப் பிள்ளை போலத் திரும்பத் திரும்பக் கூறுகின்றனர். சில சமயங் களில் அவர்களுடைய உள்ளங்களில் வீழ்ச்சியும், மேலும் உயர முடியாத உயர்ச்சியும் மாறி மாறி உண்டாகின்றன. இதனால் ஆராய்ச்சி முடிவுகளிலும் குறைபாடுகள் ஏற்பட்டு, இலக்கியத்தின் உண்மைத் தன்மைகள் வெளிப்படாமல் நின்று விடுகின்றன. விரைந்து நுண்பொருள்களைக் காணவேண்டும் என்ற ஆர்வத் தால் பெரிதும் உண்மைக்கு மாறாக முடிவு கட்டி விடுகின்றனர். இவ்வாறு இலக்கிய ஆய்வாளரிடையே குறைபாடுகள் காணப்படு கின்றன.

## 4. இலக்கியங்களை ஆய்வோர் மேற்கொள்ள வேண்டிய கடமைகள் யாவை ?

1. இலக்கியங்களின் மூலமாக, கடந்த காலத்தைப் பார்த்துக் கலைஞனையும் கவிதைகளையும் புதுமுறைகளால் ஆராய்ந்து உண் மையை வெளிப்படுத்துதல்.

2. பாத்திரங்களையும் செய்திகளையும் மேற்போக்காக ஆரா யாமல், அவற்றின் உண்மையான இயல்பு, நிலை, தொடர்புகள் முதலியனவற்றை நன்கு வெளிப்படுத்துதல்.

3. ஆராய்ச்சிக் கண்ணாடியால் சேய்மைக் காட்சிகளையும் அணிமைக் காட்சியாக்கி, அவற்றை அண்மைப் பொருள்களுடன் ஒப்பிட்டு உண்மையை வெளிப்படுத்துதல்.

4. பிற ஆய்வாளர் கூறியவற்றையே திரும்பத் திரும்பக் கூட்டியும் குறைத்தும் கூறாமல் அவற்றை ஒரு வழிகாட்டியாகக் கொண்டு, தம் நுண்மதியால் புதிய உண்மைகளை வெளிப் படுத்துதல்.

5. காய்தல் உவத்தல் இன்றி நடுநிலையுடன் ஆய்ந்து, தாம் கண்டவற்றைத் துணிந்து வெளிப்படுத்துவது.

இவை இலக்கியங்களை ஆய்வோர் மேற்கொள்ள வேண்டிய கடமைகளாகும்.

5. **இலக்கிய ஆராய்ச்சியாளர்களின் சிறப்புக்கள் யாவை?**

இலக்கியங்களின் வாயிலாகப் பழங்கால நிகழ்ச்சிகளை அறிந்து கலைஞர்களையும் இலக்கியங்களையும் புதுமுறையில் ஆராய்ந்து உண்மைகளை வெளிப்படுத்துகிறார்கள்.

பொது மக்கட்கு எளிதாகத் தோன்றும் காட்சிகளையும் நிகழ்ச்சிகளையும் ஆராய்ந்து, அவற்றின் சிறப்புக்களை எடுத்துக் காட்டி, கலைஞனுடைய ஆற்றலைப் புலப்படுத்துகின்றான்.

புதிய இலக்கிய நோக்கம் ஏற்பட வழியமைத்துக் கொடுக்கின்றான்.

நடு நின்று ஆராய்ந்து உண்மைகளை வெளிப்படுத்துவதனால் புது நோக்கும் பொது நோக்குங் கொண்ட கலைஞர்களைத் தோற்றுவித்து, இலக்கிய வளர்ச்சியைச் சிறப்புறச் செய்கிறான்.

இவை இலக்கிய ஆய்வாளரின் சிறப்புக்களாம்.

## 7. அஞ்சாமை

1. **நெடுங்கிள்ளி போர் செய்யும் முயற்சியின்றிக் கதவடைத்திருந்த ஆவூரை நலங்கிள்ளி முற்றுகையிட்டது பொருந்துமா?**

போருக்கு அழைக்கும்பொழுது எதிரே வந்து பொருதாதவனை விடுத்துச் செல்வது முறைமையே. ஆனால் தனக்கும் உரிமையுள்ள ஊரைக் கைப்பற்றிக் கொண்டு, தன்னை நெருங்க விடாத ஒருவனை விட்டுவிடுவது நன்றன்று. விட்டுச் சென்றால் தனக்கு உரிமையுடைய ஒன்றை அச்சம் காரணமாக விட்டுச் சென்றான் என்ற பழியே வரும். ஆதலின் 'எனக்கு உரியதைக் கொடுக்கும் வரையில் முற்றுகையிடுவேன்; வெளியில் வந்து போர் செய்வதானால் முற்றுகை தவிர்வேன்' என உறுதி பூணுதலே கடமை. ஆதலின் நலங்கிள்ளி முற்றுகையிட்டது பொருந்தும்.

2. **புலவர் எவரும் நலங்கிள்ளியை அணுகி அறிவுரை கூறாமைக்குக் காரணம் என்ன?**

இதற்கு விடை மேலுரைத்ததை எழுதி, ஆதலின் புலவர் எவரும் நலங்கிள்ளியை அணுகி அறிவுரை கூறவில்லை என முடிக்க.

3. **கோவூர் கிழார் நெடுங்கிள்ளியை அணுகி அறிவுரை கூறக் காரணம் என்ன?**

'எனக்கு உரியதைக் கொடு' எனக் கேட்கும் பங்காளிக்குக் 'கொடுப்பேன்' எனச் சொல்லிக் கதவு திறத்தலும் செய்யாமல், 'கொடேன், கேட்டால் போர் நிகழ்த்துவேன்' என வெளி வந்து போரும் செய்யாமல் நலங்கிள்ளி நெடுநாள் ஆவூர்க் கதவடைத்திருந்தான். அதனால் யானைகள் குளங்களில் படியாமலும் கவளம்

பெருமலும் வருந்தித் தறியில் கட்டுண்டபடியே இடிபோல் முழங்கின. குழந்தைகள் பாலின்றி அலறின. மகளிர் மலரின்றிக் கூந்தல் முடித்தனர். வீடுதோறும் அழுகுரல் எழுந்தது. இதையறிந்த கோவூர் கிழார் மனம் வருந்தி அரசன் கடமை தவறியதாக உணர்ந்து அவனை அணுகி அறிவுரை கூறினர்.

4. வெள்ளைக்குடி நாகனர் அரசனுக்குக் கூறும் அறிவுரை யாது?

அரசன் ஒருவன் கையிற் செங்கோல் தாங்கி, வெண்குடையின் கீழ், அரியாசனத்தில் இருப்பது, தன் வாழ்வும் புகழும் பெருக்கும் தன்னலத்திற்காக அன்று; அரசன் கொண்ட குடை வெயிலை மறைப்பதற்காகவும் அன்று; குடிகளின் துன்பத்தை மறைப்பதற்காகவே என்னும் பொருள் படக்

" கண்பொர விளங்கும் நின் விண்பொரு வியன்குடை
வெயில் மறைக் கொண்டன்றே அன்றே வருந்திய
குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ "

என்று வெள்ளைக் குடி நாகனர் அறிவுரை கூறுகிறார்.

5. நெடுங்கிள்ளி கதவடைத்திருந்தது பொது நலத்தின் பாற்பட்டதா? தன்னலத்தின் பாற்பட்டதா?

ஆவூர் அலறும் நிலையினை அறிந்தும் நெடுங்கிள்ளி கவலையின்றி இருந்தான். குழந்தைகளும் மகளிரும் வருந்தும் நிலையில் விட்டு விட்டு ஊரின் உரிமையைக் காக்கும் காவல் பொதுநலம் என்று எவ்வாறு சொல்ல இயலும்? பொதுநலம் நோக்கமாயின் ஊர் முழுதும் வருந்தும் துன்பத்தையே முதலில் போக்க வேண்டும். அதனைச் செய்யாது கதவடைத்து உள்ளேயிருந்து கொண்டு வாளா விருத்தல் தன்னலத்தின் பாற்பட்டதேயாகும்.

6. மறத்தின் பாற்பட்ட முறையும் அறத்தின் பாற்பட்ட முறையும் எது, எது என்பதை ஆசிரியர் எவ்வாறு விளக்குகிறார்?

ஆண்மை மிக்கவர் ஆட்சிக்குரியர்; ஆண்மை மிகுந்தவர் யார் என அறிதற்கு மதிலின் புறத்தே இடங் குறித்துப் போர் செய்தே அறிதல் வேண்டும். வென்றவர் நாட்டை ஆளலாம்; ஊரார் அலறும் துன்பமும் தீரும் இது மறத்தின் பாற்பட்ட முறையாகும்.

நலங்கிள்ளிக்கும் ஆவூரை ஆளும் உரிமை உண்டு. அதனால் அடைத்த கதவைத் திறந்து 'நீயே ஆள்க' எனக் கூறிவிடுவது இஃது அறத்தின் பாற்பட்ட முறையாகும் என ஆசிரியர் விளக்குகிறார்.

7. ஆவூரின் கொடுந்துயர் கண்டு நெடுங்கிள்ளியிடம் கோவூர் கிழார் அஞ்சாது எடுத்துரைப்பவை யாவை?

கோவூர் கிழார் அஞ்சாது எடுத்துரைத்தவை: யானைகள் குளங்களில் படியாமலும் கவளம் பெருமலும் வருந்தித் தறையில்

கட்டுண்டபடியே இடிபோல் முழங்கவும், குழந்தைகள் பாலின்றி அலறவும், மகளிர் மலரின்றிக் கூந்தல் முடிக்கவும் வீடுதோறும் அழுகுரல் கேட்கவும் நீ கதவடைத்து இனி திருக்கிறாய் ! வேந்தே! இது கொடுமை. நீ அறத்தைப் போற்றுவதாக இருந்தால் 'இதோ உன் ஊர் எனக் கதவைத் திறந்துவிடு ; அன்றி மறம் போற்றுவ தாயின் போர் செய்யப் புறப்படு.

நீ இங்கு இருக்கும் நிலையில் அறமுங் காணேன், மறமுங் காணேன். கதவடைத்து மூலையில் நீ யிருப்பது நாணத்தக்கதாயுள் ளது என்பனவாகும்.

## 8. கோவூர் கிழாரின் அஞ்சாமை எவற்றால் புலனாகும்?

ஊரின் துன்பங்கண்டும் 'ஈங்கினித்திருத்தல் இன்னாதம்ம' என்று புலவர் இடித்துரைக்கின்றார். அரசனது வலிமையை இகழ்ந் துரைத்தல் இயலாதாயினும், மதில் வலி பெரிதென மதித்து, அத னுள் வதிவது அழகியதன்று என எள்ளியுரைத்தார். துன்னரும் துப்புடையவன் நீ ஒதுங்கியிருத்தல் நாணத்தக்கது என்று கடிந்துரைத்தார். இவற்றால் கோவூர் கிழாரின் அஞ்சாமை இனிது விளங்கும்.

## 9. 'செஞ்சொற்கள் பிறந்த நெஞ்சமே நாகரிகம் வாழும் கோயில் ஆகும்' இதை விளக்குக.

அரசனைப் பலவாறு புகழ்ந்து, அவன் செயலனைத்தும் செம் மையே எனக்கூறி அரசனுடைய செல்வாக்கைப் பெற விரும்ப வில்லை கோவூர் கிழார். குடிகளின் துன்பத்தைப் போக்காமல், தன்னலங்கொண்டு பதுங்கியிருக்கின்ற செயலைக் கடிந்து, அதனால் யாதுவரினும் வருக என்று துணிந்து பொது நலமே பேணி, பிறி தின் நோய் தன் நோய் போற்றி அரசனிடம் இடித்துரைத்தார். அச் சொற்களே செஞ்சொற்கள். அச் செஞ்சொற்கள் பிறந்த நெஞ்சமே நாகரிகம் வாழும் கோயில் ஆகும் என ஆசிரியர் விளக்கு கிறார்.

## 10. நலங்கிள்ளி உறையூரில் முற்றுகை யிட்டிருந்த பொழுது கோவூர் கிழார் கூறியன யாவை ?

நலங்கிள்ளி உறையூரை முற்றுகையிட்டிருந்த பொழுது மனம் பொறாத கோவூர் கிழார் இருவரிடத்தும் சென்று 'ஒரு குடியிற் பிறந்த மக்கள் இருவரும் இவ்வாறு பொருதல் அறிவற்ற செயலா கும். நெடுங்கிள்ளி சூடியதும் ஆத்தியே. நலங்கிள்ளி சூடியதும் ஆத்தியே. நீவிர் இருவரும் விரும்பியது வெற்றியே. இருவரும் வெல்லும் வழி உண்டோ ? போரென்றால் ஒருவருக்குத் தோல்வி யும் ஒருவருக்கு வெற்றியுமாக முடிதல் இயல்பு. சோழன் வென் றான் சோழன் தோற்றான் என்று சொல்லுமாறு ஒரு போர் நிகழ்த் துவது அறிவுடைமையாகுமா ? இச் செயலால் பெருமையும் மகிழ்ச்சியும் உங்கட்கு இல்லையாயினும் உங்களைப் போன்ற சேரர்க் கும் பாண்டியர்க்கும் அவை உண்டாகும். அதனால் போரைத் தவிர்க என்று கூறினார்.

**3. வீரமும் வண்மையும் ஒன்றோடொன்று தொடர்புடைய குணங்கள் என்பது எதனால் விளங்கும்?**

தொல்காப்பியர் பெருமிதம் தோன்றுதற்குரிய தறுகண் முதலியவற்றோடு கொடையையும் சேர்த்துக் கூறியிருப்பதும், 'கொடை மடம் படுதல் அல்லது பாரி படை மடம் படான்' என வருவது போல்வனவும் இவ்வுண்மையை விளக்க நிற்கும்.

**4. பண்ணன் எத்தகைய செல்வவளங்களைப் பெற்றிருந்தான்?**

காவிரியின் வடவயின் உள்ள சிறு குடிக்கண், பூஞ்சோலையும் மாந்தோப்பும், நெல்லிக்காவும் அவனுக்கிருந்தன. அவற்றிடை வாவி குளங்களும் வயங்கின. அவனுக்கு எத்துணை விளைபுலங்களும், படப்பை முதலியவும் அமைந்திருந்தன என அறுதியிட்டுரைத்தல் சாலாதெனினும், வள்ளண்மை செலுத்திய ஒண்ணிதிச் செல்வனாகிய அன்னான், அவை நனி மிகவுடையன் என எண்ணுதல் தவறாகாது.

**5. பண்ணன் செல்வ வளம் யார் யார்க்குப் பயன்பட்டது?**

அச்சிறு குடிக்கட் போதரும் பாணராயினும், புலவராயினும் மற்றியாவராயினும், அவனது பூம் பொய்கையிற் சென்று குளிப்பர்; பூங்காவினுட் புக்கு மலர் பறித்து மறைவர்; காவினுள்ளும் தோப்பினுள்ளும் எய்தி இனிய தீவிய நெல்லிக்கனிகளையும் மாங்கனிகளையும் பறித்து உண்பர். அவனது மனையின்கண்ணே இரவலர் எண்ணிலாதவர் இடையறாது வந்தீண்டி அடிசில் ஆர்வர்.

**6. குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் எத்தகைய இயல்புகளை உடையவன்?**

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் என்னும் சோழர் பெருமான் பேரரசன்! வீரமும் வண்மையும் உடையவன்! நல்லிசைப் புலவர்கள் பலரால் புகழ்ந்து பாடப் பெற்றவன். 'செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும் வெண்டிங்களுள் வெயில் வேண்டினும் வேண்டியது விளைக்கும் ஆற்றலை' எனவும் 'மலையில் இழிந்து மாக் கடல் நோக்கி, நிலவரையிழிதரும் பல்யாறு போலப், புலவரெல்லாம் நின்னோக்கினரே' எனவும் பாராட்டப்பெற்ற வளவர் தோன்றல்.

**7. கிள்ளிவளவன் பண்ணனிடத்துக் கொண்டிருந்த அன்பை விளக்குக.**

வளவன், தன்னை ஒரு பாணனாக வைத்துப் பண்ணனது ஈகையைப் பாராட்டிப் பாடியிருக்கும் அப்பாட்டிலே 'யான் வாழு நாளும் பண்ணன் வாழிய' என்பது முதலடியாகும். யான் உயிர் வாழு நாளையும் பெற்றுப் பண்ணன் வாழ்வானாக என்பது அதன் பொருள். அஃதோர் பாணன் கூற்றில் அமைந்திருப்பினும்,

கிள்ளி வளவன் உள்ளத்திடையன்றே அது? நாட்டில் வாழும் உயிர்கட்கெல்லாம் உயிராக விளங்கும் இறைவன், தான் வாழ்வதற்குரிய நாளையும் பண்ணன் பெற்று வாழவேண்டும் எனக் கருதினன் என்னில், பண்ணன்பால் அவனுக்கிருந்த அன்பின் திறத்தை என்னென்றியம்புவது?

8. கிள்ளி வளவன் பாடிய பாடலில் என்னென்ன கூறப் பட்டுள்ளன?

பழுத்த மரத்தின்கட் புள்ளினம் ஒலித்தாற் போலப் பண்ணனுடைய இல்லத்தில் ஊண் உண்டலாலாகிய ஆரவாரம் கேட்கும் என்றும் மழை பெய்யும் காலத்தைப் பார்த்துத் தம் முட்டைகளைக் கொண்டு மேட்டு நிலத்திலே அடையும் சிற்றெறும்பின் ஒழுக்கினை யொப்பப், பெரிய சுற்றத்துடன் கூடிய பாண் சிறுவர்கள், சோற்றுத்திரளைப் பொருந்திய கையினரால், வேறு வேறு வரிசையாக அவன் இல்லில் நின்றும் செல்வரென்றும் அப்பாட்டிலே கூறப்பட்டுள்ளன. அம்மட்டோ, 'பசிப்பிணி மருத்துவன்' என்னும் அருமருந்தன்ன பெயரால் பண்ணன் கூறப்பெற்றுள்ளான்.

9. சோழன் நலங்கிள்ளி கூறிய வஞ்சினக் காஞ்சியில் என்ன கூறுகிறான்?

பகையரசர் என்பால் வந்து ஈயென இரப்பார்களானால் இந்த அரசாட்சியைக் கொடுப்பது எனக்கு எளிது. அதுமட்டுமா? இனிய உயிராயினும் கொடுத்து விடுவேன். என் வீரத்தை இகழ்ந்தபேதை தூங்குகின்ற புலியின்மேல் இடறிவீழ்ந்த குருடன்போலத் தப்பிச் செல்லுதல் அரிது என்று சோழன் நலங்கிள்ளி வஞ்சினங் கூறுகின்றான்.

---

# இலக்கணக் குறிப்புகள்

---

**வேற்றுமைத் தொகை:** இரு சொற்கள் வேற்றுமைப்பொருள் படப் புணர்ந்து, ஐ, ஆல், கு, இன், அது, கண் என்னும் வேற்றுமை உருபுகள் தொக்கு (மறைந்து) வருவது வேற்றுமைத் தொகை எனப்படும். உதாரணம்: மரம் வெட்டினான். மரத்தை வெட்டினான் என்பதில் ஐ உருபு தொக்கு வந்தது.

**வினைத் தொகை:** காலங்காட்டும் இடை நிலைகள் மறைந்து வரும் பெயரெச்சத் தொடர் வினைத் தொகை எனப்படும்.
உதாரணம்: கொல்யானை. கொன்ற யானை என்பது பெயரெச்சத் தொடர். இதில் காலங்காட்டும் இடைநிலை வந்துள்ளது. அதிலுள்ள கொல் என்ற பகுதி மட்டும் நின்று, கால இடைநிலை மறைந்து, யானை என்னும் பெயரொடு சேர்ந்து வந்தது. இது முக்காலத்துக்கும் பொதுவாக வரும்.

**பண்புத் தொகை:** பண்புப் பெயரும் அப்பண்பை அடுத்து வரும் பெயரும் சேர்ந்து நின்று (ஆகிய என்னும்) பண்புருபு தொக்கு வருவது பண்புத் தொகையாம்.
உதாரணம்: செந்தாமரை. செம்மை பண்புப் பெயர்; தாமரை பண்படுத்து வரும் பெயர். செம்மையாகிய தாமரை என்பதில் ஆகிய என்னும் பண்புருபு தொக்கு நின்றது.

**இரு பெயரொட்டுப் பண்புத் தொகை:** இரண்டு பெயர்கள் ஒட்டி வருகின்ற பண்புத் தொகை. முதலில் சிறப்புப் பெயரும் அடுத்துப் பொதுப் பெயருமாக ஒட்டி நின்று பண்புருபு தொக்கு வருவது.
உதாரணம்: வாழைமரம். இதில் வாழை சிறப்புப் பெயர்; மரம் பொதுப் பெயர்.

**உவமைத் தொகை;** உவமானமும் உவமேயமும் சேர்ந்து நின்று போல, போன்ற என்ற உவமை உருபு தொக்கு வருவது உவமைத் தொகையாம்.
உதாரணம்: மதிமுகம். இதில் மதி உவமானம்; முகம் உவமேயம். மதிபோன்ற முகம் என்பதிலுள்ள போன்ற உவமை உருபு தொக்கு வந்தது.

**உம்மைத் தொகை:** இரண்டு முதலிய பல சொற்கள் சேர்ந்து நின்று, உம் என்ற உருபு தொக்கு வருவது உம்மைத் தொகையாம்.
உதாரணம்: இன்ப துன்பம். இன்பமும் துன்பமும் என்பதிலுள்ள உம் தொக்கு நின்றது.

**அன்மொழித் தொகை :** இரு சொற்கள் இணைந்து நின்று, அவ்விரு சொற்களிலும் அல்லாத ஒரு மொழி தொக்கு வருவது அன் மொழித் தொகையாம். அல்+மொழி+தொகை.

உதாரணம் : பொற்றொடி வந்தாள். இதில் பொற்றொடி என்பது அன் மொழித் தொகை. இது, பொன்னாலாகிய வளையல்களை அணிந்த பெண் என்று பொருள்படும். பெண் என்ற மொழி தொக்கு வந்தது. பொற்றொடி என்பது பொன் னாலாகிய வளை என்று வேற்றுமைப் பொருள்படப் புணர்ந் துள்ளமையால் இது வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை எனப்படும். இவ்வாறே ஏனைய தொகை யடியாகப் பிறந்த அன்மொழித் தொகையாக இருப் பின் அந்த அந்தத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை எனப்படும்.

**ஆகுபெயர்:** ஒன்றன் பெயர் அதனோடு சம்பந்தமுடைய வேறொரு பொருளுக்கு ஆகிவரும் பெயர் ஆகுபெயர் எனப்படும்.

உதாரணம் : இனிப்புத்தின்றான். இனிப்பு ஒரு சுவையின் பெயர்; அஃது அந்தச் சுவையோடு தொடர்புடைய ஒரு பண் டத்துக்கு ஆகிவருகிறது. இது பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் இவற்றின் அடிப்படையாகப் பிறக்கும். இனிப்பு என்பது பண்பு (குணம்) அதனால் இது பண்பாகு பெயர் எனப்படும்.

**அன்மொழித்தொகை, ஆகுபெயர் வேறுபாடு ;** மாணவர்கள் இவ் விரண்டுக்குமுள்ள வேறுபாடுகளைத் தெரிந்துகொள்வது நலம்.

ஆகு பெயர் ஒரு சொல்லில் வரும்.

அன்மொழித்தொகை இரு சொல்லில் வரும்.

ஆகு பெயர் அதனோடு (பிரிக்கமுடியாத) சம்பந்தமுடைய பொருளுக்கு ஆகிவரும்.

அன் மொழித்தொகை வேறு பிரித்துரைக்கக் கூடிய சொல் தொக்கு வரும்.

இனிப்புத் தின்றான்—இதில் இனிப்பு என்ற ஒரு சொல் மட்டுமே ஆகுபெயர்.

பொற்றொடி வந்தாள்—இதில் பொன் தொடி என்ற இரண்டு சொல்லும் சேர்ந்தே அன்மொழித்தொகை.

ஆகுபெயரில் இனிப்புச்சுவை வேறு அச்சுவையையுடைய பண்டம் வேறு எனப்பிரிக்க முடியாது.

அன்மொழித்தொகையில் பொன் வளைவேறு, அதனையுடைய பெண் வேறு என வேறு பிரித்து உணரலாம்.

**வினையாலணையும் பெயர் :** ஒரு வினைமுற்று வினைப்பொருளை யுணர்த்தாமல் ஒரு பெயர்ப்பொருளை உணர்த்தி நின்றால் அது வினையாலணையும் பெயர் எனப்படும்.

உதாரணம் ; அழுக்கறுப்பான் சுற்றம். இதில் அறுப்பான் என்பது வினையாலணையும் பெயர். அறுப்பான் என்பது வினை

முற்று. அது வினைமுற்றுப் பொருளையுணர்த்தாமல் அறுப் பவனாகிய ஒருவன் என்று பெயர்ப் பொருளை உணர்த்தி நிற்கின்றது.

**முற்றெச்சம்:** வினை முற்றுச் சொல்லானது முற்றுப் பொருளை உணர்த்தாமல் எச்சப்பொருள் பட்டு நிற்குமானால் அது முற்றெச்சம் எனப்படும்.

உதாரணம்; நடுங்கினன் வீழ்ந்தான். இதில் நடுங்கினன் என்பது முற்றெச்சம். இது நடுங்கினன் என முற்றுப் பொருளை உணர்த்தாமல் நடுங்கி (வீழ்ந்தான்) எனப் பொருள்படுவதால் முற்றெச்சம் எனப்பட்டது. (முற்று+எச்சம்)

**ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சம்:** ஒரு பெயரெச்சம் ஈற்றெழுத்துக் கெட்டு, எதிர்மறைப் பொருளை உணர்த்தி நிற்குமானால் அஃது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் எனப் படும். உதாரணம்; செல்லாக்காசு. இது செல்லாத காசு என்றிருக்க வேண்டும். இதில் ஈற்றிலுள்ள த என்ற எழுத்துக் கெட்டு, செல்லா என நிற்கிறது. அச் சொல் எதிர் மறைப் பொருளை உணர்த்தி நிற்கிறது. அதனால் இஃது ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் எனப்படுகிறது.

**ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம்:** பெயரெச்சத்தைப் போலவே வினையெச்சமும் ஈற்றெழுத்துக் கெட்டு, எதிர் மறைப் பொருளை உணர்த்துமானால் ஈறு கெட்ட எதிர்மறை வினையெச்சம் எனப்படும்.

உதாரணம்: முட்டாச் செயின். இது முட்டாது செய்யின் எனப்பொருள்படும் வினையெச்சத் தொடராகும். எதிர் மறைப்பொருளை உணர்த்தி ஈற்றிலுள்ள து என்ற எழுத்துக் கெட்டு நிற்கிறது. அதனால் இது ஈறு கெட்ட எதிர்மறை வினையெச்சம் எனப்படும்.

**செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்:** செய்யும் என்ற வாய் பாட்டில் வருகின்ற பெயரெச்சம்.

உதாரணம்; பாடும் குயில். பாடும் என்பது செய்யும் என்பது போல வருகின்ற பெயரெச்சம். அதனால் இது செய்யுமென் னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் எனப்படும். (பாடும் குயில்—பாடுகிற குயில்).

**செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்று:** பாடும்குயில் என்பது குயில்பாடும் என மாறி நிற்குமானால் பாடும் என்னுஞ்சொல் முற்றுப்பொருளைத் தந்துவிடுகிறது. இவ்வாறு முற்றுப் பொருளைத் தருமானால் அது செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்று எனப்படும்.

**ஏவல் வினைமுற்று :** ஒன்றைச் செய் எனக் கட்டளையிடுவதாக வரும் வினைமுற்று ஏவல்வினை முற்று எனப்படும். இ, ஆய் என்ற ஒருமை விகுதிகளையும் மின், உம், கள் என்ற பன்மை விகுதிகளையும் பெற்றுவரும்.

**உ**தாரணம் : உண், உண்பாய்.

**வியங்கோள் வினைமுற்று :** இஃது ஏவல்போலன்றி வேண்டிக் கொள்ளும் முறையில் வருகின்ற வினைமுற்று. க, இய, இயர் என்னும் விகுதிகளைப்பெற்று வரும்.
உதாரணம் : உண்க.

**ஏவலுக்கும் வியங்கோளுக்கும் உள்ள வேறுபாடுகள் :**

ஏவல்—1. முன்னிலையில் மட்டும் வரும்.
2. ஒருமை பன்மை வேறுபாடு உண்டு.
3. கட்டளைப்பொருளில் மட்டுமே வரும்.

வியங்கோள்—1. இருதிணை ஐம்பால் மூன்றிடங்களிலும் வரும்.
2. ஒருமை பன்மை வேறுபாடில்லை.
3. வாழ்த்தல், வைதல், வேண்டுதல் முதலிய பல பொருளில் வரும்.

**தனித்தன்மைப் பன்மை வினைமுற்று ;** ஒருவரே, தம்மைத் தாமே பன்மை வாய்பாட்டாற் கூறிக்கொள்ளும் வினைமுற்று.
**உ**தாரணம் ; யாம் உமக்குப் பாடம் சொன்னோம். சொன்னோம் என்பது தன்மையிடம், பன்மைச்சொல், வினைமுற்றுச் சொல். ஆனால் கூறுவோர் பலர் அல்லர். ஒருவரே தம்மைத் தாமே அவ்வாறு கூறுகிறார். இவ்வாறு வருவது தனித் தன்மைப் பன்மை வினைமுற்று எனப்படும்.

**உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று ;** தன்மைப் பன்மை வினைமுற்று பிறரையும் உளப்படுத்தி வருமானால் அஃது உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று எனப்படும்.
உதாரணம் ; நானும் அவனும் சென்றோம். இதில் சென்றோம் என்ற சொல் மற்றவரையும் உளப்படுத்தி நிற்கிறது.

**செய்யுளிசை அளபெடை :** செய்யுளில் ஓசை குறையுமானால் (தளைகெட்டு வருமானால்) அவ்வோசையை நிறைப்பதற்காக நெட்டெழுத்துக்கள் அளபெடுத்து வரும். அளபெடுத்தமைக்கு அறிகுறியாக அதன் குற்றெழுத்துக்கள் அதனருகில் எழுதப்படும். இஃது இசைநிறை அளபெடை எனவுஞ் சொல்லப்படும்.

**உதாரணம் :** தொழாஅர் எனின். இது 'தொழார் எனின்' என்றிருப்பின் ஓசை குறையும் (தளைகெடும்) அதனால் ஆ

என்னும் நெடில் அளபெடுத்து வந்தது. அதற்கு அறிகுறியாக அதனருகில் அ என்ற குறில் இடப்பட்டுள்ளது.
(அளபெடை—அளபு+எடை. அளபு—மாத்திரை, எடை—மிக்குவருவது)

**இன்னிசை அளபெடை;** செய்யுளில் ஓசைகுறையாதிருந்தாலும் சிற்சில இடங்களில் இனிய ஓசைக்காக அளபெடுப்பதுண்டு. அஃது இன்னிசை அளபெடை எனப்படும்.
உதாரணம்; உடுப்பதூஉம் உண்பதூஉம். இங்கே உடுப்பதும் உண்பதும் என நின்ருலும் ஓசை கெடாது. இருப்பினும் இனிய ஓசைக்காக அளபெடுத்தது.

**சொல்லிசை அளபெடை;** ஒரு சொல் மற்ருெரு சொல்லாகத் திரிந்து அளபெடுப்பதும், பெயர்ச்சொல் எச்சப்பொருள் படும் பொருட்டு அளபெடுப்பதும் சொல்லிசை அளபெடையாம்.
உதாரணம்; தூஉய். இது தூவி என்னுஞ் சொல் தூஉய் எனத்திரிந்து அளபெடுத்தது.
நசைஇ—இது நசை (விருப்பம்) என்னும் பெயர்ச் சொல் விரும்பி என எச்சப் பொருள்படும் பொருட்டு நசைஇ என அளபெடுத்தது.

**ஒற்றளபெடை:** ஒற்றெழுத்தும் சில சமயங்களில் மாத்திரை மிகுந்து ஒலித்து அளபெடுப்பதுண்டு. அதற்கு அறிகுறியாக அந்த ஒற்றெழுத்துக்களே அருகில் வரும்.
உதாரணம்: இலங்ங்கு வெண்பிறை. இதில், ங் என்ற மெய்யெழுத்து அளபெடுத்து வந்தது. அதற்கு அறிகுறியாக மற்ருெரு ங் என்ற ஒற்றெழுத்து இடப்பட்டுள்ளது.

**உருபுமயக்கம்:** ஒரு வேற்றுமையுருபு வரவேண்டிய இடத்தில் மற்ருெரு வேற்றுமையுருபு வந்து மயங்கி நின்று, பொருள் வேறுபடாமல் நிற்பது உருபுமயக்கம்.
உதாரணம்: கிழங்கு மணலுக்கு ஈன்ற முளை. இது கிழங்கு மணலின்கண் ஈன்ற முளை என வரவேண்டும். மணலின்கண் என ஏழாம் வேற்றுமையுருபு வரவேண்டிய இடத்தில் நான்காம் வேற்றுமையுருபு வந்து மயங்கி நிற்கிறது. நின்ருலும் பொருள் வேறுபடாமல் ஏழாம் வேற்றுமைக்குரிய இடம் பொருளையே தந்து நிற்கிறது. இது வேற்றுமை மயக்கம் என்றுஞ் சொல்லப்படும்.

**போலி:** ஒரு சொல்லில் ஓரெழுத்திற்குப் பதிலாக மற்ருேர் எழுத்து வந்து பொருள் வேறுபடாமல் நிற்பது போலி எனப்படும். மொழி முதற் போலி, மொழி யிடைப்போலி, மொழியிறுதிப் போலி என மூன்று வகைப்படும்.
உதாரணம்: அறன். அறம் என்பதில் ம் என்ற எழுத்திற்குப் பதிலாக ன் என்ற எழுத்து வந்து நின்று அதே பொருளைத் தந்தது.

**இலக்கணப் போலி:** இலக்கணமுடையதுபோல வருவது.
உதாரணம்: கோயில், வாயில் என்பன. கோவில் என வர வேண்டியது கோயில் என வந்தது. இல்வாய் என்பது வாயில் என வந்துள்ளது. இவ்வாறு வருவதற்கு இலக்கணமில்லையாயினும் இலக்கணமுடையதுபோல வந்தது.

**இலக்கணை:** ஒரு பொருளுக்குரிய இலக்கணத்தை (இயல்பை) வேறொரு பொருளுக்குந் தந்துரைப்பது.
உதாரணம்: கண்கள் பேசின. பேசுதல் வாய்க்குரிய தொழில்; அதைக் கண்கள்மேல் ஏற்றிக் கூறுவதால் இஃது இலக்கணை எனப்பட்டது.

**உபலட்சணம்:** ஒரு சொல் தன்னையும் தனக்கு இனமான பிறவற்றையும் குறிப்பது உபலட்சணமாகும்.
உதாரணம்: சோறுண்டான். சோறு என்னும் சொல் தன்னையும், தனக்கு இனமாகிய கறி, குழம்பு முதலியவற்றையும் குறித்து வருவதால் உபலட்சணம்.

**அடுக்குத் தொடர்:** அச்சம், விரைவு, வியப்பு முதலிய பொருள் பற்றி ஒரே சொல் பலமுறை அடுக்கி வரும் தொடர்.
உதாரணம்: பாம்பு பாம்பு. இஃது அச்சம்பற்றி ஒரே சொல் இருமுறை அடுக்கி வந்தது.

**இரட்டைக் கிளவி:** பிரிக்க முடியாதவாறு இரண்டு சொற்கள் பொருந்தி வருவது இரட்டைக் கிளவி எனப்படும். (கிளவி—சொல்)
உதாரணம்: நீர் சலசல என ஓடியது. சலசல என்பது இரட்டைச் சொல். இதைப் பிரிக்க முடியாது; பிரித்தால் பொருள் கொள்ள முடியாது.

**அடுக்குத் தொடருக்கும் இரட்டைக் கிளவிக்கும் உள்ள வேறுபாடு:**
அடுக்குத் தொடர்: 1. ஒரே சொல் இரண்டு, மூன்று, நான்கு முறை அடுக்கி வரும். 2. வினைக்கு அடைமொழியாக வராமல், விரைவு, அச்சம், வியப்பு முதலிய பொருள்கள் பற்றி வரும். 3. தனித்தனியே பிரித்தாலும் பொருள்படும்.
இரட்டைக் கிளவி: 1. இரட்டைச் சொல்லாக மட்டுமே வரும். 2. வினைக்கு அடைமொழியாக வரும். 3. தனித்தனியாகப் பிரித்தால் பொருள் தராது.

**அசை:** எழுத்து, தனித்தேனும், பல சேர்ந்தேனும், ஒற்றடுத்தேனும் வருவது அசை எனப்படும். அது நேரசை, நிரையசை என இரு வகைப்படும்.

**நேரசை:** 1. குற்றெழுத்துத் தனித்து வரினும், 2. தனிக்குற்றெழுத்து மெய்யுடன் சேர்ந்து வரினும், 3. நெட்டெழுத்துத் தனித்து வரினும், 4. தனி நெட்டெழுத்து மெய்யுடன் சேர்ந்து வரினும் நேரசையாம்.

உதாரணம்:

| | | |
|---|---|---|
| தனிக்குற்றெழுத்து—ப | | நேரசை |
| குற்றெழுத்து மெய்யடுத்தது—பல் | | |
| தனி நெட்டெழுத்து—பா | | |
| அது மெய்யுடன் சேர்ந்தது—பால் | | |

**நிரையசை:** 1. குறில் இணைந்து வரினும், 2. குறிலிணை மெய்யடுத்து வரினும், 3. குறில் நெடில் இணைந்து வரினும், 4. குறில் நெடிலிணை மெய்யுடன் வரினும் நிரையசையாம். உதாரணம்:

| | | |
|---|---|---|
| குறிலிணை | —விள | நிரையசை |
| மெய்யடுத்த குறிலிணை | —விளம் | |
| குறில் நெடிலிணை | —விளா | |
| மெய்யடுத்த குறில் நெடிலிணை | —விளார் | |

குற்றெழுத்து, ஒரு சீரின் முதலிலும் இடையிலும் தனித்து நின்று நேரசையாக வராது. இறுதியில் நின்றே நேரசையாகும். குற்றெழுத்தும் நெட்டெழுத்தும் சேர்ந்து நின்று ஓரசையாகுமே தவிர நெட்டெழுத்தும் குற்றெழுத்தும் சேர்ந்து ஓரசையாக வராது.

**சீர்:** நேரசை, நிரையசைகள் தனித்தாவது, பல சேர்ந்தாவது வருவது சீர் எனப்படும். சீர் ஓரசைச் சீர், ஈரசைச் சீர், மூவசைச் சீர், நாலசைச் சீர் என நான்கு வகைப்படும்.

**ஓரசைச் சீரும் வாய்பாடும்:** நேரசையேனும் நிரையசையேனும் தனித்து நின்று சீராய் வருவது ஓரசைச் சீர் எனப்படும். நேரசைச் சீருக்கு நாள் என்பதும், நிரையசைச் சீருக்கு மலர் என்பதும் வாய்பாடுகளாகும்.

**ஈரசைச் சீரும் வாய்பாடும்:** நேர்நேர், நிரைநேர், நிரைநிரை நேர்நிறை என ஈரசைச் சீர் நான்காகும். இந்நான்கும் மாச்சீர் எனவும், விளச் சீர் எனவும் இரு வகைப்படும்.

| | |
|---|---|
| நேர் நேர் — தேமா | மாச்சீர் |
| நிரை நேர் — புளிமா | |
| நிரை நிரை — கருவிளம் | விளச்சீர் |
| நேர் நிரை — கூவிளம் | |

**மூவசைச்சீரும் வாய்பாடும்:** மூவசைச் சீர், காய்ச்சீர் நான்கும் கனிச்சீர் நான்குமாய் எட்டாகும். காய்ச்சீர் வெண்சீர் எனப்படும். கனிச்சீர் வஞ்சிச் சீர் எனப்படும்.

| | |
|---|---|
| நேர் நேர் நேர் — தேமாங்காய் | காய்ச்சீர் |
| நிரை நேர் நேர் — புளிமாங்காய் | |
| நிரை நிரை நேர் — கருவிளங்காய் | |
| நேர் நிரை நேர் — கூவிளங்காய் | |

நேர் நேர் நிரை — தேமாங்கனி
நிரை நேர் நிரை — புளிமாங்கனி
நிரை நிரை நிரை — கருவிளங்கனி
நேர் நிரை நிரை — கூவிளங்கனி
} கனிச்சீர்

**வெண்பாவிற்குரிய தளைகள் :** வெண்சீர் வெண்டளை, இயற்சீர் வெண்டளை என இருவகைப்படும். காய் முன் நேர் வருவது வெண்சீர் வெண்டளை. மாமுன் நிரையும், விளமுன் நேரும் வருவது இயற்சீர் வெண்டளை.

**ஆசிரியப்பாவிற்குரிய தளைகள் :** நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை என இருவகைப்படும். மாமுன் நேர் வருவது நேரொன்றாசிரியத்தலை. விளமுன் நிரை வருவது, நிரையொன்றாசிரியத்தளை.

**உதாரணம் :** **அகர முதல.**

அகர — நிரை நேர் — புளிமா
முதல — நிரை நேர் — புளிமா.
இங்கே மாமுன் நிரைவந்தமையால் இயற்சீர் வெண்டளை.

**எழுத்தெல்லா மாதி.**

எழுத்தெல்லா — நிரை நேர் நேர் — புளிமாங்காய்
மாதி — நேர் நேர் — தேமா.
இங்கே காய்முன் நேர் வந்தமையால் வெண்சீர் வெண்டளை.

**விண்பொரு நெடுவரை.**

விண்பொரு — நேர் நிரை — கூவிளம்.
நெடுவரை — நிரை நிரை — கருவிளம்
இங்கே விளமுன் நிரை வந்தமையில் நிரையொன்றாசிரியர் தளை

**உருட்டி வேரல்**

உருட்டி — நிரை நேர் — புளிமா
வேரல் —நேர் நேர் — தேமா.
இங்கே மாமுன் நேர் வந்தமையால் நேரொன்றாசிரியத்தளை.

**எதுகை மோனை :** எதுகையாவது, செய்யுளில் அடிகளிலாவது சீர்களிலாவது முதலெழுத்து அளவொத்து நிற்க இரண்டாமெழுத்து ஒத்துவரத் தொடுப்பது எதுகைத் தொடை.
உதாரணம். உடுக்கை. இடுக்கண். இங்கே முதலெழுத்துக்களாகிய உ, இ என்னுமிரண்டும் அளவொத்து நிற்க. இரண்டாமெழுத்து - டு - ஒத்துவரத் தொடுக்கப்பட்டுள்ளமையால் எதுகை எனப்படும். முதலெழுத்து அளவொத்துவரவில்லையாலுல் எதுகை எனப்படாது. மோனையாவது, செய்யுளில், அடிகளிலாவது சீர்களிலாவது முதலெழுத்து ஒத்துவரத்தொடுப்பது மோனைத் தொடையாம்.
உதாரணம்: மலர் மிசை ஏகினன் மாணடி சேர்ந்தார்

இங்கே முதற்சீரிலும் மூன்றுஞ் சீரிலும் உள்ள முதலெழுத்துக்கள் ஒத்துவரத் தொடுக்கப்பட்டுள்ளமையால் மோனைத் தொடையாம்.

## செய்யுள் நலம் பாராட்டுதல்

செய்யுள் நலம் பாராட்டுதலில் மாணவர்கள் தெரிந்து கொள்ளவேண்டிய குறிப்புகள்;— முதலில் கொடுக்கப்பட்ட பாடல்களை நன்கு படித்துணர வேண்டும். பிறகு சந்தர்ப்பங் கூறித் திரண்ட கருத்தை எழுதவேண்டும். அதன் பிறகு அச் செய்யுளில் உள்ள பொருளாழமுள்ள சொற்களை எடுத்து அவற்றில் அமைந்து கிடக்கும் நயங்களை எடுத்துக் காட்ட வேண்டும். இவ்வுரை நூலில் செய்யுட் பகுதியில் சொல் நயங் கள் காட்டப்பட்டுள்ளதைக் கண்டுகொள்க. பிறகு பொருளிற் காணுஞ் சிறப்புக்களை எடுத்துக்காட்ட வேண்டும். அணிகள் அமைந்திருப்பின் எடுத்தெழுதவேண்டும். எதுகை மோனைகளை யும் எடுத்துக் காட்ட வேண்டும். பாடல்களில் மெய்பாடுகள் இருப்பின் அவற்றையும் சுட்டிக்காட்ட வேண்டும்.

---

11. குடி முதலிய எல்லைகளைக் கடந்து நிற்கும் புலவர் குடிப்பெருமை கூறிச் சமாதனம் செய்வது முறை யாகுமா ?

குடி முதலிய எல்லைகளைக் கடந்து நிற்கும் நிலை புலமைக்கு உரியதே. ஆயினும் அம்மனப்பான்மை, எனதுநாடு உனதுநாடு என மாறு கொள்ளும் அரசர்க்கு வாய்க்காது. அதனால் அரசர் பெரி தென மதிக்கும் குடிப்பற்றைக் கொண்டே அவர்களைத் திருத்த முயலுகிறார். அக்காலத்தரசர் குடிப்பற்று மிக்கவர்; குடியின் சிறப்புக்கு அறிகுறியாகக் கொண்ட குடிப்பூவை உயிரெனப் போற்றியவர். அப்பூவை எவரும் பழித்துரைக்கப் பொறுத் திரார். இத்தகைய அரசரின் மனநிலையை நன்குணர்ந்த புலவர் அவர் போற்றுவனவற்றைக் கொண்டே அறிவுறுத்துகிறார். புல வர் நோக்கம் போரை நிறுத்த வேண்டும் என்பதே. ஆதலின்குடிப் பெருமை கூற முயன்றது அறம் பற்றிய நோக்கமே யாகும். மேலும் தான் விளங்க வேண்டும் என்னும் தன்னல நோக்கமே கொண்டவர்க்குக் குடி விளங்கும் நோக்கமேனும் வளரட்டும் என்று அறிவுரை கூறியது தகுதியறிந்து செய்த நன்முயற்சியே யாகும்.

## 8. பசிப்பிணி மருத்துவன்

1. பசி ஏன் தீப்பிணி எனப்பட்டது ? அது நீக்கும் மருந்து யாது ?

உலகில் மக்களை உடற்றும் பிணி பலவற்றுள்ளும் பசிப்பிணி கொடியதாகும். அஃது ஓர் உடம்பினின்று, குடிப்பிறப்பழித்து, விழுப்பங்கொன்று, பிடித்த கல்விப்பெரும்புணை அகற்றி மற்றும் இன்ன பல தீமை செய்து, அதனால் மேல்வரும் உடம்புகட்கும் துன்பம் செய்வதாகலின், 'பசியென்னுந் தீப்பிணி' எனத் தெய்வப் புலவராற் கூறப்பட்டது. அப்பிணிக்கு மருந்தாவது சோறும் நீரு மாகிய உண்டியே யாகும்.

2. பண்ணன் வாழ்ந்த பதி எது ? அவன் இயல்பு யாது ?

'ஒரு பிடிபடியும் சீறிடம் எழுகளிறு புரக்கும் நாடு' எனச் சிறப் பிக்கப் பெறுஞ் சோணாட்டின் கண்ணே, வான் பொய்ப்பினும் தான் பொய்யாத காவிரியின் மருங்கு, சிறுகுடி என்னும் பதி யொன்று உளது. அப்பதியின்கண் ஆயிரத் தெண்ணூறு ஆண்டு களின் முன், பண்ணன் என்னும் நன்னராளன் ஒருவன் மிக்க படை யாண்மையும், மேம்படு கொடையாண்மையும் உடையனாய் வாழ்ந்திருந்தனன்.